# இந்த நாவல்

கிராமச் சூழ்நிலையையும், நகரப் பண்பாட்டையும் பின்னணியாக வைத்து எழுதப் பட்ட அற்புதமான நாவல். மறக்கப்பட்ட 'சர்ப்பகந்தி' என்ற விஷமுறிவு மூலிகைக்கும், இனிய கலைகளான இசைக்கும் நடனத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டுள்ளது.

இசைவாணன் ரவீந்திரன், நடனமணி சந்திரிகா, நாகரத்தினம், அப்புலிங்கம், உஸ்தாத் மீரான், டாக்டர் சுரேஷ், இலஞ்சிச் சாமியார், பகேரான், லிலிஓட் ஹவுஸ் முதலிய அற்புதக் கதாபாத்திரங்கள் இந் நாவலில் நடமாடுகின்றனர். ஒவ்வொரு கதாபாத்திரமும் நம் நினைவை விட்டு நீங்காமல் ஒளி வீசும் குணச் சித்திரம் !

தன் கணவனுக்காக வாழும் கல்யாணிக்கும் தன் கலைக்காக வாழும் சந்திரிகாவுக்கும் இடையில் உணர்ச்சி வயப்பட்ட ரவீந்திரன் மயங்குகிறான். நாகரத்தினம் ஒரு தீய பாத்திரமாகத் தோன்றினாலும், அவன் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றும் தன் அன்புச் சகோதரியின் கண்ணீரைத் துடைப்பதற்காகத்தான் என்று அவன்

# ரவிசந்திரிகா




'சோமு'

பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை 1.




# முன்னுரை

## [ ராஜாஜி ]

காதல் என்பதைப் பசு தர்மத்தோடு குழப்பிக்கொள்வது தவறு என்பதை அனைவரும் அறிவார்கள். ஆனால் அதை அநேகமாக ஆண் பெண் இரு பாலாருக்குள் ஏற்படும் உணர்ச்சி வேகத்துக்கு மட்டுமே உரிய சொல் என்று வைத்துக் கொள்வதும் தவருகும்.

எரியும் நெருப்பு-நிலையை அடைந்த அன்புக்குப் பெயர் காதல். அது இன்பம் தருகிறதா அல்லது வருத்துகிறதா என்று கூடச் சொல்லமுடியாத ஓர் உணர்ச்சியின் உச்ச நிலை. இந்தக் காதல், தாய்க்கும் மகனுக்கும் அல்லது இரு நண்பர்களுக்குள்ளும் தோன்றும். சாதாரணமாகத் தோன்ருது. சிலர்தான் அதைக் காண்பார்கள். கிரேக்க முனிவர் ஸோக்ரதருடைய பேச்சில் காதலைப்பற்றி அடிக்கடி சொல்லியிருப்பதைப் பார்க்கலாம். அவருங்

கூடக் காதலை ஆண் பெண் இரு பாலாருக்குள் மட்டும் நிறுத்தவில்லை ; நட்பிலும் காதலைக் கண்டிருக்கிறார்.

பிரிந்து நிற்கும் இரண்டு தேகங்களுக்குள் ஆடும் இரண்டு உயிர்கள், ஒன்றாகப் போக விரும்பும் நிலை காதல். ரசாயனத்தில் காதலின் வேகத்தைக் காணலாம். இரண்டு பொருள்கள் கூடிக் கலந்து ஒன்றாகப் போக நெருங்கும் சமயம், ரசாயன வேகம் ஏற்படுகிறது. விறகும் காற்றும் ஒன்று கூடும்போது, நெருப்புக் கிளம்புகிறது. அதுவும் ஒரு காதல் வடிவந்தான். ஏன் ? அதுவே காதலின் ஆதர்ச வடிவம் என்றும் சொல்லலாம்.

பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் இணைத்து நிறுத்தும் வேகத்துக்குப் பௌதிக விஞ்ஞானிகள் gravitation என்று பெயர் வைத் திருக்கிறார்கள். ஆகாய வெளியில் சிதறிக் கிடக்கும் பல்கோடி ஜோதி கோளங் களும் தத்தம் நிலையில் நிற்பது, இந்த வேகத்தின் சக்தியினால் தான். சந்திரன் பூமியைச் சுற்றிச் சுற்றிக் காதலிப்பதும், சூரியன் பூமியைத் தினமும் சுற்றிச் சுற்றி வருவதும், நாமும் பூமியின்மேல் நின்று ஆதித்தனைச் சுற்றிச் சுற்றி வருவதும், நாம் சுற்றுகிறோமா அவன் சுற்றுகிறானா என்று நிர்ணயிக்க முடியா மல் சுற்றுவதும், எல்லாம் காதல் வேகந்தான். இரண்டு உயிர்களுக்குள் ஏற்படும் ஆகர்ஷண சக்தியும், விசுவ ஆகர்ஷண சக்தியின் ஓர் அவதாரமே யாகும்.

கருணையும் அநுதாபமும் ஒரு நிலையில் காதலேயாகும். நம்முடைய கண்ணுக்குக் காணப்படாத அத்வைதம் காதலாகத் தோற்றம் காட்டுகிறது. காட்டி ஆனந்தம் அளிக்கிறது.

மக்களுக்கு நூல் எழுதுகிறவர்கள், எல்லா விதக் காதலைப் பற்றியும் எழுதி மறைந்து கிடக்கும் அத்வைதத்தை விளக்குவார்களாக.

தொடர்கதைகளை எனக்கு இப்போது படிக்க முடிகிறதில்லை. நான் 'ரவி சந்திரிகை' யைப் படிக்கவில்லை. ஏன் படிக்க வேண்டும்? எழுதிய ஆசிரியரைப் படித்து விட்டேன். அவருக்கும் நூலுக்கும் என் ஆசிகள்.

—சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி




# உள்ளுறை

## சமர்ப்பணம்

எனது அருமை நண்பர்
காலம் சென்ற பேராசிரியர்
**முத்துசிவன்**
அவர்களின் நினைவுக்கு

# 1. மலைக்கோட்டை

இரண்டு வாரங்களுக்கு முன்பு வெளிவந்த ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில், 'சர்ப்ப கந்தி' என்ற மருந்துச் செடியைப் பற்றிய ஒரு குறிப்புப் பிரசுரமாகியிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்குப் பெரும் வியப்பு உண்டாகிவிட்டது!

இமயமலைச் சாரலில் நடந்து சென்றுகொண்டிருந்த யாத்திரிகன் ஒருவன் ஒரு பேரதிசயத்தைக் கண்டு திகைத்தானாம்.

மங்கலான சிவப்பு நிறத்தில் கொத்துக் கொத்தாக மலர்கள் பூத்துநின்ற ஒரு சின்னஞ்சிறு செடிக்கு அருகிலே கீரிப்பிள்ளை ஒன்று நின்றுகொண்டு, அந்தச் செடியின் இலைகளை மிகவும் பிரியத்தோடு சாப்பிட்டுக் கொண்டிருந்ததாம். அதிசயித்து நின்ற அந்த மனிதனுக்கு இதன் காரணத்தை அறியவேண்டும் என்று ஆசை உண்டாயிற்றாம். புதரின் மறைவில் ஒளிந்து நின்றுகொண்டே பார்த்தானாம். கொஞ்ச நேரத்தில் அந்தக் கீரிப்பிள்ளை அங்கிருந்து கிளம்பிச் சென்று, சற்றுத் தொலையிலே ஊர்ந்துகொண்டிருந்த ஒரு நல்ல பாம்பைத் தாக்கிற்றாம். தாக்கி அந்த நல்ல பாம்பைக் கொன்று உட்கொண்டுவிட்டுப் பரம நிம்மதியோடு மேலே சென்றதாம் அந்தக் கீரிப்பிள்ளை!

இதன் பயனுக என்ன நேர்ந்தது என்று நினைக்கிறீர்கள்! மங்கிய சிவப்பு மலர்களோடு கூடிய அந்தச் செடியின் இலைகளை மனிதன் ஆராய ஆரம்பித்தான்! அந்தச் செடி பாம்புக் கடி விஷத்துக்குச் சரியான மருந்து என்றும், இமயமலையிலுள்ள அருமையான மூலிகைகளில் தலைசிறந்தது என்றும் தெரிய வந்ததாம்!

"சர்ப்ப கந்தி" என்று அழைக்கப்படுகிற இந்த மூலிகையைப் பதினரும் நூற்ருண்டில் வாழ்ந்த ஒரு ஜெர்மன் டாக்டர் நுட்பமாக ஆராய்ந்து பார்த்து, அதனுடைய அதிசயமான சக்திகளையெல்லாம் கண்டு தேர்ந்து, வைத்திய உலகுக்கு எடுத்துச் சொன்னராம்.

பத்திரிகையில் வெளியான இந்தக் குறிப்பில் நான் அப்படி ஒரேயடியாக வியப்படையும்படி என்ன இருக்கிறது என்று நீங்கள் ஆச்சரியப்படக் கூடும்! உண்மையில் நான் வியக்கும்படியான இரண்டு செய்திகள் அதில் இருந்தன. ஒன்று இந்த மூலிகையை வடநாட்டில் 'சந்திரிகா' என்று அழைக்கிருர்கள் என்பது. இரண்டு, இந்த மூலிகை பாம்பின் விஷத்தைக் குணப்படுத்துவதோடு, பைத்தியம், நரம்பு அதிர்ச்சி, இரத்தக்கொதிப்பு முதலிய நோய்களுக்கும் கைகண்ட மருந்தாம்.

'சந்திரிகா' என்ற பெயரில் பைத்தியத்தையும் விஷ நோயையும் தீர்க்கக் கூடிய ஒரு மருந்து இருக்கிறது என்று, இரண்டு வாரங்களுக்கு முன்புவரை எனக்குத் தெரியாது. ஆனல் சந்திரிகா என்ற ஒரு அதிசயப் பெண் இன்னெரு அதிசய மனிதனுடைய வாழ்வில் இத்தகைய ஒரு அரும் மருந்தாக, பைத்தியத்தையும் விஷ நோயையும் தீர்க்கும் பரம சஞ்சீவியாக விளங்கினள் என்பது மட்டும் ஏற்கனவே எனக்குத் தெரிந்த விஷயம்.

'சந்திரிகா' என்று பெயர் சூட்டியவர்களுக்கு இந்த மூலிகையைப்பற்றி மட்டும் தெரிந்திருக்குமானல், அந்தப் பெயர்ப் பொருத்தத்தைக் குறித்து எத்தனை சந்தோஷப்பட்டிருப்பார்கள் அவர்கள்! உண்மையில் சந்திரிகா என்ற மூலிகையைப்பற்றி முதன் முதல் ரவீந்திரன் அறிந்து கொண்டதும் எத்தனை சந்தோஷப்

பட்டான் அவன். அவனைப் பீடித்த அந்த விஷ நோயைத் தீர்த்து, அவனுடைய பைத்தியத்தையும் குணப்படுத்திய பெருமை மெய்யாகவே 'சந்திரிகா'வைத்தானே சாரும்?— இதையெல்லாம் எண்ணும்போதுதான் மனிதர்களுடைய பெயரிலுங்கூட ஏதோ ஒரு மாய சக்தி இருந்துகொண்டு, வாழ்க்கையை எப்படியெல்லாமோ ஆட்டி வைக்கிறது என்று சொல்லத்தோன்றுகிறது.

ஆம்; இன்று ரவீந்திரனுடைய வாழ்க்கையை எண்ணிப் பார்க்கும்போது, இப்படித்தான் ஒரு விநோத மான நினைப்பு உண்டாகிறது.

ஜோதிஷம் என்ற சாஸ்திரத்தை ஆராய்ந்து கற்ற வர்கள் மனிதர்களுடைய பெயருக்கும், அவர்களை ஆட்டி வைக்கும் கிரகங்களுக்கும் ஒரு தொந்தம் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இதனுடைய பொருத்தத்தை ஆராய்வதற்கு வேண்டிய ஆதாரமோ அல்லது பயிற்சியோ எனக்குக் கிடையாது. ஆனால் ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்ல முடியும். எப்படியெல்லாமோ வட்டம் சுற்றிய ரவீந்திரனுடைய வாழ்க்கைச் சுழலில், சந்திரிகா என்ற பெண்ணரசி தோன்றி எத்தனையோ முக்கியம் பெற்று விளங்கினாள்! இதயங்களின் ஆசா பாசங்களுக்கும், மனிதர்களுடைய சூழ்ச்சிகளுக்கும் இரை யாகிப் போன ஒரு உத்தமனுடைய வாழ்வில், சரியான தருணத்தில் ஒளி கொடுத்தவள் சந்திரிகைதான். இதை எண்ணும்போது, பெண்களின் ஆத்ம சக்திக்குத்தான் எத்தனை வலிமை இருக்கிறது என்று அதிசயிக்கிறேன்.

* * *

அன்று ஞாயிற்றுக்கிழமை. விடுமுறை நாளல்லவா? வழக்கமாகவே சின்னக் கடைத்தெருவில் ஜனநடமாட்டம் அதிகமாக இருக்கும். அன்றோ சொல்லவே வேண்டாம். வெகு நாளாக எதிர்பார்த்த அந்த நிகழ்ச்சி நூற்றுக் கால் மண்டபத்தில் அன்று நடைபெற்றது! பிறகு, கூட்டத்துக்குக் கேட்பானேன்?

மலைக்கோட்டையில் உச்சிப்பிள்ளையார் கோவிலுக்குச் செல்லும் படிக்கட்டுகளில் எல்லாம் ஒரே ஜனத்திரள்! மண்டபத்துக்கு உள்ளேயிருந்து சங்கீதம் சுகமாகக் காற்றிலே மிதந்து வந்துகொண்டிருந்தது.

அபூர்வமான ராகத்தில் அருமையாக அமைந்த ஒரு தில்லானா அது. சங்கீதம் தெரிந்தவர்கள் அதுதான் ரவிசந்திரிகா ராகம் என்று சொல்லிக்கொண்டார்கள்.

மலைவாசல் படியில் வைக்கப்பட்டிருந்த ஒலி பெருக்கியில் வாத்திய இசை விம்மிக்கொண்டிருந்தது. அந்த இன்னிசையிலே பின்னித் தவழ்ந்துகொண்டு சலங்கையின் 'ஜல் ஜல்' என்ற இன்னொலியும் வந்து கொண்டிருந்தது.

ஒலிபெருக்கியைச் சுற்றி மக்கள் கூட்டம் மொய்த்து நின்று, சின்னக் கடைத்தெருவிலே ஞாயிற்றுக் கிழமைகளில் நடமாடும் ஜனத்திரளின் போக்குவரத்தைத் தடை செய்துகொண்டிருந்தது.

வாத்திய இசையும், சலங்கையின் கொஞ்சலும், மிருதங்கத்தின் சுநாதமும் சேர்ந்து மனத்தைக் கவர்ந்தன. மண்டபத்தினுள் நடனம் நடந்துகொண்டிருந்தது.

நாட்டியத்தை நேரிலே பார்க்க முடியாத ஜனங்கள், ஒலிபெருக்கியைப் பார்த்தவாறு அதிலிருந்து வரும் தில்லானாவையும், பாதச் சலங்கையின் ஒலியையும் கேட்ட வண்ணம், கற்பனைக் கண்ணால் நாட்டியத்தையே நேரிலே பார்ப்பதுபோல் இமை கொட்டாமல் நின்றார்கள்.

இதென்ன! திடீரென்று அந்த ஜனத்திரளை முட்டித் தள்ளிக்கொண்டு மண்டபத்துக்குள்ளேயிருந்து வெளியே ஒரு மனிதன் ஆவேசமாக வருகிறான்.

நீளமாகத் தொங்கும் தூயவெள்ளை ஜிப்பா. மெல்லிதான மஸ்லின் துணி. நல்ல உயரம் என்று சொல்லுவதற்கில்லை. ஆனால் ஒடிசலான உடம்பு, உயரத்தைச் சற்று எடுப்பாகக் காட்டுகிறது. தலைமயிர் நீண்டு 'ராஜ பார்ட்' முடிபோலச் சீவியும் சீவாமலும் படர்ந்து கிடக்கிறது.

அந்த மனிதனுடைய கண்களிலே ஒரு பரபரப்பு. நடையில் ஒரு பதற்றம். எங்கே செல்கிறான் இவன், அந்த அருமையான நடனத்தை விட்டுவிட்டு?

கூட்டத்தைப் பிளந்துகொண்டு சின்னக் கடைத் தெருவுக்குள்ளே சாடிய அந்த ஜிப்பா மனிதன், பெரிய கடை வீதியிலே புகுந்து வேகமாக நடந்தான்.

கிலேதார் தெருவைத் தாண்டியதும் வலதுசாரியில் உள்ள ஒரு பெரிய கடைக்குள்ளே நுழைந்தான்.

"நரசிம்ம செட்டி அண்டு கோ, லேவாதேவிக் கடை. தங்க நகை ஈட்டில் கடன் கொடுக்கப்படும்" என்று கொட்டை எழுத்தில் விளம்பரம் மாட்டியிருந்த அந்தக் கடைக்குள்ளேதான் அவன் நுழைந்தான்.

செட்டியார் இரும்புப் பெட்டிக்கு அருகே திண்டும் தலையணையுமாகச் சாய்ந்துகொண்டிருந்தார். அவருடைய நெற்றி நாமம் துலாம்பரமாகத் துலங்கிக்கொண்டிருந்தது. எதிரேயிருந்த சிறு மேஜைப் பெட்டிக்கு மேலே தராசும் படிக்கல்லும் காட்சி தந்தன. அருகில் ஒரு பலகையில் யாரோ ஒரு நண்பர் உட்கார்ந்து செட்டியாருக்குத் தினப் பத்திரிகையைப் படித்துச் சொல்லிக்கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் 'வெள்ளிக்கிழமை விடுமுறை நாள்' என்று ஒரு சிறு பலகை தொங்கியது. கடையின் உள் முகப்பில் சிப்பந்திகள் மிகவும் சுறுசுறுப்பாக வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

கடையினுள் நுழைந்த மனிதர், சிப்பந்திகள் ஒருவரையும் லக்ஷியம் செய்யவில்லை. நேரே செட்டியாருக்கு எதிரே போய் நின்றுகொண்டார்.

"செட்டியார்வாள்! ஒரு அவசரம்! இருபத்தைந்து ரூபாய் தேவை—இதை வைத்துக்கொண்டு—" என்று சொல்லியவாறு, இடுப்பிலே செருகி வைத்திருந்த ஒரு புல்லாங்குழலை எடுத்துச் செட்டியாரின் மேஜையிலே வைத்தார்.

செட்டியாருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. வந்த மனிதர் உட்காரக்கூட இல்லை. மடியிலிருந்து ஏதோ தங்க நகையை

எடுக்கிறாராக்கும் என்று பார்த்தால், ஆசாமி ஒரு புல்லாங் குழலை எடுக்கிறாரே!

செட்டியார் அந்தப் புல்லாங் குழலைக் கையிலே எடுத்துப் பார்த்தார். இரண்டு ஓரத்திலும் வெள்ளியினால் பூண் கட்டியிருந்தது.

"என்னையா இது! இந்த இரண்டு வளையமும் சேர்த்தாலும் எட்டணக்கூடப் பெறாதே! வெறும் மூங்கில் குழலுக்கு இருபத்தைந்து ரூபாய் வேண்டுமா?" என்றார் செட்டியார்.

'மூங்கில் குழல்' என்ற வார்த்தைகள் வந்ததும், ஜிப்பா மனிதருடைய முகம் சுண்டியது.

"என்ன சொன்னீர்கள், செட்டியார்வாள்! மூங்கில் குழலா......!"

"ஆமாம். பின்னே இதென்ன வெள்ளிக் குழலா? இல்லை, தங்கக் குழலா? மூங்கில்தானே, ஐயா! அடுப்பு ஊதக்கூட முடியாது, ஒரு பக்கம் அடைத்திருக்கிறது"— என்றார் ஹாஸ்யம் என்ற நினைப்பிலே! வந்த மனிதருக்குக் கண் சிவந்தது.

"இன்னொரு முறை அப்படிச் சொல்லாதீர்கள். இந்த உடம்பில் உயிருள்ளவரை அது மூங்கில் குழலில்லை. செட்டியார்வாள், என்னுடைய சரீரத்தில் ஜீவன் இருக்கு மட்டும், இதன் விலை இருபத்தைந்து ரூபாய் இல்லை. இருபத்தைந்து லட்சம் ரூபாய் தெரியுமா?"—இப்படிச் சொல்லும்போதே ஜிப்பா மனிதருக்கு உடம்பெல்லாம் படபடத்தது.

"சார், கோபப்படாதீர்கள். இங்கே எல்லாம் தங்க நகையின் பேரிலேதான் கடன் கொடுக்கிறது. வைர நகையைக்கூட வாங்குகிறதில்லை. போய் வாருங்கள்!"

செட்டியாருடைய இந்த வார்த்தைகள் முகத்தில் அடிப்பதுபோல் வந்தன.

புல்லாங்குழல் மனிதருக்குக் கோபமும் ஆத்திரமும் முகத்தில் பிரவாகமாகப் பொங்கின. ஆனாலும் என்ன செய்ய முடியும் அவரால்?

செட்டியார் கையிலே எடுத்துப் பார்த்த குழலை 'டக்' கென்று மேஜையின்மேல் வைத்தார். அதை அப்படியே வெடுக்கென்று எடுத்து இடுப்பிலே செருகிக்கொண்டு, விறுவிறு என்று வெளியே நடந்தார் அந்த ஜிப்பா மனிதர்.

எல்லாம் ஐந்து நிமிஷ நேரத்திற்குள் நடந்த காரியம். ஆனால் இந்த ஐந்து நிமிஷத்துக்குள் அந்த ஜிப்பா மனித ருடைய உள்ளம் அடைந்த வேதனை! அவருடைய முகத்திலேதான் எத்தனை மின்னல்கள் துவண்டன!

செட்டியாருக்கு அருகில் இருந்த நண்பர் இதை யெல்லாம் கவனித்தார். ஏனோ அவருடைய உள்ளம் நெகிழ்ந்தது. அந்தப் புதிய மனிதர் அத்தனை ஆத்திர மாக உள்ளே வந்ததும், அதைவிட ஆத்திரமாக வெளியே சென்றதும் அந்த நண்பரை வேதனைப் படுத்தின.

"செட்டியார்வாள், இதோ ஐந்து நிமிஷத்தில் வருகிறேன்" என்று சொல்லியவாறு அந்த நண்பர், கையிலிருந்த தினப் பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு எழுந்து, புல்லாங்குழல் மனிதரைப் பின்தொடர்ந்தார்.

ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்துக்குள் முட்டியும் மோதியும் வெகு வேகமாகச் செல்லும் அந்த மனிதரை எப்படிக் கூப்பிடுவது? கையைத் தட்டினார்! பயனில்லை. அவர் திரும்பியே பாராமல் வேகமாய் நடந்துகொண் டிருந்தார். இவர் அவரைப்பின் தொடர்ந்து ஓடினார்.

"சார், சார்! கை தட்டுகிறேன்! திரும்பிக்கூடப் பார்க்காமல்......"

"கை தட்டிக் கூப்பிடுகிற அநாகரிகமான நண்பர்கள் எனக்குக் கிடையாது" என்று ஒரு போடு போட்டார் அவர், நடந்துகொண்டே!

"சார்! கொஞ்சம் நில்லுங்கள். உங்களுடைய பெயர் எனக்குத் தெரியாது. இந்த நிலைமையில் வேறு எப்படித் தான் உங்களைக் கூப்பிடுவது? சார்—சாரோ—"

புல்லாங்குழல் நண்பர் கொஞ்சம் நிதானித்தார். வந்த நண்பர் அருகே சென்று மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

"சார், நீங்கள் செட்டியாரோடு பேசியதையெல்லாம் கவனித்தேன்—!"

"சரி, கவனித்துச் சந்தோஷப்பட்டீர்கள். நன்றி. அதற்கென்ன இப்பொழுது ?"

"இல்லை. உங்களுக்கு இருபத்தைந்து ரூபாய் தேவை போலிருக்கிறது—"

"அதான் கவனித்தீர்களே, நான் செட்டியாரிடம் சொன்னதை!"

"அதற்கில்லை. உங்கள் கையிலுள்ள புல்லாங் குழலின் மகிமை செட்டியாருக்குத் தெரியாது— அவருக்கு—"

"இந்த மாதிரிக் கொம்பு சீவுகிறதெல்லாம் எனக்குப் பிடிக்காது. விஷயம் என்ன சொல்லுங்கள்!"

"உங்களுக்குத் தேவையான இருபத்தைந்து ரூபாய் நான் தருகிறேன். திரும்பக்கூடத் தரவேண்டியதில்லை."

"ஓகோ! சரிதான்; யாசகன் என்ற நினைப்போ! சுவாமி! உங்களுடைய தர்ம கைங்கரியத்துக்கு எங்காவது கோவில் உண்டியலைப் பாருங்கள். இது சம்பாதிக்கிற ஜீவன். தெரிந்ததா ?"

"ஐயய்யோ! தவருக நினைக்கிறீர்களே. உங்களுக்குத் தேவையான—"

"சார், சுற்றி வளைத்துப் பேச எனக்கு இப்போது நேரமில்லை. நமக்குத் தேவை இருபத்தைந்து ரூபாய். யாசகம் இல்லை. தெரிந்ததா ? கடனும் வெறுங் கடனுக இல்லை; ஈட்டுக் கடனுகத்தான்."

"சரி, கடனுகவே தருகிறேன்—"

"அப்படியானல் இந்தாருங்கள், பிடியுங்கள். நம்மிடம் ஈடாகக் கொடுப்பதற்கு இதைவிடச் சிறந்த ஆபரணம்

கிடையாது. நமக்கும் இது உங்களிடம் இருந்தால்தான் அதனைத் திரும்பக் கொடுக்கவேண்டும் என்ற பிரக்ஞை இருக்கும். புரிந்ததா! இந்தாருங்கள். பிடியுங்கள்!''

ஜிப்பா மனிதர் அந்தப் புல்லாங்குழலை எடுத்து நீட்டினார். மறு பேச்சில்லாமல், நண்பர் தம்முடைய மணி பர்சை எடுத்து இரண்டு பத்து ரூபாய் நோட்டும் ஒரு ஐந்து ரூபாய் நோட்டும் புல்லாங்குழல் மனிதரிடம் கொடுத்தார்.

"என் பெயர் ரவீந்திரன். தாயுமானவர் தெருவில் வாசம், தங்கள் பெயர்?''

" அப்புலிங்கம். என் விலாசம்—"

" உங்களுடைய விலாசமெல்லாம் இந்த அவசரத்தில் நமக்கு ஞாபகத்தில் இராது. மன்னிக்க வேண்டும். திரும்பத் தருவதற்கு இருபத்தைந்து ரூபாய் நம்முடைய கைக்கு வந்த வேளையில், எப்படியாவது உங்களைக் கண்டு பிடித்து வந்துவிடுவேன். தீராது என்றால் அந்த மகானு பாவன் செட்டியாரையே கேட்டுத் தெரிந்துகொள்வேன். நம்முடைய உயிரையல்லவா உங்கள் கையிலே ஈடு கொடுத்திருக்கிறேன்—கவலை எனக்கல்லவா? போய் வாருங்கள். நமஸ்காரம்!''

அவ்வளவுதான். மறுவிநாடி அந்தப் பெரிய கடைத் தெருவிலே அலைமோதிக் கொண்டு செல்லும் மனித வெள்ளத்தில் எங்கோ மறைந்துவிட்டான், ரவீந்திரன்.

அவன் அந்த இடத்தைவிட்டு நகர்ந்த பிறகுதான் இந்த உலகத்துக்கே வந்தார் அப்புலிங்கம். ஆனாலும் ஏதோ நம்ப முடியாத ஒரு அதிசயமான கனவைப்போல் ஓடி மறைந்துவிட்ட அந்த விசித்திர மனிதனைப் பற்றிய வியப்பிலிருந்து, அவரால் இன்னும் பூரணமாக மீள முடிய வில்லை! ரவீந்திரனைப் பின்தொடர்ந்து செல்வோமா, அல்லது பேசாமல் திரும்பிவிடலாமா என்று அவருக்குத் தோன்றவில்லை. திரும்பிப் போனால் செட்டியாரிடம் நடந்த விஷயங்களை யெல்லாம் எப்படிச் சொல்வது? கஷ்டமான காரியந்தான். அதை விட்டுவிட்டு, இந்த மனிதனையே பின் தொடர்ந்தாலோ? எதற்காக இவன்

இத்தனை அவரசமாக இருபத்தைந்து ரூபாய்க்கு இப்படி ஆலாய்ப் பறந்தான் என்று தெரிந்து கொள்ளலாம் அல்லவா? ஆனால் இந்த அபூர்வ மனிதனைப் பின் தொடர்ந்து சென்றால் அதிலும் ஆபத்து இருக்கிறது! அடிபிடி சண்டைக்கே வந்தாலும் வந்துவிடுவான்; அப்படிப்பட்ட அபூர்வமான மனிதன் தான் இவன்!

என்ன செய்வது என்று தோன்றாமல், நெற்றியைப் பிசைந்தவண்ணம் அந்தக் கடை வீதியிலேயே தயங்கி நின்றார் திருவாளர் அப்புலிங்கம் அவர்கள்!

## 2. இருளில் கண்ட ஒளி!

நாற்றுக்கால் மண்டபத்தில் நாட்டியம் நடந்து கொண்டிருந்தது.

சந்திரிகா தோகை மயிலைப்போல் மெல்ல மெல்ல நடந்தாள். சில சமயங்களில் புள்ளி மானைப்போல் வேகத்தோடு துள்ளிக் குதித்தாள். அன்ன நடை என்கிறார்களே, அப்படியும், சில சமயங்களில் அவள் மென்னடை நடந்தாள்.

அந்த நடனத்தை எப்படிச் சொல்லிலே சித்திரிப்பது? அழகும் இசையும் உணர்ச்சிகளுமாகச் சேர்ந்து பதினாறு வயதுப் பெண்ணின் வடிவில் நின்றுகொண்டு நடனம் ஆடினால் எப்படியிருக்கும்!

சந்திரிகா நடனம் ஆடினாள். அதே சமயம் அவளுடைய இதய அரங்கில் வேறொரு நடனம் நடந்து கொண்டிருந்தது. அந்த நடனம் மயிலைப் போலவும், அன்னத்தைப் போலவும், புள்ளி மானைப் போலவும் இல்லை. கார்காலத்தில் வான அரங்கிலே நடக்கும் மின்னலும் இடியும்போல் இருந்தது அது! நடனத்துக்கு மத்தியில் ஆட்டம் நின்று வாத்தியங்கள் இழையும் போதெல்லாம், சந்திரிகா மண்டபத்தின் வாசலையே

கூர்ந்து பார்த்தாள். யாருடைய வரவுக்காகவோ அவளுடைய மெல்லிய இதயம் துடியாகத் துடித்தது என்று நன்ருகத் தெரிந்தது.

கச்சேரியின் மத்தியில் நிகழ்ந்தது, சந்திரிகாவின் இதயத் துடிப்புக்குக் காரணமான அந்த எதிர்பாராத சம்பவம். ஸ்வர வரிசை மேலே மேலே செல்லுவதுபோல நடனம் விறுவிறு என்று நடந்து கொண்டிருந்தபோது, ரஸமான ஒருகட்டத்தில், திடீர் என்று ஏதோநினைத்தவன் போல ரவீந்திரன் எழுந்தான். தன்னேடு உட்கார்ந்திருந்த ஒரு சிஷ்யரைப் புல்லாங்குழல் வாசிக்கச் சொல்லிவிட்டுத் தன் புல்லாங்குழலை இடுப்பிலே செருகிக் கொண்டு, அந்த அரங்கிலிருந்து வெகு வேகமாக எங்கோ சென்றுவிட்டான் ரவீந்திரன்! இது சந்திரிகாவின் உள்ளத்தை வேதனை செய்தது. ரவீந்திரன் திரும்பி வர நேரம் ஆக ஆக, சந்திரிகாவின் சஞ்சலம் அதிகரித்தது. அவளுடைய இதய வீணை படிப்படியாகக் கலைய ஆரம்பித்தது.

இதோ, மீண்டும் அதே வேகத்தோடு ரசிகர் கூட்டத்தை வகிடு எடுத்த மாதிரி விலக்கிக்கொண்டு உள்ளே நுழைகிருன் ரவீந்திரன்! கையில் என்ன? ரோஜாப் பூவின் நிறத்தில் மெல்லிதான ஒரு சிவப்புக் காகிதச் சுருள். உள்ளே வெள்ளி மின்னுகிறது. சந்தேகமில்லை; நகைக் கடையிலிருந்து வாங்கி வந்த ஒரு சுருள்தான் அது!

ரவீந்திரன் வந்ததும் வாத்திய வித்துவான்களிடையே ஒரு பரபரப்பு உண்டாயிற்று. புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்தவர் எழுந்து நின்ருர். அவசரத்தோடு வந்த ரவீந்திரன், அந்தச் சிஷ்யரிடமிருந்து புல்லாங்குழலை வாங்கினுன். தன்னுடைய ஜிப்பாவின் பையிலிருந்து விரைவாகக் கைக்குட்டையை எடுத்தான். வெகு அவசரமாக அந்தக் கைக் குட்டையினுல் புல்லாங் குழலைத் துடைத்தான். அடுத்த விஞடி அதை உதட்டிலே பொருத்தி வாசிக்க ஆரம்பித்துவிட்டான்.

என்ன ஆச்சரியம்! ரவீந்திரனுடைய நடையிலும், பேச்சிலும், கண்களிலும் தோன்றிய பதற்றமும், வேகமும்

இப்பொழுது விரல்களிலே பரிணமித்தன. இசையும் கற்பனையும் விறுவிறுப்போடு பொங்கி வந்தன. புல்லாங் குழலிலிருந்து பிறந்த இசையின் வேகம், மற்றப் பக்க வாத்தியங்களிலே தவழ்ந்து, சந்திரிகாவின் பாதச் சிலம்பிலே சென்று பின்னியது. 'கலீர் கலீர்' என்று புதிய மிடுக்கோடு சலங்கைகள் ஒலிக்க ஆரம்பித்தன.

பைரவி ராகத்தில் அமைந்த ஒரு வர்ணம் அது! நம்முடைய தென்னாட்டில் எத்தனை நூறு ஆண்டுகளாக இந்தப் பைரவி என்ற ராகம் முதிர்ந்து முதிர்ந்து, கனிந்து கனிந்து, சுவையேறி வந்திருக்கிறது. அந்தக் கனி வெல்லாம் சேர்ந்து அரங்கிலே நின்ற சந்திரிகாவின் பூங்கொடி போன்ற மேனியிலே குலுங்கியது.

இசை நின்றது. ரவீந்திரன் எழுந்தான். அந்த ரோஜா நிறக் காகிதச் சுருளைக் கையிலே எடுத்தான். சரேல் என்று நடந்து சென்று, ரசிகர்களின் முன் வரிசை முகப்பிலே அமர்ந்திருந்த கனவானை அணுகி, அவரிடம் காதோடு ஏதோ சொல்லிவிட்டு, அந்தச் சுருளைக் கொடுத்தான். அடுத்த விநாடி அவர் எழுந்து நின்றார். ரசிகர்கள் கை தட்டினார்கள்.

அரங்கேற்றத்துக்குத் தலைமை வகித்த கனவான் இப்பொழுது பேச ஆரம்பித்தார்:

"சகோதர சகோதரிகளே, இந்த அரங்கேற்றத்துக்குத் தலைமை வகிக்கும்படியான சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்ததை ஒரு பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன். ஏனென்றால் இன்று நம் முன் நடனமாடுகிற சந்திரிகாவின் குருவாகிய ரவீந்திரன் அவர்கள், ஒரு பெரிய இசைப் பரம்பரையைச் சேர்ந்தவர். சங்கீதம் அவரோடு உடன் பிறந்தது. அவருடைய இந்தக் குடும்பச் சொத்து இன்னும் கோடிக் காலம் நின்று விளங்க வேண்டும் என்ற ஆசையில், இப்படிப்பட்ட ஒரு சிஷ்யப் பெண்ணைத் தேடிப் பிடித்து, ரவீந்திரன் தமது ஞானத்தையெல்லாம் அவளுக்கு அன்போடு அப்படியே வழங்கியிருக்கிறார்.

"சந்திரன் எப்படி சூரியனிடமிருந்து ஒளியைப் பெற்று நிலவாக நமக்குத் தருகிறதோ, அதுபோல இந்தச்

சந்திரிகாவும், ரவீந்திரனிடமிருந்து சங்கீத ஒளியை ஏற்று நமக்கு நிலவாக வழங்குகிருள். தென்னுட்டின் சங்கீத பரம்பரைக்கே தனிச்சிறப்பாக அமைந்துள்ள வர்ணங்கள், பதங்கள், ஜதிகள், தில்லானுக்கள் முதலியவற்றை யெல்லாம், ஒளி மங்கி விடாமல் பாதுகாத்துப் பிரகாசிக்கும்படி செய்வதற்குத் தகுதி வாய்ந்த இந்த அருமையான சந்திரிகையை, அவர் எங்கு கண்டு எப்படிப் பயிற்சி அளித்தார் என்பதை எண்ண எண்ண, ஒரே ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையில் இது ஒரு அதிசயந்தான் என்று......"

தலைவர் அதற்குமேல் ஏதேதோ புகழுரைகள் பேச முனைந்தார். ஆனல் ரவீந்திரனுடைய செவிகளில் அந்த வார்த்தைகள் ஒன்றும் விழவில்லை. அவனுடைய மனம் ரயில் சக்கரத்தைப் போல நினைவுத் தண்டவாளத்திலே வேகமாகச் சுழல ஆரம்பித்தது.

* * *

ரயில் வண்டியின் சக்கரங்கள் மிக வேகமாகச் சுழன்றன. தனது நீண்ட நாளைய ஆசைப்படி ரவீந்திரன் இலஞ்சியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

இலஞ்சி என்ற அழகான பெயரோடு கூடிய ஊரைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். 'இலஞ்சி' என்ற சொல்லுக்குத் தமிழில் மடு, குளம், மதில் என்று பல பொருள். இத்தனை பொருளுக்கும் பொருத்தமாக இலஞ்சி என்ற ஊர், குளமும் வயலுமாகக் கண்ணுக்கு இனிய காட்சி தருகிறது. அங்கே மதிற்சுவர் இல்லை என்றாலும், அழகான ஒரு கோவிலும் அதன் மதிலும் உண்டு. தமிழ்க் கடவுளான முருகனுடைய ஆலயம் வயல் வரப்புக்களையே கோட்டையாகவும், நெற்கதிர்களையே சுடர் வேலாகவும் தாங்கி ஊருக்கு அரண் செய்கிறது.

இந்த சுந்தர கிராமத்தைப் பற்றி ரவீந்திரன் கேள்விப் பட்டிருக்கிருன். இந்த ஊர் திருக்குற்ருலத்துக்கு அருகில் இருக்கிறது என்று தெரிந்ததும், பிரியம் இன்னும்



அதிகரித்தது. இதற்கெல்லாம் மேலாக, குறவஞ்சி நாடகத்தில்,

“ அருள் இலஞ்சி வேலர்தமக்கு
ஒரு பெண்ணைக் கொடுத்தோம்
ஆதீனத்து மலைகள் எல்லாம்
சீதனமாய்க் கொடுத்தோம்!”

என்று குற்றாலத்துக் குறத்தி, இலஞ்சி முருகனைச் சம்பந்தி முறை கொண்டாடிப் பாடுவதைக் கேட்கும் போதெல்லாம் அங்கே, போக வேண்டும், அந்த இலஞ்சி முருகனுடைய சந்நிதியில் தனது சங்கீதக் காணிக்கையைச் செலுத்த வேண்டும் என்று ரவீந்திரன் ஆசைப் பட்டிருக்கிறான்.

இந்த நிலையிலேதான் அவனுக்கு இலஞ்சியிலிருந்து ஒரு கல்யாணக் கச்சேரிக்கு அழைப்பு வந்தது. மேள தாளத்தோடு வந்தது என்று சொல்லவேண்டும். காரணம், அப்பொழுதெல்லாம் புல்லாங்குழல் வித்துவான் ரவீந்திரனுடைய கச்சேரிக்கு நாடெல்லாம் அத்தனை மதிப்பும் செல்வாக்கும் இருந்து வந்தன.

ரயில் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. ரவீந்திரன் இலஞ்சியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

அப்பொழுது இரவு எட்டு மணி இருக்கும். வெளியே கன்னங் கறுப்பான இருள் இந்த உலகத்தையே இழுத்துப் போர்த்து மூடியிருந்தது. வேகமாகச் சென்ற ரயில் வண்டிக்குள்ளே மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந் தாலும், ஜன்னல் வழியாகத் தலையை நீட்டினால் இருள், இருள், இருள்! ஒரே கார்த்திகை மாதத்து அமாவாசைக் காரிருள்!

ரயில் வண்டி ஓடும்போது அங்கங்கே பொட்டுப் பொட்டாகத் தெரிகின்ற சிற்றூர்களின் விளக்கு வெளிச்சமும், கைகாட்டி மரங்களின் சிவப்பு பச்சை விளக்கு களும் சேர்ந்து, ‘இருளுக்கு மத்தியில் ஒளி இருக்கிறது’ என்ற உபநிஷத வாக்கியத்தை நிரூபித்துக் கொண்டி ருந்தன. அதைப் பார்த்தபோது ரவீந்திரனுடைய உள்ளத்தில் ஏதேதோ தத்துவச் சிந்தனைகள் ஓடின.

"பாம்புக் கோயில் சந்தை", "பாம்புக் கோயில் சந்தை" என்று போர்ட்டர் கத்தினன். ரயில் நின்று கொண்டிருந்தது. ஒரு சிறிய ஸ்டேஷன் அது.

இதோ! ரயில் நின்று மூச்சு விடுவதற்குள் கார்ட் விசிலே ஊதி விட்டார். ஸ்டேஷன் மாஸ்டரும் பச்சை விளக்கைக் காண்பித்து விட்டார். ரயில் மீண்டும் நகர ஆரம்பித்தது. ஆனல் இதென்ன?

ரவீந்திரன் ஏறியிருந்த மூன்றும் வகுப்பு வண்டியின் கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே நுழையும் சத்தம் கேட்டது. உடனே "இறங்கு, இறங்கு, கீழே இறங்கு!" என்று கூக்குரல்கள் எழுந்தன. இதற்குள் வண்டி நகர்ந்து வேகம் எடுக்க ஆரம்பித்தது.

ரவீந்திரன் பெஞ்சின் பின்புறம் உள்ள சாய்மானத்தின் இடைவெளி வழியாகப் பார்த்தான். யாரோ ஒரு பிச்சைக்காரக் கிழவியும் ஒரு சிறு பெண்ணுமாக உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். இவர்களே வண்டிக்குள்ளே விடுவது பற்றிச் சக பிரயாணிகளுக்குள் ஒரு பலமான சர்ச்சை.

"இந்த மாதிரி டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்கிறவர்களால்தானே நம்முடைய நாடே கெட்டுப் போகிறது!" என்ருர் ஒருவர்.

"ரயில் நகரும் சமயமாய்ப் பார்த்து ஏறி விட்டாள் பாருங்களேன்! என்ன திருட்டுத்தனம்!" என்ருர் இன்னெருவர்.

"கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுங்கள் சார்!" என்று சொல்லிக் கொண்டே பின்னேக்கி ஒதுங்கிச் சென்ருர் மூன்ருவது சூரர்!

"ஐயோ பாவம்! அவர்களே ஒன்றும் செய்யாதீர்கள், ஐயா!" என்ருர் ஒரு இரக்கப் பிரயாணி.

இதற்குள் சர்ச்சை பலத்து விட்டது. இரண்டு நிமிஷ நேரத்தில் இரக்கப்படுகிற கட்சியின் பலம் ஓங்க ஆரம்பித்தது.

"சரி பாவம்! இந்த நடைபாதையில் உட்கார்ந்து விட்டுப் போகட்டும்!" என்ருர் முதலில் பேசிய நண்பர், இரக்கத்தைப் புதிதாக வரவழைத்துக் கொண்டு!

இந்தக் கட்டத்தில் ரவீந்திரன் வேகமாக எழுந்தான்.

"இரக்கமா! ஏன் சார் இதுவா இரக்கம்? அட ஆண்டவனே! ரயில்வேக்காரனுக்குச் செய்கிற துரோகம் ஐயா இது! இந்தப் பரம துரோகத்துக்கா இரக்கம் என்று பெயர்? அப்படிக் கருணை இருந்தால் உங்கள் மடியில் இருந்து பணத்தை எடுத்து இரண்டு டிக்கெட் வாங்கிக் கொடுங்களேன்! எவனுக்கோ சொந்தமான ரயிலில் நமக்கு என்ன ஐயா உரிமை?"

ரவீந்திரனுடைய குரலில் படபடப்பு ஒலித்தது.

"சார், ஆத்திரப் படாதீர்கள். அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றதும் இறக்கி விட்டு விடலாம்!" என்ருர் ஆரம்பத்தில் இரக்கப்பட்ட மனிதர். ஆனால் இதென்ன திடீரென்று ஓசை?

இரண்டு காலணுக்களில் தாளம் தட்டுகிற ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து சிறுமியின் பாடல் வந்தது;

**முள்ளு முனையிலே மூணு குளம் வெட்டினேன்**
**ரெண்டு குளம் பாழு—ஒண்ணு**
**தண்ணியே இல்லை—ஒண்ணு**
**தண்ணியே இல்லை!**

**தண்ணியில்லா குளத்துக்கு வரிப்பணம் மூணுபணம்**
**ரெண்டு பணம் செம்பு—ஒண்ணு**
**செல்லவே இல்லை—ஒண்ணு**
**செல்லவே இல்லை!**

**செல்லாத பணத்துக்கு மண்குயவன் மூணுபேரு**
**ரெண்டுபேரு நொண்டி—ஒத்தன்**
**கையே இல்லை—ஒத்தன்**
**கையே இல்லை!**

**கையில்லாக் குயவன் செய்தது மூணு பானை**
**ரெண்டு பானை பச்சை—ஒண்ணு**
**வேகவே இல்லை—ஒண்ணு**
**வேகவே இல்லை!**

அவ்வளவுதான் ; ரயில் வண்டிக்குள்ளேயிருந்த அத்தனை பேரும் சர்ச்சைகளை மறந்து விட்டார்கள். அந்த அருமையான நாட்டுப் பாடலின் வர்ணனையில் சொக்க ஆரம்பித்தார்கள். இதுதான் சமயம் என்று அந்தப் பொல்லாத கிழவி கையை அகலமாக நீட்டிப் பிச்சை கேட்டாள். சிறு பெண்ணோ பாவம், தன்னுடைய பாட்டிலேயே முழு மனத்தையும் செலுத்தி, இரண்டு காலணுக்களை விரலுக்குள்ளே கொடுத்துத் தாளம் தட்டியவாறு பாடிக்கொண்டு நின்றாள். ஊடே ஊடே அவள் கிழவியைப் பார்த்துக் கொண்டாள். கேட்பவரின் உள்ளத்தில் இரக்கம் உண்டாக்கும் அளவுக்குப் பாட்டு உருக்கமாக இருக்கிறதா என்பதைக் கிழவியின் முகக் குறிதான் அங்கீகரிக்க வேண்டும் போலும் !

பாடலின் பொருளை ஜனங்கள் அனுபவித்துக் கொண்டிருந்தபோது, ரவீந்திரனுடைய உள்ளம் அந்தச் சிறுமியின் குரலிலே லயித்தது. ஒரு பிச்சைக்காரப் பெண்ணின் குரலா அது ? ரவீந்திரனால் நம்பவே முடிய வில்லை. பாறைக்குள்ளே, கல்லின் மடிப்புகளுக்குள், மென்மையான இளஞ் செடிகள் வளர்ந்து மலர் பூக்கின்றன என்று விஞ்ஞான நூல்கள் கூறுகின்றனவே, அப்படி யல்லவா இருக்கிறது இது !

ரவீந்திரன் பெஞ்ச் பலகையை விட்டு எழுந்து நின்று, அந்தச் சிறுமியை மின்சார வெளிச்சத்தில் கூர்ந்து பார்த்தான்.

எலுமிச்சம் பழம்போன்று இருந்தாள் அந்தப் பெண். முகத்திலேதான் எத்தனை களை ! அவளுடைய கண் களில் மின்சார விளக்கின் ஒளி படும்போது, ரத்தினக் கற்களில் வெளிச்சம் பட்டால் ஒரு ஜொலிப்போடு ஒளிக் கதிர் எதிரளித்து வரும் அல்லவா, அப்படி இருந்தது ! 'கட்டழகு' என்ற சொல்லுக்குப் பொருத்தமாக அந்த இளம் மேனியின் அங்கங்களில் வடிவும் வனப்பும் அமைப்பாக இருந்தன.

ரவீந்திரன் சிறுமியின் பாடலைக் கேட்டுக்கொண்டே, அவளுடைய உடல் அழகையும், குரல் இனிமையையும் வியந்தவண்ணம் இருந்தான்.

"வேகாத பானைக்கு இட்டது மூணரிசி
ரெண்டரிசி நெட்டை—ஒண்ணு
வேகவே இல்லை—ஒண்ணு
வேகவே இல்லை!

வேகாத அரிசிக்கு விருந்தாளி மூணுபேரு
ரெண்டு பேரு பட்டினி—ஒத்தன்
உண்ணவே இல்லை—ஒத்தன்
உண்ணவே இல்லை!"

என்று அந்தப் பிச்சைக்காரப் பெண் தன்னுடையபாடல்-விருந்தை முடித்துக்கொண்டு, ரவீந்திரனுக்கு முன்னால் நடந்து வந்தாள். அந்த நடையிலேதான் எத்தனை கவர்ச்சி! ஒயிலாக நடனம் ஆடவேண்டிய பெண்மையான பாதங்கள் அல்லவோ அவை!

சற்று நேரத்துக்கு முன்பு அவளைக் கீழே இறக்கி விடத் தயாராக இருந்த ரவீந்திரன்தானா அது! என்ன விந்தை ஜிப்பாவின் பைக்குள்ளே கையைப் போட்டான். ஒருரூபாயும் சில்லறையுமாக இருந்தது. அதை அப்படியே எடுத்து அந்தச் சிறுமியின் கையிலே வைத்தான்.

"ஹூம். பாடு மேலே!" என்றான்.

கிழவி அந்தச் சிறுமியின் கையிலிருந்த பணத்தைத் தான் எடுத்துக்கொண்டு, அடுத்த இடத்துக்குப் போகும் படியாகச் சிறுமியை நகர்த்தினாள். ரவீந்திரனுக்கு ஆத்திரம் வந்தது. கிழவியைக் கூர்மையாகப் பார்த்தான். தாடகை சூர்ப்பனகை என்றெல்லாம் சொல்லுவது கற்பனையில்லை, இன்றைக்கும் உயிர் வாழ்ந்து நம் கண் முன்னே உலவுகிற மனிதப் பிறவிகள்தான் என்னும்படி யிருந்தது அவளுடைய தோற்றம்! சிறுமிக்கும் அவளுக்கும்தான் எத்தனை வித்தியாசம்! மெய்யாகவே பாறைக்கு நடுவிலேதான் இந்த அரிய மலர் பூத்திருக்கிறதோ!

"இந்தா கிழவி, இப்படி வா இங்கே. ஒரு நாளைக்கு இந்தத் தொழிலிலே எவ்வளவு பணம் கிடைக்கும் உனக்கு?" என்று கேட்டான் ரவீந்திரன்.

“அது ஒரு கணக்கா சாமி! சில நாளைக்கு ஒண்ணுமே கிடைக்காமலும் போய்விடும்!”

“அதிகமாக் கிடைச்சா, எவ்வளவு கிடைக்கும்?”

“ஒரு ரூபா கிடைச்சாப் பெரிசு சாமி!”

“இப்போதான் ஒரு ரூபாய்க்கு மேலேயே கிடைச்சாச்சே! இப்படி உக்காரு கீழே. குழந்தை பாடட்டும்!”

கிழவியினால் இதற்குப் பதில் பேச முடியவில்லை. ரயில் வண்டியின் நடைபாதையில் உட்கார்ந்து தன்னுடைய டிக்கெட் இல்லாப் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தினாள் அவள்! சிறுமியோ? அவள் பாடினாள்! பாடிக்கொண்டேயிருந்தாள். எவ்வளவு நேரம் இப்படி நடந்தது என்று தெரியாது.

“தென்காசி”, “தென்காசி” என்று சத்தம் கேட்டது. ரவீந்திரன் பதறிக்கொண்டு எழுந்தான். “ஏ கிழவி! இறங்கு கீழே!” என்றான் அதிகார தோரணையில்! கிழவி தயங்கினாள்.

“இறங்கு கீழே. டிக்கெட் இல்லாமல் எவ்வளவு தூரம் போகிறது? ஹூம்!” என்று ஒரு அதட்டு அதட்டினான்.

கிழவி கீழே இறங்கினாள். சிறுமியும் இறங்கினாள். “நடவுங்கள் என் பின்னோடே!” என்று ஒரு மிரட்டு மிரட்டிவிட்டு, ஸ்டேஷனில் தனக்காக யார் வந்திருக்கிறார்கள் என்பதைக்கூட லக்ஷியம் செய்யாமல், நேரே ஸ்டேஷன் மாஸ்டரை நோக்கி விரைந்தான் ரவீந்திரன்.

“ஸார்!” என்று அவன் ஸ்டேஷன் மாஸ்டரைக் கூப்பிட்டபோது கிழவிக்கு உடம்பு பதறியது.

“ஸார்! பாம்புக் கோயில் சந்தையிலிருந்து தென்காசி வரை இரண்டு பேர் டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்த குற்றம் என்னைச் சேர்ந்தது. தயவு செய்து அதற்கு உரிய அபராதத் தொகையைப் பெற்றுக் கொண்டு, இந்த இரண்டு பேரையும் என்னோடு ஸ்டேஷனுக்கு வெளியே போக அனுமதியுங்கள்!”

ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தூக்கிவாரிப் போடாமல் என்ன செய்யும்? இந்த விசித்திரமான மனிதனை ஏற இறங்கப் பார்த்தார் அவர்!

"என்ன சார் பார்க்கிறீர்கள்? என் கடமையை நான் செய்கிறேன். உங்கள் கடமையை நீங்கள் தயவு செய்து தாமதியாமல் செய்யுங்கள், சார்!"

ரவீந்திரனுடைய பதற்றமும் அவசரமும் ஸ்டேஷன் மாஸ்டரைப் பிடித்து ஆட்டின. எனவே, ஐந்தே நிமிஷத்தில் ரயில்வே நிர்வாகம் தன்னுடைய கடமையைச் செய்து முடித்து அந்த மூவரையும் வெளியே அனுப்பியது. ஆனால் கிழவி ஏன் காலைக் கெந்துகிறாள்?

"ஏ கிழவி! உண்மையைச் சொல்லு. இந்தக் குழந்தை யாரு? எங்கே இருந்து திருடி வளர்த்து இந்த மாதிரித் தொழிலுக்குத் தயார் பண்ணினே? மரியாதையா உண்மையைச் சொல்லிப் போடு!" என்று கேட்டான் ரவீந்திரன்.

"என் பேத்தி சாமி இது!" என்று ஒரே போடாகப் போட்ட கிழவி, அந்தச் சிறுமியைப் பார்த்து ஒரு முழி முழித்தாள்.

"ஆமாம் ஐயா!" என்று ஈனஸ்வரத்தில் சொன்னாள் சிறுமி.

ரவீந்திரனுக்குச் சந்தேகம் உறுதி ஆயிற்று.

"இந்தா கிழவி! எனக்குப் பொய் பேசினாப் பிடிக்காது. பிசாசாக் கோபம் வரும், தெரிஞ்சுதா? ரயில்வே ஸ்டேஷனிலே இருந்து அனுவசியமாப் போலீஸ் ஸ்டேஷனுக்கு என்னை அலைக்காதே! நிஜத்தைச் சொல்லிப் போடு!"—ரவீந்திரன் அவளை விடுவதாக இல்லை.

இதன் பிறகு பத்து நிமிஷம் வாக்குவாதம் நடந்தது. இதில் மிகவும் ரஸமான விஷயம் என்னவென்றால், இந்த வாக்கு வாதத்தில் எவ்விதக் கவலையும் இல்லாமல் இதன் முடிவு என்ன ஆகிறது என்றே அந்தச் சிறுமி கவனித்துக் கொண்டிருந்ததுதான்!

" நூறு ரூபா வாங்கிக்கோ. மறு பேச்சு இல்லாம, இந்தக் குழந்தையை இங்கே விட்டுட்டு ஓடிடு!" என்ருன் ரவீந்திரன். சிறுமியின் முகத்தில் ஒரு பிரகாசம் தெரிந்தது, விடுதலை தனக்குக் கிடைக்கப்போவது போல!

" எனக்கு நேரம் ஆச்சு. சொல்லு சீக்கிரம்!"

" என்ன சாமி, இப்படி அவசரப்பட்டா எப்படி?" என்று வார்த்தைகளை இழுத்தாள் கிழவி. நூறு ரூபாய் என்ற வார்த்தை அவளுடைய மனத்தில் கொஞ்சம் வேலை செய்திருக்கிறது என்பது அவளுடைய குரலிலே தெரிந்தது.

"இதோ பார்! இப்பவே இலஞ்சிக்குப் போயாகணும் நான். நீ வருகிறதாயிருந்தா புறப்படு. ஒரு வகையா உன் கடனையும்........."

" இலஞ்சிக்கா...........?" என்று கேட்கும்போதே கிழவியின் கையும் காலும் 'வெட வெட' என்று ஆட்டம் கொடுத்தன. அந்த ஆட்டத்தின் காரணம் நீண்ட நாளைக்குப் பிறகுதான், பல ஆண்டுகளுக்குப் பிறகு தான், ரவீந்திரனுக்குப் புரிந்தது!

" ஆமா, இலஞ்சிக்குத்தான்!" என்று வெகு அழுத்தமாகச் சொன்னான் ரவீந்திரன்.

இதற்குள் ரவீந்திரனைத் தேடிக்கொண்டு பூமாலை யோடு ஸ்டேஷனுக்குள்ளே சென்றவர்கள், அவனைக் காணமல் ஏமாற்றத்தோடு திரும்பிக் கொண்டிருந் தார்கள். இதைக் கண்டதும் கிழவி நூறு ரூபாய்க்குக் கையை நீட்டினள்.

" நூறு ரூபாதானே? அது இப்போ ஏது? கச்சேரி முடிஞ்சதும்தான்! கிழவி, பார்க்கப்போனு நானும் ஒரு அனாதைதான் அம்மா உன்னைப்போல! ஆனா யாசகம் என்கிற அருங்கலை நமக்குப் பயிற்சி இல்லாமல் போச்சு! மற்றப்படி அன்றன்றைப் பாடு, அன்றன்றைக்குத்தான் —உன்னைப்போல! நாளை இந்த நேரத்துக்கு இலஞ்சிக் கோயிலுக்கு வா. நூறு ரூபாயோடு காத்திருக்கிறேன்!"

இலஞ்சி நண்பர்கள் இவர்தான் ரவீந்திரனாக இருக்க வேண்டும் என்று யூகித்து அங்கே வருவதற்குள், கிழவி சிறுமியை அந்த இடத்தில் அப்படியே விட்டு விட்டு ஏனோ கூட்டத்துக்குள்ளே நகர்ந்து விட்டாள்! பிறகு அவளைக் காணவே இல்லை!

ஆமாம்; மறுநாள் கிழவி இலஞ்சிக்கு வரவில்லை. முருகனுடைய சந்நிதானத்தில் நூறு ரூபாயோடு அவளுக்காகக் காத்திருந்தான் ரவீந்திரன். பயன் இல்லை. அதற்கு மறு நாளும் அவள் வரவில்லை. உண்மையில் அந்தக் கிழவியைப் பற்றி அதன் பிறகு தகவலே இல்லை! அவளைப் பற்றி அந்தச் சிறுமி சொன்ன விவரங்களைக் கேட்ட பிறகு, கிழவி அந்த மாதிரி ஒழிந்ததே நல்லது என்று பட்டது ரவீந்திரனுக்கு. அதை யெல்லாம் எண்ணும்போது இப்பொழுது ரவீந்திரனுக்கு.........

* * *

சபையோருடைய பலமான கைதட்டலில் ரவீந்திரனுடைய சிந்தனை சிதறியது. தலைவர் தமது பேச்சைக் கீழ்க்கண்டவாறு முடித்துக் கொண்டிருந்தார்:—

"நடனம் இன்னும் தொடர்ந்து நடக்கப் போகிறது. அதற்குமுன் இந்த வெள்ளிப் பாத சரத்தை ரவீந்திரன் சார்பில் சந்திரிகாவுக்கு மகிழ்ச்சியோடு வழங்குகிறேன். உண்மையில் அரங்கேற்றத்தின்போது சிஷ்யர்கள்தான் குருவுக்குக் காணிக்கை செலுத்துவார்கள். இந்த அரங்கேற்றம் அந்த வகையிலும் ஒரு புதுமையாகவே இருக்கிறது. இங்கே குருவே தமது சிஷ்யைக்குப் பரிசு வழங்குகிறார். அவருடைய நிகரற்ற அன்பின் ஒரு அடையாளமே இந்தப் பாத சரம். ரவீந்திரனுடைய அன்பே இந்தப் பாதசர உருவத்தில் சிஷ்யையின் நடனத்துக்குக் காப்பாக அமைந்து, நடனம் ஆடும் கால்களை என்றென்றும் 'கலீர் கலீர்' என்று ஆசி கூறி அலங்கரிக்குமாக!"

மீண்டும் கைதட்டல். சந்திரிகா வந்து அந்தப் பரிசை வாங்கிக் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள். ரசிக மக்கள் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்தார்கள்.

இதென்ன? அந்தக் கைதட்டல் அடங்கியதும் மாதர் கூட்டத்தில் ஒரு பரபரப்பு? அந்த அம்மாள் யார்? ஏன் இப்படி அவள் எழுந்து நிற்கிருள்?

அந்தப் பெரிய சபையையே காரி உமிழ்வதுபோல ஒரு பார்வை. அடுத்த விஞடி அந்த அம்மாள் 'தடதட' என்று நடந்து அந்தக் கூட்டத்தை ஆங்காரத்தோடு விலக்கிக்கொண்டே வெளியே சென்ருள்.

இதைப் பார்த்ததும் ரவீந்திரனுடைய கண்ணிலே சுருக்கென்று முள் குத்துவதுபோல் இருந்தது. ஆயிரம் மின்னல்கள் அவனுடைய முகத்தில் துவண்டன. எல்லாம் ஒரு கணந்தான். அடுத்த கணம் தம்புரா 'ரீம் கிலீம்' என்று ஒலித்தது. வீணை வித்வான் நரம்புகளைச் சுண்டிஞர். மிருதங்கம் குங்காரம் கொடுத்தது. அவ்வளவு தான்; கண்ணிலே குத்திய முள்ளை எடுத்து எறிந் தவனைப்போலத் தன்னை மறந்து புல்லாங்குழலை எடுத்து உதட்டிலே பொருத்தி விரல்களை அதன்மேல் ஓட விட்டான் ரவீந்திரன்.

மத்தளம் ஒலித்தது. குரல் எழுந்தது. பாதச் சிலம்புகள் 'கலீர் கலீர்' என்றன. நடன நிகழ்ச்சி மீண்டும் தொடங்கியது.

எழுந்து சென்ற அம்மாள் இது ஒன்றையும் லக்ஷியம் செய்யவில்லை. விறுவிறு என்று ஒரே ஆவேசத்தோடு நடந்து நூற்றுக்கால் மண்டபத்தை விட்டு வெளியே வந்தாள்.

# 3. மனம் எனும் மாயை !

இந்தப் பரந்த உலகில் எல்லா மனிதர்களும் ஒரே மாதிரி நல்லவர்களாகவே இருந்துவிடக் கூடாதா? சில மனிதர்கள் ஏன் துஷ்டர்களாக இருக்கவேண்டும்? சிலர் ஏன் வேண்டாதபடியெல்லாம் நடந்துகொள்ளுகிறுர்கள்?— என்பன போன்ற கேள்விகளுக்கெல்லாம் யாரால் பதில் சொல்ல முடியும்? இயற்கையென்றும், நியதியென்றும் சொல்லித் தீர்த்துவிட வேண்டுமே தவிர, நம்முடைய சாதாரண அறிவுக்குத் திருப்தி தரக்கூடிய விதத்தில் விடை சொல்ல முடிகிறதில்லே.

பூஞ்செடிகள் அனேத்தும் ஏன் ஒன்றுபோல் இருப்பதில்லே? சில செடிகளில் மட்டும் நல்ல வாசனேயோடும் வர்ண அழகோடும் கூடிய மலர்கள் பூக்கின்றன. வேறு சில செடிகள் கண்ணே மட்டும் கவர்கின்றன; வாசனேயோ, அனலாக இருக்கிறது. சில மலர்களில் வாசனே நெஞ்சை அள்ளுகிறது. ஆனுல் வர்ணமோ கண்ணேக் குத்துகிறது. மரங்களேத்தான் பாருங்களேன். சில மரங்கள் நேராக வளர்கின்றன. சில கொம்பும் கிளேகளுமாகப் படர்ந்து நிற்கின்றன. இன்னும் சிலவோ வளரும்போதே கோணலும் மாணலுமாக முண்டு முடிச்சுக்களோடு எழுகின்றன. இதெல்லாம் ஏன்? ஒரே தோட்டத்தில் ஒரே சூழ்நிலேயில் ஒரே மாதிரி உரத்தை உட்கொண்டு வளர்கிற மரஞ் செடி கொடிகளிலேதான் எத்தனே வித்தியாசம்?

மனித மனங்களும் இப்படியேதான்! அவற்றின் கோணல்களே யெல்லாம் வகைப் படுத்திக் காரணம் சொல்வது என்ருல் அது முடிகிற காரியமில்லே! 'மனம் என்னும் மாயை' என்றுதானே சொன்னுர் தாயுமானவர்!

அப்புலிங்கம் இம்மாதிரிச் சிந்தனேகளிலே அன்று ஆழ்ந்து போனுன். ஏற்கனவே தத்துவ விசாரணேகளில் கொஞ்சம் நாட்டம் உடையவனுதலால், அன்றிரவு முழுதும்

அவன் உறங்கவே இல்லை. மனம் எனும் மாயை பற்றித் தான் சிந்தித்துக் கொண்டிருந்தான். அதிலும் நாக ரத்தினத்தைப் பற்றி நினைத்தபோது, அந்த மனிதனின் இதய மலரில் எத்தனை தூரம் அனல்—வாடை வீசுகிறது என்பதை நினைக்க நினைக்க அப்புலிங்கத்துக்குப் பயமாகவே இருந்தது.

*　　　　*　　　　*

அன்று மாலை ரவீந்திரனைப் பின்தொடர்ந்து செல்லுவோமா அல்லது நரசிம்மச்செட்டியாரின்கடையிலே தினப்பத்திரிகையை விட்ட இடத்திலிருந்து தொடரு வோமா என்று கடை வீதியில் நின்று யோசித்துக் கொண்டிருந்தான் அல்லவா அப்புலிங்கம்; அவனுடைய முதுகை யாரோ வந்து ஒரு தட்டுத் தட்டினார்கள். பதறிப் போய்த் திரும்பிப் பார்த்தால், நாகரத்தினம் பின்னால் நின்றுகொண்டு 'கொல்' என்று சிரித்தான்.

"என்ன சுவாமிகளே! இப்படி நடுத்தெருவில் நின்று மோனத் தவத்தில் ஆழ்ந்து விட்டீர்கள்?" என்று கேட்டான் நாகரத்தினம்.

"மோனமும் இல்லை. தவமும் இல்லை. ஒரு அதிசய மான சமாச்சாரம். அதிலிருந்து மீளுவதற்குள் இன்னொரு அதிசயமாக நீ வந்து நிற்கிறாய்!" என்றான் அப்புலிங்கம். நாகரத்தினம் பதில் பேசாமல் அழுத்தமாக நின்று அப்பு லிங்கத்தையே ஆராய்ந்து பார்த்தான்!

"நாகரத்தினம்! எப்பொழுது மாதுங்காவிலிருந்து இங்கு வந்து சேர்ந்தாய்?" என்று அவனைக் கேட்டான் அப்புலிங்கம்.

"அது ஒரு பெரிய கதை. பம்பாய் சேட்டுக்கும் நமக்கும் ஒத்து வரவில்லை. ஒரு நாள் அவனுடைய லெட்டர் பேப்பரிலேயே ஒரு காகிதத்தைக் கிழித்தேன். நம்முடைய ராஜினாமாவை அதிலேயே எழுதி அதை அவன் முகத்திலேயே எறிந்துவிட்டு வந்துவிட்டேன்!"

"அப்படியானால் இப்பொழுது திருச்சியில் தான் இருக்கிறாயா?" என்று அப்புலிங்கம் கேட்டான்.

“ லால்குடியில், மாமனார் வீட்டில் !”

“ லால்குடியிலா ?”

“ ஆமாம் !”

“ உத்தியோகம் ?”

“ உத்தியோகம், சுக ஜீவனந்தான். அதான் சொன்னேனே அப்பா, மாமனார் வீட்டில் என்று !”

இப்படிச் சொல்லிய வண்ணம் அப்புலிங்கத்தின் முதுகில் இன்னொரு தட்டுக் கொடுத்துக்கொண்டே, நாகரத்தினம் தன்னுடைய முப்பத்திரண்டு பல்லும் தெரியும்படியாகச் சிரித்தான். அந்தப் பற்களில் நன்றாக வெற்றிலைக் காவி ஏறிப்போய் இருந்தது. புகையிலை போட்டுப் போட்டுக் கறுப்பும் சிவப்புமாக, இருவர்ணச் சித்திரமாய் இருந்தது, பல்வரிசை ! முப்பத்திரண்டு பல்லில் ஊடே முன் பல் மட்டும், பொய்ப்பல் போலிருக்கிறது. தங்கம் கட்டிப் ‘பளபள’ என்று ‘டால்’ வீசிக் கொண்டிருந்தது !

“ அதெல்லாம் சரி அப்புலிங்கம் ! நீ ஏன் இப்படி மெய்மறந்து போய் நடுத்தெருவில் நின்றுவிட்டாய் ? ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்தில் யாராவது பேரழகியை, சுந்தரியைக் கண்டு விட்டாயா ? நீ இன்னும் தனிக்கட்டை தானே ?” என்று கேட்டான் நாகரத்தினம்.

அப்புலிங்கத்துக்கு இந்த வார்த்தை கொஞ்சமும் பிடிக்கவில்லை.

“ நாகரத்தினம் ! எத்தனை நாள் ஆனாலும் நீ பழைய ஆளாகத்தான் இருக்கிறாய் போலிருக்கிறது—பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது இருந்த......”

“ ஆமாம். நாங்கள் எல்லாம் மார்க்கண்டேயர் கூட்டம். என்றும் பதினாறு வயது எங்களுக்கு......” என்றான் நாகரத்தினம்.

“ சௌடால்த்தனம் எல்லாம் அப்படியே இருக்கிறதே இன்னும்—” என்றான் அப்புலிங்கம்.

" மன்னிக்க வேண்டும், சுவாமிகளே! தாங்கள் பொன்மலை பக்தஜன சபையின் உப தலைவர் என்பதையும், மலைக்கோட்டைத் திருப்புகழ் பக்தர் கழகத்தின் காரியதரிசி என்பதையும் மறந்தே விட்டேன். அதற்காக மன்னிப்பு! இப்பொழுது தயவுசெய்து சொல்லலாமா, தாங்கள் இப்படி மெய்சிலிர்த்து நிற்கும்படியான பேரதிசயம் என்ன நடந்தது, இந்த மாலை வேளையில், திருச்சிப் பெரிய கடை வீதியிலே என்று—"

இவனிடம் இப்படி மாட்டிக் கொண்டோமே என்று பட்டது அப்புலிங்கத்துக்கு. ஆனாலும் அடக்கத்தோடு தான் பேசினான். புல்லாங்குழலை ஈடு வைக்க வந்த மனிதனைப் பற்றி ஆரம்பித்தானோ இல்லையோ, நாக ரத்தினம் இடைமறித்தான்.

" புல்லாங்குழல் ஆசாமிதானே? ஒடிசலாக, மெல்லி தான மஸ்லின் ஜிப்பா, ராஜபார்ட் முடி, குறுகுறு என்று எதையோ பறிகொடுத்து விட்டுத் தேடுகிற மாதிரியான பார்வை, படபடப்பான பேச்சு........."

" ஆமாம். அவரேதான். ஆயிரத்தில் ஒரு மனிதர் என்று தோன்றுகிறது" என்று சொன்னான் அப்புலிங்கம்.

" பேஷ்! உன்னுடைய புத்தியும் இவ்வளவுதானா! தலையெழுத்து! அப்பனே! திருப்புகழ், தேவாரம் என்று சேர்ந்து விட்டாலே ஆசாமிக்குத் தலையில் கொஞ்சம்..."

வார்த்தைகளை முழுதும் முடிக்காமல் மீண்டும் அப்புலிங்கத்தின் முதுகை—தலையை இல்லை. முதுகைத் தான்—மீண்டும் தட்டினான் நாகரத்தினம்.

" ரவீந்திரன் என்று அவர் பெயர். அவரையா இப்படி யெல்லாம் பேசுகிறாய், நாகரத்தினம்!" என்று ஆவலும் குழப்பமுமாகக் கேட்டான் அப்புலிங்கம்.

" சாக்ஷாத் மகாராஜராஜஸ்ரீ மகாகனம் பொருந்திய திருவாளர் ரவீந்திரப் பைத்தியானந்த பரமகுரு அவர்களைப் பற்றித்தான் சொல்லுகிறேன். இந்த ஊரில் வேறு யார் அப்படி உண்டு? அப்படிப்பட்ட 'லூஸ்' இன்னொன்று நடமாடினால் இந்த உலகம் தாங்குமா, சுவாமிகளே!"

இதற்கு என்ன பதில் சொல்வது என்று அப்புலிங்கத்துக்குத் தெரியவில்லை. தலை சுற்றியது. நாகரத்தினம் தொடர்ந்து பேசினன்.

“ அப்புலிங்க மகா புருஷத் திருப்புகழ் தாசரே ! அந்த ரவீந்திரன் யார் என்று தெரியுமோ உங்களுக்கு ?”

“ சொல்லப்பா. ஏன் என்னையே திரும்பத் திரும்பக் கேட்கிருய் ?”

“ ஓகோ, நைஷ்டிக பிரும்மச்சாரியோ ? அதனுல் தான் உள்ளத்தில் சினம் அடங்கவில்லை ! சரி.........சரி......... தெரிந்து கொண்டேன். இப்பொழுது சொல்கிறேன். ஸ்ரீமான் ரவீந்திரன் அவர்கள் என்னுடைய அத்தான்—”

“ அத்தான ? அப்படி யென்ருல்—”

“ நம்முடைய அக்காளின் கணவர். அதாவது அக்காளை மாலை யிட்டவர். அதாவது அக்காளைத் திண்டாட விட்டவர். அதாவது, திண்டாட விடுகிறவர். திண்டாட விடப் போகிறவர் !”

“ உன்னுடைய அக்காளின் கணவரைப் பற்றியா இப்படி யெல்லாம் பேசுகிருய் ?”

“ ஆமாம், வேறு யாரைப்பற்றி எனக்கு இவ்வளவு நன்ருகத் தெரியும் ?” என்று சொல்லி, ஆத்திரமும் ஏளனமும் கலந்த முறையில் பல்லைக் காட்டிச் சிரித்தான் நாகரத்தினம். அவனுடைய பொய்ப் பல் பளிச்சென்று மினுமினுத்தது.

“ நாகரத்தினம் ! உன்னுடைய குறும்புத்தனத்தைக் கொஞ்சம் கட்டி வைத்து விட்டுத் தயவுசெய்து சொல்லேன், இப்பொழுது இவ்வளவு அவசரமாக அவருக்கு ஏன் இருபத்தைந்து ரூபாய் தேவைப்பட்டது ? அவ்வளவு ஏழையா அவர்—அவ்வளவு தூரம் அவருடைய குடும்பம் திண்டாடுகிறதா, என்ன ?”

“ அதெல்லாம் ஒரு பெரிய புராணம் !”

“ அப்படி யென்ருல் ?”

“ திருத்தொண்டர் புராணம் !”

இப்படிச் சொல்லி விட்டு மீண்டும் ஒரு முறை அப்புலிங்கத்தின் முதுகைத் தட்டியவாறு தொடர்ந்து சொன்னன் :

" எங்கள் அத்தான் இருக்கிருரே, திருக்கலைத் தொண்டர், அவரோடு ஒரு கூத்தாடிக் குரங்கு இருக்கிறது. அதற்கு ஏதாவது ஒரு சங்கிலி வாங்கிக் கழுத்திலே போட்டிருப்பான். இன்று மலைக்கோட்டையில் அந்தக் குரங்கு அரங்கு ஏறுகிறது! ஆனலும் இருபத்தைந்து ரூபாய்க்கு என்ன சங்கிலி கிடைக்கும்? ஒரு வேளை எவர்ஸில்வரில் புதிதாக நாயைக் கட்டிப் போடுகிற சங்கிலி வந்திருக்கிறதோ, என்னவோ !"

அப்புலிங்கத்துக்கு இந்த வார்த்தைகள் கசப்பைக் கொடுத்தன. உலகில் ஒருவரைப் பற்றி ஒருவர் எவ்வளவு எளிதில் தூக்கி எறிந்து பேசி விடுகிருர்கள் என்று மனத்துக்குள் நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டே மௌனமாக நின்ருன்.

நாகரத்தினம் கேட்டான் : " அது சரி, அப்புலிங்கம் ! அந்த அதிமகா கலைஞர் மலைக் கோட்டைக்குத்தானே போனுர் ?"

" எங்கே போனுர் என்று தெரியாமல்தான் முழித்துக் கொண்டிருக்கிறேன். இந்தப் பக்கமாகத்தான் நடந்தார்."

" கச்சேரிக்கு மத்தியில் திடீரென்று பைத்தியம் முற்றிப் போய்க் கடைத் தெருவுக்கு வந்திருக்கிருன், நிச்சயம் பழையபடியும் கச்சேரிக்குத்தான் திரும்பிப் போயிருக்கவேண்டும். இவர் இல்லாமல்தான் அந்த மோகனவல்லிக்குக் கால் நிலத்தில் பாவாதே !"

அப்புலிங்கத்துக்கு இதைக்கேட்டதும் மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்துக்கே போகலாமா என்று தோன்றியது.

" கச்சேரிக்குப் போகலாமா என்று சுவாமிகள் நினைக்கிறதுபோல் தோன்றுகிறதே. திருப்புகழ் சபை உப தலைவர் அல்லவா? சங்கீதம் நாட்டியம் என்ருல் ஈடுபாடு இருக்கத்தான் செய்யும்? அதிலும் அருணகிரி நாதரின் பரமதாசர் நீங்கள்—"

இந்தக் குறும்புத்தனமான வார்த்தைக்கு இன்னொரு சந்தர்ப்பமாக இருந்தால் "வெடுக்"கென்று பதில் சொல்லி யிருப்பான் அப்புலிங்கம். இப்பொழுது உணர்ச்சியை அடக்கிக் கொண்டான்.

"சரி, வாருங்கள் சார் அப்புலிங்கம் அவர்களே! நமக்கும் சேர்த்து ஒரு டிக்கெட் எடுங்கள். ஒன்ருகவே போவோம். என்ன வேடிக்கைதான் நூற்றுக்கால் மண்டபத்துக்குள்ளே நடக்கிறது என்று பார்ப்போம்!" என்று சொல்லியவண்ணம், அப்புலிங்கத்தின் தோளில் கையைப் போட்டு அவனே இழுத்துக்கொண்டே நகர்ந்தான் நாகரத்தினம்.

ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்துக்குள் நடந்துசெல்லப் பத்து நிமிஷம் பிடித்தது. மலைவாசலில் மாணிக்க விநாயகர் சந்நிதியைத் தாண்டிப் படிகளில் ஏறி. ஒலி பெருக்கியைக் கடந்து, கூட்டத்தையெல்லாம் விலக்கிக் கொண்டு மலைமேல் உள்ள தெற்குத் தெருவை அடைந்தார்கள். அப்படியே மலைத்து நின்ருன் நாகரத்தினம்.

கூட்டத்தை வேகத்தோடு தாண்டிக்கொண்டு ஓரே கோபாவேசமாக வந்துகொண்டிருந்தாள் கல்யாணி அம்மாள். அவளைப் பார்த்ததும் நாகரத்தினத்தின் முகத்தில் ஒரு விநாடி குறும்பு மறைந்துபோய் ஒரு கலவரம் தோன்றிற்று.

"அக்கா!" என்று கூப்பிட்டுக் கொண்டே நாகரத்தினம் அவள் அருகில் போனுன். அப்புலிங்கம் அப்படியே திகைப்பில் நின்று விட்டான்.

"அக்கா! என்ன இது? கச்சேரிக்கு மத்தியில் எழுந்து வந்து விட்டாயா? என்ன நடந்தது?"

"எல்லாம் சாவகாசமாகப் பேசலாம். என்னேடு வா வீட்டுக்கு—" என்ருள் கல்யாணி.

"சுவாமிகள் கச்சேரிக்கு எழுந்தருளட்டும். நான் கொஞ்சம்—"

மீண்டும் குறும்புத்தனந்தானு? "நமஸ்காரம்!" என்று ஒரே ஒரு வார்த்தையில் பதில் சொல்லி விட்டு.

அவனிடமிருந்து தன்னைக் கழற்றிக்கொண்டு நூற்றுக் கால் மண்டபத்தை நோக்கி மேலே நடந்தான் அப்பு லிங்கம். ஆனால் மனத்தை மட்டும் அப்படி எளிதாகக் கழற்றிக்கொள்ள முடியவில்லை.

இந்தக் கல்யாணி அம்மாள்தான் ரவீந்திரனுடைய மனைவியா? "அக்கா" என்று எவ்வளவு பிரியத்தோடு பேசினான் நாகரத்தினம்? அவனுடைய உள்ளத்திலும் பாசம், மரியாதை என்று இருக்கிறதா? அப்படியானால் ரவீந்திரனைப் பற்றி ஏன் அவன் அவ்வளவு துச்சமாகப் பேசவேண்டும்? ஒரு வேளை அவன் சொன்ன விவரங்கள் எல்லாம் உண்மையாக இருக்குமோ? ஆனாலும் அப்படி ஒரேயடியாகத் தூக்கியெறிந்து பேசுவானேன்? எத்தனை மூர்க்கத்தனமாகப் பேசினான்? தன்னிடம்தான் எவ்வளவு அநாகரிகமாக நடந்து கொண்டான்! இதையெல்லாம் எண்ணும்போது உலகத்தில் மனிதர்கள் ஏன் இப்படி யெல்லாம் நடந்துகொள்கிறார்கள் என்று அவனுக்குப் புரியவில்லை!

அப்புலிங்கத்தின் மனம் ஒரு நிலையில் இல்லை. அரங்கேற்றம் முடிந்து வீடு திரும்பி இரவு படுக்கையில் படுத்துக் கொண்டபோதும் இதே சிந்தனைதான். உண்மையில் இந்தக் குழப்பம் எல்லாம் தீரப் பல நாள் ஆயிற்று அவனுக்கு.

கல்யாணியும் நாகரத்தினமும் வெகு வேகமாக நடந்து சைவ சித்தாந்த சபையைத் தாண்டித் தாயு மானவர் தெருவிலே நுழைந்தார்கள்.

வீட்டுக் கதவைப் பூட்டி விட்டல்லவா நூற்றுக்கால் மண்டபத்துக்குச் சென்றிருந்தாள் கல்யாணி. இப்பொழுது அந்தப் பூட்டைத் திறந்துகொண்டு வீட்டினுள் அடி யெடுத்து வைத்தாளோ இல்லையோ, அப்படியே "ஓ" என்று ஒரேயடியாகக் கதறி அழுது விட்டாள் அவள்! இத்தனை நேரமும் மனத்தின் கதவைப் பூட்டிப் போட்டிருந் திருக்கிறாள். இப்பொழுது கதவைத் திறந்ததும் உணர்ச்சிகள் அனைத்தும் ஆவேசத்தோடு கண்ணீராகப் பொங்கி வந்தன.

வெளிக் கதவைத் தாளிட்டு விட்டு வந்தான் நாகரத்தினம்.

"அக்கா என்ன இது? சிறு குழந்தையா நீ?" என்று சொல்லும்போது நாகரத்தினத்தின் குரலில் பரிவு தொனித்தது. ஆனால் மறு கணமே அவனுடைய இயற்கைக் குணம் மேலோங்கி வேலை செய்தது.

"ஹூம்! இந்தமாதிரியெல்லாம் நடக்கும் என்று தெரியும் எனக்கு" என்றான். இப்படி அவன் சொன்ன போது, இந்த மாதிரி நடந்ததில் அவனுடைய உள் மனத்தில் ஒரு திருப்தி இருந்தது என்று தெரிந்தது. சிலருக்கு அப்படித்தான். தாங்கள் வந்து ஆறுதல் சொல்லுவதற்காகவே, யாராவது துக்கப்படவேண்டும் என்று விரும்புவார்கள்! தங்களுக்கு ஒரு முக்கியத்தை ஏற்படுத்திக்கொள்ள இதை ஒரு வாய்ப்பாகக் கருதித் திருப்தி அடைவார்கள்!

"தம்பீ! உனக்கு என்ன தெரியும்? நீ இத்தனை நாளும் பம்பாயில் இருந்தவன். இங்கே என்ன கோலம் எல்லாம்......"

"அக்கா! அதெல்லாம் எனக்குப் பரிபூரணமாகத் தெரியும். நான் பம்பாயிலிருந்து திரும்பி வந்து இந்த ஆறு மாதத்தில், விவரம் எல்லாம் தெரிந்துகொண்டு விட்டேன். பல தடவை நானே உன்னிடம் கேட்க வேண்டும் என்று ஆரம்பித்தேன். சந்தர்ப்பம் சரியில்லாமல் போய் விட்டது."

இதுவரை தன்னுடைய கட்சிக்கு ஆள் இல்லாமல் ஏகாந்தமாய்த் தவித்துக் கொண்டிருந்த கல்யாணி அம்மாள் இப்பொழுது மனம் விட்டுப் பேச ஆரம்பித்தாள்.

"எங்கேயோ பிச்சை எடுத்துக்கொண்டு திரிந்த ஒரு தெரு நாயைக் கொண்டுவந்து வைத்துத் தினமும் இப்படிக் கூத்து நடக்கிறது. அந்தச் சீமைக் குரங்கோ எப்பொழுது பார்த்தாலும் கூந்தலைச் சீவிக்கொள்வதும், மேனியைச் சிங்காரிக்கிறதுமாகவே இருக்கிறது" என்றாள் கல்யாணி.

" அதெல்லாம் சிஷ்ய பரம்பரை, அக்கா ! இவருக்குப் பின்னுல் இவருடைய பெயர் நின்று துலங்க வேண்டும், பார். அதற்காக இப்படி ஒரு—"

" தம்பி ! இன்னும் கொஞ்ச நாளிலே நான் பிச்சைக் காரியாகி விடுவேன். அவள்தான் வீட்டு எஜமானி !"

" அக்கா ! அதை மட்டும் சொல்லாதே. இந்த நாகரத்தினத்தின் உடம்பில் உயிர் இருக்கிற வரைக்கும் அது நடக்காது" என்று சொல்லிக்கொண்டே நாக ரத்தினம் ஊஞ்சலில் உட்கார்ந்தான். கல்யாணி அம்மாள் ஊஞ்சலின் சங்கிலியைப் பிடித்தவாறு முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நின்ருள்.

" அக்கா ! ஆரம்பத்தில் நீ உன் புத்தியைக் கடன் கொடுத்து விட்டு, இப்பொழுது அவரைச் சொல்வதில் என்ன பிரயோஜனம் ? அந்தக் காலத்திலேயே இந்தப் பிச்சைக்கார ராணியை உள்ளே விடாமல் இருந்திருந்தால் இதெல்லாம் நடந்திருக்குமா ? நான் ஒருத்தன் பம்பாயிலே போய் இருந்து தொலைத்தேன். ஹும் ! எல்லாம் தலை விதி !" என்ருன் நாகரத்தினம்.

கல்யாணி அம்மாள் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. கண்ணீர் மாலை மாலையாக வந்தது. நாகரத்தினம் ஏதோ பலமாக யோசனை செய்வதுபோல் கண்களை மூடிக் கொண்டு தரையில் காலை ஊன்றிச் சமட்டி, ஊஞ்சலை ஒரு எம்பு எம்பித் தள்ளிஞன். உத்தரத்திலிருந்து தொங்கிய ஊஞ்சல் 'கிறு கிடு கிரீச்' 'கிறு கிடு கிரீச்' என்று சத்தம் செய்துகொண்டே, கல்யாணியின் மனசைப் போல் வேகமாக ஆடியது. நாகரத்தினம் ஊஞ்சலை இன்னும் அதி வேகமாக ஆட்டிஞன்.

" அக்கா ! கவலைப்படாதே. இதுக்கெல்லாம் ஒரு சரியான வழி யோசித்து வகை செய்து விடுகிறேன். அது வரை நீ தைரியமாக இரு. நான் லால்குடியில் இருந் தாலும் இங்கேயே இருக்கிறேன் என்று வைத்துக் கொள். இந்த ஊரிலேயே எனக்கு ஒரு—"

இப்படி நாகரத்தினம் எதையோ சொல்ல ஆரம்பிக்கும்போது, தெரு வாசலில் வண்டி வந்து நிற்கும் சலங்கைச் சத்தம் கேட்டது. நாகரத்தினம் பதறிப்போய் ஊஞ்சலை விட்டு எழுந்தாள்.

"அக்கா, மகா கலைஞர் வருகிறார், மங்கையர்க்கரசியோடு! அதனால் நான் இப்பொழுதே மெதுவாகப் பின் வாசல் வழியாகப் போய் விட வேணும். நான் இங்கு வந்ததாகவே அவருக்குத் தெரிய வேண்டாம். சண்டையைக் கிளப்புவதற்கு இது சமயம் இல்லை! புல்லாங்குழல் வேறே ஈடு போயிருக்கிறது—"

போகிற போக்கில் புல்லாங்குழலைப் பற்றி இப்படி ஒரு தீக்கங்கையும் தூக்கி எறிந்து விட்டு அவசரம் அவசரமாகப் புறவாசலோடு பறந்தது அந்த மனிதக் கழுகு!

'புல்லாங்குழல் ஈடு போயிருக்கிறது' என்ற அதிர்ச்சியிலிருந்து கல்யாணி அம்மாள் மீளுவதற்குள், வாசல் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

அவராக இருந்தால் இந்த மாதிரிக் கதவைத் தட்ட மாட்டாரே என்று அவள் யோசித்துக் கொண்டிருக்கும் போதே, "ரவீந்திரன், ரவீந்திரன்" என்று ஒரு வேற்றுக் குரல் கேட்டது.

வண்டியிலிருந்து ஒருவர் பழக் கூடைகளோடு இறங்கினார்.

## 4. புள்ளி மானே ? புலியோ ?

கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த கல்யாணி அம்மாள் அடுத்த வீட்டு நண்பர் திண்ணையில் வந்து நின்று கொண்டிருந்ததைக் கண்டாள்.

“ அவர் இல்லையா ?” என்று கேட்டுக் கொண்டே பதிலுக்குக் காத்திராமல், “ உங்கள் தகப்பனுர் வந்திருக்கிறுர், அம்மா ! வீடு தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தார் ” என்று சொல்லி விட்டு, “ நான் வருகிறேன் ” என்று போய் விட்டார். இதற்குள் பழக் கூடையோடு இறங்கிய பெரியவர் வாசல் படிகளில் ஏறினுர்.

“ வாருங்கள், அப்பா !” என்று அவரை வரவேற்றுக் கொண்டே, வாசல் கதவுகள் இரண்டையும் நன்ருகத் திறந்தாள் கல்யாணி அம்மாள்.

“ என்னம்மா, உன்னுடைய புதிய வீட்டைக் கண்டு பிடிப்பதற்குள், இந்த வண்டி எத்தனை மூலை முடுக்குகளுக்கெல்லாம் போகவேண்டியது இருந்தது, தெரியுமா ! என்ன பாடு பட்டு விட்டது !” என்று சிரித்தவாறே சொல்லிக் கொண்டே பழக் கூடையைக் கீழே வைத்து விட்டு ஊஞ்சலில் உட்கார்ந்தார் கனகசுந்தரம்.

“ ஏனம்மா கல்யாணி, இத்தனை சந்து பொந்துகளைத் தாண்டி இங்கே வந்து எப்படிக் குடியேறினீர்கள் ? இவ்வளவு பெரிய ஊரில் உன்னுடைய மாப்பிள்ளைக்கு என்று இப்படி ஒரு வீடு எப்படித்தான் அகப்பட்டதோ? பழைய ஆண்டார் தெரு வீட்டுக்கு என்ன குறை வந்தது? ஏன் அது பிடிக்கவில்லை ?” என்று கேட்டார் கனகசுந்தரம்.

“ அந்த வீடு நல்ல வீடுதான், அப்பா ! தெருவும் நல்ல தெருத்தான். நமக்குப் பிடித்துத்தான் இருந்தது. ஆனல் நம்மைத்தான் அதற்குப் பிடிக்கவில்லை !”

"யாருக்குப் பிடிக்கவில்லையாம் உங்களை ?" என்று கனகசுந்தரம் மிகுந்த வியப்போடு கேட்டார்.

"அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம் பெரிய மனிதர்கள். சட்டம் தெரிந்தவர்கள். ராத்திரி நம்முடைய வீட்டில் ஒரே ஆட்டமும் பாட்டமுமாகக் கூத்தடிப்பது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. தொந்தரவாக இருக்கிறதாம். உபத்திரவம் கொடுக்க ஆரம்பித்தார்கள். உங்கள் மாப்பிள்ளை குணந்தான் தெரியுமே! ஜன நடமாட்டமே இல்லாமல் ஒதுக்குப்புறமாக இருக்க வேண்டும் என்று இந்த விசாலமான ரத வீதியில் இத்தனை பெரிய சுந்தர மாளிகையைத் தேடிப் பிடித்துக் குடி வந்திருக்கிறோம்!"

இவ்வாறு சொல்லிக் கொண்டே ஊஞ்சலுக்கு அருகில் தரையிலே உட்கார்ந்தாள் கல்யாணி. அப்பொழுதுதான் பெரியவர் தம் மகளின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். கண் நன்றாகச் சிவந்திருந்தது. விவரிக்க முடியாத சோகம் அந்த முகத்திலே படர்ந்திருந்தது.

"என்னம்மா இது? உடம்புக்கு ஒன்றும் இல்லையே?" என்று கேட்டுக் கொண்டே ஊஞ்சலை விட்டு எழுந்தார் கனகசுந்தரம்.

"கல்யாணி, ஒளிக்காமல் சொல்லு. இத்தனை நேரம் அழுது கொண்டுதானே யிருந்தாய்? ஏன் கண்ணெல்லாம் இப்படி ஒரே சிவப்பாக இருக்கிறது? என்ன சமாசாரம் அப்படி? சொல்லம்மா, கல்யாணி!" என்று கேட்டார்.

"ஒன்றும் இல்லை, அப்பா!" என்று சொல்ல வந்த கல்யாணி, 'இல்லை' என்று முடிப்பதற்குள் விம்மி விட்டாள்.

அடுத்த கணம் "அப்பா!" என்று ஒரு சின்னஞ்சிறு குழந்தையைப் போல் கூப்பிட்டுக் கொண்டே, விக்கி விக்கி அழுதாள் கல்யாணி.

கனகசுந்தரம் மகளின் அருகில் தரையிலே உட்கார்ந்து அவளுடைய தலையைப் பரிவோடு தாங்கினார்.

"கல்யாணி! கல்யாணி! என்ன இது? ஏன் இப்படி அழுகிருய்? சொல் அம்மா, கல்யாணி!"

பெரியவருக்குத் தொண்டை அடைத்தது. இருமிக் கொண்டார்.

"அப்பா! எதற்காக என்னைப் பெற்று வளர்த்து இப்படிப் பாழாக்கினீர்கள்? எனக்கு ஒரு கல்யாணம் கூட வேண்டியிருந்ததா? வேண்டியிருந்ததா, அப்பா!"

இதற்கு மேல் கல்யாணிக்கு வார்த்தைகள் வர வில்லை. விம்மலும், கண்ணீருமாகத் தேம்பித் தேம்பி அழுதாள்!

பெரியவர் அடைக்கிற தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டே, உள்ளே போய்க் குடத்தைச் சாய்த்து ஒரு டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்தார்.

"இந்தாம்மா, இதைக் குடி கல்யாணி. தொண்டை வறள்கிறதம்மா. கொஞ்சம், ஒரு வாய் குடி."

கல்யாணி அந்தத் தண்ணீரை வாங்கி ஒரு மடக்குக் குடித்துவிட்டு மௌனமாக இருந்தாள். முந்தானையால் உதட்டை அமுக்கிக் கொண்டாள். என்றாலும் அடுத்த கணம் வேகத்தோடு கண்ணீரும் வார்த்தைகளுமாகக் கலந்து வந்தன.

பெற்ற தகப்பனாரிடம் ஒரு மகள் தன்னுடைய துக்கத்தை யெல்லாம் கொட்ட ஆரம்பித்தால் எப்படி யிருக்கும்? தன்னுடைய உள்ளச் சிறையிலே அடைபட்டுக் கிடந்த எண்ணங்களை யெல்லாம் வீசி யெறிந்தாள் கல்யாணி. பெரியவர் ஒரே திகைப்பில் திகைமுட்டிப் போனவராய், அந்த வார்த்தைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டே கன்னத்தில் கைவைத்து உட்கார்ந்து விட்டார்!

* * *

கனகசுந்தரம் லால்குடியில் கண்யமான ஒரு மிராசுதார். இந்த இருபதாம் நூற்றாண்டின் நவநாகரிகம் அசைத்துப் பார்க்க முயன்று, முடியாது என்று

தோல்வியோடு பின்வாங்கிவிட்ட பரிசுத்தமான உள்ளம் அவருடைய உள்ளம். பகட்டும், டம்பமும், வறட்சியுமாக மாறிவிட்ட இந்தப் புதிய நாகரிகம் என்ற அநாகரிகம், அவருடைய நீளமான கோட்டோடும், ஜரிகைத் தலைப் பாகையோடும் நின்று போய்விட்டது. அவ்வளவுதான். மற்றப்படி அவருடைய இதயத்தை அது தொடவில்லை. வீட்டுக்குள்ளே நுழையும்போது கழற்றி வைத்துவிடக் கூடிய கோட்டும் டர்பனும்போல, வெளிப்பூச்சு நாகரிகம் அவருடைய உடலை ஒட்டியும் ஒட்டாமலுந்தான் நின்றது. உள்ளத்துக்குள் லால்குடி மண்ணின் ஈர வாடைதான் நிலைத்தது. அந்தத் தமிழ் மண்ணிலே பிறந்து, அந்தப் புனித பூமியிலே வளர்ந்து பூத்த தமிழ்நாட்டுப் பண்பாடு, அவருடைய இதயத்தில் நறுமணம் வீசிக்கொண் டிருந்தது. எந்தத் துக்கத்திலும், எத்தகைய கஷ்டத் திலும் தம்முடைய முன்னோர்களின் மறைநூல்களை நினைவு படுத்தி ஆறுதல் பெறக்கூடிய பாங்கு நிரம்பியவர் அவர். என்றாலும் அப்படிப்பட்ட சிலருக்கும்கூட இப்பொழுது மகள் படும் வேதனையைப் பார்க்கவே சகிக்க முடியவில்லை. துக்கத்தையெல்லாம் சிரமப்பட்டு அடக்க முயன்று கொண்டே, கனகசுந்தரம் சொன்னார் :—"அம்மா, நான் நினைத்து வந்தது ஒன்று. இங்கே உள்ள நடப்போ வேறொன்று! எல்லாம் கடவுள் செயல். வேறு என்ன சொல்ல இருக்கிறது!"

"என்னப்பா? அப்படி என்ன நினைத்து வந்தீர்கள்? என்ன சமாசாரம்?" என்று அந்தத் துக்கத்தின் மத்தி யிலும் ஆவல் மேலிட்டவளாய்க் கேட்டாள் கல்யாணி.

"உன்னுடைய தங்கை கமலத்துக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகியிருக்கிறது, அம்மா!"—இப்படி அவர் சொன்னபோது முகத்தில ஒரு விநாடி ஒரு சிறு நிம்மதி நிலவியது.

"அந்தக் கல்யாணத்துக்கு உன்னுடைய மாப் பிள்ளையைக் கொண்டு கச்சேரி ஏற்பாடு செய்யலாம் என்று நினைத்தேன். சம்பந்தி வீட்டாரும் உன் மாப்பிள்ளையைப் பற்றி ரொம்பப் பெருமையோடு பேசினார்கள். நானும் பெருமையோடுதான் சொன்னேன். இங்கு வந்த பிறகோ

இந்தக் கல்யாணத்துக்கு இப்படி ஒரு கச்சேரி அவசியந்தானு என்று........."

இத்தனை பேச்சுக்குள்ளாக, வீட்டுக்கு வெளியே ஒரு கார் வந்து நின்று அதிலிருந்து ரவீந்திரனும் சந்திரிகாவும் இறங்கிப் படிகளில் ஏறி உள்ளே வந்து விட்டார்கள். சந்திரிகா வீட்டின் உள்ளே வராமல் திண்ணையிலிருந்த மாடிப்படிகளில் ஏறி, மேலே நடந்தாள். ரவீந்திரன் வீட்டுக்குள்ளே வந்தான்.

"நமஸ்காரம், மாமா! நான் வரும்போதே என்னவோ கல்யாணக் கச்சேரி என்று நல்ல வார்த்தையாகக் காதில் விழுகிறதே! பேஷ். நம்முடைய கமலாவுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டது போலிருக்கிறது. பலே பலே!"

"ஆமாம்! நம்முடைய கமலத்துக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகியிருக்கிறது"—என்று வார்த்தைகளை ஒவ்வொன்ருக இழுத்தார் கனகசுந்தரம்.

"என்ன மாமா இது, கமலாவுக்குக் கல்யாணம் என்று சொல்வதற்கு ஏன் இப்படி ஒவ்வொரு வார்த்தைக்கு இடையிலும் ஒரு கமா போடுகிறீர்கள்! கமலாவுக்குக் கல்யாணம், அதனல் அதற்கு நம்முடைய நடனக் கச்சேரி என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களாக்கும். பேஷ். சபாஷ். ரொம்ப சரி!" என்று வழக்கமான படபடப்போடு வார்த்தைகளை அப்படியே கொட்டினன் ரவீந்திரன்.

கனகசுந்தரம் திகைத்தார். எந்த விஷயத்தை யாரிடம் பேச வேண்டாம், பேசக்கூடாது என்று நினைத்தாரோ, அதே விஷயத்தை அதே மனிதரிடம் அப்பொழுதே பேசவேண்டிய அவசியம் நேர்ந்து விட்டது! என்ன செய்ய! ஆனாலும் ஒரு வகையாகச் சமாளித்தார்.

"சம்பந்தி வீட்டார் எல்லாருக்கும் உங்களுடைய புல்லாங்குழல் வாசிப்பில் அபாரமான மதிப்பு; நீங்கள் வந்து முழுக்க முழுக்க ஒரு தனிப் புல்லாங்குழல் கச்சேரி செய்தால் அவர்களுக்குத் திருப்தியாக இருக்கும்—" என்று வார்த்தைகளைச் செருகினர் கனகசுந்தரம்.

ரவீந்திரனுக்கு ஒரு விநாடி படபடப்பு ஏற்பட்டது. "தனிப் புல்லாங்குழல் கச்சேரி" என்ற வார்த்தைகளை மூளைக்குள்ளே ஒரு தரம் ஓட விடும்போதே எல்லா விஷயமும் விளங்கி விட்டது!

"தனிக் கச்சேரிதானே? கொஞ்சம் தனியாகவே யோசித்துச் சொல்லுகிறேன், மாமா!" என்று அந்தத் "தனி"யில் ஒரு அழுத்து அழுத்தி விட்டு, மறு பக்கம் திரும்பி வேகமாக மாடிப் படிகளில் ஏறினான் ரவீந்திரன்.

பெரியவருக்கு ஒரு நிமிஷம் மூச்சு நின்றுவிடும்போல் இருந்தது. கல்யாணி இதையெல்லாம் பார்த்ததும் மீண்டும் கண்ணைக் கசக்க ஆரம்பித்தாள்.

பண்பாடு நிரம்பிய பெரியவர், அதிகமான பேச்சுக் களுக்கு இடம் கொடுத்து வீண் சண்டையை வளர்க்க விரும்பவில்லை.

"கல்யாணி! இந்தப் பழக் கூடையை எடுத்து உள்ளே வை. வந்த நேரம் சரியாக இல்லை. நான் கொஞ்சம் உச்சிப் பிள்ளையார் கோவில் வரை போய்விட்டு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே எழுந்து வெளியே வந்தார் கனகசுந்தரம்.

மாமனார் வெளியே சென்ற மறுகணம் ரவீந்திரன் படபடப்போடு மாடிப் படிகளில் இறங்கி வந்தான். கல்யாணி 'ஜிவு ஜிவு' என்று அவனைப் பார்த்தாள்.

"யோசித்துச் சொல்கிறேன் என்றீர்களே, இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? அந்தக் கல்யாணம் நாமே முன்னிருந்து நடத்தி வைக்க வேண்டியது ஆயிற்றே!"

"ஆமாம்! யார் இல்லை என்றார்கள்? நான் யோசித்துச் சொல்கிறேன் என்றது கல்யாணத்தை நடத்துவதைப் பற்றியில்லையே? கச்சேரியைப் பற்றித் தானே?"

"நானும் கச்சேரியைப் பற்றித்தான் சொல்கிறேன். இதில் யோசித்துப் பதில் சொல்ல என்ன இருக்கிறது?"

—கல்யாணியின் குரலில் சற்றுக் கடுமையும் கண்டிப்பும் உண்டாயின.

"உங்கள் அப்பா தனிக் கச்சேரி என்று சாமர்த்திய மாகத் துண்டித்துப் பேசினர்கள் அல்லவா? அதனுல் தான் யோசிக்க வேண்டும் என்று சொன்னேன்! தனி யாகக் கச்சேரி செய்வதை விட்டுத்தான் வருஷக்கணக்காக ஆயிற்றே, அம்மா! நடனக் கச்சேரிக்கே இனிமேல் புல்லாங்குழல் இரவல் வாங்கவேண்டும். இந்தநிலைமையில் தனிப் புல்லாங்குழல் கச்சேரியாம். பலே பலே!" என்ருன் ரவீந்திரன் தலையை ஆட்டிக்கொண்டே!

'நடனம்', 'புல்லாங்குழல்', 'இரவல்'— இந்த மூன்று வார்த்தைகளும் மூன்று தீப்பொறிகளாகக் கல்யாணியின் உள்ளத்தில் தெறித்தன. கோபக் கனல் அப்படியே மூண்டு எழுந்தது.

"உங்களுடைய வாலையும் சேர்த்து அழைக்கவில்லை என்றுதானே நீங்கள் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?"— இப்படிக் கேட்கும்போதே கல்யாணியின் முகம் ஆவேசத் திஞல் நெருப்பாகக் காய்ந்தது.

"என்ன சொன்னுய்?" என்று ஆத்திரத்தோடு கேட்டான் ரவீந்திரன். என்ன வேகம் அந்தக் குரலில்!

"உங்களுடைய வாலை என்று சொன்னேன். பின் வேறு எப்படிச் சொல்ல? வால் இல்லை, உங்கள் தலையை என்று சொல்லட்டுமா? அல்லது உங்கள் உள்ளத்தை, உங்களுடைய உயிரை என்று சொல்லட்டுமா?"

கல்யாணிக்கு உதடெல்லாம் படபடஎன்றுஅடித்தது. கையும் காலும் உணர்ச்சி வசமாகி அப்படியே ஆடின.

"கல்யாணி! நீ அந்தக் கச்சேரியில் அப்படி எழுந்து வந்ததே மூர்க்கத்தனம். இப்படி யெல்லாம் பேசுவதோ பிசாசுத்தனம். பேய்த்தனம்."

"சொல்லுங்கள். ஒரு பெண்ணுகப் பிறந்து மனைவி யாக மாலையிட்டு விட்டேன் அல்லவா? நான் பேய்தான், பூதந்தான், பிசாசுதான்!"

"கல்யாணி, இதற்குமேல் நீ பேசினால் என்ன செய்வேன், தெரியுமா?"—ரவீந்திரனுடைய உள்ளம் எரிமலையாகக் குமுறிற்று.

"தெரியும். என்னைப் பிச்சைக்காரியாக ரயில் ஏற்றுவீர்கள். அந்தப் பிச்சைக்காரியை இங்கே குத்து விளக்கு ஏற்றச் சொல்லுவீர்கள்—"

"கல்யாணி!" என்று ஒரு கதறல் கதறினான் ரவீந்திரன். அப்படியே அந்த அறையின் சுவரும், ஊஞ்சலின் சங்கிலியுமே 'கிடு கிடு' என்று ஆடின.

"இந்தாருங்கள். என்னை இப்படியே கழுத்தை நெறித்துவிடுங்கள். அப்படியானால்தான் எனக்கும் நிம்மதி. உங்களுக்கும் நிம்மதி. தயங்காதீர்கள். என்னை மாலையிட்ட அந்தக் கையினாலேயே இந்தக் காரியத்தையும் செய்து விடுங்கள். தயங்காதீர்கள்" என்று கூச்சலிட்டுக் கொண்டே கணவனுக்கு அருகில் வந்தாள் கல்யாணி.

ரவீந்திரனுடைய கையும் காலும் 'வெடவெட' என்று நடுங்கின. அவனுடைய பதறும் விழிகள் இமைகளை மூடி மூடி விழித்தன. அவனுக்குத் தலை சுற்றியது.

"உன்னோடு பேசிப் பலன் இல்லை. நீ ஒரு, நீ ஒரு, நீ ஒரு......"

இப்படிச் சொல்லிக் கொண்டே வேகமாக அறையை' விட்டு வெளியே வந்தான். வாசல் கதவைப் 'படார் என்று சாத்திவிட்டு வெளியே இறங்கிப் பட பட என்று எங்கோ வேகமாகத் தெரு வீதியிலே நடந்து சென்று மறைந்து விட்டான் ரவீந்திரன்.

கணவன் வீட்டுக்கு உள்ளே இருக்கும் வரைக்கும் அவளுக்குக் கோபமும் ஆவேசமும் அலைவீசின. இப்பொழுதோ! அவன் தெருவீதியில் கால் அடி எடுத்து வைத்ததும் கல்யாணியின் கோப ஆவேசம் எல்லாம் துக்கமாக மாறிற்று. அப்படியே தரையிலே தடால் என்று உட்கார்ந்து 'கோ' என்று கதறினாள் கல்யாணி. அவளுடைய சோகத்தைக் கண்டு வெளிறி நின்றன சூன்யமான அந்த அறையின் சுவர்கள்.

வாசல் கதவு சாத்தியபடியே இருந்தது. எந்த துக்கத்தையும் எவருடைய சஞ்சலத்தையும் பொருட்படுத்தாத காலம் என்ற தேவனின் இமையாத கண்ணைப் போல, எதிரே அறைச் சுவரில் மாட்டியிருந்த கடிகாரம், கண் கொட்டாமல் விழித்துப் பார்த்துக்கொண்டே மணியடித்துத் தன் கடமையை ஒழுங்காகச் செய்து கொண்டேயிருந்தது.

இரவு ஒன்பது மணி ஆயிற்று. பத்து ஆயிற்று. பதினொன்றும் ஆயிற்று. பிள்ளையார் கோவிலுக்குச் சென்ற தகப்பனார் திரும்பக் காணோம். கோபத்தோடு சென்ற கணவனையும் காணோம்! என்ன செய்வாள் கல்யாணி?

'வாசல் கதவு தாளிடாமல் கிடக்கிறது. எப்படியும் அப்பா வருவார்கள். வந்ததும் அப்பாவை அனுப்பி அவரைத் தேடச் சொல்லுவோம்!' என்று நினைத்து, கூடத்தின் உள் கதவை மட்டும் தாளிட்டு விட்டு, கட்டிற் பலகையிலே வந்து ஒரே பெருமூச்சோடு சாய்ந்தாள் கல்யாணி. கண்ணீர் பொங்கிப் பொங்கி வந்தது. முந்தானையால் பொத்தினாள். துக்கத்தின் ஊற்று நிற்கவில்லை.

நீண்ட நேரம் சென்றது. கரைத்துக் கரைத்துக் கண்ணீராகக் கொட்டியும்கூட அவளுடைய இதயத்தில் சோகம் தீரவில்லை! கண்ணும் மனமும் களைத்துப்போய் அப்படியே மயங்கின. இமைகளை மூடினாள் கல்யாணி.

* * *

கருங் கும் என்ற இரண்டு, செடியும் கொடியுமாகப் பின்னிக்கொண்டு கிடந்த அடர்த்தியான மலைச்சாரல். திக்குத் திசை தெரியாத காடு. பட்டப் பகலிலும் கதிர் புகமுடியாதபடி காரிருள் கப்பிப் படர்ந்த கருங் கானகம். அந்தக் காட்டுக்குள்ளே எங்கிருந்தோ தண்ணீரின் குளுமையான சல சலப்புக் கேட்கிறது. சின்னஞ் சிறு ஓடை ஒன்று, மனிதனுடைய தெய்வ நம்பிக்கையைப் போல், இருள் சூழ்ந்த காட்டுக்குள்

எப்படியோ பாதையைக் கண்டு பிடித்துக் கொண்டு மரங்களினூடே நகைத்துக் கொண்டே ஓடுகிறது. அதனுடைய தெள்ளிய தண்ணீர் சஞ்சலத்தினூடு ஒலிக்கும் மனித இதயத்தின் தன்னம்பிக்கையைப் போல் கூழாங் கற்களை உருட்டிக் கொண்டே பாடி வருகிறது. இதோ அந்த நீரோடையைத் தொடர்ந்து நெடுந்தூரம் சென்றால் ஒரு சிறிய திடல் தெரிகிறது. மற்ற இடங்களை விட இங்கே மரஞ் செடிகளின் அடர்த்தி குறைந்திருக் கிறது. சூரிய வெளிச்சம் 'கண்ணாமூச்சி' விளையாடிக் கொண்டே நுழைந்து வருகிறது. இதென்ன? திடீரென்று ஒரு அழகான பெண்மான் பாறைகளிலே துள்ளித் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடிவருகிறது. இதோ அதைத் தொடர்ந்து அதனுடைய குட்டியும் ஓடி வருகிறது.

ஓடையின் கரையிலே ஓடிய தாய் மான் 'சட்'டென்று நின்று, கால்களை நன்றாகப் பாவிக்கொண்டு தலையை வளைத்து அந்த ஓடையில் தண்ணீர் குடிக்கிறது. பின்னால் ஓடி வந்த மான் குட்டி, ஓடைத் தண்ணீரைக் குடிக்காமல் தாயின் மடியை முட்டிப் பால் பருகுகிறது. அந்தத் தாய் மானுக்குத்தான் எத்தனை இன்பம் ஏற்படுகிறது?

ஆனால், அதென்ன? அதோ சற்றுத் தொலைவில் அடர்த்தியான அந்தப் புதருக்குள் இரண்டு மின் பொட்டுக்கள் 'பளிச்பளிச்' என்று பிரகாசிக்கின்றன? புதர் சலசலக்கிறது. சரேல் என்று ஆங்காரமான வேகத்தோடு ஒரு பெரிய வேங்கைப் புலி பாய்கிறது! ஐயோ! அந்தச் சின்னஞ்சிறு பச்சிளம் மான்குட்டியை நோக்கியாவேங்கைப் புலி பாய்கிறது?

திகைத்துப் பார்ப்பதற்குள் அந்தத் தாய் மானை எங்கே காணோம்? இப்பொழுது அந்த வேங்கைப் புலி ஓடையில் தண்ணீர் குடிக்கஅல்லவா செல்கிறது! இதோ அந்தப் புள்ளிமான் கன்று அதன் அருகிலே செல்கிறதே! என்ன விந்தை! அந்த வேங்கைப் புலியின் மடியில் முட்டிப் பால் அருந்துகிறது மான் குட்டி! அது வேங்கைப் புலிதானா? இல்லை. அந்தத் தாய் மானேதான்! ஆமாம். வேங்கைப் புலியேதான் இப்பொழுது தாய் மானாக மாறித்

தெரிகிறது! இதென்ன! நம்ப முடியவில்லை. அதோ அந்த மரத்தில் உட்கார்ந்து சுகமாக ஒரு அத்திப் பழத்தைத் தின்றுகொண்டிருக்கும் அணிற் பிள்ளை 'கனவு' 'கனவு' என்று கத்துகிறதே. அதோ அந்தக் கிளிப்பிள்ளைகளெல்லாம் 'கனவு' 'கனவு' என்று கத்திக் கொண்டே சிறகடித்துப் பறக்கின்றனவே! ஒருவேளை இதெல்லாமே சித்த பிரமையோ? கனவோ? சொப்பனந் தான் காண்கிறேனோ?

பதறிப்போய் விழித்தாள் கல்யாணி. கடிகாரத்தில் மணி இரண்டு அடித்தது. அப்பா எங்கே? கோவிலி லிருந்து இன்னும் வரவில்லையா? அவர் எங்கே? வெளியே போனவர் திரும்பவே இல்லையா?

கண்களைத் திறந்ததும் கல்யாணியின் உள்ளத்தில் 'கிறு கிறு' என்று நினைவுகள் சுழன்றன. சக்கரமாகச் சுற்றின. வேங்கை, மான், ஏதோ ஒரு தனியான மரம், ஒரு அணிற் பிள்ளை, பச்சைக் கிளிகளின் கூட்டம்—கனவின் இந்தக் காட்சிச் சுழலுக்கு மத்தியிலே சோகம் படர்ந்த முகத்தோடு நிற்கும் தகப்பனாரின் உருவம், படபடப்போடு ஒரே ஆவேசமாகச் சென்ற கணவனுடைய தோற்றம்—இப்படியாக அவளுடைய சிந்தனை யரங்கில் ஊழிக் கூத்து நடந்து கொண்டிருந்தது. பூத கணங்கள் திடுதிடு என்று குதிக்க, ருத்ர பூமியிலே நின்று இறைவன் கூத்தாடுவதாகச் சொல்கிறார்கள் அல்லவா? அப்படிக் கல்யாணியினுடைய நினைவின் அரங்கில் எண்ணங்களையே பூத கணங்களாகச் சுழல விட்டு அவற்றின் மத்தியிலே நின்று கூத்தாடிக் கொண்டிருந்தது அவளுடைய மனம். பெருமூச்சு விட்டுக்கொண்டே கண்களைக் கசக்கியவாறு அந்தக் காட்சிகளை எல்லாம் அப்படியே உதறுகிறவள் போல இமைகளைச் சிதறிச் சிதறி விழித்தாள்.

விளக்கு எரிந்துகொண்டுதான் இருந்தது. ஆனால் மங்கி யிருக்கிறது. கல்யாணி திகைப்பும் பதற்றமும் மேலிட்டவளாய், எழுந்தாள். நடந்து சென்று அந்த விளக்கைச் சற்றுத் தூண்டினாள். அப்பொழுது அந்த வெளிச்சத்தில் கட்டிலுக்கு அருகில் ஒரு காகித மடிப்பு

விழுந்து கிடந்தது தெரிந்தது. ஜன்னல் வழியாக யாரோ அதை உள்ளே எறிந்திருக்க வேண்டும்.

கையும் காலும் பதறிக்கொண்டே கல்யாணி நடந்து போய் அந்தக் காகித மடிப்பைக் கையில் எடுத்துப் பிரித்தாள். அது ஒரு கடிதம்!

## 5. "ஐயோ, கல்யாணி!"

அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்ப்பதற்குள், கல்யாணியின் மனத்தில் ஆயிரம் எண்ணங்கள்புகைந்தன.

அவ்வளவு பதற்றத்தோடும் கோபத்தோடும் போனாரே, அவர்தான் ஏதாவது விபரீதமாக எழுதியிருக்கிறாரோ?......ஐயோ அப்படி யிருக்குமானால் இனி என்ன ஆவது?

இல்லை; அவருடைய கோபம் அந்தப் படபடப்போடு சரி. கொஞ்ச நேரத்தில் எல்லாவற்றையும் மறந்து விடுவார். அப்படியானால்?...ஒரு வேளை அப்பாதான் இப்படி ஒரு கடிதம் எழுதியிருப்பாரோ? கடிதத்தை அனுப்பி விட்டு மால்குடிக்குப் போயிருப்பாரோ? ஆனால் அப்பா இப்படியெல்லாம் கடிதங்கள் எழுதி அனுப்புகிறவர் இல்லையே!...

நிச்சயம் கணவருடைய கடிதமாகத்தான் இருக்க வேண்டும். 'தெய்வமே, அப்பாவின் கடிதமாகவாவது இருந்து விட்டுப் போகட்டும், பரவாயில்லை. அவருடைய கடிதமாக மட்டும் இருக்கக்கூடாது!'

இப்படி யெல்லாம் பிரார்த்தனைகள் செய்துகொண்டே கல்யாணி கடிதத்தைப் பிரித்தாள். என்ன ஆச்சரியம்! இது அவள் எதிர்பார்த்த இருவருமே இல்லை. அவளுடைய தம்பி நாகரத்தினத்தின் எழுத்து அது!

அன்புள்ள அக்காவுக்கு,

அவசரம் அவசரமாகப் புறவாசலோடு ஓடி வந்தேன். ஆனால் ஒரு மணி நேரத்தில் கோவில் வாசலில் எதிர்பாராத விதமாக அப்பாவைப் பார்த்தேன். எல்லா நடப்புக்களும் சொன்னார்கள். அதன் பேரில் நான் அவர்களுக்குச் சகல விஷயங்களையும் விவரமாக எடுத்துச் சொன்னேன். அப்பா குணந்தான் உனக்குத் தெரியுமே. 'எல்லாம் கடவுள் செயல்' என்கிறார்கள். ஆனாலும் திரும்பவும் உன்னை வந்து பார்ப்பதற்கு அவர்களுடையமனம் இடம் கொடுக்கவில்லை. மாப்பிள்ளையைப் பார்ப்பதற்கோ பயம். இரவு வண்டிக்கே லால்குடிக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள்.

எதற்கும் மனசைத் தளர விடாதே. சந்திரிகா விஷயமாக ஒரு யோசனை செய்திருக்கிறேன். எல்லாம் நேரில் வந்து சொல்லுவேன். கவலைப் படாதே.

நாகரத்தினம்.

பின் குறிப்பு : 'எல்லாம் கடவுள் செயல்' என்று அப்பா சொல்லுவது எனக்குப் பிடிக்கவில்லை. எல்லாம் அப்பாவின் செயல்தான். புள்ளிமானை வளர்த்துப் புலிக்குக் கொண்டு வந்து கொடுத்து விட்டார்கள். கடவுள் என்ன செய்வாராம் ?

கல்யாணிக்குத் தலை சுற்றியது. அதிலும் அந்தக் கடைசி வாக்கியத்தைப் படித்ததும் திகிலே ஏற்பட்டது. கணவனை அம்மாதிரி ஒரு புலியென்று தம்பி சொன்னது உண்மை என்று தோன்றினாலும்கூட, அதை அவன் சொல்லிக் கேட்பது எப்படியோ இருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாகக் கனவிலே வந்த மானும் புலியும் கடிதத்திலுங் கூடத் தொடர்வதைக் கண்டு உள்ளம் துடித்தது.

இரவு எப்படி இருட்டாக இருந்ததோ அப்படியிருந்தது கல்யாணியின் மனமும். இந்த இருள் மயமான

உலகத்திலே, தான் நிர்க்கதியாக நிற்பது போல் ஒரு தவிப்பு உண்டாயிற்று. அப்படியே கட்டிலில் உட்கார்ந்து கண்ணீர் வடித்தாள் கல்யாணி.

இரவு முழுதும் கல்யாணி இமையைப் பொருத்தவே இல்லை. எப்பொழுது விடியும், வெளியே போனவரைப் பற்றிய தகவல் எப்பொழுது கிடைக்கும் என்றே ஏங்கிக் கொண்டிருந்தாள்.

ஐந்து மணிக்கெல்லாம் பூபாள ராகம் மாடியிலிருந்து கேட்டது.

"பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொய்கையில் தாமரை பூத்து மலர்ந்தது!"

என்று பாடிக் கொண்டிருந்தான் ரவி! அப்பொழுதுதான் கல்யாணிக்குப் போன உயிர் மீண்டது. கணவன் வீடு திரும்பி விட்டான் என்று தெரிந்து கொண்டதில் ஒரு விவரிக்க முடியாத ஆறுதல்.

'திட்டட்டும், வையட்டும். கழுத்தைப் பிடித்து வேண்டுமானாலும் நெறிக்கட்டும், தெய்வமே! வீட்டை விட்டு மட்டும் அவர் ஓடிவிடக் கூடாது' என்று பிரார்த்தனை செய்து கொண்டே கண்களைத் துடைத்துக் கொண்டாள கல்யாணி.

ஒரு வாரம் இப்படிக் கழிந்தது. லால்குடியிலிருந்து அப்பா கடிதம் எழுதியிருந்தார்கள், கல்யாணத்துக்கு இருவரும் புறப்பட்டு வரவேண்டும் என்று! மற்றப்படி கச்சேரியைப் பற்றி ஒரு வார்த்தைகூடக் கடிதத்தில் இல்லை!

"ஒரு வாரமாகச் சரியாகவே பேச மாட்டேன் என்கிறீர்களே? கல்யாணத்துக்கு இன்னும் இரண்டு நாள்தானே இருக்கிறது. புறப்பட வேண்டாமா?" என்று கேட்டாள் கல்யாணி. ரவீந்திரன் பதிலே பேசாமல் உத்தரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

" உங்களைத்தானே கேட்கிறேன் !" என்ருள் கல்யாணி. எத்தனை சண்டைக்கு மத்தியிலும், மனைவி என்ற மகத்தான உரிமை அந்தக் குரலில் தொனித்தது.

" கல்யாணத்துக்குத்தானே ! கட்டாயம் போக வேண்டியதுதான். போய் விட்டு வா !" என்ருன் ரவீந்திரன்.

" அப்படி யென்ருல் ? நீங்கள் வரவில்லையா ?" என்று கேட்டாள் கல்யாணி.

" போய் விட்டுவா என்றுதான் சொல்லி விட்டேனே. அதற்குமேல் என்னை நச்சரிக்கக் கூடாது. தெரிந்ததா ? இன்று சாயந்திரமே லால்குடிக்கு உன்னை ரயிலேற்றுவது என்று தீர்மானித்திருக்கிறேன். நேற்றே உன்னுடைய அப்பாவுக்கும் எழுதிப் போட்டு விட்டேன். ஸ்டேஷனுக்கு வந்து கூட்டிக் கொண்டு போவார்கள்."

கல்யாணிக்குத் தன் கணவனுடைய பேச்சில் இருந்த பற்றற்ற தன்மை வேதனையைக் கொடுத்தது.

" ஏன் நீங்கள் இவ்வளவு தூரம் மாறிப் போய் விட்டீர்கள் ? எத்தனை பேருக்குப் புத்தி சொல்லுவீர்கள். இப்பொழுது—"

" இப்பொழுது எத்தனையோ பேர் எனக்குப் புத்தி சொல்லுவதற்கு முளைத்து விட்டார்கள், இல்லையா ? அதனுல் நான் மற்றவர்களுக்குப் புத்தி சொல்வதை நிறுத்தி விட்டேன். சரிதானே ?" என்று கேட்டான் ரவீந்திரன்.

" ஏன் வம்புப் பேச்செல்லாம் பேசுகிறீர்கள் ? சீமையில் இல்லாத ஒரு சிங்காரி கிடைத்து விட்டாள் என்றுதானே நீங்கள் இப்படி யெல்லாம்........."

" கல்யாணி ! அதிகமாகப் பேச்சை வளர்த்துவிட்டு, பிறகு உன்னைக் கழுத்தை நெறிக்கும்படி என் முன்னுல் வந்து நிற்காதே. தெரிந்ததா ? நான் பழி பாவத்துக்குப் பயப்படுகிற பிறவி, தாயே !"

கல்யாணிக்கு ஆத்திரம் வந்தது. ஆனாலும் அடக்கிக் கொண்டு, சொல்ல வந்த வார்த்தைகளை அப்படியே தொண்டைக்குள்ளேயே விழுங்கிக் கொண்டாள்.

"ஏன் சொல்ல வந்ததை விழுங்குகிறாய்? பழி, பாவம் என்ற உணர்ச்சியெல்லாம் உங்களுக்கு ஏது என்று கேட்க வந்தாய். அப்படித்தானே?"

இப்படிக் கேட்டுவிட்டு ரவீந்திரன் ஒரு வினாடி மௌனமாக இருந்தான். பிறகு உருக்கமான குரலில் பேச ஆரம்பித்தான்.

"கல்யாணி, வருஷக் கணக்காக ஒரே வீட்டிலேதான் நாம் இருவரும் வாழ்ந்து வருகிறோம். ஆனால் நம்முடைய மனங்களுக்கு மத்தியிலோ எத்தனையோ பெரிய சுவர்களை எழுப்பிக் கொண்டு விட்டாய் நீ. அது உன் குற்றமில்லை! என் குற்றமும் இல்லை. நம்மை ஒன்று சேர்த்ததே அந்த விதியின் குற்றம். இல்லை, இல்லை. அதுகூடத் தவறு! விதி குற்றம் செய்யாது. பின் என்ன? கடலுக்குள்ளே முத்து கிடக்கிறது. அதனால் கடலுக்குப் பயனுண்டோ? காட்டுக்குள்ளே சந்தன மரம் நிற்கிறது. அதனால் காட்டுக்கு என்ன பிரயோசனம்? காடு சந்தனம் பூசிக் கொள்ளுமா?........."

கல்யாணிக்குக் கண் கலங்க ஆரம்பித்தது. ரவீந்திரன் அங்கு நிற்கவில்லை. வேகமாக நடந்து வெளியே சென்று விட்டான். பிறகு மாலை நான்கு மணிக்குத்தான் வீடு திரும்பினான்!

ஆமாம். மாலை நான்கு மணிக்கெல்லாம் ரவீந்திரன் ஒரு மாட்டு வண்டியில் வந்து இறங்கினான். அவசரமாக உள்ளே வந்தான். 'விறு விறு' என்று உள் கூடத்துக்குப் போய், "கல்யாணி, கல்யாணி! புறப்படு! ரயிலுக்கு நேரம் ஆச்சு!" என்று மிகவும் அவசரப் படுத்தினான்.

'நம்மை ஊருக்கு அனுப்புவதில்தான் எத்தனை அவசரம்!' என்று நினைத்துக் கொண்டாள் கல்யாணி.

கண்ணீர்தான் வந்தது. முந்தானையால் முகத்தைத் துடைத்துக் கொண்டே, 'ட்ரங்கு'ப் பெட்டியை எடுத்து அதில் துணிமணிகளைத் திணித்தாள் — உள்ளத்தில் பொங்கி வெளிவந்த உணர்ச்சிகளையெல்லாம் மனத்துக் குள்ளேயே அமுக்கித் திணிக்கிறவளைப் போல!

"சந்திரிகா, வீட்டைப் பார்த்துக் கொள். நான் ஸ்டேஷன் வரை போய்விட்டு வருகிறேன்!" என்று மாடி வாசலுக்குள்ளே தலையை வளைத்தவாறு சொன்னான் ரவீந்திரன். "வீட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டியவளைத்தானே அப்படிச் சொல்லுகிறார்!" என்று ஒரு விநாடி எண்ணிக் கொண்டாள் கல்யாணி. மனம் பற்றி எரிந்தது.

"நேரமாச்சு! ஏறு வண்டியிலே" என்று துரிதப் படுத்தினான் ரவீந்திரன்.

*  *  *  *

நாகஸ்வரம் "ரீம் ரீம் ரீம்" என்று முழங்கியது. 'அகப்பட்டுக் கொண்டான், அகப்பட்டுக் கொண்டாள்' என்று சொல்லுவது போல் தவுல் 'பட பட' என்று கொட்டியது. பெண்கள் குரவை இட்டார்கள். தாலிக் கயிற்றில் மூன்று முடி ஏறியது. கல்யாணியின் தங்கை கமலம், 'கிருகலக்ஷ்மி' ஆனாள்.

மணவறையைச் சுற்றி மொய்த்துக் கொண்டு நின்ற பெண்களின் கூட்டத்தில் கல்யாணியும் நின்றாள். கொட்டு மேளம் கொட்டும் போது, அவளுடைய மனம் பத்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவத்தை நோக்கி ஓடியது.

இதே லால்குடியில், இதே வீட்டில், இதே இடத்தில், இதே மாதிரிப் பெண்கள் சூழ்ந்து நின்ற போதுதான், கல்யாணிக்கும் ரவீந்திரனுக்கும் திருமணம் நடந்தேறியது. இதே உள்ளூர் நாகஸ்வரந்தான்! இதே கொட்டு மேளம் தான்! அப்பொழுது அவளுடைய இதயத்தில் அந்த 'ரீம் ரீம்' என்ற ஒலி எத்தனை விவரிக்க முடியாத

உணர்ச்சிகளையெல்லாம் கொடுத்தது! எத்தனை கனவுகள் அப்பொழுது அவளுடைய உள்ளத்தில் எழுந்தன! ரவீந்திரன் அவளுடைய கழுத்திலே தாலிக் கயிற்றைச் சுற்றி முடி போட்ட போது, அவனுடைய விரல்களின் ஸ்பரிசத்தால் கல்யாணிக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

இப்பொழுது அந்த அனுபவங்கள் மீண்டும் கல்யாணிக்கு நினைவு வந்தன.

நாகஸ்வரத்தின் ஒலிக்குத்தான் எத்தனை சக்தி இருக்கிறது! இதயத்துக்குள் எங்கோ ஆழத்தில் புதைந்து போய்க் கிடக்கிற அனுபவங்களை யெல்லாம் அந்த ஒலி எத்தனை ஆற்றலோடு மீண்டும் மேலே எழுப்பிக் கொண்டுவந்து விடுகிறது!

இறந்தகாலத்தையும் நிகழ் காலத்தையும் ஒன்றாக்கக் கூடிய மாய சக்தி, காலத்தை வெல்லக்கூடிய கணக்கு, சங்கீதத்தைப் போல் வேறு எதற்கு உண்டு!

கல்யாணிக்கு இதயம் விம்மியது. பத்து வருஷங்களுக்கு முன்பு தான் கண்ட இன்பக் கனவுகள் எல்லாம் இப்பொழுது வீணாகப் போய் விட்டனவே! தங்கை கமலத்தின் வாழ்க்கையாவது இன்பமாக அமைய வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள் கல்யாணி.

இதற்குள் பந்தலில் தாம்பூலம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். பெண்களுக்குப் பன்னீர் தெளிக்கும்படி சொல்லிக்கொண்டே, வெள்ளிப் பன்னீர்ச் செம்பைக் கொண்டு வந்து கல்யாணியின் கையிலே கொடுத்தாள் அவளுடைய தாயார். தாலிச் சரடு மகளுடைய கழுத்தில் பின்னியதிலே ஏற்பட்ட நிம்மதி தாயாரின் முகத்தில் பிரதிபலித்தது. அவள் சொன்னாள்: "கல்யாணி, ஒரு மட்டும் கமலத்துக்கு நல்ல இடமாகக் கிடைத்து விட்டது. ஒரே ஒரு குறைதான். உன் மாப்பிள்ளையும் வந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்! நமக்குத்தான் கொடுத்து வைக்கவில்லை!"

கல்யாணிக்குப் பன்னீர்ச் செம்பைக் கையில் வாங்கும் போதே கை பதறியது. "அம்மா! அங்கு வேறு

யாரையாவது பன்னீர் தெளிக்கச் சொல்லு. எனக்குத் தலை வலிக்கிறது" என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குள் நடந்து சென்றாள். தங்கையின் கலியாணத்துக்காக அப்பா எடுத்துக் கொடுத்திருந்த கோடிப் புடவை உடம்பை "மொர மொர" என்று உறுத்திக் கொண்டிருந்தது. யாரும் இல்லாத மாடி அறைக்குள்ளே சென்று, புடவையை மாற்றிக்கொண்டு தரையிலே படுத்தாள். எங்கிருந்துதான் அப்படிக் கண்ணீர் 'மள மள' என்று வந்ததோ! பாவம்! பன்னீர் தெளிக்க வேண்டிய கையினால் தன்னுடைய கண்ணீரைத்தானே துடைத்துக் கொண்டாள் கல்யாணி.

மத்தியானம் வடையும் பாயசமுமாக 'ஷட் ரஸம்' பிரமாதமாகப் பரிமாறப்பட்டது! பெண்களின் பந்தியில் மணப் பெண்ணோடு தானும் கடமைக்காக உட்கார்ந்தாள் கல்யாணி. ஒரு கவளம்கூடத் தொண்டையில் இறங்க வில்லை. மனம் எல்லாம் திருச்சியிலே இருந்தது. போதாத குறைக்கு அவளைப் பார்த்தவர்கள் எல்லாம் 'மாப்பிள்ளை வரவில்லையாமே!' என்று வேறு விசாரித்தார்கள். அவளைப் பாராதவர்களுங்கூடத் தேடிப் பிடித்து 'மெனக் கெட்டு' வந்து இதையே கேட்டார்கள்!

இரவு பட்டணப் பிரவேசமும் வாண வேடிக்கையும் ஒரே கோலாகலமாக நடந்தன. ஊர்வலம் முடிந்து பெண்ணும் மாப்பிள்ளையும் வீட்டுக்கு வந்து சேர இரவு ஒரு மணி ஆயிற்று. ஒரு நாள்க் கல்யாணம் ஆனதால், பட்டணப் பிரவேசம் முடிந்ததுமே, சீர்வரிசை வைக்கிற சடங்கும் ஆரம்பம் ஆயிற்று.

கல்யாணி அப்பாவை வெகு அவசரமாகக் கூப்பிட்டாள்.

"அப்பா! கல்யாணம் எல்லாம் சிறப்பாக முடிந்து விட்டது. இனி நான் ஊருக்குப் புறப்பட வேண்டியது தான்."

"அதற்கு என்ன இந்தநேரத்தில்!இப்படி அவசரம்?" என்று கேட்டார் கனகசுந்தரம்.

“ விடிவதற்குள் நான் புறப்பட்டுவிட வேண்டும், அப்பா !” என்று குழந்தையைப் போல் பேசினாள் கல்யாணி.

“ என்னம்மா ! தலையை வலிக்கிறது என்று சொன்னாயே, இரண்டு நாள் இருந்து உடம்பைப் பார்த்துக் கொண்டு போயேன், அம்மா !” என்றாள் கல்யாணியின் தாயார், அவசரமாக நடந்து வந்து கொண்டே.

“ இல்லை. இங்கே இருந்தால் எனக்கு உடம்பு இன்னும் அதிகந்தான் ஆகும் !”

கனகசுந்தரம் மௌனமாக யோசனை செய்தார்.

“ அப்பா! உங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. நான் எப்படியும் நாளைக் காலையில் திருச்சியிலே இருக்க வேண்டும். எனக்கு மனசு எப்படியோ இருக்கிறது !”

கனகசுந்தரம் நெற்றியைப் பிசைந்தார். மகளின் மனம் அவருக்குப் புரிந்தது. அதனாலேயே கவலை அதிகரித்தது.

“ நாளை மத்தியானச் சாப்பாட்டுக்கு மேல் நீ புறப் பட்டு விடலாம், அம்மா! எல்லாம் கடவுள் செயல்” என்றார் அவர்.

“ அப்பா ! இங்கே கேட்கிறவர்களுக்கெல்லாம் பதில் சொல்லி முடியவில்லை எனக்கு. விடிவதற்குள் நான் எப்படியும் புறப்பட்டு விட வேண்டும் !” என்று கண்டிப் போடு சொன்னாள் கல்யாணி.

“ ஸ்டேஷனிலிருந்து நீ வீட்டுக்கு எப்படியம்மா தனியாகப் போவாய் ?” என்று அங்கலாய்ப்போடு கேட்டார் கனகசுந்தரம்.

நாகரத்தினம் இதற்குள் அந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டே அங்கு வந்து தோன்றினான்.

“ அப்பா, ஏன் இதற்கு இத்தனை யோசனை செய் கிறீர்கள் ? அப்புலிங்கத்தின் அப்பாவும் அம்மாவும் விடியற்காலை புறப்படுகிறார்கள். கல்யாணியையும் அவர் களோடு அனுப்பி விட்டால் போகிறது !”

"அப்புலிங்கமா? யாரைச் சொல்லுகிறாய்?" என்று கேட்டாள் தாயார்.

"அப்புலிங்கம் வரவில்லை. அவனுடைய அப்பாவும் அம்மாவும் வந்திருக்கிறார்கள். ஒரு சிவப்புக் கார் வெளியே நிற்கிறது பார். அது அவர்களுடைய கார் தான்—"

"ஓ! மூதூர் மிராசுதாரைச் சொல்லுகிறாயா?" என்றார் கனகசுந்தரம்.

"நம்முடைய கமலத்து மாப்பிள்ளைக்கு அவர்கள் நெருங்கிய உறவு, அம்மா. திருச்சியில் பெரிய பணக்காரர்கள். அவர்கள் பையன்தான் அப்புலிங்கம். என்னுடைய பழைய 'கிளாஸ்மேட்' ஆசாமி. ஒரே சிவப் பழம். திருப்புகழ், தேவாரம் என்றால் உருகி விடுவான். பரம சாது. பாவம்!" என்று விமர்சனம் செய்து கொண்டே, "அப்பா! உங்களைப் பந்தலிலே தேடு கிறார்கள்!" என்றான் நாகரத்தினம்.

"கல்யாணி! நீயும் வாம்மா. மனசைத் தளர விடாதே. காலையில் உன்னை ஊருக்கு அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே மணப் பந்தலுக்கு நடந்தார் கனகசுந்தரம்.

சீர் வரிசைச் சடங்குகள் முடிந்தன. இரவுப் பொழுதும் கழிந்தது. கல்யாணி சம்பந்தப்பட்டவரை அது இரவுப் பொழுதாகவே இல்லை. பகலாகவே கழிந்தது.

காலை ஐந்து மணிக்கெல்லாம் குளித்து விட்டு புறப்பட நின்றாள் கல்யாணி.

மூதூர் மிராசுதாரும் அவருடைய மனைவியும் புறப் பட்டார்கள். பெரிய தாம்பாளத்தில் அவர்களுக்கெல்லாம் வெற்றிலை பாக்குக் கொடுத்தார் கனகசுந்தரம். கல்யாணியின் தாயார் ஒரு தாம்பாளத்தில் மகளுக்கு வெற்றிலையும் மஞ்சளும் கொடுத்து, குங்குமச் சிமிழைத் திறந்து கல்யாணியின் நெற்றியிலே திலகமிட்டாள்.

"கல்யாணி! உன்னுடைய மனக் குறையெல்லாம் தீர்ந்து நீயும் அவரும் சிவனும் பார்வதியுமாக இருக்க வேண்டும், அம்மா. அந்தத் தாயுமானவர் கிருபையால் உன் வயிற்றில் ஒரு குழந்தையும் பிறந்து விட்டால், எல்லாம சரியாகிவிடும், அம்மா!"—இப்படிச் சொல்லும் போது கல்யாணியின் தாயாருக்குக் குரல் கம்மிற்று.

மிராசுதார் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டு "ஹார்ன்" அடித்தார். "என்ன மாமா! இத்தனை வயதிலும் 'ஸெல்ப் ட்ரைவிங்'தான் போலிருக்கிறது!" என்று மிராசுதாரிடம் போய் ஒரு அசட்டு ஹாஸ்யத்தை அடித்தான் நாகரத்தினம்.

கல்யாணி அப்பாவையும் அம்மாவையும் நமஸ்காரம் பண்ணி விட்டுக் காரின் பின் சீட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். மிராசுதாரின் மனைவி, கல்யாணிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். கார் விர்ரென்று புறப்பட்டது.

மிராசுதாரின் மனைவி ஏற்கனவே கல்யாணியைப் பற்றி அங்கு வந்திருந்த பெண்கள் சொன்ன விவரங்களை அறிந்திருந்தாள். அது காரணமாக அளவற்ற அநுதாபம் ஏற்பட்டிருந்தது. முடிந்தால் தன் கணவரிடம் சொல்லி ரவீந்திரனுடைய வாழ்க்கையில் அமைதியை நிலைநாட்ட முயற்சிக்கலாம் என்றுகூட மனத்துக்குள் எண்ணினாள். இப்பொழுது தனியாகப் பேசுவதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்படவே, கல்யாணியிடம் அந்தரங்கமாக ரவீந்திரனைப் பற்றியும் சந்திரிகாவைப் பற்றியும் கேட்க ஆரம்பித்தாள் அவள்.

பூதூர் மிராசுதார் முருகானந்தம் ரவீந்திரன் என்ற அபூர்வ வித்துவானைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார். சந்திரிகாவின் நடனத்தைப் பற்றியும் அவளுடைய அரங்கேற்றத்தைப் பற்றியும் அவரிடமே பலர் சிலாகித்துப் பேசியிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய வாழ்க்கையில் இப்படி ஒரு போராட்டம் இருக்கக் கூடும் என்று அவர் எண்ணிப் பார்த்ததே இல்லை.

ரவீந்திரனை இரண்டொரு முறை முருகானந்தம் பார்த்திருக்கிறார். அவன் ஒரு விசித்திரமான மனிதன் என்று பட்டது. பொதுவாகக் கலைஞர்கள் எல்லாருக்குமே இப்படி ஏதாவது ஒரு விநோத சுபாவம் இருக்கும் என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டார். ஆனால் இப் பொழுது பின் ஸீட்டில் இருந்து வந்த சம்பாஷணைகள் காதில் விழ விழ அவருக்கு மனத்தைக் கலக்கியது. யோசிக்க ஆரம்பித்தார் :

கல்யாணியின் பேச்சைக் கவனித்தால் அவளும் நல்லவள் என்றுதான் படுகிறது. பழைமையான தமிழ் நாட்டுப் பெண்மையின் பண்புகள் எல்லாம் அவளிடம் தெரிகின்றன. ஆனால் மனம் நொந்துபோய்க் கிடப்பதால், எதையும் விபரீதமாக எடுத்துக் கொள்ளக் கூடியவள் என்று ஒரு சந்தேகம் உண்டாகிறது. ஆனாலும் நல்லவள் என்கிற அபிப்பிராயந்தான் ஸ்திரம் ஆகிறது. அதே சமயம் ரவீந்திரனும் நல்லவன்தான். சந்திரிகாதான் கெட்டவளோ ? இல்லையென்றால் ஏன் நல்ல தம்பதி களுக்குள் இத்தனை விபரீதச் சண்டைகள் எல்லாம் நடக்க வேண்டும் ?

எதற்கும் சந்திரிகாவைப் பற்றி மகன் அப்புலிங்கத் திடம் நன்றாக விசாரிக்க வேண்டும். அவன்தான் அநேக சங்கீத சபைகளில் இருக்கிறானே. நிச்சயம் இந்த நடனக் காரியைப் பற்றி அவனுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். பாவம்! இத்தனை நல்லவர்களாக இருக்கிற குடும்பத்தில் இப்படிப் புயல் வீசும்படி விடக் கூடாது. இந்தச் சந்திரிகா உண்மையிலேயே சொக்குப் பொடி போட்டு ரவீந்திரனை மயக்கியிருந்தால், அதிலிருந்து அவன் தப்புவதற்கு ஒரு வழி பண்ண வேண்டியது நமது கடமை.

இப்படி எண்ணிக் கொண்டே 'ஸ்டியரிங் வீலில்' சாய்ந்தவாறு பலமாக யோசித்தார் முருகானந்தம். 'பெண்களைப் பற்றிச் சட்டென்று ஒரு முடிவுக்கு வருவது தவறு. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ!' என்று ஒரு எண்ணம் எழுந்தது.

'எல்லாவற்றிற்கும் மகுடியை ஊதிப் பார்த்து விட்டால் போகிறது. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு

இருக்கிறது என்று தானாகத் தெரிந்து விடுகிறது!' என்று எண்ணியவராய், ஸ்டியரிங்கில் இருந்த 'ஹார்னை' ஒரு அழுத்து அழுத்தினார். வெகு பலமாக ஓசையிட்டது அந்த மோட்டார்க் குழல்.

ஆனால், இதென்ன? திடீரென்று அந்த மாடு கலைகிறதே. பார வண்டிதான். கிராமத்து மாடல்லவா? மோட்டார்க் குழலின் ஓசையிலே மருள்கிறது.

'பல பல' என்று விடிந்து வருகிற சமயம். இருளைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக் கொண்டு வருகிறது வெளிச்சம். இன்னும் கொஞ்சம் இருள் மீதி யிருக்கிறது.

யோசனைப் பின்னலிலே சிக்கியிருந்த முருகானந்தம் பதறிப் போய், 'ஸ்டியரிங் வீலை' இடது பக்கமாக வளைத் தார். சாலையில் ஓங்கிப் பரந்து விசாலமாக நின்ற ஆல மரமா அது! மங்கிய வெளிச்சத்தில் இருளோடு இருளாக நிற்கிறதே! மறுபடியும் ஒரு நொடிப்பு நொடித்தார் ஸ்டியரிங் சக்கரத்தை.

"உர்..." என்று ஒரு சத்தம். இடது பக்கம் பள்ளத்துக் குள்ளே சரிந்தது மோட்டார் வண்டி. அடுத்த விநாடி ஆற்றின் கரை மேட்டை வழுக்கிக் கொண்டு சரிவிலே மோதி அப்படியே அதல பாதாளத்தை நோக்கி உருண்டது அந்தச் சிவப்பு மோட்டார். பார வண்டியை ஓட்டிக் கொண்டு வந்த வண்டிக்காரன் திகைத்துப் போய், கயிற்றை இழுத்துப் பிடித்து நிறுத்துவதற்குள், காரின் பின் கதவு 'படார்' என்று திறந்து அதிலிருந்து ஒரு அம்மாள் வெளியே தூக்கி எறியப்பட்டாள்.

இருளும் வெளிச்சமும் ஒன்றையொன்று முட்டி மோதிக் கொண்டு வானத்திலே உருண்டன. அவற்றோடு பிணைந்து கொண்டே சூரிய உருண்டையும் மேகத்திலே உருண்டது. அந்த நேரத்தில் கிணற்றுக்குள்ளிருந்து வருவதுபோல "ஐயோ! கல்யாணி!" என்று ஒரு குரல் கேட்டது. அடுத்த விநாடி 'கிறுகிறு' என்று மணல் மேட்டிலிருந்து சரிந்து, ஸ்மரணை யற்றவளாய் ஆற்றின் மணலை நோக்கி உருண்டு கொண்டிருந்தாள் கல்யாணி!

# 6 "சுண்டெலிக் கண்ணே!"

அப்புலிங்கம் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த வண்ணம் பலமான யோசனையில் ஆழ்ந்திருந்தான். அந்த யோசனையை மிகத் தீவிரம் ஆக்கியது, குழந்தைகளின் பாடல்.

திருச்சி ஆண்டார் தெருவில் அப்புலிங்கத்தின் வீடு ஒரு விசாலமான மாளிகை. அந்த மாளிகையின் முற்றத்திலே அண்டை வீட்டுப் பிள்ளைகள் எல்லாம் கூடி 'மரப்பாச்சிக் கல்யாணம்' விமரிசையாக நடத்திக் கொண்டிருந்தார்கள்.

சிறுவர் சிறுமிகளுக்குள் மிகவும் சூட்டிக்கையான ஒரு பையன், அந்தப் பாடலைப் பாடினன். அதன் கருத்து அப்புலிங்கத்தை மிகவும் கவர்ந்தது.

அழகு நிரம்பிய ஆண் சுண்டெலி ஒன்று, அழகே உருவான ஒரு பெண் சுண்டெலியைக் காதலித்தது. எத்தனையோ நாளாக அதன் உள்ளத்தில் இந்தக் காதல் வளர்ந்து கொண்டே வந்தது. ஆனால் அந்தக் காதலைப் பெண் சுண்டெலியிடம் எடுத்துச் சொல்வதற்குரிய ஒரு சந்தர்ப்பம், பாவம், சுண்டெலிக்குக் கிடைக்கவேயில்லை. கடைசியாக ஒரு பௌர்ணமி இரவில் பெரிய மாடி வீட்டு நிலா முற்றத்தில் வேகமாக ஓடிக் கொண்டிருந்த பெண் சுண்டெலியை வழி மறித்தது, ஆண் சுண்டெலி. அது வசந்த காலம்! சொல்ல வேண்டுமோ! சுண்டெலிக் காதலன் தன் சுண்டெலிக் காதலியிடம் இதயத்தைக் கொட்ட ஆரம்பித்தது.

ஆக்க வேணும் அரைக்க வேணும் சுண்டெலிக் கண்ணே—நீ
அருகிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!

தூக்க வேணும் வைக்க வேணும் சுண்டெலிக் கண்ணே—நீ
சுத்தி நின்னுப் போதுமடி சுண்டெலிக் கண்ணே!

**ஆறு வேணும் குளமும் வேணும் சுண்டெலிக் கண்ணே—நீ**
**அணைஞ்சிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!**

**சோறு வேணும் தண்ணி வேணும் சுண்டெலிக் கண்ணே—உன்**
**சுகமிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!**

இந்தப் பாடலைப் பாடியவாறு சிறுவர்களும் சிறுமிகளும் ஒரே ஆட்டமாக ஆடிக் கொண்டிருந்தார்கள்.

மூதூர் மிராசுதார் வீட்டில் வேறு யாருமில்லை. கமலத்தின் கல்யாணத்துக்காக மிராசுதாரும் மனைவியும் லால்குடி சென்றிருந்ததால், அந்த ஏகாந்த பிரும்மச்சாரி அப்புலிங்கம் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே, பாடலின் கற்பனையில் மனத்தை ஓட விட்டான். பாடல் ஒரே குதூகலத்துடன் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது:—

**அடுப்பு வேணும் துடுப்பு வேணும் சுண்டெலிக் கண்ணே—உன்**
**அன்பிருந்தாப் போதுமடி சுண்டெலிக் கண்ணே!**

**நடக்க வேணும் அலுக்க வேணும் சுண்டெலிக் கண்ணே—நீ**
**நாலு வார்த்தை சொன்னாப் போதும் சுண்டெலிக் கண்ணே!**

அப்புலிங்கத்தின் மனம் ரவீந்திரனையும் சந்திரிகாவையும் பற்றிய எண்ணத்திலே தொடங்கிக் காதல் என்ற தத்துவத்திலே சுழல ஆரம்பித்தது.

அதிசயமான நமது தினசரி வாழ்க்கையில் சில மனிதர்களைச் சந்தித்ததும் நமக்குப் பிடித்து விடுகிறது. சில மனிதர்களைப் பார்த்ததும் ஏனோ வேண்டாத வெறுப்பு உண்டாகி விடுகிறது. சில மனிதர்களை வெறுக்க வேண்டும் என நினைக்கிறோம், முடிகிறதில்லை! இதற்கெல்லாம் காரணத்தை என்னவென்று சொல்ல?

அன்பு என்ற உணர்ச்சி எப்படி ஏற்படுகிறது? அதன் வித்து எது?

காதல் என்ற நுட்பமான உணர்ச்சியைப் பற்றிக் கூறாத காவியமே இல்லை. ஆதி மனிதனுடைய முதல் அனுபவத்திலிருந்து மனித ஜாதியின் வளர்ச்சியை

விவரிக்கும் பௌதிக விஞ்ஞானிகள் எல்லாரும் இந்தக் காதல் தத்துவத்தை ஆராய்ந்திருக்கிறார்கள். ஆனாலும் இதைப்பற்றித் திட்டமான ஒரு முடிவுக்கு நம்மால் வர முடிகிறதா? காதலிலே ஆரம்பித்துக் கல்யாணத்திலே முடிந்த எத்தனையோ மனிதர்களின் வாழ்க்கையைப் பார்க்கிறோம். இவர்களில் சிலருடைய வாழ்க்கை ஆரம் பத்தில் இன்பத்திலே தொடங்கிப் பிறகு ஒரே துன்பமாக முடிவதையும் கவனித்திருக்கிறோம்! அப்படியானால் லக்ஷ்யக் காதல்தான் எது?

மனித மனம் வானத்தின் வர்ணங்களைப் போல் மாறுகிறது. மனித மனத்தின் அன்பு சந்திரனைப் போல் வளர்கிறது, தேய்கிறது. ஆனால் சில சில தூய மனிதர் களுடைய உள்ளம் மட்டும் நித்திய சூரியனாக நின்று, வளர்ச்சியும் தேய்வும் இல்லாத நிரந்தரமான பிரகாசத் தோடு ஒரு ஒழுங்குக் கிரமத்தில் இயங்குகிறது! இதெல்லாம் எதனால்?

எந்த விஷயத்தையும் தத்துவமாகப் பார்த்து ஆராய்கிற இயல்பு கொண்ட அப்புலிங்கத்தின் புத்தி இப்படியெல்லாம் மேலே மேலே சிந்திக்க ஆரம்பித்தது.

வயதான மனிதர்களின் மனந்தானே இப்படி விநோதச் சிக்கலாக இருக்கிறது! குழந்தை உலகத்தில் அன்பு எத்தனை புனிதமாக இயங்குகிறது! போட்டி, பூசல், சண்டை, பொறாமை, வெறுப்பு, கசப்பு என்ற கொடிய உணர்ச்சிகளேயில்லாமல் குழந்தைகள் எத்தனை இன்பமாக நாளும் பொழுதும் கழிக்கின்றன. பசுமையான உள்ளத்தின் பரிசுத்தம் எல்லாம் குழந்தைப் பருவத்தோடு மறைந்து விடுகிறதா? 'குழந்தைகள் தெய்வ அருளி லிருந்து வருகின்றன' என்று சொல்கிறார்களே, அது உண்மைதான் போலும்! அந்தத் தெய்வ ஸ்பரிசம் பசுமை யாக இருப்பதனால்தான் குழந்தைகள் தெய்விக அன்போடு பழகுகின்றன போலும்!

அப்புலிங்கம் மனத்துக்குள்ளேயே எண்ணிப் பார்த்தான்.

அன்று மாலை கடை வீதியிலே ரவீந்திரன் என்ற அந்த விசித்திர மனிதனைச் சந்தித்ததும், அதன் பிறகு நாகரத்தினம் கண்டபடியெல்லாம் பேசி மனத்தைக் குழப்பியதும், அதன் பின்னர் அரங்கேற்றத்துக்குப் போகிற வழியில் கல்யாணியம்மாளைப் பார்த்துத் துணுக்குற்றதும், அப்புலிங்கத்தின் உள்ளத்தைக் குமைத்துக் கொண்டிருந்தன. எல்லாவற்றிற்கும் மேலாக, அன்று அரங்கேற்றத்தில் சந்திரிகாவைப் பார்த்த பிறகு அப்புலிங்கத்தின் குழப்பம் நூறு மடங்கு அதிகம் ஆகியிருந்தது. அந்த இளம் பெண்ணின் முகமும், அந்தத் தெளிவான முகத்தில் ஓடிய உணர்ச்சிச் சாயல்களும், அவளை ஒரு அசாதாரணமான பெண் என்று கூறின. கலையின் அழகோடு, மேனியின் அழகோடு, குணத்துக்கு என்று ஒரு தனியான அழகு, அற்புதமான சோபை இருக்குமே, அந்த அழகும் சோபையும் சேர்ந்து சந்திரிகாவின் கிளி போன்ற முகத்தில் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தன. இப்படிப்பட்ட ஒரு பெண்ணா, ரவீந்திரனுக்கும் கல்யாணிக்கும் மத்தியில் இம்மாதிரியான ஒரு பெரும் புயல் வீசுவதற்குக் காரணமாக இருக்கிறாள்? அப்புலிங்கத்தால் அதை நம்பவே முடியவில்லை!

குழந்தைகள் பாடிய சுண்டெலிப் பாட்டு அவனுடைய மனத்திலே புரண்டது. ஆக்கவும், அரைக்கவும், தூக்கவும், வைக்கவும் வேண்டாம், தன் அருகிலேயே இருந்தால் போதும் என்று இந்தச் சந்திரிகாவை அவன் தன் வீட்டு மாடியிலேயே வைத்திருக்கிறானா? உண்மையில் ரவீந்திரனுக்கும் சந்திரிகாவுக்கும் இடையே இருந்த தொடர்பு தான் என்ன? கல்யாணிக்கு எத்தனை விசனம் ஏற்படும்படி செய்திருக்கிறது இந்த உறவு? உண்மையில் நாகரத்தினம் சொன்னதெல்லாம் மெய்யாக இருக்குமானால், கண்ணால் கண்ட அந்த ரூபவதியின் அழகெல்லாம் வெறும் பகட்டா? என்ன உலகம் இது? என்ன மனிதர்கள் இவர்கள்? என்ன மன இயல்புகள் இவர்களுக்கு?—ஒரே குழப்பமாக அல்லவா இருக்கிறது!

"என்ன அப்புலிங்கம்! ஏது யோசனை வெகு பலமாக இருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் ராமநாதன்.

“ ராமநாதனா ? அடாடா! உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஒரு வாரமாக எண்ணிக் கொண்டிருக்கிறேன். நீயே வந்து விட்டாய். பேஷ் !!” என்று அவனை எழுந்து வரவேற்றான் அப்புலிங்கம்.

“ அப்படியென்ன சமாசாரம், அவ்வளவு ஆவலோடு என்னைப் பார்க்க வேண்டும் என்று நீ ஆசைப்பட—”

“ நீ தாயுமானவர் தெருவில்தானே இருக்கிறாய் ?”

“ ஆமாம். தாயுமானவர் தெருவில்தான் இருக்கிறேன். ரவீந்திரன் வீட்டுக்கு எதிர் வீட்டிலேதான் !”

“ எப்படி ? ரவீந்திரன் வீட்டுக்கு எதிர் வீட்டிலா !” என்றான் அப்புலிங்கம்.

“ நீ எந்த மனிதனுடைய புல்லாங்குழலை ஈடு பிடித்திருக்கிறாயோ அதே மனிதனுடைய வீட்டுக்கு எதிரில் !”

“ உனக்கு எப்படித் தெரியும் நான் புல்லாங்குழல் ஈடு பிடித்த சமாசாரம் ?”

“ ரவீந்திரனே சொன்னான் !”

“ அதெப்படி அவனுக்கு அத்தனை ஞாபக சக்தி ?”

“ உன்னை ஒரு வர்ணனை கொடுத்தான், செட்டியார் கடையில் பேப்பர் வாசித்துக்கொண்டிருந்ததாக! உடனே கண்டு பிடித்து விட்டேன் !” என்று சொன்னான் ராமநாதன்.

அப்புலிங்கம் ராமநாதனைப் பார்த்துச் சொல்லுவான் :

“ உன்னைச் சந்தித்து அந்த ரவீந்திரனைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம் என்று விரும்பினேன்.”

“ என்ன தெரிந்து கொள்ள வேண்டும் ? அவன் யோக்கியனா அல்லது அயோக்கியனா என்றுதானே ?”

அப்புலிங்கம் இதற்குப் பதில் சொல்லத் தயங்கினான்.

“ அப்பு ! ஒன்று சொல்கிறேன், கேள். இந்தத் திருச்சியில் ஏன், இந்தத் தமிழ்நாட்டிலேயே, அந்தமாதிரி

ஒரு அற்புதமான உத்தமக் கலைஞனைப் பார்ப்பது கஷ்டம்!" என்றான் ராமநாதன்.

"அப்படியானால் சந்திரிகா?"

"அவளைப் போன்ற ஒரு நடனமணி ஆயிரம் வருஷங்களுக்கு ஒரு முறைதான் பிறக்கிறாள். இது ஏதோ புகழ்ச்சியில்லை. முக்காலும் உண்மை!"

ராமநாதனுடைய வார்த்தைகளில் உறுதி தொனித்தது. அப்புலிங்கத்துக்கு மீண்டும் மூளை குழம்பியது!

"அப்படியானால் கல்யாணி?......"

"அவளைப்போல ஒரு உத்தமமான மனைவி உலகிலேயே இருக்க முடியாது! அதனால்தான் மூன்று பேருமே நல்லவர்களாக இருப்பதால்தான், இத்தனை குழப்பம்! வாழ்வின் புதிர் என்பதே அதுதானே அப்புலிங்கம்—உனக்குத் தெரியாத தத்துவமா!"

அப்புலிங்கம் மௌனமாக ஒரு கணம் யோசித்து விட்டுக் கேட்டான்: "ராமநாதா, இவர்களுடைய எதிர்காலம் என்ன ஆகப் போகிறது என்றுதான் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது!"

"மனிதனுடைய எதிர்காலத்தைத் தெரிந்து கொள்வதில் உனக்கு ஏன் இத்தனை அக்கறை?"

"அந்த அக்கறை யாருக்குத்தான் இல்லை இந்த உலகில்? ஜோதிஷம் என்றும் ஆரூடம் என்றும் எத்தனை சாஸ்திரங்கள் நமது தென்னாட்டில் உதித்திருக்கின்றன. இந்த அக்கறை மகான்களுக்குக்கூட உள்ள அறிவுத் தாகம் ஆயிற்றே!" என்று பதில் சொன்னான் அப்புலிங்கம்.

"அப்படியில்லை. வாழ்க்கையின் எதிர்காலம் ஒரு புதிராக இருப்பதால்தான் அதில் ரஸம் இருக்கிறது. முன்னாடியே எல்லாம் தெரிந்து விட்டால் அதில் ரஸம் இல்லை!" என்றான் ராமநாதன்.

"இல்லவே இல்லை. முன்னதாகவே நாம் படித்த ஒரு கதையை நாடகமாகப் பார்ப்பதில் ரஸம் இருப்ப

தில்லையா ? படித்த ஷேக்ஸ்பீயர் நாடகங்களையே திரும்பப் பார்க்கும்போது, நாம் எதிர்பார்க்கும் சம்பவங்கள் எதிர் பார்க்கும் சம்பாஷணைகள் அப்படி அப்படியே மேடையில் நடக்கும்போது நம்முடைய ரஸாநுபவம் அதிகந்தான் ஆகிறது. குறைவதில்லை. ராமாயணத்தில் நாம் எதிர் பார்த்தபடி சீதையை ராவணன் தூக்கிப் போகும்போது அவளுடைய சோகத்தில் நாமும் கண்ணீர் வடிக்கிறோம். திரும்ப அவள் ராமனிடம் செல்லப் போகிறாள் என்று தெரிந்தாலுங்கூட, அந்தச் சமயத்தில் நம்முடைய கண்ணீர் நின்று விடுகிறதா என்ன ? இல்லவே இல்லை! இது போலத்தான் எதிர்காலத்தைப் பற்றிய ஜோதிஷ அறிவும்! தெரிந்த கதையை நாடகமாகப் பார்ப்பது போல இருக்கும் அது!" என்று பலமாக ஒரு போடு போட்டான் அப்புலிங்கம்.

அப்பொழுது 'கிணுங் கிணுங்.........கிணுங் கிணீங்' என்று டெலிபோன் மணி அடித்தது. வேகமாக எழுந்து உள்ளே போன அப்புலிங்கம், டெலிபோனைக் காதில் வைத்ததும் அப்படியே பதறிப் போய் விட்டான்! ஆனால் அதை நம்பவே முடியவில்லை.

திருச்சி ஆஸ்பத்திரியிலிருந்து யாரோ பேசினார்கள். "உங்கள் அப்பாவும் அம்மாவும், இன்னொரு அம்மாளும் கார் விபத்திலே சிக்கி இங்கே கொண்டு வரப்பட்டிருக்கிறார்கள் !" என்ற செய்தியை, கையும் காலும் முறிந்து போன ஒரு நொண்டி ஆங்கிலத்தில் யாரோ அரைகுறைப் படிப்பாளி ஒருவன் பெருமூச்சு விட்டுக்கொண்டே டெலிபோனில் உரத்த குரலில் சொன்னான்.

போட்டிருந்த சட்டையைக்கூட மாற்றவில்லை அப்புலிங்கம். "ராமநாதா ! ஒரு விபத்து நேர்ந்திருக்கிறது. கொஞ்சம் என்னோடு புறப்படு" என்று சொல்லிக் கொண்டே அப்படியே கார் ஷெட்டுக்குள்ளே போய்த் தன்னுடைய ஆஸ்டின் காரை வேகமாக எடுத்து வெளியே வந்து ராமநாதனையும் காரில் ஏற்றிக்கொண்டு, ஆஸ்பத்திரியை நோக்கிச் சிட்டாகப் பறந்தான் அப்புலிங்கம்.

திருச்சியின் எல்லையிலேதான் நடந்தது அந்தக் கார் விபத்து. பள்ளத்துக்குள்ளே சிவப்புக் கார் இறங்கியதும், பின் கதவு படார் என்று திறந்ததும் எல்லாம் ஒரு விநாடியில் நடந்த சம்பவங்கள். கல்யாணி வெளியே எறியப்பட்டுக் கீழே உருண்டு விழுந்தாள். "ஐயோ! கல்யாணி!" என்று மிராசுதார் மனைவி கதறியதுதான் தெரியும். அடுத்த விநாடி அவள் மூர்ச்சையாகி விட்டாள்.

முருகானந்தம் கார் விபத்துக்களைப் பற்றி நன்றாகத் தெரிந்தவர். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் காரை விட்டு வெளியே குதிப்பது பெரிய ஆபத்தாக முடியும் என்று அவருக்குத் தெரியும். என்றாலும் கையிலும் காலிலும் பலமாக அடிபட்டு விட்டது. வெளியே குதிக்காததால் தப்பித்துக் கொண்டார். அவருடைய மனைவி மூர்ச்சையாகி விட்டதால், குப்புறச் சரிந்த காரின் பின் சீட்டில் சுருட்டி மடக்கிக் கொண்டு அப்படியே கிடந்தாள். ஊமை அடி பட்டிருந்தது. மற்றப்படி ஆபத்து ஒன்றும் இல்லை.

கல்யாணி மட்டும் கார் சரிந்து கிடந்த இடத்துக்குச் சற்றுத் தொலைவிலே ஆற்று மணலில் உருண்டு போய்ப் பிரக்ஞையற்ற நிலையில் கிடந்தாள். அப்பொழுது, ஏரும் கலப்பையும் கொண்டு வயலை நோக்கி நடந்து கொண்டிருந்தான் ஒரு குடியானவன். விபத்து நடந்ததைத் தொலைவிலே பார்த்ததும், அப்படியே மாட்டையும் கலப்பையையும் விட்டு விட்டு அங்கே வேகமாக ஓடோடி வந்தான்.

விபத்துக்குக் காரணமாக அமைந்த பார வண்டிக் காரன் வண்டியிலிருந்து கீழே குதித்தான். இருவருமாகப் பாய்ந்து சென்று, சரிவிலே கிடந்த மோட்டாருக்குள் இருந்தவர்களை மிகப் பிரயாசைப்பட்டு வெளியே கொண்டு வந்து சேர்த்தார்கள்.

இதற்குள் வயலில் வேலை செய்து கொண்டிருந்த பல குடியானவர்கள் அங்கே வந்து விட்டார்கள். எல்லாரும்

சேர்ந்து கல்யாணியம்மாளைப் பள்ளத்திலிருந்து தூக்கிக் கொண்டு வந்தார்கள்.

தண்ணீர் தெளித்ததால் முகத்தைச் சற்றுத்திருப்பிக் கண்களைத் திறந்து பார்த்த மிராசுதார் மனைவி, முனக ஆரம்பித்தாள். இடுப்பில் பலமாக அடிபட்டிருந்தது அவளுக்கு. குடியானவர்கள் அவளையும் மிராசுதாரையும் தூக்கி எடுத்துக் கொண்டு மேட்டிலே ஏறிச் சாலைக்கு வந்தார்கள். கல்யாணி அம்மாளுக்கோ எவ்வளவு தூரம் தண்ணீர் தெளித்தும் மூர்ச்சை தெளியவில்லை. குப்புறக் கிடந்த மோட்டாருக்குள் இருந்து ஒரு சால்வையை எடுத்து வந்து அதைத் தரையிலே விரித்தார்கள். கல்யாணி அம்மாளை அதில் படுக்கப் போட்டார்கள். தலைப்பாகையை அவிழ்த்து உதறி, மிக்க அன்போடும் கவலையோடும் அந்தக் குடியானவர்கள் கல்யாணி அம்மாளுக்கு விசிறினார்கள்.

பஸ் வருகிற நேரம் அது. எல்லாருடைய பார்வையும் சாலையிலேயே நின்றது.

பத்து நிமிஷத்துக்கெல்லாம் 'ஹார்ன்' சத்தம் கேட்டது.

லால்குடியிலிருந்து திருச்சிக்குச் செல்லும் முதலாவது பஸ் அந்த எல்லையை அணுகிக் கொண்டிருந்தது. விபத்து நேர்ந்து விட்டது என்பதைச் சற்றுத் தொலைவிலேயே கவனித்த பஸ் டிரைவர், வேகத்தை நிதானித்தான். பார வண்டி கலைந்து போய்ப் பாதையிலே அப்படியே நின்றதைப் பார்த்ததும், டிரைவர் ப்ரேக்கைப் போட்டுப் பஸ்ஸை நிறுத்தினான். அடுத்த கணம், பிரயாணிகள் எல்லாரும் கீழே இறங்கினார்கள்.

மூர்ச்சையாகிக் கிடந்த கல்யாணி அம்மாள் கண்ணைத் திறக்கவே இல்லை. மிராசுதார் மட்டும் அந்த அதிர்ச்சியிலும் நன்றாக நினைவோடுதான் இருந்தார்.

"எங்கள் மூன்று பேரையும் திருச்சி ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுங்கள். அவசரமாகச் சென்றால்தான் கல்யாணி பிழைப்பாள்!" என்றார் முருகானந்தம்.

பஸ் மூவரையும் ஏற்றிக் கொண்டு திருச்சி ஜெனரல் ஆஸ்பத்திரியை நோக்கி விரைவாகப் புறப்பட்டது.

*　　　　*　　　　*

அன்று ஒரு முக்கிய தினம். ரவீந்திரனுடைய நெடு நாளையக் கனவு ஒன்று நனவாகும் மகத்தான நாள். திருச்சி 'தேவர் ஹாலில்' சந்திரிகாவின் நடனம், ஜில்லா கலெக்டரின் தலைமையில் நடக்க இருந்தது. அந்த அபூர்வ நாட்டிய நங்கையின் திறமையைப் பாராட்டி, 'நாட்டிய மணி' என்ற பட்டத்தை வழங்குவதாக ஏற்பாடு. எனவே சூரியன் உதித்ததுமே அவசரம் அவசரமாக எழுந்து ரவீந்திரன் விழாவுக்கான ஏற்பாடுகளைக் கவனிப்பதில் முனைந்திருந்தான். அந்தச் சந்தர்ப்பத்திலே தான் அவனைத் தேடிக்கொண்டு, ஆஸ்பத்திரிப் பையன் சைக்கிளில் அலைந்து கொண்டிருந்தான்!

அன்று ரவீந்திரன் தேடிச் சென்று பார்க்காத பெரிய மனிதர்களே திருச்சியில் இல்லை. தன்னுடைய வாழ்வின் லக்ஷயப் பெண் 'நாட்டிய மணி'யாகத் திகழ்வதைக் கண்டு களிப்பதிலே தான் அவனுக்கு எத்தனை ஆனந்தம்!

திருச்சித் தேவர்மன்றம் ஒரே கோலாகலமாகக் காட்சி தந்தது. ஆடவர், பெண்டிர், குழந்தைகள் என்று கூட்டம் தேவர் ஹாலைச் சுற்றி முட்டி மோதிக் கொண்டிருந்தது. மன்றத்துக்கு உள்ளே நெருக்கமான ஜனத் திரள்!

திரை தொங்கியது. மின்சார விளக்குகள், நிலவை உருக்கிக் கொண்டு வந்து அந்த ஹாலிலே ஓட விட்ட மாதிரி ஒரே ஒளிப் பிரவாகமாய்ப் பொழிந்து கொண்டிருந்தன. 'கண கண' என்று மணி அடித்தார்கள். வாத்தியங்கள் இணைந்து ஒலித்தன. நாட்டை ராகத்தில் 'தாயுமானவனே' என்ற துதி கீதம் முழங்கியது. சலங்கையின் ஒலி 'கல கல' என்றது. திரை உயர்ந்தது. சந்திரிகா 'கலீர் கலீர்' என்று அரங்கத்திலே வந்து தோன்றிக் கைகூப்பி நின்றாள். அடுத்த கணம் மத்தளம் முழங்கியது. புல்லாங்குழலும் வீணையும் துதி கீதத்தை

எடுத்து இயம்பின. "தாம் தித் தாம் தை" என்று சொற்கட்டு கேட்டது. மூடி விழிக்கும் நேரத்தில், பக்தனுக்கு இரங்கி இறைவன் தாயாக வந்து மருத்துவம் செய்து 'தாயுமானவர்' என்று திருநாமம் சூட்டிக் கொண்ட அந்தத் தெய்விக லீலையை அபிநயமாக அரங்கிலே மிக்க எழிலோடு சித்திரித்தாள் சந்திரிகா!

துதி கீதத்தைத் தொடர்ந்து கீர்த்தனைகளும், பதங் களும், 'விறு விறு' என்று அரங்கிலே குதித்துக் கொண்டு வந்தன. தென்னாட்டு இசைப் பரம்பரையின் சங்கீதச் செல்வங்கள் எல்லாம் அரங்கிலே தலைநிமிர்ந்து நின்று ஸப்த ஸ்வரங்களிலே பேசின! ரவீந்திரனுடைய பெருமையைச் சொல்லி முடியாது.

ஜில்லா கலெக்டர் எழுந்து 'நாட்டிய மணி' என்று பட்டம் சூட்ட ஆயத்தமானார். வெள்ளிக் குழல் ஒன்றில் அந்தப் பட்டத்தைத் தாங்கிய இதழ் ஒன்று சுருட்டி வைக்கப் பட்டிருந்தது. அழகான அலங்காரங்களோடு கூடிய அந்த வெள்ளிப் பேழையை ஒரு கனவான் எடுத்துக் கொண்டு வந்து கலெக்டரிடம் கொடுத்தார். அதை வாங்கிக் கையில் வைத்துக் கொண்டு நாலு வார்த்தை சந்திரிகாவைப் பற்றிப் பேசுவதற்கு முனைந்தார் ஜில்லா கலெக்டர். அப்பொழுது, அரங் கத்தின் இடது பக்கத்து வாசல் வழியாக ஆஸ்பத்திரிப் பையன் உள்ளே நுழைந்தான். நாகரத்தினத்தின் கைப் பட எழுதிய கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து ரவீந்திர னிடம் கொடுத்தான் அவன். "அக்காள் கல்யாணிக்கு ஜன்னி அதிகமாக இருக்கிறது. உடனே இங்கு வரவும்" என்று அதில் கண்டிருந்தது.

லால்குடிக்குப் போன மனைவி திருச்சி ஆஸ்பத்திரிக்கு எப்படி வந்தாள்? நாகரத்தினம் எங்கே இங்கு வந்து சேர்ந்தாள்? ஒன்றுமே புரியாமல் தலை சுற்றியது ரவீந் திரனுக்கு. இதற்குள்ளே கலெக்டர் எழுந்து நின்றதற்கு அறிகுறியாக, ஜனங்கள் பலமாகக் கைதட்டினார்கள். எழுந்து நின்ற கலெக்டர் ரவீந்திரனைக் கூப்பிடும்படி பக்கத்தில் இருந்தவரிடம் சொல்லிக் கொண்டே, அவன் அங்கு வருவதற்காக ஒரு நிமிஷம் காத்து நின்றார்.

# 7. மனக் கதவு திறந்தது!

"மிஸ்டர் ரவீந்திரன், உங்களைக் கலெக்டர் கூப்பிடுகிறார்!" என்று சொன்னார் ஒருவர், வேகமாக நடந்து வந்து கொண்டே! ஆஸ்பத்திரிப் பையன் கொடுத்த கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டே தயங்கினான் ரவீந்திரன்.

'கடிதம் நாகரத்தினத்திடமிருந்து வந்திருக்கிறது; என்ன கந்தரகோளமோ தெரியவில்லையே!' என்று எண்ணி ஒரு விநாடி காலத் தேய்த்தான். கேட்டான், அந்தப் பையனிடம்: "ஏன் தம்பீ, இந்தக் கடிதத்தைக் கொடுத்தது யார்?"

"பன்னிரண்டாம் நம்பர் அறையிலே ஒரு அம்மா இருக்காங்களே, அவங்களோடு பேசிக்கிட்டிருக்கிற ஐயா தான் இதைக் கொடுத்தாரு—"

"என்ன! அந்த அம்மா பேசிக்கொண்டு இருக் காங்களா?"

"ஆமாங்க. காலிலே அடிபட்டிருக்கிறதனாலே நகர முடியாது. கட்டில்லே படுக்க வைச்சிருக்கிறாங்க—" என்றான் அந்த ஆஸ்பத்திரிப் பையன்.

"அப்படியானா அந்த அம்மா சுய நினைவோடுதான் இருக்காங்களா?"

"ஆமாங்க. மத்தியானமே அவங்களுக்கு மூர்ச்சை தெளிஞ்சுட்டுதுங்க. பயம் ஒண்ணும் இல்லீங்க!"

ரவீந்திரனுடைய மனத்தில் ஒரு நிம்மதி உண் டாயிற்று.

"சரி. நீ ஆஸ்பத்திரிக்குப் போ. நான் கொஞ்ச நேரத்தில் வருவேன்" என்று சொல்லி விட்டு, ரவீந்திரன் 'தேவர் மன்றத்'தில் கலெக்டர் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வேகமாக நடந்தான்.

ஜில்லா கலெக்டர் ரவீந்திரனிடம் ஏதோ சொல்லி விட்டு, நாற்காலியைச் சற்று நகர்த்தி ஆங்கிலமும் தமிழும் கலந்து—அதாவது ஆங்கிலத்திலே கொஞ்சம் தமிழைக் கலந்து—ஐந்து நிமிஷம் வழக்கமாகப் பேசுகிற உபசார வார்த்தைகளைப் பேசிவிட்டு, வெள்ளிப் பேழையைச் சந்திரிகாவுக்கு வழங்கினர். அவருடைய பேச்சு எப்படி யிருந்த போதிலும், கலெக்டர் பதவியின் கனத்தினால் ஜனங்களின் கை தட்டும் கனமாகவே இருந்தது! பின்னர், 'நாட்டிய மணி'யின் நடனம் தொடர்ந்து நடந்தது. உத்சாகமாக இரவு ஒன்பது மணி வரை நடந்தது.

கச்சேரி முடிந்த பிறகு, ரவீந்திரன் சந்திரிகாவை ஒரு காரிலே ஏற்றிக் கொண்டு வீடு போய்ச் சேர்த்து விட்டு, புகழ் பெற்ற பாலக்கரையில் இருந்த பழைய ஆஸ்பத்திரியை நோக்கி அதே காரில் விரைந்தான்.

அப்பொழுது இரவு பத்து மணியிருக்கும். மரங்களும், செடி புதர்களும், அவற்றை யடுத்துக் கல்லறைகளுமாக இருந்த பாலக்கரை ஆஸ்பத்திரிக்குள்ளே நுழைந்த போது, ரவீந்திரனுடைய மனம் துக்கித்தது. அவனுடைய மென்மையான இதயத்துக்கு ஆஸ்பத்திரியின் சூழ்நிலையும், ஆஸ்பத்திரிகளுக்கே உள்ள அந்த ஒரு தனியான வாடையும் வயிற்றைக் குமட்டின.

உள்ளே போய் வராந்தாவில் ஏறியதும், நாகரத்தினம் வராந்தாவில் உலாத்திக் கொண்டிருந்தது தெரிந்தது. ஆனால் என்ன ஆச்சரியம், ரவீந்திரன் வருவதைத் தொலைவிலே பார்த்ததுமே, சட்டென்று திரும்பி அறைக் குள்ளேபோய் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து விட்டான் நாகரத்தினம். நாற்காலியை அவன் இழுத்துப் போட்ட ஓசை வெளியே ரவீந்திர னுக்குக் கேட்டது. எரிகிற நெருப்பில் நெய்யைக் கொட்டினால் 'குபீர்' என்று சுவாலை கிளம்பும் அல்லவா? அதுபோலச் சீற்றம் எழுந்தது ரவீந்திரனுக்கு. அதை அடக்கிக் கொண்டு, பன்னிரண்டாம் நம்பர் அறையினுள் நுழைந்தான் அவன்.

கட்டிலில் கல்யாணி படுத்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, நாகரத்தினம் ஒரே மௌனமாக இருந்தான். ஏற்கனவே என்னென்ன பேச ,வேண்டுமோ—அதாவது, பேசக் கூடாதோ—அதை யெல்லாம் பேசித் தீர்த்து விட்டான் போலும் !

கல்யாணி கண்களைத் திறந்து பார்த்தாள். கணவனைக் கண்டதும் எங்கிருந்து புறப்பட்டதோ, அந்தக் கண்ணீர் அருவி ! விம்மலும், விக்கலும் 'குபு குபு' என்று பாய்ந்து வந்தன. கதறிக் கதறி அழுதாள் அந்த அபலை.

ரவீந்திரன் அவளுக்கு அருகிலே சென்று கட்டிலில் உட்கார்ந்தான்.

"கல்யாணி, ஏன் இப்படி அழுகிறாய் ? காலில் பலமாக அடிபட்டு விட்டதா ? கல்யாணி, கல்யாணி !"

கல்யாணி என்ற பெயரைப் பல முறை சொன்னான் ரவீந்திரன். அழுகை நிற்கவில்லை. பதில் வார்த்தையும் வரவில்லை. என்ன செய்வதென்று புரியாமல், நாகரத்தினத்தைக் கோபத்தோடு திரும்பிப் பார்த்தான் ரவி.

"என்னை ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள் அத்தான் ?" என்று கேட்டான் நாகரத்தினம். அந்தக் கேள்வியிலே தான் எத்தனை விஷம் !

"நாகரத்தினம் ! நீ ஏன் அந்த மாதிரி ஒரு பொய்க் கடிதம் எழுதினாய், கல்யாணிக்கு ஜன்னி அதிகமாக இருக்கிறது என்று ?"

நாகரத்தினம் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"அப்படி ஒரு கடிதம் எழுதினதால் என்ன ஆகி விட்டதாம் இப்பொழுது ? உங்களுக்கோ, உங்கள் கச்சேரிக்கோ இடையூறு ஒன்றும் நேர்ந்து விடவில்லையே !"

இப்படி நாகரத்தினம் சொன்னபோது "உங்கள்" என்ற வார்த்தையில் விஷமத்தனமாக ஒரு அழுத்தம் கொடுத்துச் சொன்னான். ரவீந்திரனுக்குக் கண் சிவந்தது.

"அத்தான், ஜன்னி என்று எழுதியனுப்பினுலாவது நீங்கள் வரமாட்டீர்களா என்று பார்த்தேன். ஆனல் நீங்களோ அதற்கும் சாந்தி, அதற்கு மேலும் சாந்தி, ஓம் சாந்தி சாந்தி சாந்தி என்று......"

ரவீந்திரனுக்கு ஆத்திரம் வந்தது. ஆனலும் ஒன்றும் பதில் பேசவில்லை. கண்ணீர் வடித்துக் கொண்டே யிருக்கும் கல்யாணியைப் பார்த்துச் சொல்வான்: "ஏனம்மா இப்படி அழுகிருய்? இவ்வளவு தளர்ச்சியாக இருக்கும்போது இந்த மாதிரி அழலாமா நீ? கல்யாணி!"

நாகரத்தினத்துக்கு இப்பொழுது பேச ஒருசந்தர்ப்பம் கிடைத்து விட்டது. நீண்ட நேரம் மனத்துக்குள்ளேயே வைத்து ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்த வாக்கியத்தை இப்பொழுது அவன் பேசினன்:

"ஏன் அழுகிருய், ஏன் அழுகிருய் என்றே கேட்கிறீர்களே அத்தான். ஏன் அழ மாட்டாள் என்று கேட்கிறேன். மாலையிட்ட புருஷன் இவ்வளவு அலட்சியமாக இருக்க ஆரம்பித்த பிறகு, ஒரு பெண்ணுக்கு என்ன உண்டு, வாழ்க்கையில்? ஜன்னியாகக் கிடக்கிருள் என்ருலுங்கூட அந்த அப்ஸரஸின் நடனத்தை விட்டு விட்டு வருவதற்கு உங்களுடைய கால் கூசுகிறது. என்ன செய்வாள், கல்யாணி, பாவம்!"

ரவீந்திரன் இதுவரை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்த சீற்றம், இப்பொழுது முழு வேகத்துடன் அப்படியே பாய்ந்து வந்தது.

"நாகரத்தினம்! உனக்குக் கடைசி முறையாக எச்சரிக்கை செய்கிறேன். என்னுடைய குடும்ப விஷயத்தில் நீ இனிமேல் தலையிடாதே. உன்னுடைய வேலை மானங்களை வேறு எங்காவது வைத்துக் கொள், சொல்லி விட்டேன்!" என்ருன் ரவீந்திரன், கோபாவேசமாக.

"எப்படி யிருக்கிறது பேச்சு! பேஷ்! கலைஞர் இல்லையா நீங்கள்! அப்படித்தான் இருக்கும் உங்களுடைய பேச்சு! என்னுடைய அக்காள் வாழ்க்கையை நீங்கள்

குட்டிச்சுவராக்கலாம். நான் அதைப்பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டும். அப்படித்தானே ?"

" தம்பீ !" என்று ஒரு அதட்டலுடன் நாக ரத்தினத்தைத் தடுக்க முயன்றாள் கல்யாணி. ஆனால் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை.

" அத்தான் ! நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன், இத்தனை நாளாக. இனிமேல்......"

" இனிமேல் என்ன செய்வாயாம்? நாகரத்தினம், உனக்கு மறுபடியும் சொல்கிறேன், என்னுடைய குடும்ப விஷயத்தில் நீ தலையிடாதே—ஆமாம்."

" இல்லை. இது என் அக்காளின் குடும்ப விஷயம். இதில் தலையிடுவதற்கு எனக்கில்லாத உரிமை வேறு யாருக்கு இருக்கிறது என்று கேட்கிறேன் !"

" இந்தா பார். அதிகமாக என்னோடு வார்த்தை கொடாதே. கல்யாணி உன் அக்காள் என்பது பத்து ஆண்டுகளுக்கு முன்புவரை—இப்பொழுது கல்யாணி என்பவள் ரவீந்திரனுடைய மனைவி. தெரிந்ததா? அவளிடம் அன்பு செலுத்தவோ அல்லது கோபப்படவோ நீ என்னுடைய அனுமதியைப் பெற்றாக வேண்டும். தெரியுமா ?"

" ஓகோ ! மனைவி என்ற நினைப்புக்கூட உங்களுக்கு இருக்கிறதா ?"

ரவீந்திரன் சரேலென்று கட்டிலை விட்டு எழுந்தான். கையும் காலும் பதற்றம் கொடுத்தன. கண் ' ஜிவு ஜிவு ' என்று இருந்தது.

" நாகரத்தினம் ! இது ஆஸ்பத்திரி. நம்முடைய வீடு இல்லை. தெரிந்ததா ? வார்த்தையை வளர்க்காதே. இந்த நிமிஷமே மரியாதையாகக் கிளம்பி விடு. இனிமேல் என் திசைப் பக்கம் திரும்பினால் பழி விழுந்து விடும். ஜாக்கிரதை !"

" அவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டதா, அத்தான்?" என்று கேட்டான் நாகரத்தினம்.

" அத்தானாவது பொத்தானாவது ! இனி ஒரு நிமிஷம் இந்த இடத்தில் நீ இருந்தாலும், கழுத்தைப் பிடித்து

வெளியே தள்ளி விடுவேன். என்ன நினைத்துக்கொண்டிருக்கிறாய், உன்னுடைய மனசில்?"

நாகரத்தினம் நாற்காலியை விட்டுக் கோபத்துடன் எழுந்தான். கல்யாணிக்கு அழுகை கட்டுப்பாட்டை மீறிக் கதறிக்கொண்டு வந்தது.

"அக்கா! நான் இனிமேல் ஒரு நிமிஷங்கூட இங்கே இருக்கமாட்டேன். உன் பாடு உன்னுடைய புருஷன் பாடு. இனி மேல் உன் காரியத்தில் தலையிடுவதற்கு நான் யார்? தந்தி கிடைத்து லால்குடியிலிருந்து உடனே ஓடோடியும் வந்ததற்குச் சரியான வெகுமதி கிடைத்து விட்டது. இனி நான் போகிறேன். அத்தான்! உங்களுக்கு ஒரு பெரிய நமஸ்காரம். ஆனால் ஒரே ஒரு வார்த்தை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். கல்யாணிக்கு விரோதமாக ஒரு காரியம் நடத்தி விடலாம் என்று மட்டும் எண்ணினீர்களோ, அந்த நிமிஷமே உங்களுடைய பரம விரோதி, ஜன்மப் பகைவன், இதோ இருக்கிறேன். ஜாக்கிரதை!"

இவ்வாறு சொல்லி விட்டுத் திரும்பிக்கூடப் பார்க்காமல் 'விறு விறு' என்று வராந்தாவிலிருந்து இறங்கி வெளியே நடந்தான் நாகரத்தினம்.

தம்பியின் வார்த்தைகளுக்குக் காரணமாக அமைந்த சகோதர வாஞ்சை ஒரு பக்கம், புருஷன் என்ற பக்தி ஒரு பக்கம், இந்த இரண்டு பாசக்கயிற்றிலும் சிக்கிக் கொண்டு ஊசலாடிற்று கல்யாணியின் உள்ளம். அந்த அபலையின் உணர்ச்சிகளுக்குக் கண்ணீர் என்ற ஆன்ம மொழியைத் தவிர வேறு வார்த்தை யில்லை! அழுதாள்! அழுதாள்! அந்த ஆஸ்பத்திரி அறையின் சுவர்களுங்கூட உருகிக் கரையும்படியாகக் கதறி அழுதாள் கல்யாணி!

*　　　　*　　　　*

இரண்டு அறைகளுக்கு அப்பால் ஜில்லா உதவி வைத்திய அதிகாரியின் அறை. இரவில் அவர் நோயாளிகளை யெல்லாம் சோதித்துப் பார்த்து விட்டுப் போகிற நேரம் அது. அப்பொழுதுதான் அவர் தம் அறைக்

குள்ளே நுழைந்திருப்பார். கல்யாணியின் அழுகைக் குரல் கேட்டது. இதற்குள் அதிகாரி வந்து விட்டார் என்பதைக் கவனித்த இரண்டு கம்பவுண்டர்களும், சேவகனும் அறைக்குள்ளே வந்து டாக்டருக்குப் பெரிய கும்பிடாகப் போட்டு நின்ருர்கள்.

"என்ன சத்தம் அது? பன்னிரண்டாம் அறையிலா?" என்று கேட்டார் டாக்டர்.

"ஆமாம். அந்த அம்மாளுடைய புருஷன் வந்திருக்கிருர்—"

"யார்? அந்த என்னவோ பெயர்—"

"ரவீந்திரன்" என்ருர் கம்பவுண்டர்.

"ஆமாம்! டாகூருடைய பெயர் அல்லவா! ஆனல் இவன் சுத்த உதவாக்கரையாக இருப்பான் போலிருக்கிறதே! மனைவி இங்கே விபத்திலே மாட்டிக் கொண்டிருக்கிருள். அவனுக்கு என்னவோ சங்கீதமாம் நாட்டியமாம்—!"

இவ்வாறு பேசிக்கொண்டே 'விர்' என்று போய்ப் பன்னிரண்டாம் நம்பர் அறையினுள் நுழைந்தார் டாக்டர். அதுவரை எங்கோ மறைந்து போயிருந்த நர்ஸ் அம்மாள், பதறிக் கொண்டே டாக்டரின் பின்னேடு ஓடி வந்தாள்.

"நீங்கள்தான் ரவீந்திரனு?" என்று கேட்டார் அறையினுள் நுழைந்து கொண்டே.

"ஆமாம், நமஸ்காரம். நான்தான் ரவீந்திரன். விசித்திரமான மனிதன் என்கிருர்களே, அந்த ஆசாமி நான்தான்! கல்யாணி என்னுடைய மனைவி!" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியை விட்டு எழுந்தான் ரவீந்திரன். இப்படி அவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட விதம் டாக்டருக்கு விநோதமாகவே இருந்தது.

"உட்காருங்கள் மிஸ்டர் ரவீந்திரன்" என்றுசொல்லி அவனைக் கட்டிலில் மனைவியின் அருகே உட்கார்த்தி விட்டு, டாக்டர் நாற்காலியில் உட்கார்ந்தவாறு ரவீந்திரனையே கூர்ந்து பார்த்தார். உண்மையில் அவர் எதிர்பார்த்து வந்த உருவம் வேறு. ரவீந்திரனுடைய

தோற்றம் அதற்கு முற்றிலும் மாருக இருந்தது. அவனுடைய முகத்தில் ஏதோ ஒன்று—வைத்திய சாஸ்திரத்தில் அதற்குப் பெயர் கிடையாது—அந்த 'ஏதோ ஒன்று' டாக்டரைக் கவர்ந்தது.

" டாக்டர், காலில் எலும்பு ஒன்றும் பிசகவில்லையே?" என்று கேட்டான் ரவீந்திரன். அந்தக் குரலில் உண்மையான கவலை தொனித்தது. இதை டாக்டர் கவனித்தார். சொன்னர் : " கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை, மிஸ்டர் ரவீந்திரன். ஒரு வாரம் காலை அசக்காமல் ஓய்வு கொடுத்து விட்டால் சரியாகிவிடும். ஆனல் அதைவிட முக்கியம், உங்கள் மனைவியின் மன அமைதிதான். அதைத் தான் அக்கறையோடு கவனிக்க வேண்டும்—"

" கல்யாணி! காதில் விழுந்ததா டாக்டர்சொன்னது? மன அமைதி வேண்டும் என்கிருர் டாக்டர். இப்படியெல்லாம் அழக்கூடாது என்கிருர்."

" மிஸ்டர் ரவீந்திரன், அந்த வார்த்தை உங்கள் மனைவிக்காக மட்டும் சொன்ன வார்த்தை இல்லை. உங்களுக்கும் சேர்த்துத்தான் !" என்று இடைமறித்தார் டாக்டர், சிரித்துக் கொண்டே.

ரவீந்திரனுக்கு முகமெல்லாம் சுருங்கியது. டாக்டர் இதைக் கவனித்தார்.

"மிஸ்டர் ரவீந்திரன், உங்கள் மனைவிக்கு இப்பொழுது ஒரு மாத்திரை கொடுக்கும்படி நர்ஸிடம் சொல்லுகிறேன். நன்ருகத் தூங்கி விடுவாள். அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனல் தினமும் இப்படி ஒரு மாத்திரை கொடுத்துக் கொண்டேயிருக்க முடியுமா ?" என்று கேட்டு விட்டு, நர்ஸிடம் ஒரு தூக்க மாத்திரை கொண்டு வரும்படி கட்டளை யிட்டார். உடனே கல்யாணியைப் பார்த்துச் சொல்லுவார் : " அம்மா, ஆஸ்பத்திரியில் இந்தமாதிரி அழுது கூச்சல் போடுவது உங்களுக்கும் கெடுதல், மற்ற நோயாளிகளுக்கும் கெடுதல். என்ன துக்கமானுலும் அதை மனதுக்குள் அடக்கி வைத்துக் கொள்வதுதான் நம்முடைய தமிழ் நாட்டுப் பெண்களின் நாகரிகம், அம்மா. உங்களைப் பார்த்தால் நல்ல குணவதியென்று தெரிவதால்

இதைச் சொன்னேன். கோபித்துக் கொள்ளாதீர்கள். மிஸ்டர் ரவீந்திரன்! நான் சொல்வது சரிதானே? அதாவது உங்களுக்குத் திருப்திதானே? எந்த விஷயத்துக்கும் உங்கள் மனைவி அழக்கூடாது என்கிறேன்!" என்று ஒரு வேடிக்கைக் குறும்போடு கண்களைச் சிமிட்டினார் டாக்டர். ரவீந்திரன் பதில் பேசவில்லை.

"சரி, உங்கள் மனைவி நிம்மதியாக உறங்கட்டும். அவளை நர்ஸ் கவனித்துக் கொள்வாள். நீங்கள் என்னோடு கொஞ்சம் வருகிறீர்களா? என்னுடைய அறைக்குப் போகலாம்."

டாக்டர் எழுந்தார். ரவீந்திரனும் எழுந்தான். வராந்தாவுக்கு வந்தார்கள்.

"உங்களோடு தனியாகச் சில விஷயங்கள் பேச வேண்டும். அதனால்தான் கூப்பிட்டேன்."

"பேஷாகப் பேசுவோம். ஆனால் ஒன்று. என்னுடைய சொந்த விஷயங்களில் பிறர் தலையிடுவதை நான் எப்பொழுதும் விரும்புவதில்லை. மற்றப்படி டாக்டர் என்ற முறையில் என் மனைவியின் உடல்நிலையைப் பற்றி நீங்கள் என்ன சொன்னாலும் கேட்கத் தயாராக இருக்கிறேன்."

"சரி, வாருங்கள் முதலில் என் அறைக்கு" என்று சொல்லிய வண்ணம், ரவீந்திரனின் தோள் மேல் கையைப் போட்டுக் கொண்டே, மிக்க பிரியத்தோடு அழைத்துச் சென்றார் டாக்டர். மெய்யாகவே, ரவீந்திரனுடைய முகத்தில் இருந்த அந்த 'ஏதோ ஒன்று' அவரைக் கவர்ந்திருந்தது!

சட்டென்று நினைவு வந்தவர் போல், "மறந்தே போய் விட்டேன். உங்கள் மனைவியோடு 'ஆக்ஸிடெண்டி'ல் சிக்கிய மற்ற இரண்டு பேரையும் இன்னும் பார்க்கவில்லையே!" என்றார்.

"மற்றவர்களா? அந்த விவரம் எனக்குத் தெரியாதே!" என்றான் ரவீந்திரன் மிக்க வியப்போடு.

டாக்டர் அப்படியே பதினைந்தாம் நம்பர் அறைக்குள்ளே நுழைந்தார். ரவீந்திரன் ஒன்றும் புரியாத

பார்வையோடு உள்ளே புகுந்தான். ஆனல் என்ன ஆச்சரியம்! அங்கே வாசலுக்கருகில், அப்புலிங்கம் உட்கார்ந்து கொண்டிருந்தான். ரவீந்திரனைக் கண்டதும், அவன் எழுந்து, "நமஸ்காரம்" என்று சொல்லிக் கொண்டே அருகில் வந்தான்.

ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவராய் முருகானந்தம் தமது கால்களை ஒரு ஸ்டூலில் நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

அவருடைய மனைவி கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். விபத்து அவர்கள் இருவரையும் அவ்வளவாகப் பாதிக்கவில்லை என்பது தெரிந்தது. இருவருக்கும் கைகூப்பி வணக்கம் செலுத்தினன் ரவீந்திரன்.

"இவர்தான் அப்பா ரவீந்திரன்" என்று அறிமுகப் படுத்தினன் அப்புலிங்கம்.

"என்ன இது? இவர்களையே உங்களுக்குத் தெரியாதா?" என்று ஒரே வியப்போடு கேட்டார் டாக்டர்.

"நானே மிஸ்டர் ரவீந்திரனைச் சந்திப்பது இதுதான் இரண்டாவது தடவை!" என்று சொல்லி டாக்டரின் வியப்பை இன்னும் அதிகப்படுத்தினன் அப்புலிங்கம்.

எல்லாரும் அந்த அறையில் உட்கார்ந்தார்கள். மிராசுதார் தாம் கமலத்தின் கல்யாணத்துக்குப் புறப்பட்டுச் சென்றதையும், பிறகு லால்குடியிலிருந்து திரும்பிய போது விபத்து நடந்த விவரத்தையும், ஆதியோடு அந்தமாகச் சொன்னர். டாக்டரும் ரவீந்திரனும் அதைக் கவனமாகக் கேட்டார்கள். முடிவில் ரவீந்திரன் சொன்னன்:

"மிராசுதார்வாள், உங்களுக்கு என்னுடைய நன்றியை எப்படிச் சொல்வது என்றே தெரியவில்லை. உண்மையில்—"

"நன்றியா எதற்காக? உங்களுடைய மனைவியை இப்படி ஒரு விபத்திலே சிக்கவைத்ததற்காகவா?" என்று பளிச்சென்று கேட்டார் முருகானந்தம்.

" அப்படியில்லை. நீங்கள் எல்லாம் இப்படி உதவி செய்து அவளை உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்திருக்கா விட்டால் எவ்வளவு பெரிய ஆபத்தாகப் போயிருக்கும் ! ஆனால் ஒன்றே ஒன்று—இத்தனை அவசர மாக நீங்கள் லால்குடிக்குத் தந்தி கொடுத்து அந்த அதிகப் பிரசங்கி நாகரத்தினத்தை இங்கு வரவழைத் திருக்க வேண்டியதில்லை. அது ஒன்றுதான் பிசகு !" என்று படபடப்போடு கூறினான் ரவீந்திரன்.

மிராசுதார் விஷயத்தைப் புரிந்துகொண்டு சிரித்தார். சொன்னார் :

" ரவீந்திரன், உங்களை நானே சந்திக்க வேண்டும் என்றுதான் யோசித்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது இப்படி ஒரு சந்தர்ப்பம் நம்மைக் கூட்டி வைத்திருக்கிறது!"

" எப்படியும் உங்களைச் சந்தித்ததில் எனக்கு மிகவும் ஆனந்தம் " என்றான் ரவீந்திரன்.

" சௌகரியமாக ஒரு நாள் நம்முடைய வீட்டுக்கு வாருங்கள். உங்களோடு நிறையப் பேச வேண்டிய திருக்கிறது " என்றார் மிராசுதார் முருகானந்தம்.

" தாராளமாக. ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. என் னுடைய அந்தரங்க விஷயங்களில் பிறர் அதிகமாகத் தலை யிடுவது எனக்குப் பிடிக்காது. இப்படிச் சொல்வதற்காக என்னை மன்னிக்க வேண்டும். மற்றப்படி உங்களை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. உங்களுடைய முகத்தில் பரம்பரையான பெருந்தன்மை இருக்கிறது. அதற்கு மரியாதை செய்கிறேன் !" என்றான் ரவீந்திரன்.

டாக்டர் இதைக் கேட்டுவிட்டுச் சிரித்தார். அவருக்கு ரவீந்திரனின் இதயம் இப்பொழுது நன்றாகப் புரிந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அப்புலிங்கம் தகப்பனாரிடம் சொன்னான் :

" அப்பா ! ரவீந்திரனை ஒரு நாள்த்தான் பார்த்தேன், கடைவீதியில். அன்றே அவருடைய குணம் எனக்குத் தெரிந்து விட்டது. விவரமாகப் பேசிக் கொள்வோம் !"

"மிஸ்டர் அப்புலிங்கம்! உங்கள் அப்பாவிடம் என்னை ரொம்ப அவமரியாதையாகப் பேசி விடாதீர்கள். மிராசுதார்களே பொதுவாக எதையும் சீக்கிரத்தில் நம்பி விடுவார்கள்" என்ருன் ரவி.

டாக்டர் சிரித்துக் கொண்டே நாற்காலியிலிருந்து எழுந்தார்.

"ரவீந்திரன், வாருங்கள் என்னுடைய அறைக்குப் போவோம்!"

ரவீந்திரனைக் கூட்டிக்கொண்டே வராந்தாவில் நடந்த டாக்டர், சேவகனை ஒரு டம்ளரில் குளிர்ந்த தண்ணீர் கொண்டு வரும்படி உத்தரவிட்டுக் கொண்டே, தமது அறையில் நுழைந்தார்.

"உட்காருங்கள் மிஸ்டர் ரவீந்திரன்" என்று எதிரேயிருந்த நாற்காலியைக் காட்டியவாறு, மின்சார விசிறியின் விசையைப் போட்டார் டாக்டர். இதற்குள் சேவகன் ஒரு கிளாஸ் டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து மேஜையின் மேல் வைத்தான்.

"மிஸ்டர் ரவீந்திரன், இதைச் சாப்பிடுங்கள். உங்களுக்காகத்தான் கொண்டுவரச் சொன்னேன். படபடப்பு கொஞ்சம் அடங்கும். வெறும் பச்சைத் தண்ணீர்தான். மருந்து இல்லை!"

"இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது என்று நீங்களே சொல்லும்போது நான் நம்ப வேண்டியதுதானே!" என்று சொல்லிக் கொண்டே டம்ளரைக் கையில் எடுத்தான் ரவீந்திரன்.

"பேஷ்! இப்பொழுதுதான் ஹாஸ்யம் வருகிறது உங்கள் பேச்சில். ரொம்ப சரி. உங்களுடைய இயற்கையான சுபாவம் இதுதான். எனக்குத் தெரியும் அது!" என்று டாக்டர் சொல்லிக் கொண்டே மேஜையின்மேல் விரல்களைத் தட்டித் தாளம் போட்டார்.

"டாக்டர் ஸார், என்னை நீங்கள் புகழ ஆரம்பிக்கிறீர்கள். பயமாக இருக்கிறதே!"

டாக்டர் சிரித்தவாறு ரவீந்திரனுடைய கண்களையே உற்றுப் பார்த்தார். அவனுடைய உடம்பை ஊடுருவி உள்ளத்தையே பார்ப்பது போல இருந்தது அது.

“என்ன பார்க்கிறீர்கள் என்னை? நான் யோக்கியனா அல்லது அயோக்கியனா என்று ஆராய்கிறீர்களா?” என்றான் ரவி.

“மிஸ்டர் ரவி, உங்களுடைய உள்ளம் ஒரு உயர்ந்த வீணையைப் போன்றது. அதை லாகவமாகத்தான் கையாள வேண்டும். அந்த......அந்த......அதற்குப் பெயர் என்ன? தந்தியை முறுக்குவதற்கு இருக்குமே ‘ஸ்க்ரூ’.........”

“பிருடை என்று இந்தக் காலத்தில் சொல்கிறார்கள். மாடகம் என்பது பழைய வார்த்தை அதற்கு!” என்றான் ரவீந்திரன்.

“ஓ! சரிதான். மாடகம். அந்தச் சொல் அழகாக இருக்கிறதே! மாடகம். பேஷ். உங்களுடைய உள்ளத்தின் மாடகத்தை ஜாக்கிரதையாக முறுக்கி சுருதி கூட்ட வேண்டும். முரட்டுத்தனமாகத் திருகிவிடக் கூடாது. சில உள்ளங்கள் என்னைப் போல இருக்கும்—தவுல் மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்களேன்! அவற்றைக் கம்பினால்தான் தட்ட வேண்டும். அடிக்க வேண்டும். வெறுங் கையை உபயோகிப்பதற்குக்கூட விரல்களில் குப்பி போட்டுக் கொள்ள வேண்டும்!—மன்னித்து விடுங்கள். உங்களிடம் வந்து சங்கீதப் பேச்சுப் பேசுகிறேனே!”

இவ்வாறு டாக்டர் ஒவ்வொரு வார்த்தையைச் சொல்லும்போதும் ரவீந்திரனுடைய முகத்தில் என்ன சாயல் ஏற்படுகிறது என்பதைக் கூர்ந்து கவனித்தார்.

“டாக்டர், எதற்காக இத்தனை பீடிகை போடுகிறீர்கள்?” என்று நேரான ஒரு கேள்வியைப் போட்டு மடக்கினான் ரவி.

“மிஸ்டர் ரவீந்திரன், ஆலாபனை செய்து விட்டுத் தானே, கீர்த்தனையை வாசிக்க வேண்டும். அது போல்—”

"டாக்டர் ஸார், நீங்கள் எந்த விஷயத்துக்கு வருகிறீர்கள் என்று எனக்குப் புரிகிறது. தயவுசெய்து என்னுடைய சொந்த விஷயங்களைப் பற்றி மட்டும் ஒன்றும்—"

"ரவி, என்னிடம் நீங்கள் இப்பொழுது சில விஷயங்கள் சொல்லித்தான் ஆகவேண்டும். உங்கள் மனைவியின் நன்மைக்காக—" என்றார் டாக்டர்.

"எங்கள் நன்மையில் இத்தனை தூரம் சிரத்தை எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய உறவோ நட்போ நமக்குள் இல்லை—"

டாக்டர் முகம் கடுகளவுகூட வித்தியாசப்படவில்லை. உள்ளங்களின் இயல்பு தெரிந்த புத்திசாலி அவர்! சிரித்துக் கொண்டே மேலே பேசினார்:

"மிஸ்டர் ரவீந்திரன், நான் ஒரு டாக்டர். இந்த விபத்துக்கு முன்னரும் பின்னரும் உங்களுடைய மனைவியின் நரம்புகளில் ஏற்பட்டிருக்கிற அதிர்ச்சியைச் சோதித்து அறியவே உங்களை இப்படியெல்லாம் கேட்கிறேன். உங்களைப் பார்ப்பதற்கு முன்பே இதைக் கேட்க வேண்டும் என்று நினைத்தேன். பார்த்த பிறகோ பல நாள் உங்களோடு பழகியது போன்ற ஒரு பிரமையே இந்தச் சில நிமிஷ நேரத்துக்குள் எனக்கு ஏற்பட்டு விட்டது. இந்த நிலைமையில் டாக்டராகவும், நண்பனாகவும் இருந்து கேட்கிறேன். என்னிடம் ஒன்றையும் ஒளிக்க வேண்டாம். நான் ஊகித்து வைத்திருப்பது சரிதானா என்று பார்க்கவே கேட்கிறேன். இந்தச் சந்திரிகாவுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு, எப்படி ஏற்பட்டது—"

ரவீந்திரன் மௌனமாக இருந்தான். டாக்டர் அவன் முகத்தையே கவனித்தார்.

"மிஸ்டர் ரவீ, என்னிடம் நீங்கள் தாராளமாகப் பேசலாம். கூச்சமே வேண்டியதில்லை. நீங்கள் சொல்கிற ரகசியம் என்னை விட்டு வெளியே போகாது."

ரவீந்திரன் ஒரு விநாடி கண்களை மூடினான். தன்னுடைய வாழ்க்கையின் கீதத்தையே தான்புல்லாங்குழலில்

வாசிப்பது போலவும், அந்த ஒலியின் பின்னணியிலே சந்திரிகாவின் முகம் நிற்பது போலவும் ஒரு ஓவியம் அவனுடைய மனக் கண்ணின் முன் தெரிந்தது. சொன்னான் :

" டாக்டர், எனக்கு என்னவோ உங்களுடைய பேச்சு படிப்படியாகப் பிடித்துப் போய் விட்டது. அதிலும் என் மனசை ஒரு வீணை என்று சொன்னீர்களே, அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இந்த வீணையின் நரம்புகள் சில சமயம் சின்னாபின்னமாகிப் போய் விடுகின்றன. நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்று எனக்குப் படுகிறது. அதனால் அந்தச் சோகக் கதையை உங்களிடம் சொல்கிறேன். இன்னொரு டமளர் தண்ணீர் கொண்டு வரச் சொல்லுங்கள் " என்றான் ரவீந்திரன். அவனுடைய குரல் கம்மிற்று.

டாக்டர் தாமே எழுந்து போய் அறையின் ஓரத்தில் இருந்த ஜாடியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து மேஜையின்மேல் வைத்தார். ரவீந்திரனுடைய மனக் கதவு திறந்தது !

## 8. முகமூடி மனிதன்

ஆஸ்பத்திரியை விட்டு வெளியேவந்த நாகரத்தினம் வெகு வேகமாக ஆத்திரத்தோடு நடந்தான். அவனுடைய நடையில் எத்தனை ஆத்திரம் இருந்ததோ, அதைவிடக் கொடிய ஆத்திரம் அவன் உள்ளத்தில் இருந்தது.

இனி அக்காளுடைய காரியத்தில் தலையிடுவதில்லை என்று அத்தனை கோபத்தோடு சொல்லி விட்டு வந்திருந்தாலுங்கூட, அவனுடைய மனம் அந்த உணர்ச்சிச் சிக்கலுக்குள்ளிருந்து விடுபடவில்லை. இன்னும் அதிகமாகத்தான் முறுக்கேறிக் கொண்டிருந்தது.

ரவீந்திரன் தன்னிடம் இத்தனை கண்டிப்போடும் சீற்றத்தோடும் நடந்து கொள்ளுவான் என்று நாகரத்தினம் எதிர்பார்க்கவில்லை. உண்மையில், தன்னுடைய

கையே ஓங்கும் என்றும், ரவீந்திரன் தனக்குப் பயந்து விடுவான் என்றும் அவன் எண்ணி யிருந்தான். ஆனால் நடந்தது அப்படி எண்ணியதற்கு முற்றிலும் மாறாக இருக்கவே, நாகரத்தினத்தின் மூளை இப்பொழுது பலமாக வேலை செய்தது.

'கல்யாணியின் விஷயத்தில் நாம் தலையிடக் கூடாது என்று அத்தான் சொன்னால், அதற்காக அப்படித் தலை யிடாமலே இருந்துவிடுவதா? உண்மையில் கல்யாணிக்குத் தன்னைத் தவிர வேறு யார் கதி? இப்படியே அவளை நிராதரவாக விட்டு விட்டால் இனிமேல் அவள் என்ன ஆவாள்?'

இவ்வாறு நினைக்கும்போது நாகரத்தினத்துக்கு மனம் வேதனைப்பட்டது.

சிறுவயதில் கல்யாணியை எத்தனையோ செல்வமாக வளர்த்தார் தகப்பனார். அவளுடைய மனம் நோகும்படி யாக ஒரு வார்த்தை பேச மாட்டார்! வீட்டில் எந்த முக்கியமான காரியத்தையும் கல்யாணிதான் முடிவு செய்வாள். அவள் கீறின கோட்டைக் கனகசுந்தரம் தாண்டியதே இல்லை. 'கல்யாணியே சொல்லியாச்சு! பிறகு என்ன யோசனை!' என்றுதான் கூறுவார். இதெல்லாம் நாகரத்தினத்துக்கு நினைவு வந்தது.

லால்குடியின் வளமான பூமியில் முளைத்த ஒரு செழிப்பான பயிர் நாகரத்தினம். ஏதோ ஒரு விஷச் சத்து எப்படியோ அந்தப் பயிருக்குள் புகுந்து கலந்து விட்டிருந்தது. என்றாலும், பொதுவாக எந்தக் கொடிய உள்ளத்திலும் ஒரு கோடியில் எப்படியோ ஒரு சிறு மலரைப் போல யாரிடமோ விசித்திரமான முறையில் அன்பு மலர்ந்துதான் இருக்கிறது அல்லவா? அப்படிப் பட்ட ஒரு வாஞ்சை நாகரத்தினத்துக்குக் கல்யாணியிடம் மலர்ந்திருந்தது. அது மறுக்கமுடியாத உண்மை. அந்த அன்பை—அந்த மெல்லிய மலரை—அவனால் தன்னுடைய உள்ளத்திலிருந்து பறித்து எறிந்துவிட முடியவில்லை.

நாகரத்தினம் விறுவிறு' என்று நடந்தான். நடக்க நடக்க அவனுடைய மூளையின் வேகமும் அதிகரித்தது!

‘இந்தக் குழப்பத்துக்கு எப்படியும் ஒரு முடிவு கண்டாக வேண்டும். இந்த நிமிஷமே, இந்த விநாடியே கண்டாக வேண்டும். தனக்கு எத்தனை செல்வாக்கு எத்தனை சாமர்த்தியம் உண்டோ அத்தனையும் இதில் பயன்பட வேண்டும்’—இவ்வாறு எண்ணினான் நாக ரத்தினம். ரயில்வே ஸ்டேஷனை நோக்கி நடக்க முனைந்தவன் அப்படியே மறு பக்கம் திரும்பி ஊருக்குள்ளே பாலக் கரைத் திருப்பத்திலே நடக்க ஆரம்பித்தான்.

‘உஸ்தாத் தான் இதற்குச் சரியான புகல்’—என்று அவனுடைய உள் மனம் சொல்லிக் கொண்டிருந்தது.

பாலக்கரையில் மீரான் உஸ்தாத் ஒரு பெரிய பயில்வான். அந்த வட்டாரத்தில் எந்தக் கலகம், எந்தச் சண்டை எத்தனை பெரிய மனிதருக்குள் நடந்தாலும் அவரை ஒரு வார்த்தை கேட்டுக் கொள்ளாமல் விஷயம் முருகாது. எப்படியாவது ஒரு வகையில் உஸ்தாதின் தொடர்பு அதில் இருந்துதான் ஆகவேண்டும்!

உஸ்தாத் மீரானுக்குப் பல சீடர்கள் உண்டு. சிலம்ப விளையாட்டு, கத்தி வீச்சு, சுருளிச் சுழல், குஸ்திச் சண்டை, கம்ப யேற்றம், முதலிய பலவகையான பயிற்சிகளும் அவருடைய ‘கோதா’வில் நடைபெறும். உடம்பை எடுத்து வெளியே வளைய வருகிற எந்தப் பயில்வானும், அவரிடம் ஒரு நாளாவது சீடன் என்று ‘சலாம்’ வாங்கித் தான் இருப்பான்!

மீரான் உஸ்தாத் வாக்கு நாணயம் உள்ளவர். எந்தக் காரியத்தையும் நன்றாக யோசித்தே முடிவுக்கு வரக் கூடியவர். ஒருதரம் ஒரு முடிவுக்கு வந்து விட்டால், பிறகு என்ன எதிர்ப்பு வந்தாலும், அசைய மாட்டார். இதனால் சீடர்களுக்கு அவரிடம் அபாரமான பக்தி. அந்த ஊர்ப் பெரிய மனிதர்களுக்குமே அவரிடம் ஒரு பிரியம் உண்டு. காரணம், கூடியவரை நியாய விரோத மான காரியத்தை அவர் செய்ய மாட்டார், ஆலோசனை உள்ளவர் என்று. ஆனால் ஒன்று, தனக்கு வேண்டியவன் ஒருவனுக்கு ஒரு கெடுதல் நேர்ந்து விட்டது என்றால் வேறு எதையுமே கவனிக்க மாட்டார் அவர். உயிரையே

கொடுக்க நேரிட்டாலும் அஞ்சாது முன்னின்று செய்கிற தீரர்.

பத்து ஆண்டுகளுக்கு முன்பு, நாகரத்தினம் சம்பிரதாயத்துக்கு ஒப்பத் திருச்சியிலே "படி"த்துக் கொண்டிருந்த காலத்தில், உஸ்தாத் மீரானிடம் சிலம்பம் பயின்றதுண்டு. லால்குடியில் ஒரு பெரிய வீட்டுப் பிள்ளை என்கிற நினைவில், உஸ்தாதும் அவனிடம் மிகவும் பிரியமாக நடந்து வந்தார். அவனுடைய மிடுக்கான சிலம்ப ஆட்டம் இந்தப் பிரியத்தை அதிகப்படுத்திற்று. ஆனால் கலாசாலையில் மேல் வகுப்பில் சேர்ந்த பின்னர் நாகரத்தினம் படிப்பில் அக்கறை செலுத்தாமல், 'குஷாலா'க நடக்கத் தொடங்கியதும் அவனைக் கண்டிக்க ஆரம்பித்தார் உஸ்தாத். 'சிலம்பம் குஸ்தி என்று எத்தனை படித்தாலும், எத்தனை கெட்டிக்காரப் பயில்வானாக விளங்கினாலும், நாகரத்தினத்தைப் போன்ற ஒரு பெரிய வீட்டுப் பிள்ளைக்குப் பள்ளிக்கூடப் படிப்பிலேதான் அதிகமாகக் கவனம் இருக்க வேண்டும்' என்பது உஸ்தாதின் முடிவு. இந்த முடிவையே அவர் அதிகமாக வற்புறுத்த வற்புறுத்த, நாகரத்தினம் சிலம்பப் பயிற்சியையும் ஒரு மாதிரியாக அசட்டை செய்ய ஆரம்பித்தான். பிறகு அவன் பம்பாய் சேட்டிடம் உத்தியோகத்துக்குப் போன பின், நாகரத்தினத்துக்கும் உஸ்தாதுக்கும் நெருங்கிய தொடர்பு நின்று போய் விட்டது. ஆனாலும் எப்பொழுதாவது அவனை எங்கேயாவது சந்திக்க நேர்ந்தால், அன்போடு விசாரித்து விட்டுத்தான் மேலே நடப்பார் உஸ்தாத். நாகரத்தினத்துக்குச் சிலம்ப விளையாட்டில் இருந்த அந்த மிடுக்கு, உஸ்தாதை வெகு தூரம் கவர்ந்திருந்தது என்பது முற்றிலும் உண்மை.

இந்த நிலைமையிலேதான் இப்பொழுது அவருடைய வீட்டை நோக்கி நடந்தான் நாகரத்தினம்.

இரவு பன்னிரண்டு மணி யிருக்கும், நாகரத்தினம் உஸ்தாதின் வீட்டுக் கதவைத் தட்டியபோது. இரண்டு தடவை தட்டுவதற்குள் ஒரு சீடன் வேகமாக ஓடி வந்து கதவைத் திறந்தான்.

உள்ளே பெரிய தோட்டம். தோட்டம் என்றால் மரங்கள் அடர்ந்து நின்ற சோலை இல்லை. ஓரத்தில் வரிசையாகத் தென்னை மரங்கள். இரண்டொரு மருத மரங்கள். தோட்டத்தின் மத்தியில் மணல் விரித்திருந்த மைதானம். அதில் அங்கங்கே பயிற்சிக்கான கோதாக்கள்.

அது பண்டிகைச் சமயம் ஆனதால், சுரீர் என்ற இரைச்சலோடு எரியும் 'பெட்ரோமாக்ஸ்' வெளிச்சத்தில் சீடர்களின் பயிற்சி அந்தப் பன்னிரண்டு மணி வேளையிலும் கோதாவில் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. உஸ்தாத் கோதா மணலிலே துண்டை விரித்து உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"யாரது? நம்ப நாகரத்தினமா இந்த நேரத்தில்?" என்று கேட்டுக் கொண்டே மிக்க பிரியத்தோடு கோதாவை விட்டு வெளியே வந்தார் உஸ்தாத். மிகவும் விநயத்தோடு தன்னுடைய இரண்டு கைகளையும் நெற்றியில் கொண்டு தூக்கி, அவருக்கு 'சலாம்' செய்து, அந்த வளையாத உடம்பை வளைத்தான் நாகரத்தினம்! உஸ்தாத் புன் முறுவலோடு அவனை ஆலிங்கனம் செய்து கொண்டே கோதாவை விட்டுத் தள்ளி வந்தார்.

"உஸ்தாத், உங்களோடு ரகசியமாக ஒரு அவசர விஷயம் பேசவேண்டும்" என்றான் நாகரத்தினம்.

"தம்பிகளா! ஆட்டம் நடக்கட்டும். நான் இதோ வந்து விடுகிறேன்" என்று சீடர்களிடம் சொல்லிவிட்டு நாகரத்தினத்தைக் கூட்டிக் கொண்டு தம்முடைய வீட்டு மாடிக்கு வந்து பாயை உதறி விரித்தார் உஸ்தாத்.

"உட்காரு தம்பி நாகரத்தினம்!" என்றார் மீரான் அன்போடு.

அவர் உட்கார்ந்த பிறகு, அவருக்கு எதிரில் நாக ரத்தினம் பவ்யமாக உட்கார்ந்து கொண்டான்.

"சரி, சங்கதியைச் சொல்லு சீக்கிரம். கோதாவிலே பிள்ளைகள் காத்திருக்குது!" என்றார் உஸ்தாத்.

நாகரத்தினம் காதும் காதும் வைத்தாற்போல் உஸ்தாத் மீரானிடம் ரகசியம் பேச ஆரம்பித்தான்.

தேவர் மன்றத்திலிருந்து அத்தனை குழப்பத்தோடு காரிலே புறப்பட்டுத் தன்னைக் கொண்டு வீட்டில் விட்டு விட்டு, அத்தனை வேகமாக ரவீந்திரன் ஆஸ்பத்திரிக்குச் சென்றது சந்திரிகாவைச் சஞ்சலப் படுத்தியது. 'நாட்டிய மணி' என்று பட்டம் சூட்டிக் கொண்ட நேரம் என்ன நேரமோ தெரியவில்லையே!—என்று எண்ணி வருந்தினாள் சந்திரிகா.

கடந்த சில நாட்களாகவே அவளுடைய உள்ளத்தில் நிம்மதி கெட்டிருந்தது. அரங்கேற்றம் நடந்த அன்றிலிருந்து இந்தக் கலக்கம் அதிகரித்தது. இப்பொழுது இப்படி ஒரு சம்பவமும் சேர்ந்து கொண்டு அவளுடைய இதயத்தை வாட்டி எடுத்தது.

இந்த உலகில் சந்திரிகாவின் மனத்தைச் சரியாகப் புரிந்து கொண்ட ஒரே மனிதன் ரவீந்திரன்தான். அதே போல் அவனுடைய மனத்தைப் பூரணமாகப் புரிந்து கொண்ட ஒரே பெண் சந்திரிகாதான். இப்பொழுது அந்த இரண்டு மனங்களுமே, பாவம், ஒரு நிலையில் இல்லை!

அமாவாசை இருட்டு 'கருங்கும்' என்று இருந்தது. இரவு வெகு நேரம் ஆகி விட்டதால் தெருவில் ஜன நடமாட்டம் இல்லை. வீட்டின் கதவை உள்ளே தாளிட்டு விட்டு, மாடி அறையிலே மின்சார விளக்கைப் போட்டபடி வெகு நேரம்வரை நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்தாள் சந்திரிகா. ரவீந்திரன் தன்னோடு பேசிக் கொண்டிருக்கும் போது எத்தனை வேகமாகப் பொழுது ஓடி விடும்! இப்பொழுதோ பொழுது நகருவதாகவே தோன்றவில்லையே! சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்தாள். மணி பன்னிரண்டரை. பெரிய முள் ஆர அமர யோசித்து நகர்ந்து கொண்டிருந்தது. சின்ன முள்ளோ நகர மாட்டேன் என்று ஒரேயடியாகச் சாதித்துக் கொண்டே இருந்தது!

'அவர் இன்னும் திரும்பி வரக் காணோமே. போன இடத்தில் என்ன நேர்ந்ததோ தெரியவில்லையே!' என்று கவலைப்பட்டாள் சந்திரிகா.

'நாகரத்தினம் பொய்க் கடிதம் எழுதியிருப்பதாகச் சொன்னாரே. ஒருவேளை அப்படி யில்லாமல் உண்மையி லேயே ஏதாவது இசைகேடாக நேர்ந்து விட்டிருக்குமோ? நாகரத்தினம் எழுதியிருந்தபடி மெய்யாகவே கல்யாணி அம்மாளுக்கு ஜன்னிதானோ? அப்படியானால் வாழ்க் கையில் இதுவரை தான் அவளிடம் சொல்ல வேண்டும், சொல்ல வேண்டும் என்று இதயத்துக்குள்ளேயே வைத்து வைத்துக் கலங்கிக் கொண்டிருக்கும் அந்த முக்கியமான செய்தியை இனிமேல் அவளிடம் எப்படிச் சொல்வது?'

இப்படி நினைத்ததும் சந்திரிகாவுக்குக் கண் கலங்கியது. 'இராது. அப்படி ஏதும் நேர்ந்திருக்காது. ஆனால் இதுவரை ஒரு தகவலும் வரவில்லையே! அதுவும் நல்லதுக்குத்தான். தகவல் வராதவரை க்ஷேமம்'— இப்படி ஒரு நினைப்பு நினைத்துக் கொண்டாள் சந்திரிகா.

மணி ஒன்று அடித்தது. ஒன்றரை அடித்தது. இரண்டும் அடித்து விட்டது. கடிகாரத்தின் முள்— பெரிது, சிறிது இரண்டுமே—நகர்ந்து கொண்டுதான் இருந்தன! பொழுது நிற்காமல் நடந்து கொண்டுதான் இருந்தது. ஆனால் ஆஸ்பத்திரிக்குச் சென்ற ரவீந்திரனைத் தான் காணோம்!

எங்கோ வெகு தொலைவில் ரயில் கூப்பிடும் ஓசை கேட்டது. திருச்சி ஜங்ஷன், பாலக்கரை, கோட்டை, டவுன் என்று எத்தனை ஸ்டேஷன்கள் வீட்டைச் சுற்றி அருகருகே இருக்கின்றன. ஏதாவது ஒன்றில்லா விட்டால் இன்னொன்றில் நின்று ரயில் ஊதிக் கொண்டுதான் இருந்தது. அந்த ஓசையைத் தவிர எங்கோ தெரு நாய்கள் இடையிடையே குரைக்கும் ஓசையும் கேட்டது. மற்றப்படி அந்த அமாவாசை இரவில் வேறு எந்த சப்தமும் கேட்கவில்லை.

மின்சார விளக்கின் ஸ்விட்சை அணைத்து விட்டுக் கட்டிலிலே வந்து கவலையோடு படுத்தாள் சந்திரிகா.

'நாகரத்தினம் ரொம்பப் பொல்லாதவன் ஆயிற்றே? ஆஸ்பத்திரிக்குப் போன இடத்தில் அவனோடு ஏதாவது

சச்சரவு வந்து விட்டதோ? ஆஸ்பத்திரிக்குப் போகும் போதே அவனிடம் ஒரே ஆவேசத்தோடு அல்லவா போயிருக்கிருர்! ஐயோ, இவருக்குக் கோபம் பொங்கி வந்தது என்ருல் யாராலும் அதைத் தடுத்து நிறுத்த முடியாதே!'

இப்படி எண்ணியதும் சந்திரிகாவுக்குக் கண்ணீர் கொட்டியது.

'கோபப்படுவார். ஆனுல் அவசியம் இல்லாமல், தகுந்த காரணம் இல்லாமல் கோபப்படுகிறவர் இல்லையே. பொறுமையை இழந்தாலும் அறிவை இழக்க மாட்டாரே' என்று ஒரு நினைவு. அதில் சற்று ஆறுதல் உண்டாயிற்று சந்திரிகாவுக்கு. அடுத்த கணம்,

"சிறுமை கண்டு பொங்குவாய்"

என்ற பாரதியாரின் பாடல் அவளுக்கு நினைவு வந்தது. மனிதர்களின் சிறுமையைக் கண்டால் பொங்கவே செய்வார் அவர். சிறுமையைக் கண்டுதான் பொங்குவார். பெருமைக்குத் தலை வணங்குவார். அவருடைய சாந்தம் யாருக்கு வரும்? ஆனுல் சிறுமை நிறைந்தவன்தானே இந்த நாகரத்தினம்!

"தெய்வமே! அவருக்கு ஒரு கெடுதலும் வரக்கூடாது. குழந்தை மாதிரி அவருடைய மனம். அந்த மனத்துக்குச் சிறு கெடுதலைக் கூடத் தாங்கும் சக்தி கிடையாது. சுக்கு நூருகச் சிதறி விடும் அவருடைய உள்ளம். பாடாகப் படுவாரே, துடியாகத் துடிப்பாரே அவர்! ஐயோ! என்ன செய்வது இதற்கு? என்னுல் எத்தனை குழப்பம் எல்லாம் நேரிடுகிறது."

சந்திரிகா விம்மி அழுதாள். தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு ஒரு குழந்தையைப் போல் தேம்பினுள். மறுகணம் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு கைகளைக் கூப்பிய வண்ணம், "தெய்வமே! தாயுமானவனே, அவருக்கு ஒரு தீங்கும் நேரக் கூடாது. அப்படி நேர்ந்தால், அந்த விநாடியே, என்னுடைய உயிரைக் கொண்டு போய் விடு. அவருக்கு ஒரு கஷ்டம்

நேர்ந்து அதைப் பார்க்கும்படி என்னை இந்த உலகத்தில் வைத்திருக்காதே!'' என்று பிரார்த்தனை செய்தாள் சந்திரிகா. அப்படியே துவண்டு போய் மறுபடியும் படுக்கையிலே விழுந்தாள். துடித்தாள். கண்ணீர் விட்டாள்!

தெரு வீதியில் நாய்கள் குரைக்கும் சப்தம் பலமாகக் கேட்டது.

'நாய் குரைக்கிறதே. ஒருவேளை அவர்தான் வந்து விட்டாரோ? நாய்களுக்கு என்ன தெரியும்? நல்லவர்கள் தெருவீதியில் போகும்போதுகூடக் குரைக்கத்தான் செய்கின்றன—நாகரத்தினத்தைப் போல்!'

இப்படி யெண்ணியதும் துக்கத்தை மீறி ஒரு புன் முறுவல் வந்தது. படுக்கையை விட்டு எழுந்து வந்து ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்தாள். யாரையும் காணோம்!

மனம் உடைந்து போய்ச் சந்திரிகா மீண்டும் படுக்கையில் வந்து படுத்தாள். நாய் மறுபடியும் குரைத்தது. இப்பொழுது அந்தக் குரைப்பின் ஓசை முன்னைவிட அருகிலே கேட்டது.

சந்திரிகாவுக்கு இப்பொழுது பயம் உண்டாயிற்று. அந்த வீட்டில் இதற்கு முன்பு அவள் இப்படித் தனியாக இருந்ததே இல்லை. நாயின் குரைப்பு அதிகரிக்கும் வரை, தான் தனியாக இருப்பதான நினைப்பே அவளுக்கு ஏற்பட வில்லை. அவ்வளவு தூரம், அவளுடைய உள்ளத்தில் வேறு எந்த நினைப்புக்கும் இடம் இல்லாதபடி, சஞ்சலம் ஆட்கொண்டிருந்தது. ஆனல் இப்பொழுது நாய்களின் குரைப்பு அதிகரித்ததும் பயம் மெதுவாக மொட்டுவிட ஆரம்பித்தது.

'தாயுமானவர் தெருவில் இண்டும் இடைஞ்சலு மான ஒரு வீட்டில் எங்கோ ஒரு மூலையில் கண்ணற்ற மாடியிலே தன்னந் தனியாக இருக்கிறேமே!' என்று ஒரு விநாடி எண்ணிப் பார்த்தாள். உடம்பெல்லாம் வியர்த்தது.

அளவு மீறிய சஞ்சலத்தின் போதெல்லாம் ரவீந்திரன் தன்னை மறந்து சொல்லிக் கொள்ளும் திருமூலர் திருமந்திரப் பாடல் சந்திரிகாவுக்கு நினைவு வந்தது. மனத்துக்குள்ளே அந்த மந்திரத்தைச் சொல்லிக் கொண்டாள்.

"மந்திரம் ஆவதும் மாமருந்து ஆவதும்
தந்திரம் ஆவதும் தானங்கள் ஆவதும்
சுந்தரம் ஆவதும் தூய்நெறி ஆவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே!"

திரும்பத் திரும்ப அந்தப் பாடலையே சொல்லித் தன் மனத்தை அந்தப் பாடலிலேயே செலுத்துவதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை, சந்திரிகாவுக்கு. இடையில் ஒரு விநாடி உதடு அதைச் சொல்லாமல் இருந்து விட்டாலும், உடனே 'பகீர்' என்று ஒரு பயம்!

'எந்தை பிரான்தன் இணையடி தானே' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, கடும் சோதனையா? இதென்ன? மாடி ஓட்டில் ஒரு கல் விழுந்து உருண்டோடுகிறதே! சந்திரிகாவுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

'யாரோ வெளியே நாயைத் துரத்துவதற்காக எறிந்த கல்லாக இருக்குமோ?' என்று ஒரு கணம் நினைத்தாள். அப்படியானால், வெளியே எறிந்த கல் இங்கு வந்து விழ வேண்டும் என்றால், ஓசை இன்னும் பெரிதாக அல்லவா இருக்க வேண்டும் என்று எண்ணுவதற்குள், இன்னொரு சிறு கல் ஓட்டிலே உருளுவது கேட்டது. அதைத் தொடர்ந்து ஏதோ 'சர சர' என்று சத்தம் வந்தது.

இதயம் 'திக்குத் திக்கு' என்று அடித்தது. முகத்தைத் தலையணையில் நன்றாகப் புதைத்துக் கொண்டு படபட என்று அடித்துக்கொள்கிற நெஞ்சத்தைக் கைத்தாங்கலாகக் குப்புற வைத்துச் சுருட்டி மடக்கிப் படுத்தவாறே காதைமட்டும் கூர்மையாக வைத்துக் கொண்டு கேட்டாள். மறு விநாடி சிறு சிறு கற்களாக நாலைந்து, ஓட்டிலே

உருண்டு, மாடியை ஒட்டிய திறந்த 'தட்டொட்டி'யில் விழுந்தன. நிச்சயம் யாரோ ஓட்டின்மேல் நடக்கிறார்கள்!

கையும் காலும் பதறியவளாக, என்ன செய்வதென்று தெரியாமல் திகை முட்டுவதற்குள், யாரோ மொட்டை மாடியிலே குதித்த ஓசை கேட்டது.

அறைக் கதவு நன்றாகத் தாளிடப்பட்டுத்தான் இருந்தது. அந்த நினைவில், சந்திரிகா கண்களைத் திறந்து பார்த்தாள். ஒரே இருட்டாக இருந்தது. ஜன்னலுக்கு வெளியே இருள். அறையினுள்ளே இருள். உள்ளத்திலும் இருள்தான்.

கண்ணை மூடி விழிப்பதற்குள் ஜன்னல் வழியாக டார்ச் விளக்கின் வெளிச்சம் அறைக்குள்ளே பாய்ந்தது.

உடம்பெல்லாம் நடுங்கிற்று. என்ன செய்கிறோம், என்ன செய்ய வேண்டும் என்றெல்லாம் யோசிப்பதற்கு ஓடாத சமயம் அது. படுக்கையிலிருந்து எழுந்து, உள்ளுணர்வின் போக்கிலே அப்படியே நடந்து போய், மின்சார விளக்கின் ஸ்விட்சைப் போட்டாள் சந்திரிகா. மின்சார வெளிச்சம் ஜன்னல் வழியாகப் பாய்ந்து அறைக்கு வெளியே இருந்த மொட்டை மாடியிலே விழுந்தது. என்ன ஆச்சரியம்! அந்த வெளிச்சத்தில் யாரோ முகமூடி யணிந்த ஒரு கறுப்பான உருவம், அடுத்த மாடியின் விளிம்புச் சுவரிலிருந்து இந்த மாடிக்குள்ளே கையில் பிடித்த டார்ச்சுடன் குதித்தது தெரிந்தது. மின்சார வெளிச்சத்தில் ஒரு வினாடி உற்றுப் பார்த்தாள். அந்த உருவம் தன்னுடைய மற்றொரு கையில் பிடித்திருந்தது என்ன? கட்டாரியா அல்லது கைத் துப்பாக்கியா?

சந்திரிகாவுக்கு இரண்டு கண்களும் இருண்டன. தலை 'கிர்' என்று சுற்றியது.

அதே சமயம் இன்னொரு மனித உருவம் பதுங்கிப் பதுங்கிச் சென்று எதிர் வரிசையில் இருந்த ராமநாதன் வீட்டுத் திண்ணையில் ஏறி ஒளிந்து கொண்டது!

# 9. ரவீந்திரன் திகைத்தான்!

" எருக்கிலைக்குப் பாத்தி கட்டி
எத்தனை பூப் பூத்தாலும்
மருக்கொழுந்தின் வாசமுண்டோ
மலைப் பழநி வேலவனே!"

என்ற நாட்டுப் பாடலை முன்னொருநாள் திருச்சிராப்பள்ளி ரேடியோவில் ஒலி பரப்பினார்கள். பழநி வட்டாரத்தில் சேகரித்த நாட்டுப் பாடல்களில் ஒன்று என்று அதை அறிமுகப் படுத்தினார் ரேடியோ நிலையத்தின் அறிவிப்பாளர்.

உஸ்தாத் மீரான் அன்று திருச்சி இப்ரஹீம் பார்க்கில் உட்கார்ந்து 'கிராம நிகழ்ச்சிகள்' ரேடியோவில் வருவதைக் கேட்டுக் கொண்டிருந்த போதுதான், அந்த நாட்டுப் பாடலையும் முதன் முதலாகக் கேட்டார்.

இப்பொழுது நாகரத்தினம் வந்து காதோடு காதாக ரகசியங்கள் பேசியபோது, உஸ்தாதுக்கு அந்த அருமையான நாட்டுப் பாடல்தான் நினைவில் வந்து நின்றது.

'இந்த நாகரத்தினத்துக்கு எத்தனை பாடுபட்டு எவ்வளவு பணம் செலவழித்துப் படிக்க வைத்தார் கனகசுந்தரம்! ஆனாலும் அந்த இயற்கைக் குணம் மாறவேயில்லையே!' என்று பட்டது உஸ்தாத் மீரானுக்கு.

" தம்பி! நான் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையாகக் கேள். உன்னுடைய அத்தானின் வாழ்க்கையில் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. உண்மைதான். ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் இந்தக் குழப்பத்துக்கு மெய்யான காரணம் யார்? இந்தக் குழப்பத்தில் உன்னுடைய அத்தானின் பங்கு எத்தனை? உன் அக்காளின் பங்கு எத்தனை! அந்தச் சந்திரிகாவின் பங்கு எத்தனை?—இதையெல்லாம் நன்றாக யோசித்துப் பார்த்தல்லவா ஒரு முடிவுக்கு வரவேண்டும். பெண் பாவம் பொல்லாது தம்பி. அந்தச் சந்திரிகாவை இன்றிரவே அந்த வீட்டை விட்டு

வெளியே கொண்டு போய் விடுவது ஒரு பெரிய காரிய மில்லை. ஆனால் இந்த மீரான் ஒரு காரியத்தை யோசனை இல்லாமல் செய்தான் என்று கெட்ட பெயர் வந்து விடக் கூடாது. நமக்கு உன்னை யெல்லாம் போல் ரூபாய் நாணயம் கிடையாது. நம்முடைய நாணயம் எல்லாம் வாக்கு நாணயந்தான். ரூபாய் நாணயம் போனால், சம்பாதித்துக் கொள்ளலாம். வாக்கு நாணயம் போய் விட்டால் பிறகு சாகிறவரை நான் செல்லாத காசுதான்!" என்றார் உஸ்தாத் மீரான்.

நாகரத்தினத்துக்கு இந்த வார்த்தைகள் ஏற்கவில்லை. மௌனமாக இருந்தான். உஸ்தாத் மீரான் புத்திசாலி. நாகரத்தினத்தின் முகக் குறிப்பைக் கவனித்து விட்டுச் சொல்லுவார்:

"தம்பி! நீ எனக்கு ரொம்பவும் வேண்டியவன்தான். உனக்காக எந்த உதவி செய்யவும் நான் தயார்தான். ஆனால் நியாயம் அநியாயத்தை அலசிப் பார்த்து விட்டு, செய்கிற உதவியை நன்றாகச் செய்துவிடலாமே என்று தான் யோசிக்கிறேன். எதற்கும் நீ இரண்டு நாள் கழித்து வந்து என்னைப் பார், அதற்குள் ரவீந்திரனுடைய வண்ட வாளங்களை எல்லாம் நன்றாக விசாரித்து வைக்கிறேன்!"

இவ்வாறு சொல்லி விட்டுப் பாயை விட்டு எழுந்தார் உஸ்தாத். நாகரத்தினம் ஒன்றும் சொல்லவில்லை. புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு ஒரு 'சலாம்' போட்டு விட்டு வெளியே வந்தான். மூளை தீவிரமான யோசனையிலேயே இருந்தது. தோட்டத்தின் வழியாக வாசலை நோக்கி நடந்து செல்லும்போதே, கோதாவில் நின்ற குப்புசாமியைப் பார்த்துக் கண் இமைகளை அப்படி ஒரு அடி அடித்து ஏதோ ஜாடை செய்தான். வெளியே வந்து, உஸ்தாதின் வீட்டுக்குச் சற்றுத் தொலைவிலே இருந்த ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டான்.

பத்து நிமிஷம் ஆயிற்று. சொல்லி வைத்தாற்போல, கோதாவில் நின்ற குப்புசாமி வெளியே பதுங்கிக் கொண்டே வந்தான். சிலம்ப வரிசையில் 'பாவலா' போடுவது என்று சொல்கிறார்களே, அப்படி நடந்து வந்தான் அவன், நாகரத்தினத்தை நோக்கி!

குப்புசாமிக்கு உருவிவிட்ட சாட்டை மாதிரி ஒடிச லான உடம்பு. கிராப்புத் தலைதான். ஆனாலும் தலைமயிர் சுருள் சுருளாக அடர்ந்து பங்கொண்டையைப் போல் பிடரியிலே வந்து கிடந்தது. கிருதாவோ காதுகளையும் தாண்டிக் கன்னங்கள் வரை இறங்கிக் 'கன்னங் கரேல்' என்று பார்க்கவே பயங்கரமாக நின்றது!

"என்ன நாகரத்தினங்க?" என்று ஒரு 'ங்க' போட்டுப் பேச ஆரம்பித்தான் குப்புசாமி. மரியாதையாகப் பேசுவதற்காக அவன் வார்த்தைகளுக்கு மத்தியிலே இப்படி ஒரு பிரயோகத்தைச் சரமாரியாகக் கையாளுவது வழக்கம்!

"குப்புசாமி! நீ எனக்கு அந்தக் காலத்திலே செய்த உதவியெல்லாம் பெரிசில்லை. இப்போதுதான் சரியான சமயம் வந்திருக்குது!" என்றான் நாகரத்தினம்.

குப்புசாமி திகைத்தான். கேட்டான்: "என்னாங்க! அந்த லிலியம்மாவுக்கு லெட்டர் கொண்டு கொடுத்தேனுங்களே, அதுங்களை விடவுங்களா?" என்று 'ங்காக்'களை இன்னும் கொஞ்சம் தாராளமாகவே போட்டான்!

அத்தனை அவசரத்திலும் 'லிலி' என்ற பெயரைக் கேட்டதும் நாகரத்தினம் ஒரு கணம் கிறங்கி நின்றான்!

அந்தக் காலத்தில் நாகரத்தினம் திருச்சி அர்ச் சூசையப்பர் கல்லூரியில் மேல்படிப்புப் படிக்க ஆரம்பித்த போது, அவனுடைய தகப்பனார் 'பையன் காலேஜில் படிக்கிறான்' என்ற பெருமையில் தானிய மூட்டைகளையெல்லாம் விற்று நூறு ரூபாய் நோட்டுக்களாகவே அனுப்பி வந்தார். நாகரத்தினமும் 'உயர்ந்த படிப்பு' என்ற முறையில் செலவையும் உயர்த்தியே வந்தான். அப்போதுதான், திருச்சி கன்டோன்மென்ட்டில் டெலிபோன் எக்ஸேஞ்சில் வேலை பார்த்து வந்த 'லிலி ஓட் அவுஸ்' என்ற ஓர் ஆங்கிலோ இந்தியக் கன்னியின் சந்திப்பு அவனுக்கு ஏற்பட்டது! மாலை வேளைகளில் ஆபீஸில் வேலையில்லாத நாட்களில், காற்று வாங்குவதற்காகக் காஜா மலைப் பக்கமாகப் போய் வரும்படி

மகளை அனுப்புவார், அவளுடைய தந்தை ஓட் அவுஸ். நேரம் முழுதும் ஒரேயடியாக அறையிலேயே உட்கார்ந்து, காதுக் குழாயை மாட்டிக் கொண்டே சதா 'ஹலோ ஹலோ' என்ற இரைச்சல்களுக்கு மத்தியில், புத்தியைக் குழப்புகிற மின்சாரக் குமிழ்களுக்கு ஊடே டெலிபோன் நம்பர்களோடு மல் யுத்தம் செய்கிற மகளுக்கு, மாலைக் காற்று உடம்புக்கு நல்லது என்பது ஓட் அவுஸின் கொள்கை. இந்த விஷயத்தில் அவர் மிகவும் கண்டிப்பு. ஆனால் காற்று வாங்கப் போன இடத்தில் விபரீதங்கள் நடக்கும் என்று அவர் கண்டாரா?

ஒரு நாள் காஜா மலையில் ஒரு விசாலமான மரத்தின் அடியிலே உட்கார்ந்து லிலிக்கன்னி காற்று வாங்கிக் கொண்டிருந்த போது, நாகரத்தினம் தன் சகாக்களுடன் அந்தப் பக்கமாக நடந்து வந்தான். தந்தத்தைக் கடைந் தெடுத்து அதில் ரோஜா வர்ணத்தை அங்கங்கே தெளித்து விட்ட மாதிரி மேனியும், கோவைக் கனியைப் பிழிந்து பூசியது போல 'லிப்ஸ்டிக்' தடவிய அதரங்களும், வாலிபத்தின் மிடுக்குமாக, இருபது வயதுக் கன்னி 'ஸிமெண்ட்' கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருந்ததைப் பார்த்ததும், நாகரத்தினத்துக்குத் தலை சுற்றியது!

அன்றிலிருந்து ஒவ்வொரு நாளும் அவன் காஜாமலைப் பக்கமாகக் காற்று வாங்க ஆரம்பித்தான். ஆனால் ஒரே ஒரு மாறுதல். சகாக்களோடு வந்தவன் இப்பொழுது படிப்படியாகத் தனிமையில் வர ஆரம்பித்தான். அதற் கேற்பத் தனது உடையிலும் மாறுதல்கள் செய்து கொண்டான். ஜிப்பாவும் வேட்டியும் தூர எறிந்து விட்டு, தட்டாம் பூச்சியைப் போல் பல வர்ணங்களில் மிளிரும் விதம் விதமான 'டை'களை வாங்கிக் கழுத்தைச் சுருக்குப் போட்டுக் கொண்டான்! உயர்ந்த 'ட்வீட்' ஸூட்டுகளாக வாங்கித் தைத்துக் கோடை காலத்தையும் சட்டை செய்யாமல், சட்டையும் கோட்டுமாக, வியர்க்க வியர்க்க வளைய வந்தான் நாகரத்தினம்!

மிஸ் லிலி ஓட் அவுஸ் இது ஒன்றையும் லட்சியம் செய்பவளாகக் காணோம். ஒரு நாள் இவனாகவே அவள்

அருகிலே சென்று நின்று "ஹலோ!" என்ருன்! வேறு பக்கமாகத் திரும்பிக் காற்று வாங்கிக் கொண்டிருந்த லிலி, ஆபீஸை விட்டு வந்த பிறகும் கூட அந்த 'ஹலோ' என்ற ஓசை "சைத்தா"னைப் போல் விடாமல் தன்னைப் பின்தொடருவது கேட்டுத் திகைத்துப் போய்த் திரும்பிப் பார்த்தாள்! சைத்தான் இல்லை. நாகரத்தினம் நின்று கொண்டிருந்தான்!

"ஹலோ!" என்று ஆங்கில ஆசார முறையில் தானும் பதிலுக்குச் சொன்ஞள் லிலி. நாகரத்தினத்துக்கு அப்படியே உச்சி குளிர்ந்தது. உடம்பெல்லாம் பரவசம் உண்டாயிற்று!

இதன் பிறகு தினந்தோறும் நாகரத்தினம் அந்த மரத்தடிக்கு வருவான். லிலியும் வருவாள். கொஞ்ச நேரம் பேசுவார்கள். பிறகு "நேரம் ஆகிறது!" என்று வீட்டுக்குப் போய் விடுவாள் லிலி. சில நாட்களில் மாலை நேரத்தில் அவளுக்கு ஆபீசில் வேலையிருந்து அவள் காஜா மலைக்கு வரவில்லை யென்ருல், முதல் நாளே அந்தத் தகவலை நாகரத்தினத்திடம் சொல்லி விடுவாள் லிலி. நாகரத்தினம் அன்றைக்கெல்லாம் காற்று வாங்க மாட்டான்!

லிலி ஓட் அவுஸ் கபடம் அதிகம் இல்லாத கன்னி. அவளுடைய வட்டாரத்துப் பழக்க வழக்கத்தின்படி சகஜ மாகப் பேசுகிற முறையிலே தான், நாகரத்தினத்தோடு பேசினுள். ஆனல் நாகரத்தினமோ அதை எப்படி யெல்லாமோ கற்பனை செய்துகொண்டு விட்டான். அதிகம் சொல்வானேன்? ஒரு மாத காலத்தில் அவன் வெள்ளைக்காரத் துரையாகவே தன்னைப் பாவிக்க ஆரம் பித்து விட்டான்! நிறம் ஒன்றுதான் ஒரு பெரிய இடைஞ்சலாக இருந்தது. அதற்கும் கூட நல்ல ஆங்கில ஸோப்பாக பியர்ஸ் ஸோப்பே வாங்கித் தினமும் தேய்த் தான். சனி, புதன் கிழமைகளில் எண்ணெய் ஸ்நானத் துக்கு நல்லெண்ணெய்க்குப் பதிலாக ஆலிவ் எண்ணெயையே தாராளமாக உபயோகித்துப்பார்த்தான்!

இந்த மகத்தான முயற்சிகளோடு நாகரத்தினம் நின்றிருந்தால் நன்ருக இருந்திருக்கும்! ஆனல், ஒரு

நாள் மாலை ஏதோ இசைவு கேடாக இரண்டொரு இங்கிலீஷ் சொற்களை உபயோகித்து நாகரத்தினம் தனது காதலை வெளியிட முயன்றதன் பயனாக, லிலி ஓட் அவுஸ் காஜா மலைப் பக்கம் காற்று வாங்க வருவதையே நிறுத்தி விட்டாள்! ஆனாலும் நாகரத்தினம் தனது முயற்சியைத் தளர விட்டானா? இரவும் பகலும் யோசனை செய்து குப்புசாமியைத் தூதுக்குத் தயார் பண்ணினான்.

உஸ்தாத் மீரானிடம் நாகரத்தினம் சிலம்பம் பழகச் சென்றபோது, அந்தத் தொடர்பிலே கிட்டிய ஒரு நண்பன் தான் குப்புசாமி. ஐந்து ரூபாய் கொடுத்து விட்டால் ஒரு மனிதனையே கொலை செய்யவும் கூடத் தயாராகி விடுகிற ஒரு சூரன் அவன்! அவனைச் சரிக்கட்டி, அவனிடம் ஒரு கடிதத்தை அரைகுறை ஆங்கிலத்தில் டைப் அடித்துக் கையெழுத்து மட்டும் போடாமல் அதை லிலி ஓட் அவுஸிடம் கொடுக்கும்படியாக அனுப்பினான். அந்தப் பிருகஸ்பதி குப்புசாமியோ, கடிதத்தை வாங்கினவன் அப்படியே டெலிபோன் ஆபீஸுக்கே எடுத்துக் கொண்டு போய், சேரவேண்டிய கையிலேயே நேரே கொண்டு போய்க் கொடுத்தான்! கடிதத்தை வாங்கிப் பார்த்த லிலிக்கு வழக்கமாகவே சிவந்திருந்த முகம் இன்னும் அதிகமாகச் சிவந்தது! 'படபட' என்று நடந்து போய்த் தன் ஆபீஸரிடம் கடிதத்தைக் கொடுத்து விட்டாள். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் டெலிபோன் ஆபீஸைக் காவல் செய்து கொண்டிருந்த போலீஸ் ஜவான்கள் வாட்டசாட்டமான ஒருஸப்-இன்ஸ்பெக்டரோடு வீராவேசமாக வந்து குப்புசாமியைப் பிடித்து நன்றாக ஒரு இறுக்கு இறுக்கி அனுப்பிவிட்டார்கள்!

அதன் பின் நாகரத்தினம் ஒரு மாதம் குப்புசாமியின் கண்ணிலேயே படவில்லை!

* * *

இப்பொழுது குப்புசாமிக்கு அந்தச் சம்பவம் எல்லாம் நினைவு வந்தது. அதிலும் அந்த ஸப்-இன்ஸ் பெக்டரின் முகம் அப்படியே கண்ணுக்கு முன் வந்து நின்றது! முதுகைத் தடவி விட்டுக் கொண்டான்!

"குப்புசாமி! அதெல்லாம் அனுபவம் இல்லாத காலத்திலே செய்த சிறுபிள்ளைத்தனம். ஐந்து ரூபாயைக் கொடுத்து விட்டால் குப்புசாமியால் எந்தக் காரியமும் நடந்து விடும் என்று எண்ணிக் கொண்டிருந்த காலம் அது! இப்பொழுது அப்படியா?" என்றான் நாகரத்தினம், கண்களைச் சிமிட்டிக் கொண்டே! ரூபாய் என்ற சப்தத்தைக் கேட்டதும் குப்புசாமி அப்படியே நிமிர்ந்து நின்றான்.

நாகரத்தினத்தின் வாக்கு உஸ்தாதிடம் செலாவணியாகவில்லையே தவிர, குப்புசாமி அவனுக்கு எல்லா வகையிலும் பொருத்தமாக அமைந்த ஒரு பாத்திரம். எனவே, இரவு அந்த நேரத்துக்கு மேல் பாலக்கரை டெய்லர் சந்தாமியானைத் தட்டி எழுப்பி, குப்புசாமிக்கு ஒரு திருட்டு வேஷத்தைப் போட்டு விட்டு, முகமூடியோடு தாயுமானவர் தெருவிலே கொண்டு நிறுத்தினான் நாகரத்தினம்!

"இந்தா பிடி, டார்ச் விளக்கு! இந்தா இது ஒரு மணித் துப்பாக்கி. இதை வைத்துக் கொண்டு ஆட்களைப் பயம் காட்டலாமே தவிரச் சுட்டுக் கொன்றுவிட முடியாது. ஆனாலும் வெடித்தால் பொறி கிளம்பும்! ஜாக்கிரதை!" என்றான் நாகரத்தினம்.

"அறைக்குள்ளே நுழைந்து அந்தப் பெண்ணின் வாயைத் துண்டினால் வரிந்து கட்டிப் போட்டு விட்டு, கீழே இறங்கி வந்து வாசல் கதவைத் திறக்க வேண்டியது. உடனே நான் எதிர்த் திண்ணையிலிருந்து குதித்து உள்ளே வந்து விடுவேன். இருவருமாகச் சேர்ந்து அவளை வெளியே தூக்கிக் கொண்டு வந்துவிட வேண்டியது!" என்று தனது திட்டத்தை வெகு தெளிவாகச் சொன்னான் நாகரத்தினம்.

"ஆஸ்பத்திரியிலிருந்து அத்தானுங்க நிச்சயம் வரமாட்டாருங்களே?" என்று மெதுவாக ஒரு சந்தேகத்தைக் கிளப்பி வைத்தான் குப்புசாமி.

"அத்தானும் வரமாட்டாரு. அத்தானுங்களும் வரமாட்டாரு......போடான்னா!"

மாடி அறையில் ஒரே புழுக்கமாக இருந்ததால், மொட்டை மாடியில் நின்று கொஞ்சம் காற்று வாங்கலாம் என்று ராமநாதன் தன் வீட்டுத் "தட்டொட்டி"யில் உலாத்திக் கொண்டிருந்த சமயம் அது. எதிர்வீட்டு மாடியில் டார்ச் வெளிச்சம் வருவது கண்டு கூர்ந்து பார்த்தான். 'ஒரு வேளை ரவீந்திரன் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி விட்டானோ? அப்படியானால் கதவு திறந்த சப்தமே கேட்கவில்லையே' என்று ராமநாதன் யோசிப்பதற்குள், கீழே தெருவில் யாரோ பதுங்கி வந்து தன் வீட்டுத் திண்ணையிலே ஒளிந்து கொள்வது தெரிந்தது. டார்ச்சை எடுத்துக் கொண்டு 'விறு விறு' என்று படிகளிலே இறங்கி வந்து, வாசல் கதவைத் திறந்தான் ராமநாதன். டார்ச்சை அடித்தான்! என்ன ஆச்சரியம்! பதுங்கி ஒளிந்த மனிதன் வேறு யாருமில்லை; நாகரத்தினம் தான்!

"நாகரத்தினமா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டுக் கொண்டே வந்து அவனுடைய தோளில் கையை வைத்தான் ராமநாதன். நாகரத்தினத்துக்கு உடம்பு பதறிக் கொண்டிருந்தது!

"என்ன ஆச்சு! அக்காளுக்கு என்ன ஆச்சு! ஏன் உடம்பெல்லாம் பதறுகிறது?" என்று கேட்டான் ராமநாதன்.

"ஒன்றுமில்லை" என்று சொல்லும்போதே, நாகரத்தினத்தின் உதடு படபடத்தது. ஆனாலும், நிலைமையைச் சமாளித்துக் கொள்ள முயன்றான் அவன்!

"அப்படியானால் உன் அத்தான் ஏன் இன்னும் வரவில்லை? நீ ஏன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டாமல் இங்கே திண்ணையில் வந்து........"

இதற்குள் "ஐயோ! கள்ளன், கள்ளன்!" என்று நடுங்கிப் பதறுகிற குரல் எதிர் மாடியிலிருந்து கேட்டது!

"உங்கள் வீட்டிலிருந்தா! நாகரத்தினம் வா! இப்படியே இந்த விளக்குக் கம்பத்தில் ஏறி மாடிக்குச் சாடலாம்!"

"அந்த வீட்டு வம்பெல்லாம் நமக்கு என்னத்துக்கு!" என்று நாகரத்தினம் வார்த்தைகளை இழுப்பதற்குள், ராமநாதன் பாய்ந்து சென்று விளக்கின் கம்பத்தில் ஏறினான். அந்தக் குறுகலான சிறிய தெருவில் இம் மாதிரி ஏறி மாடியிலே குதிப்பது கஷ்டமான காரிய மில்லை. 'மள மள' என்று தொத்திச் சென்று மாடியிலே போய்க் குதித்து விட்டுத்தான் திரும்பிப் பார்த்தான் ராமநாதன். நாகரத்தினத்தைக் காணோம்!

குப்புசாமியோ அந்தப் பெண் அயர்ந்து தூங்குவாள் என்று எதிர்பார்த்து வந்து, இப்பொழுது இத்தனை விப ரீதங்கள் நடந்த பின்பும் ஒரு கணம் அங்கே நிற்பானா? பதறியடித்து மறு பக்கமாகக் குதித்து மறைந்து விட்டான் அவன்! ஆனால் அந்த அவசரத்தில் டார்ச் விளக்கையும், மணித் துப்பாக்கியையும் கீழே நழுவ விட்டு விட்டான்! மொட்டை மாடியிலே 'ணங்' என்று விழுந்த அந்த இரண்டையும் கையிலே எடுத்துக் கொண்டு ஜன்னலைப் பார்த்தான் ராமநாதன்! சந்திரிகா நடு நடுங்கி நின்று கொண்டிருந்தாள்! திருடன் ஓடியதையும், எதிர் வீட்டு ராமநாதன் குதித்து வந்ததையும் கண்டு அவளுக்குத் தைரியம் வந்தது.

"கதவைத் திறவுங்கள், அம்மா! பாவம், உடம் பெல்லாம் இப்படிப் பதறுகிறதே!" என்றான் ராமநாதன்.

சந்திரிகாவுக்கு நின்று போன மூச்சு திரும்ப வந்தது. மாடி அறையின் கதவைத் திறந்தாள். ராமநாதன் யோசித்தவாறு அந்த அறையினுள்ளே நுழைந்தான்.

ஜன சந்தடியற்ற அந்த ஒதுக்கமான தெருவில் மீண்டும் நிசப்தம் குடிகொண்டது! நாய்களும் குரைத்து ஓய்ந்தன. மனித உலகத்தின் ஆசாபாசப் பெரும் சுழல் களுக்கும், திருச்சி நகரத்தின் ஆட்டபாட்டங்களுக்கும், ஓயாத இரைச்சலுக்கும் அப்பாற்பட்ட ஒரு யோகீச்வரரைப் போலக் காட்சி தந்தது அந்த ஏகாந்தமான தாயுமானவர் தெரு.

சற்று நேரத்துக்கெல்லாம் ரவீந்திரன் வீட்டுக்கு முன்னால் ஜில்லா வைத்திய உதவி அதிகாரியின் கார் வந்து நின்றது.

"உங்களுடைய அன்புக்கு நான் எப்படி நன்றி சொல்லுவது என்றே தெரியவில்லை!"—இவ்வாறு சொல்லிக் கொண்டே அந்தக் காரிலிருந்து ரவீந்திரன் கீழே இறங்கினன். கார் வேகமாக அங்கிருந்து புறப் பட்டுச் சென்று மறைந்தது.

ரவீந்திரன் வாசல் படிகளில் ஏறிக் கொண்டே, 'சந்திரிகா' என்று அழைத்த வண்ணம் கதவைத் தட்டினன். தட்டிக் கொண்டிருக்கும்போதே பாம்பை மிதித் தவனைப் போல ஒரு கணம் திகைத்துப் போய் நின்றான்.

தாளிடப்பட்டிருந்த தன்னுடைய வீட்டு மாடியிலே சந்திரிகாவின் அறையிலிருந்து ஆண் குரல் அல்லவா வருகிறது! ரவீந்திரனுக்குக் கிறுகிறுவென்று விஷம் தலைக்கு ஏறிற்று!

## 10. "குழப்பம் வந்ததடி!"

ரவீந்திரனை அவனுடைய வீட்டிலே கொண்டு போய் விட்டு விட்டுத் தமது காரைத் திருப்பிக் கொண்டு டாக்டர் புறப்பட்டபோது, இரவு இரண்டரை மணிக்கு மேல் இருக்கும். அந்த அகாலத்தில் புத்தூரிலுள்ள தம்முடைய வீட்டுக்குப் போவது என்றால், டாக்டர் எத்தனை வேகமாகக் காரை ஓட்டியிருக்க வேண்டும்! ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை; செய்ய முடியவில்லை. அவருடைய கார் மிகமிக மெதுவாகத்தான் நகர்ந்தது. அவருடைய மனம் முழுதும் ரவீந்திரன் தன் இதயத்தை அப்படியே விண்டு சொன்ன அந்தரங்க மொழிகளிலேயே உருண்டு புரண்டு கொண்டிருந்தது.

ஆமாம்; திருச்சி ஜெனரல் ஆஸ்பத்திரியில் தம் முடைய அறைக்குள்ளே ரவீந்திரனை அழைத்துச் சென்று அவனுடைய ரகசியங்களையெல்லாம் தம்மிடம் சொல்லும் படி செய்வதற்கு எத்தனை சாமர்த்தியமும் இங்கிதமும் கையாண்டார் டாக்டர்! அந்த ரகசியங்களைத் தெரிந்து

கொள்வதிலேதான் அவருக்கு எத்தனை ஆவல் இருந்தது! ஆனால் அவற்றைத் தெரிந்து கொண்ட பின்போ? ஆவல் அடங்கிற்று. ஆனால் கவலை? அது பன்மடங்காக அதிகரித்து விட்டது!

"டாக்டர், நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்று எனக்குப் படுகிறது. அதனால் அந்தச் சோகக் கதையை உங்களிடம் சொல்கிறேன். இன்னொரு டம்ளர் தண்ணீர் கொண்டு வரச் சொல்லுங்கள்!" என்று ரவீந்திரன் கூறியதும், டாக்டர் தாமே சென்று ஒரு கண்ணாடித் தம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து மேஜையின்மேல் வைத்தார் அல்லவா? அதில் ஒரு மடக்குக் குடித்து விட்டு ரவீந்திரன் பேச ஆரம்பித்தான்.

சந்திரிகாவின் கதையை ஆதியிலிருந்து சொல்ல ஆரம்பித்தான் ரவீந்திரன். முதன் முதலாக அவளை ரயில் வண்டியில் சந்தித்ததிலிருந்து தொடங்கினான். மெதுவாக ஆரம்பித்த பேச்சு, நேரம் ஆக ஆக வேகத்தோடும் படபடப்போடும் ரயில் வண்டியின் வேகத்தில் ஓட ஆரம்பித்தது!

"டாக்டர்! இலஞ்சிக் கச்சேரிக்குப் போய்விட்டு நான் ஊர் திரும்பிய போது, ஜட்கா வண்டியிலிருந்து என்னுடன் ஒரு சிறு பெண் இறங்கியதைக் கண்டு, வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு வந்த கல்யாணி திகைத்தாள். அப்படியே திகைப்போடு பார்த்தாள்.

'காட்டிலே வளர்ந்த மல்லிகை இது. ஜன்ம ஜன்மாந்தர வாசனைகள் நிரம்பியது!' என்று சந்திரிகாவை என் மனைவிக்கு அறிமுகப்படுத்தினேன். மீண்டும் திகைப்போடுதான் அவளைப் பார்த்தாள் கல்யாணி. அந்தப் பெண் ஒரு பிச்சைக்காரச் சிறுமியாகக் கந்தல் உடையில் காணப்பட்டதால் என் மனைவி அப்படித் திகைப்போடு பார்த்தாள் என்று நினைக்கிறீர்களோ? அதுதான் இல்லை. அந்தக் கந்தல் துணியையெல்லாம் தென்காசியிலேயே அவளுடைய தலையைச் சுற்றித் தூர எறிந்து விட்டேன். புதிதாக ஒரு சீட்டிப் பாவாடையும் கருநீல வர்ணத்தில் கத்திரிப் பூப்போட்ட ரவிக்கையும் வாங்கி, என்

வாழ்க்கையில் முதன் முதலாகச் சந்திரிகாவுக்கு அலங்காரம் செய்தேன். அந்த அலங்காரத்தோடேயே தான் அவளை வீட்டுக்கு அழைத்து வந்திருந்தேன்.

அப்படியானல் ஏன் என்னுடைய மனைவி அந்தச் சிறுமியைப் பார்த்து அப்படித் திகைத்தாள்? இந்தக் கேள்விக்குப் பதில் தெரிந்து கொள்ள எனக்குப் பலநாள் ஆயிற்று. பெண்களுடைய இதய தத்துவம் அந்தக் காலத்தில் எனக்கு அவ்வளவாகப் புரிந்திருக்கவில்லை. நீங்கள் டாக்டரானதால் உங்களுக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை என்று நினைக்கிறேன். அப்படித்தானே?

இதன் பிறகு நான்கு வருஷங்கள் என் வாழ்க்கை எவ்வித இடையூறும் இன்றி ஓடிற்று. அந்த நாலு வருஷங்களில் நான் சந்திரிகாவுக்கு எனக்குத் தெரிந்த நடன முறைகள் அனைத்தையும் கற்பித்தேன். புகழ் பெற்ற கங்க முத்து நட்டுவனரின் பரம்பரையில் பிறந்ததின் பயனாக, வழிவழிச் சொத்தாக எனக்குக் கிடைத்திருந்த இசைச் செல்வத்தையெல்லாம் சந்திரிகாவுக்கு மகிழ்ச்சியோடு வழங்கினேன்.

டாக்டர், இந்தச் சந்தர்ப்பத்தில் என் இதய ஆசை ஒன்றை உங்களுக்குச் சொல்ல வேண்டும். ஆரம்பத்தில் நான் என் சங்கீத வாழ்க்கையை வாய்ப்பாட்டிலேதான் தொடங்கினேன். ஆனல் நாளடைவில் "மகரக் கட்டு" என்ற பாழாய்ப் போகிற தொல்லையினல் என் சாரீரம் இனிமை இழந்து லாகவமற்றுப் போயிற்று. அதன் பிறகு தான் புல்லாங்குழல் வாத்தியம் சாதகம் செய்ய ஆரம்பித்தேன். அப்படியில்லாமல் வாய்ப்பாட்டே நீடித்திருக்குமானல், என் வாழ்க்கை இதற்குள் வேறு எப்படியெல்லாமோ திரும்பியிருக்கும். ஆனல் அது குறித்து இப்போது எண்ணிப் பயனில்லை. வருந்த வேண்டியதும் அவசியமில்லை. உண்மையில் சந்திரிகாவின் சந்திப்பு எனக்கு எப்பொழுது கிட்டியதோ அப்பொழுதே என் கனவுகள் எல்லாம் நிறைவேறும் காலம் வந்து விட்டது என்று எண்ணி மகிழ்ந்தேன். என் கனவுகளும், என் ஆசைகளும் நனவாகும்

பாக்கியம் என் சொந்த வாழ்வில் இல்லாமற் போய் விட்டாலும், சந்திரிகாவினது நடனத்தின்மூலம் அத்தனை யும் நிறைவேறும் என்று மனக் கோட்டை கட்டினேன். ஆனால் இப்பொழுது ஏற்பட்டு விட்ட சிக்கல்களைப் பார்த்தால் உள்ளம் நடுங்குகிறது. எந்த நேரத்தில் என்ன விபரீதம் வந்து தொலைக்குமோ என்று எப்பொழுதும் பயப்படுகிறேன், டாக்டர்!''

இப்படிச் சொல்லி விட்டு ரவீந்திரன் மீண்டும் ஒரு மடக்குத் தண்ணீர் குடித்தான். பிறகு கொஞ்ச நேரம் மௌனமாக இருந்து ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு மேலே பேச ஆரம்பித்தான்.

“குளுமையான பௌர்ணமி இரவுகளில், மாடியிலே ஜமக்காளம் விரித்து அதில் நின்று நடனம் ஆடுவாள் சந்திரிகா. நான் அவளுடைய நடனத்துக்குப் புல்லாங் குழல் வாசிப்பேன். நேரம் போவதே தெரியாமல் நாங்கள் இருவரும் பரிபூரணமான இன்பம் நிறைந்த இசை உலகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருப்போம்.

இப்படி யிருக்கும்போதுதான், டாக்டர், ஒரு நாள் சந்திரிகாவுக்குப் பாரதியாரின் கண்ணன் பாடல் ஒன்றைச் சொல்லிக் கொடுத்தேன். அந்தக் காலத்தில் மிக மிகப் பிரசித்தமாக வந்து கொண்டிருந்த பாடல் அது.

“தூண்டிற் புழுவினைப்போல்—வெளியே
சுடர் விளக்கினைப்போல்
நீண்ட பொழுதாக—எனது
நெஞ்சம் துடித்ததடி!''

என்று பாடிக் கொண்டே அபிநயம் பிடித்து நடனம் ஆடினாள் சந்திரிகா.

இந்தப் பாடலின் மூலமாகத்தான் என் வாழ்விலே பின்னல் விழுந்தது!''

இப்படி ரவீந்திரன் சொன்னபோது கண் இமைகளை மூடி, ஒரு விநாடி நினைவின் இழைகளை ஒன்று சேர்த்தான்! கைகளை மேஜைமேல் வைத்து, அந்தக் கைகளின்மேல்

முகத்தைச் சாய்த்தவாறு அமர்ந்திருந்த டாக்டரோ நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். ரவீந்திரன் வார்த்தைகளை வேகமாகச் சொல்லிக் கொண்டே போனான்:—

**"உணவு செல்லவில்லை—சகியே**
**உறக்கம் கொள்ளவில்லை**
**மணம் விரும்பவில்லை—சகியே**
**மலர் பிடிக்கவில்லை!"**

என்ற வார்த்தைகளுக்குச் சந்திரிகா அபிநயம் பிடிக்கும் போது நான் திகைத்தேன். புல்லாங்குழலைக் கீழே வைத்து விட்டு அவளையே பார்த்தேன். காரணம், அந்தச் சொற்களின் பாவம் அவளுடைய முகத்தில் பூரணமாகப் பிரதிபலிக்கவில்லை.

**"குணம் உறுதியில்லை—எதிலும்**
**குழப்பம் வந்ததடி**
**கணமும் உள்ளத்திலே—சுகமே**
**காணக் கிடைத்ததில்லை!"**

என்று, சந்திரிகா அந்தப் பாடலை ஏதோ பாடம் ஒப்பிப்பது போல் ஒப்பித்துக் கொண்டே அபிநயத்தைத் தொடர்ந்தாள்.

காதலின் தவிப்பினால், கண்ணோடு கலந்து நின்ற உள்ளத்தின் ஏக்கத்தினால், அளவு கடந்த ஆற்றாமையினால், ஏற்படுகிற சஞ்சலங்களையெல்லாம் கவி அந்த வார்த்தைகளில் எத்தனை அற்புதமாகச் சித்திரித்திருக்கிறார்! அந்த உணர்ச்சிச் சாயலைச் சந்திரிகாவினால் தன் முகத்திலே கொண்டு வந்து பிரதிபலிக்க முடியவில்லை.

**"பாலுங் கசந்ததடி—சகியே**
**படுக்கை நொந்ததடி**
**கோலக் கிளிமொழியும்—செவியில்**
**குத்தல் எடுத்ததடி!"**

என்ற வார்த்தைகள் வரும்போது நான் அப்படியே எழுந்து நின்றேன்.

" சந்திரிகா! இன்றுதான் முதன்முதலாக உன் அபிநயத்தில் தோல்வி காண்கிறேன். வார்த்தைகளின் பொருளை மட்டுமே உன் அபிநயம் காட்டுகிறது. ஆனால் அந்தச் சொற்களிலே இழைகின்ற உணர்ச்சியின் ஆழத்தை, அந்த இன்ப வேதனையை உன் முக பாவத்திலே காணோம்!" என்று சொன்னேன். இப்படிச் சொன்னபோது என் வார்த்தைகளின் பொருளை நானே உணரவில்லை. சந்திரிகா சிரித்தாள். சொன்னாள் :

"ஆமாம்! தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். எனக்கே புரியாத ஒரு விஷயத்தைப் பிறர் புரிந்து கொள்ளும்படி நான் எப்படி முகத்திலே காட்டுகிறது?" என்று கேட்டாள் சந்திரிகா. அப்பொழுதுதான் நான் என்னுடைய குற்றச் சாட்டின் பொருளை உணர்ந்தேன். திகைத்துப் போய்க் கீழே உட்கார்ந்தேன். சந்திரிகா தொடர்ந்து சொன்னாள் :

" பால் எங்காவது கசக்குமா? கிளி மொழி எங்காவது செவியிலே போய்க் குத்தல் எடுக்குமா?— இந்தப் புரியாத கற்பனைகளையெல்லாம் எப்படி அபிநயத்திலே கொண்டு வருவது?"

இந்தக் கேள்விக்கு நான் எவ்விதமான பதிலும் சொல்லவில்லை.

" சரி, மேலே பாடு!" என்றேன். சந்திரிகா என்னுடைய குரலிலே தொனித்த அதிருப்தியைக் கவனித்தவளாக மீண்டும் அந்தப் பாடலை ஆரம்பத்திலிருந்து பாடினாள் :

" குணம் உறுதியில்லை—எதிலும்
குழப்பம் வந்ததடி!"

என்ற அடிகளை அவள் பாடி அபிநயம் பிடித்தபோது, நான் அந்தப் பாடலின் வசமாகி அப்படியே அவள் அருகிலே சென்று நின்று கொண்டு, கண்களும் கைகளும் அந்த இடத்தில் எப்படிச் சோர்ந்து போக வேண்டும் என்பதையும், 'குழப்பம் வந்ததடி!' என்ற இடத்தில் கைகளை நெற்றிக்குப் பக்கத்திலே கொண்டு போய்க் குழப்பத்தை

எப்படிச் சுழற்றிக் காண்பிக்க வேண்டும் என்பதையும் அவளுக்குக் கற்பித்தேன். அப்பொழுது நான் அவளுடைய கையைப் பிடித்து அந்தச் சுழற்சியைச் சுழற்றிக் காட்டினேன்.

டாக்டர், உண்மையைச் சொல்கிறேன். நாலு வருஷங்களிலும் இல்லாதபடி அன்று என்னுடைய உடம்பு நடுங்கியது. சந்திரிகாவுக்கோ கையெல்லாம் பதறியது!

இது ஒரு நாள் அநுபவம்.

ஒரு வாரம் கழித்து, இன்னொரு நாள் மீண்டும் அந்தப் பாடலைப் பாடி அபிநயம் பிடித்தாள் சந்திரிகா. ஆனால் அன்று முன்னைவிட உணர்ச்சியின் சாயல்கள் முகத்திலே இன்னும் தெளிவாக ஓடின. அதிலும்,

“அச்சம் ஒழிந்ததடி—சகியே
அழகு வந்ததடி”

என்று பாடி விட்டு,

“எண்ணும் பொழுதெல்லாம்—அவன்கை
இட்ட இடத்தினிலே
தண்ணென் றிருந்ததடி—புதிதோர்
சாந்தி பிறந்ததடி !”

என்ற அடிகளை அவள் பாடியபோது, முகத்திலே விளையாடிய உணர்ச்சிகளை எப்படிச் சொல்வேன்! அப்படியே மெய்ம் மறந்து போய் எழுந்தேன். “சந்திரிகா” என்று கூப்பிட்டுக் கொண்டே அவளுடைய கரங்களைப் பற்றினேன். ஏதோ ஒரு மின்சாரம் அவளுடைய உடம்பிலிருந்து புறப்பட்டு, அந்த வளைக் கரங்களின் வழியாக என்னுடைய கைகளிலே தாவி என் உடம்பெல்லாம் ஓடித் துவண்டது!

“அண்ணா” என்றாள் அவள். அப்படித்தான் அவள் என்னை எப்பொழுதும் அழைப்பாள். அந்த அழைப்பு உடனே என்னை இந்தப் பூமிக்குக் கொண்டு வந்து நிறுத்தியது. திகைத்துப் போய் நின்றேன்.

"அண்ணு, எங்கோ தெரு வீதியிலே அலைந்து திரிந்து திண்ணைகளிலும் சாலை ஓரத்திலும் படுத்துறங்கி மிருகமாக வாழ வேண்டிய என்னை, இந்த நிலைக்குக் கொண்டு வந்தது உங்களுடைய அன்புதான். இந்த உடம்பு உங்களுடையது. இந்த சரீரத்தில் உள்ள ஒவ்வொரு அணுவும் உங்களுக்குச் சொந்தம். இதை எப்படி ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டுமோ அப்படிச் செய்ய உங்களுக்குப் பூரண உரிமை உண்டு. ஆனுல்...... ஆனுல்........ஆனுல்........." என்று வார்த்தைகளை இழுத்தாள் சந்திரிகா.

"ஆனுல் அப்படிச் செய்வது முட்டாள்த்தனம், மிருகத் தனம்!" என்று அந்த வாக்கியத்தை முடித்தேன் நான்.

இது இன்ஞெரு நாள் அநுபவம்.

இதன் பிறகு எத்தனையோ நாட்கள் நாங்கள் இருவரும் தனிமையாக அந்த மாடியிலே பௌர்ணமி இரவுகளில் பாட்டும் கூத்துமாக ஒரே ஆனந்தத்தில் இருந்திருக்கிருேம். அப்பொழுதெல்லாம் அளவு மீறிய கட்டுப்பாடும் ஜாக்கிரதையும் என்னை வரம்பு செய்து காத்து வந்தன.

டாக்டர்! என்னை வித்தியாசமாக நினைக்காதீர்கள். இத்தனை கட்டுப்பாட்டோடும் விழிப்போடும் நான் நடந்து வந்தபோதிலும், என் உள்ளத்திலிருந்து அந்தக் காட்சியை மட்டும் அழிக்க முடியவில்லை. தன்னந் தனியாக உட்கார்ந்து நான் யோசித்துக் கொண்டிருந்தால், திடீ ரென்று அந்தக் காட்சி என் கண்முன் தோன்றும். சந்திரிகா மௌனமாக நிற்பது போலவும், நான் அவளுக்கு அருகிலே சென்று, அவளுடைய அந்தப் பூங்கரங்களைப் பற்றுவது போலவும் கனவு காண்பேன்.

நாட்கள் இப்படி ஓடிக் கொண்டிருந்தன. ஒரு நாள் இரவு, நான் மாடியில் திறந்த வெளியிலே படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டிருந்தேன். நிலவும், இளம் காற்றும் சேர்ந்து சுகமாக இருந்தன. உறங்கி விட்டேன். திடீரென்று யாரோ என்னுடைய கைகளைப் பிடிப்பது போல் இருந்தது. கனவுதானே என்று பதறி விழித்தேன்.

வளையல்கள் குலுங்கிய ஓசை கேட்டது. சந்திரிகா பதறிப் போய்த் தன்னுடைய கைகளை உதறிக் கொண்டு நின்றாள்.

"சந்திரிகா!" என்றேன். அந்த அழைப்பிலே என் இதயமும் ஆத்மாவுமே சேர்ந்து ஒலித்தன.

"அண்ணா—" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த சந்திரிகா, தன் நினைவுக்கு வந்தவளாக, "ஒன்றுமில்லை. அன்று நீங்கள் என் கைகளைப் பிடித்தீர்கள் அல்லவா? எப்படிப் பிடித்தீர்கள் என்று நானும் பிடித்துப் பார்த்தேன்—" என்று சொல்லி விட்டு, முகம் எல்லாம் வெளிறிப் போய் நின்றாள். நிலைமையைச் சமாளித்துக் கொள்ளக் கஷ்டப் படுகிறாள் என்பதைப் புரிந்து கொண்ட நான், "பேஷ்! பேஷ்!" என்று சொல்லிக் குலுங்கக் குலுங்கச் சிரித்து என் உள்ளத்தின் உணர்ச்சிகளை யெல்லாம் கொண்டு குலுக்கிச் சிதறினேன்!

டாக்டர்! இதுதான் எனக்கும் சந்திரிகாவுக்கும் இடையே உள்ள தொடர்பு. இதுவரை ஒரு வரம்புக்குள்ளேயே நாங்கள் இருவரும் இயங்கி வந்து விட்டோம். இந்த நிமிஷம் வரை எங்களுடைய இதய அரங்கத்திலே நடைபெறுகிற உணர்ச்சிகளின் நடனத்தில் தாளம் தவறியதில்லை. இந்த வினாடிவரை எங்களுடைய இதய கீதத்தில் அபஸ்வரம் பேசவில்லை. ஆனால்......ஆனால்... ஆனால்......டாக்டர், எண்ணவே பயமாக இருக்கிறது. என்றைக்கு வரம்பு கடந்து விடுமோ, எந்த நிமிஷம் தாளம் தவறுமோ, எந்த வினாடி அபஸ்வரம் விழுந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். அதிலும் என் மனைவியின் கோப தாபங்கள் அதிகரிக்க அதிகரிக்க இந்த அச்சமும் என் உள்ளத்தில் அதிகரிக்கிறது. எல்லையைத் தாண்டாதே என்று அறிவு சொல்கிறது. இதயமோ எல்லை கடந்து பொங்குகிறது. என்ன செய்வேன்? என்னுடைய உள்ளத்தை ஒரு வீணை என்று சொன்னீர்கள். மெய்யான வார்த்தை. இந்த வீணை சில சமயங்களில் சுருதி கலைகிறது. அந்த வேளையில் இதைச் சுருதியிலே கூட்டிச் சேர்க்கவேண்டுமென்றால், மாடகத்தை மெதுவாகத்திறக்க

வேண்டும். கல்யாணி பல சமயங்களில் ஆவேசத்தோடு இந்த வீணையை முறுக்க ஆரம்பித்து விடுகிருள். அப்பொழுதெல்லாம் என் நரம்புகள் துடிக்கின்றன. வீணையின் தந்திகள் சின்ன பின்னம் ஆகிவிடுகின்றன !

டாக்டர், இந்த வீணையை லாகவமாக எடுத்து வாசித்தால் எத்தனை கீதங்கள் எழும்! ஐயோ! இந்தத் தந்திகளை மெதுவாக இங்கிதமாகச் சுருதி கூட்டும் ஒரு மெல்லிய பூங்கரத்தை நாடி என் இதயம் தவிக்கிறது. இதன் ஒலியோடு ஒத்து ஒலிக்கும் ஒரு வீணைக்காக என்னுடைய இந்த இதய வீணை ஏங்குகிறது. ஆனல் அதே சமயம் அந்த நாட்டம் தவருனது, அந்த ஏக்கம் பிசகானது என்று என் உள் மனத்தில் ஏதோ ஒன்று இடித்துக் கூறிக்கொண்டேயிருக்கிறது. என்ருலும்...... என்ருலும், என்ருே ஒரு நாள்......டாக்டர், நீங்கள்தான் மனத் தத்துவம் தெரிந்தவர் ஆயிற்றே, சொல்லுங்கள். என்ருே ஒரு நாள், ஒரு பௌர்ணமி இரவில் நான்...... நான்..............இந்தக் கடினமான வரம்பைக் கடந்து விடுவேனே ?''

டாக்டர் ஒரே மௌனமாக இருந்தார். கம்மிய குரலில் உணர்ச்சியின் வசமாகி வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டே செல்லும் ரவீந்திரனை அவர் இடைமறிக்க வில்லை. அவனுடைய கலங்கும் விழிகளையே பார்த்துக் கொண்டிருந்தார். அந்தக் கண்களிலேதான் எத்தனை சோகம்! கண்ணீர் பொங்கிப் பெருகும் அந்தக் கரு விழிகளிலே கண்ணீர்த் துளியையும் ஊடுருவிக் கொண்டு அறிவின் பிரகாசம் நின்றது. அந்த ஒளியைப் பார்த்த வாறு டாக்டர் கவனமாக வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே இருந்தார்.

"டாக்டர், நீங்களே சொல்லுங்கள். எனக்கும் சந்திரிகாவுக்கும் உள்ள உறவு எப்படிப்பட்டது? காதல் என்று அதைச் சாதாரணமான வார்த்தையிலே சொல்ல முடியுமா? அப்படிச் சொன்னல் அது சரியா? நான் எடுத்து வளர்த்த குழந்தை சந்திரிகா. அவளிடம் உள்ள பாசத்தைக் காதல் என்று எப்படிச் சொல்வது? ஆனல்

வெறும் அன்பு என்றுதான் அதைச் சொல்ல முடியுமா? அதுவும் தவறு. உண்மையில் அவளை ஒரு நிமிஷம் பார்க்கவில்லையென்றால் என் மனம் எப்படியெல்லாம் ஏங்குகிறது! அவளுடைய முன்னிலையில் என் உள்ளத்தில் எத்தனை இசைக் கற்பனைகள் தோன்றி எழுகின்றன! அவளுக்காக என் இதயம் எத்தனை ஏங்குகிறது! சதா சர்வதா அவளோடு இருக்க வேண்டும் என்றல்லவா என் நெஞ்சம் துடிக்கிறது! இது காதல் இல்லையென்றால் பின் எதுதான் காதல்? இது காதல் இல்லை என்றால், அவளைக் காதலிப்பதற்கு இன்னொரு மனிதன் இந்த உலகில் இருக்கிறானா? ஐயோ! அந்த நினைவையே என்னால் தாங்க முடியவில்லையே! இன்னொரு மனிதன் சந்திரிகாவைக் காதலிப்பதா? டாக்டர், டாக்டர் என் மூளை குழம்புகிறது. அறிவு குமைகிறது. சொல்லுங்கள். இந்தக் குழப்பத்துக் கெல்லாம் என்ன பெயர் என்று சொல்லுங்கள், டாக்டர்! எனக்குப் புரியவில்லையே!"

ரவீந்திரனுடைய கண்களிலிருந்து பொல பொல வென்று நீர்த்துளிகள் உதிர்ந்தன. குரல் நன்றாக அடைத்துக் கொண்டு கம்மியது.

இதுவரை மௌனமாக இருந்த டாக்டர் இப்பொழுது பேச ஆரம்பித்தார்:—

"ரவீந்திரன், உங்களுடைய உணர்ச்சிகளை யெல்லாம் நன்றாக வாங்கிக் கொண்டேன். உங்கள் குழப்பத்தில் நானும் பங்கு கொள்கிறேன். மற்றப்படி வேறு என்ன சொல்லுவேன்? மனத்தின் தன்மைகளை எப்படி நிர்ண யிப்பது? சரீரத்தைச் சோதிக்க என்னிடம் எத்தனையோ கருவிகள் இருக்கின்றன. ஹிருதயத்தைப் பரிசோதிக்க இதோ 'ஸ்டதஸ்கோப்' கிடக்கிறது. ஆனால் உள்ளத்தைச் சோதித்துப் பார்த்து அறிவது எப்படி? மனத்துக்கு மனம் எத்தனை வேறுபாடுகள் காண்கிறோம்! இதில் எதை எப்படி நிர்ணயிப்பது? ஆனாலும்—"

"ஆனாலும என்ன டாக்டர், சொல்லுங்கள் டாக்டர்! பண்பாட்டின் எல்லையைக் கடந்து விடுவேனோ டாக்டர்! ஐயோ! சந்திரிகாவின் மேனியும் அதன் லாவண்யமும்

என்னைப் பைத்தியம் ஆக்கி விட்டதா? அப்படியானால் கல்யாணி? அவளுடைய கோபதாபங்கள்? அந்தக் கோபமும் தாபமும் என்னிடம் அவளுக்குள்ள அபார அன்பின் அடையாளங்கள்தானே? அவற்றுக்குத் துரோகம் செய்து விடுவேனா நான்?"

டாக்டர் இந்த இடத்தில் புன்முறுவல் புரிந்தார். சொன்னார்:

"ரவீந்திரன்! கவலைப்படாதீர்கள்! உங்களுடைய மன இயல்பு எனக்கு நன்றாகப் புரிகிறது. நீங்கள் இன்றிரவு வீட்டுக்குச் செல்லுங்கள். உங்களுடைய மனைவி வீட்டில் இல்லையல்லவா? சந்திரிகா தனியாகத் தான் இருக்கிறாள். எனவே இரவு முழுவதும் சந்திரிகா வுடன் தனியாகத்தான் இருக்கப் போகிறீர்கள். அப்படியே இருங்கள். உங்கள் இதயத்தின் நாட்டத்துக்கும் அறிவின் கட்டளைக்கும் எப்படிப் போர் நடக்கிறது; பிறகு என்ன முடிவு ஏற்படுகிறது என்பதைப் பார்ப்போம். கவலைப் படாதீர்கள். புறப்படுங்கள். நானே உங்களைக் கொண்டு போய் வீட்டில் விடுகிறேன்" என்றார் டாக்டர்.

"கல்யாணி என்ன ஆனாள்?" என்று கேட்டான் ரவீந்திரன், மிக்க கவலையோடு.

"அவள் மயக்க மருந்தின் வேகத்தில் நன்றாக உறங்கிக் கொண்டிருக்கிறாள். காலை எட்டு மணிக்குத் தான் மயக்கம் தீர்ந்து விழிப்பாள். அதற்குள் நீங்களும் உங்களுடைய மயக்கம் எல்லாம் தீர்ந்து நிம்மதியாக இங்கு வருவீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்."

இவ்வாறு சொல்லிவிட்டு ரவீந்திரனைத் தோளின் மேல் கை வைத்துக் கூட்டிக் கொண்டே காரில் ஏற்றித் தாயுமானவர் தெருவை நோக்கிப் புறப்பட்டார், திருச்சி ஜில்லா வைத்திய உதவி அதிகாரி டாக்டர் சுரேஷ்.

*　　　*　　　*

படிகளிலே ஏறிய ரவீந்திரன் பாமபை மிதித்தவன் போலத் திகைத்து நின்றான் அல்லவா? தாளிடப்பட் டிருந்த வீட்டின் மாடியிலிருந்து வேற்றுக் குரல், வாலிபக்

குரல், ஆண் குரல் நன்ருகக் கேட்டது ரவீந்திரனுக்கு. காலால் மிதித்த 'பாம்பி'ன் விஷம் தலைக்கு ஏறிற்று!

வழக்கம்போல் ரவீந்திரனுடைய உடம்பெல்லாம் பதறிற்று. கையும் காலும் 'வெடவெட' என்று ஆடின.

" ஆண் குரல்! இந்த நிசி நேரத்தில் அதிக ஓசையில்லாமல் மெதுவான பேச்சு! தாளிடப்பட்ட அறையிலே தன்னந் தனியாக இருக்கும் சந்திரிகாவோடு ஓர் ஆடவன் இந்த நேரத்தில் உறங்காமல் பேசுகிற ரகசியப் பேச்சு! கதவைத் தட்டிய பின்னும் திறப்பதில் தாமதம்!"

இத்தனை எண்ணங்களும் இன்னும் கோடிக்கணக்கான எண்ணங்களும்—எல்லாம் ஒரு விஞடிக்குள்ளே!

கதவைத் தட்டிய ரவீந்திரனுடைய கை அதற்குமேல் தட்டுவதை நிறுத்தியது. 'சந்திரிகா' என்று அன்போடு கூப்பிட்ட நாக்குச் சொல்லற்று நின்றது. அந்தப் படிகளிலே வேகமாக இறங்கினுன் ரவீந்திரன். தெரு வீதிக்கு வந்தான். அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. மாடியிலிருந்து சந்திரிகா வந்து கதவைத் திறப்பதற்கு முன் அந்த இடத்திலிருந்து மறைந்து விட வேண்டும் என்று எண்ணியவனுக, தாயுமானவர் தெருவைத் தாண்டித் தெற்குத் தெருவுக்கு வந்து, மலைவாசல் படிகளிலே ஓட்டமும் நடையுமாக இறங்கி, பெரிய கடை வீதியை அடைந்து 'விறு விறு' என்று காற்றின் வேகத்திலே படர்ந்தான்.

காரும் வண்டியுமாக எத்தனையோ சுருசுருப்பாக இரைச்சல் போடுகின்ற திருச்சிக் கடைவீதி அயர்ந்து போய் நித்திரை செய்து கொண்டிருந்தது. வானத்தில் அரைகுறையாகத் தோன்றிய சந்திரன் மேகத்திலே பட்டும் படாமலும் வெளிறிப் போய் மிதந்து கொண்டிருந்தான். கடைகள் எல்லாம் கதவுகள் மூடி ஒரே மோன அமைதியிலே சீண்டுவாரற்றுக் கிடந்தன!

வீதியில் நடக்க ஆரம்பித்த ரவீந்திரனுடைய கால்களுக்கு, எங்கிருந்துதான் அத்தனை வேகம் வந்ததோ!

ானம் முந்தியதோ, அல்லது கால் முந்தியதோ என்று சொல்ல முடியாத அத்தனை வேகத்தில் 'படபட' என்று கைகளை வீசிய வண்ணம் நடந்தான். இல்லை, ஓடினான் ரவீந்திரன். அந்தக் காட்சி பரிதாபமாக இருந்தது!

மனித மனத்தின் இயல்புகளை எப்படி நிர்ணயித்துக் கூறுவது என்று சொன்னார் டாக்டர். உண்மையான வார்த்தை. எந்தச் சந்திரிகாவிடம் ஒரு வினாடிக்கு முன்பு வரை எல்லையற்ற பாசம் இருந்ததோ, எந்தச் சந்திரிகாவுக்காக அத்தனை ஏக்கம் ஏங்கி அத்தனை அன்பு மொழிகளை டாக்டரிடம் சற்று முன்பு பொழிந்தானோ, எந்தச் சந்திரிகாவினுடைய தொடர்பினால் தன்னுடைய வாழ்வின் கனவுகள் எல்லாம் மலரும் என்று இதய பூர்வமாக ஆசைப்பட்டானோ, அதே சந்திரிகா இப்பொழுது வேம்பாகக் கசந்து விட்டாளா? எந்தப் பெண்ணின் அன்புக்காக அவனுடைய உள்ளம் அத்தனை துடிப்புத் துடித்ததோ அந்தப் பெண்ணை வெறுத்தா அவன் அப்படி நடந்தான்? ஆர அமர ஆராய்வதற்குக் கூட உள்ளம் இடம் தராதா? ஆத்திரம் என்பது அத்தனை கொடுமையானதா? இதயத்தின் ஏகபோக உரிமையுணர்ச்சிக்குத்தான் எத்தனை விபரீத நினைப்புகள் எவ்வளவு சீக்கிரம் ஏற்பட்டு விடுகின்றன! என்ன விந்தை மனிதர்கள்! என்ன விநோதமான மன இயல்புகள்! அன்பு அதிகமாக அதிகமாக, விபரீத எண்ணங்களும் சந்தேகங்களுங்கூட அதிகமாகி விடுமோ?

"குணம் உறுதியில்லை—எதிலும்
குழப்பம் வந்ததடி!"

என்று கவி பாடினாரே, அது எவ்வளவு உண்மையாகி விட்டது!

பாரசீகக் கவிஞன் பாடியபடி, சிருஷ்டி உலகத்திலே மனிதர்களை ஆக்குகின்ற கையானது, மண்டையோட்டிலே ஓர் எழுத்தாணியைப் பிடித்து வேகமாக எழுதிக் கொண்டிருக்கிறது! அதற்கு எதைப் பற்றித் தான் கவலை?

# 11. விழிப்பும் திகைப்பும்!

புகழ் பெற்ற ஆங்கில நாடகாசிரியர் பெர்னுட் ஷா, டாக்டர் என்று 'போர்ட்' போட்டுக் கொண்டிருப்பவர்களுக்கெல்லாம் ஒரு கண்டிப்பான யோசனையை வற்புறுத்தினுர். எங்கெங்கோ சென்று படித்து ஏதேதோ பட்டங்கள் பெற்று வந்து அவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் தங்களுடைய பெயருக்குப் பின்னுல் எழுதிப் பலகையிலே தொங்க விடுகிற டாக்டர்கள், மகா ஜனங்களின் நன்மைக்காக ஒரு முக்கிய அறிவிப்பையும் அந்தப் பட்டங்களோடு சேர்த்து எழுதிப் போட்டுவிட வேண்டுமாம்—"டாக்டர்களாகிய நாங்களும் உங்களை யெல்லாம் போல்ஒரு நாள் மடியக்கூடிய மனிதர்கள் தான்!" என்று!

திருச்சி ஜில்லா வைத்திய உதவி அதிகாரி டாக்டர் சுரேஷ், வைத்தியப் பரீட்சைகளில் தேறி விட்டு முதன் முதல் டாக்டராகத் தமது வாழ்க்கையை ஆரம்பித்த புதிதில், பெர்னுட்ஷாவின் இந்த யோசனையைப் பற்றிக் கேள்விப்பட்டு ஏளனத்தோடு சிரித்தார். "இந்த ஷாவுக்குத்தான் எத்தனை அர்த்தமற்ற ஒரு விஷமம்!" என்று எண்ணினுர் டாக்டர் சுரேஷ். ஆனுல் நாட்கள் செல்லச் செல்ல அவருக்கு பெர்னுட்ஷாவின் வார்த்தைகளிலே இருந்த நுட்பமான உண்மை துலங்க ஆரம்பித்தது.

இந்த மனித உலகம் நோயின் கொடுமையிலும் நோயாளிகளிடத்திலே உள்ள அநுதாபத்திலும் எப்படி யெல்லாம் நடந்து கொள்கிறது! சில சமயங்களில் டாக்டர்களை யமனுக்கு நமன் என்றும், மரணத்தையே வென்று நின்ற மகான்கள் என்றும் எண்ணி முறையிடுவதைப் பார்க்கும்போது டாக்டர் சுரேஷ், ஷாவை எண்ணி மனத்துக்குள்ளே சிரித்துக் கொள்ளுவார். ஏதோ ஜனனமும் மரணமும் தன்னுடைய கையிலேயே அடங்கி விட்டதைப் போலவே நினைத்து நோயாளிகள்

பேசுவதைப் பார்க்கும் போது சிரிப்போடு ஒரு விவரிக்க முடியாத இரக்கமும் சுரேஷுக்கு உண்டாகும். 'மரணமும் ஜனனமும் தன்னுடைய கையிலேயே அடங்கிவிடக் கூடாதா, இந்த நோயாளிகள் இத்தனை கஷ்டப்படுகிறார்களே!' என்றெல்லாம் கூட அவர் எண்ணுவதுண்டு. அது மட்டுமா? தானும் விதியின் வலிமைக்குக் கட்டுப்பட்ட ஒரு மனிதன்தான் என்பதை நோயாளிகளிடம் எப்படிக் காட்டிக் கொள்ளுவது? அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுவதற்காக, விதியையே மாற்றிவிடக் கூடிய ஒரு அதிசய வித்தை தன் கையில் இருப்பதாக அல்லவோ பாசாங்கு செய்ய வேண்டியதிருக்கிறது!

இன்னொரு கஷ்டமான அநுபவமும் டாக்டர் சுரேஷுக்கு அடிக்கடி ஏற்படுவதுண்டு. ஒரு நோயாளியிடம் எத்தனை அநுதாபம் இருந்தபோதிலும், தான் அந்த நோயாளியின் வேதனையைக் கண்டு எத்தனை இரக்கப்பட்டாலும், உணர்ச்சியின் வசமாகி விடாமல் நிதானத்தோடேயே இருக்க வேண்டியிருக்கிறது. கணவனுக்காகக் கண்ணீர் வடிக்கும் மனைவி, குழந்தையின் உயிர் துடிப்பதைக் கண்டு 'கோ' வென்று கதறும் ஒரு தாய், உயிரினும் இனிய தன் மனைவி மரணத்தோடு போராடுவதைக்கண்டு துடிக்கிற ஒரு கணவன்—இத்தனை பேருடைய துக்கங்களையும் கண்டு, தான் நெகிழ்ந்து விடாமல் மனத்திடத்தோடு சிகிச்சையை நடத்த வேண்டும் ஒரு டாக்டர்! அப்பப்பா! எத்தனை கடினமான ஒரு காரியம்!

சுரேஷுக்கு ஆரம்பத்தில் இதெல்லாம் ஒரே வேதனையாகத்தான் இருந்தது. ஆனால் பழகிப் பழகி இப்பொழுது மனம் ஒரு திடத்தை அடைந்து விட்டது. அப்படியென்றால், கல்லாகி விட்டது என்று அர்த்தமா? இல்லை. உணர்ச்சிகளையெல்லாம் வெளியே காட்டிக் கொண்டு கதறாமல், மௌனமாகச் சந்தோஷப்படுவதும், கண்ணீர் விடாமல் துக்கப்படுவதும் அந்த மனத்துக்குச் சித்தியாகி விட்டன!

ரவீந்திரன் அவனுடைய அநுபவங்களை அத்தனை வேகத்தோடும் படபடப்போடும் சொன்னானே! சுரேஷ்

மௌனமாகத்தானே கேட்டுக் கொண்டு வந்தார். ஆனல் அவருடைய மனமோ ?........

டாக்டர் சுரேஷ் அறிவாளி. அத்தோடு ஒரு தங்கமான மனிதருங்கூட. அறிவும், நல்ல குணமும் ஒன்று சேர்ந்து அமைந்த அபூர்வ மனிதர்களில் சுரேஷ் ஒருவர். இது காரணமாகவே அத்தனை பரிவோடும் சாமர்த்தியத்தோடும் ரவீந்திரனிடம் பேசி அவனுடைய அந்தரங்கங்களை யெல்லாம் அவரால் அறிந்து கொள்ள முடிந்தது. ஆனல் அந்த நிமிஷத்திலிருந்து அவருக்கு நிம்மதியில்லை ! நல்லவனுகவும் திறமைசாலியாகவும் உள்ள ஒரு மனிதனுடைய வாழ்க்கையில், விதி என்னென்ன விசித்திர விளையாட்டுக்களை யெல்லாம் செய்து பார்க்கிறது என்று எண்ணினர். அதே சமயம் ரவீந்திரனுடைய மன இயல்பை நன்றாக ஆராய்ந்து பார்த்து விட்டதால், இதன் முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் உள் மனத்திலே அவருக்கு ஒரு தீர்மானம் இருந்தது.

இரண்டரை மணிக்குமேல் பங்களாவுக்குள்ளே காரைக் கொண்டு வந்து நிறுத்தி விட்டு, மாடியிலே போய்க் கோட்டையும் சட்டையையும் கழற்றும்போதே, அந்தத் தீர்மானம் அவருடைய உள் மனத்தில் ஸ்திரமாக ஏற்பட்டு விட்டது.

டாக்டருடைய பங்களாவில் பெண்டுகள் யாரும் இல்லை. அவருடைய மனைவி பிரசவத்துக்காகத் தகப்பனர் வீட்டுக்குப் போயிருந்தாள். "அநேகமாக டாக்டர்களின் மனைவிகளே இப்படித்தான்! கணவர்களை அவர்களுக்கு நன்றாகத் தெரியும். பிரசவத்துக்குத் தாயார் வீட்டுக்குப் போய் விடுவார்கள்!" என்று சுரேஷ் வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு ! இப்பொழுது அவருக்கு அந்த ஏகாந்தமான வீடு எப்படியோ இருந்தது. நாலு வார்த்தை யாரிடமாவது பேச வேண்டும்போல இருந்தது அவருக்கு !

பங்களாக் காவற்காரனைக் கூப்பிட்டுக் கதவுகளைச் சாத்தும்படி சொல்லி விட்டு, சாய்வு நாற்காலியிலே

சாய்ந்தவாறு ரவீந்திரனையும் சந்திரிகாவையும் கல்யாணியையும் பற்றி எண்ணிக் கொண்டே நெற்றியைப் பிசைந்தார் சுரேஷ்!

'மனைவியினிடத்தில் உண்மையான அன்பு உள்ள ஒரு நல்ல கணவன் ரவீந்திரன். அதே சமயம் சந்திரிகாவிடம் எல்லையற்ற பாசம் அவனுக்கு இருக்கிறது. இதன் முடிவு என்ன ஆகும்?'—டாக்டர் யோசித்தார்: 'முடிவு என்ன ஆகும் என்பதில் என்ன சந்தேகம்? சந்திரிகா நான் நினைக்கிறமாதிரி மன இயல்பு உள்ளவளாக இருந்தால், நிச்சயம் என்னுடைய முடிவு சரியாகத்தான் இருக்கும். சந்தேகமேயில்லை. ஆனால் சந்திரிகா எப்படிப் பட்ட பெண்ணோ? ரவீந்திரன் சொன்ன வார்த்தைகளை வைத்துத்தானே அவளைப் பற்றி நமக்கு இப்பொழுது தெரிகிறது. வாஸ்தவமாகவே அவள் அத்தனை நல்லவளா?— இப்படியெல்லாம் யோசனைகளைப் பலமாக ஓடவிட்டுக் கொண்டிருந்த சுரேஷ், அப்படியே சாய்வு நாற்காலியிலிருந்து பதறிப் போய் எழுந்தார்!

"டாக்டர், டாக்டர்" என்று கூப்பிட்டுக் கொண்டே பங்களாக் கதவைத் தட்டியது யார்? அந்தக் குரல் ரவீந்திரனதல்லவா? ஆமாம், அதில் சந்தேகமில்லை, ரவீந்திரனேதான்!

'இப்பொழுதுதானே கொண்டுபோய் வீட்டிலே விட்டு விட்டு வந்தோம். அதற்குள் இங்கே எப்படிப் பறந்து வந்து விட்டான்!' என்று அதிசயித்துக் கொண்டே எழுந்தார் சுரேஷ். காவற்காரன் போய் ஏதாவது இசைவு கேடாகப் பேசி ரவீந்திரனை வெளியே அனுப்பி விடுவதற்கு முன்பு, தானே போய்விட வேண்டும் என்ற அவசரத்தில் அப்படியே வேகமாகப் படிகளிலே இறங்கி வாசலுக்கு ஓடி வந்தார் சுரேஷ்.

"ரவீந்திரனா?"—இவ்வாறு கேட்டுக் கொண்டே பங்களாவின் கதவைத் திறந்தார் டாக்டர்.

"அதற்குள் இங்கே எப்படி வந்து முளைத்தீர்கள்? நடந்துதானே வருகிறீர்கள்?" என்று கேட்டார் டாக்டர்.

"எப்படி வந்தேனே எனக்கே தெரியாது டாக்டர்!" என்ருன் ரவீந்திரன். அவனுக்கு மூச்சு படபடப்பாக வந்து கொண்டிருந்தது.

ஒரு நிமிஷத்தில் டாக்டர் யூகித்து விட்டார், ஏதோ எதிர்பாராத விபரீதம் நடந்திருக்கிறது என்று.

"யாருக்கும் உடம்பு ஒன்றுமில்லையே!" என்று கேட்டார் சுரேஷ்.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை ரவீந்திரன். ஒரு நிமிஷம் அவனுடைய கண் கலங்கியது, அப்படியே முகம் எல்லாம் உருகி ஓடியது.

"டாக்டர்!" என்று ஒரு குழந்தை கூப்பிடுவதைப் போலக் கூப்பிட்டுக் கொண்டே, அவருடைய மேலே சாய்ந்தான் ரவீந்திரன். வார்த்தை வரவில்லை. 'பொல பொல' என்று கண்ணீர் கொட்டியது. பாவம், தேம்பித் தேம்பி அழுதான் ரவீந்திரன்.

எந்த நிலைமையிலும் உணர்ச்சியை அடக்கிக் கொள்ளப் பழகிக் கொண்டவர் அல்லவா சுரேஷ். அப்படியே கைத்தாங்கலாக ரவீந்திரனைப் பிடித்துக் கொண்டே பங்களாவுக்குள்ளே அழைத்துப் போனுர் அவர்!

*　　　*　　　*

வாசற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. 'சந்திரிகா' என்று அழைக்கும் குரலும் கேட்டது. ராமநாதன் ஒரு கணம் நிதானித்தான்.

"இது அவர்தான்!" என்ருள் சந்திரிகா. அதற்குள் ராமநாதன் சொன்ஞன்: "இன்னொரு குரல் வரட்டும் அம்மா! ஒரு வேளை நாகரத்தினம் ஏதாவது விஷமம் செய்தாலும் செய்யக் கூடும்!"

"நாகரத்தினமா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் சந்திரிகா. "ஆமாம்" என்று சொல்லிக் கொண்டே ராமநாதன் தன் வீட்டுத் திண்ணையிலே

நாகரத்தினம் பதுங்கியதைச் சொல்லி முடிப்பதற்குள் கதவு தட்டும் ஓசை நின்று விட்டது.

" அம்மா ! நீங்கள் அறைக் கதவைச் சாத்திக் கொள்ளுங்கள். என்ன வம்புதான் நடக்கிறது, பார்த்து வந்து விடுகிறேன் !" என்றான் ராமநாதன்.

" அப்படியானால், நீங்கள் போகாதீர்கள். உதவி செய்ய வந்தவர் நீங்கள். என்னால் உங்களுக்கும்........."

ராமநாதன் அந்த வார்த்தைகளுக்குச் செவி கொடுக்கவில்லை. சந்திரிகா அவனைக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

" ஐயோ ! எனக்குப் பயமாக இருக்கிறதே !" என்று பதறினாள் அவள்.

அவளைத் தைரியப்படுத்தி விட்டு ராமநாதன் மாடிப் படிகளில் இறங்கி வர ஐந்து நிமிஷம் ஆயிற்று. வந்து கதவைத் திறந்தால், ஆளையும் காணோம், தேளையும் காணோம் ! விபரீத விஷம் ஏறிப்போன ரவீந்திரன்தான் அங்கிருந்து மறைந்து விட்டானே !

இதற்குள் கையும் காலும் பதறிக் கொண்டே ஒரு அசட்டுத் தைரியத்தில் சந்திரிகாவும் படிகளில் இறங்கிக் கீழே வந்து விட்டாள் !

" யாரையும் காணோமே !" என்றான் ராமநாதன்.

" குரல் அவரைப் போலவே இருந்ததே !" என்றாள் சந்திரிகா ஒரே வியப்போடு !

" அம்மா ! மாரீசன் என்ற பிறவி இந்தக் காலத்திலும் நம்மிடையே இருக்கிறது. இந்த நாகரத்தினம் மான் வேஷம் கூட எடுக்கக் கூடியவன், அம்மா !" என்றான் ராமநாதன்.

சந்திரிகாவுக்கு உடம்பெல்லாம் பனிக் கட்டியாக ஜில்லிட்டது.

" அம்மா ! நீங்கள் கொஞ்சம் தைரியமாக இருங்கள் ! கதவைத் தாளிட்டுக் கொண்டு கீழேயே இருங்கள்.

மாடியில் என்றால் பயப்படுவீர்கள். நான் பத்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன். உங்களோடு தனியாக இருப்பது ஆபத்து" என்றான் ராமநாதன்.

"அப்படியென்றால்......?"

"நீங்கள் கதவைப் பூட்டிக் கொண்டு பத்து நிமிஷம் இருங்கள். நான் அதற்குள் அப்புலிங்கம் வீட்டுவரை போய் வந்து விடுகிறேன்" என்றான் ராமநாதன்.

"அப்புலிங்கம் வீட்டுக்கா? இந்த வேளையிலா போகிறீர்கள்?"

"ஆமாம். அங்கே டெலிபோன் இருக்கிறது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் செய்ய வேண்டும்!"

"ஐயோ! எனக்கு எப்படியோ இருக்கிறதே. தெய்வமே இதெல்லாம் என்ன கொடுமை! நான் ஒருத்தி இவ்வுலகில் எதற்காகப் பிறந்தேன்!"

சந்திரிகா ஏதேதோ புலம்புவதற்கு ஆரம்பித்து விட்டாள்.

ராமநாதனுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை.

"அம்மா! இந்த மாதிரி அனுபவம் எனக்குமே புதிது தான். என் புத்தியும் குழம்புகிறது. ஆனாலும் நீங்கள் ஒரு அபலை. பதறி நடுங்குகிற பெண் பிறவி. இந்த நிலைமையில் உங்களைவிடத் தைரியமாக இருந்து ஆகக் கூடியதைச் செய்ய வேண்டியதுதான் என்னுடைய கடமை. மனசைத் தளர விடாதீர்கள். எங்கள் தாயுமானவர் தெரு அப்படி யொன்றும் கேட்பாரற்றுப் போய்விடவில்லை. கூச்சல் போட்டுக் கூட்டம் சேர்க்க வேண்டாமே என்று நினைத்தேன். அவ்வளவுதான். நீங்கள் ஒரு பத்து நிமிஷம் தைரியமாக வீட்டுக்குள்ளே இருங்கள். நான் இதோ வந்து விடுகிறேன்."

இவ்வாறு கூறிச் சந்திரிகாவை வீட்டினுள்ளே கதவைத் தாளிட்டுக் கொள்ளும்படி சொல்லிவிட்டு, வேகமாக அப்புலிங்கத்தின் வீட்டை நோக்கி நடந்தான் ராமநாதன்.

அன்றிரவு எல்லாருக்குமே சிவராத்திரிதான் போலிருக்கிறது: அப்புலிங்கம் அப்பொழுதுதான் அப்பாவையும் அம்மாவையும் ஆஸ்பத்திரிலேயே தூங்கச் செய்து விட்டு, வீடு திரும்பியிருக்கிறான். எனவே ராமநாதன் போய்க் கதவை இரண்டு தடவை தட்டுவதற்குள் அவனே வந்து திறந்தான்.

"என்னடாப்பா, இது! இந்த நேரத்திலே நீ வந்து நிற்கிறாய்?" என்று திகைப்புடன் கேட்டான் அப்புலிங்கம்.

"கதை பேசுவதற்கெல்லாம் இது சமயம் இல்லை. ரவீந்திரன் வீட்டில் சந்திரிகா தனியாக இருக்கிறாள்—"

"சந்திரிகாவா? நீ எங்கே அங்கு போய்ச் சேர்ந்தாய்?" என்று கேட்டான் அப்புலிங்கம். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது!

"அதெல்லாம் விவரமாகப் பேசலாம். இப்பொழுது அவசரமாக டெலிபோன் செய்யவேண்டும்!"

"யாருக்கு?"

"போலீஸ் ஸ்டேஷனுக்கு. ரவீந்திரன் வீட்டில் திருடன்!"

"திருடனா? பிடித்து விட்டாயா அவனை?"

ராமநாதனுக்கு ஆத்திரம் வந்தது. அப்புலிங்கம் சொன்னான்: "ராமநாதா! என்னிடம் சுருக்கமாக விஷயத்தைச் சொல்லு. இந்த நேரத்தில் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் செய்து, என்ன காரியத்தைச் சாதிக்க முடியும்?"

வேறு யாராவது அப்படிச் சொல்லியிருந்தால் ராமநாதனுக்கு அசாத்தியமாகக் கோபம் வந்திருக்கும். ஆனால் அப்புலிங்கத்தின் உண்மையான இதயம் ராமநாதனுக்குத் தெரியுமாதலால், ஒரு நிமிஷம் யோசித்தான்.

"சந்திரிகா தனியாக இருக்கிறாள் என்று கவலையோடு சொன்னாயே! நேரத்தை வீணாக்காதே. விஷயத்தைச்

சொல்லு. ஆகவேண்டியதை உடனே கவனிப்போம்!" என்றான் அப்புலிங்கம்.

அவன் பேச ஆரம்பித்த இரண்டாவது நிமிஷத்திலேயே டெலிபோன் யோசனையைக் கைவிட்டான் ராமநாதன்.

"தம்பி! திருடனைப் பிடித்து வைத்துக் கொண்டு அதற்குமேல் செய்ய வேண்டிய காரியமப்பா, நீ சொல்லுவது! போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் கொடுக்கிற காரியத்தை என்னிடம் விட்டுவிடு. எனக்குத் தெரியும். முதலில் திருடனைப் பிடிப்போம்!" என்றான் அப்புலிங்கம்.

"இதென்ன வேடிக்கை நீ சொல்லுவது?" என்றான் ராமநாதன்.

"தம்பீ! திருடனை அப்படியே கொண்டு வரச் செய்கிறேன் பார். கிளம்பு!" என்றான் அப்புலிங்கம்.

ஒன்றும் புரியாமல் ராமநாதன் 'திரு திரு' என்று விழித்துக் கொண்டிருக்கும்போதே, அப்புலிங்கம் தன் வீட்டுத் தோட்டக்காரனைக் கூப்பிட்டுக் கதவை நன்றாகப் பூட்டிச் சாவியைக் கையிலே எடுத்துக் கொண்டு, உடனே தன்னோடு புறப்படும்படி கட்டளையிட்டான்.

"கிளம்பு ராமநாதா! முதலில் ரவீந்திரன் வீட்டுக்குப் போவோம்!" என்றான் அப்புலிங்கம்.

ராமநாதனுக்கு வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. அப்படியே அப்புலிங்கத்தின் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்தான்.

தோட்டக்காரன் பின்தொடர அப்புலிங்கமும் ராமநாதனும் அந்த நிசி வேளையில் ரவீந்திரன் வீட்டை நோக்கி வேகமாக நடந்தார்கள்.

"என்னதான் யோசனை? சொல்லேன்!" என்றான் ராமநாதன், மௌனமாக நடந்த அப்புலிங்கத்தைப் பார்த்து.

"தம்பீ! உனக்கு உஸ்தாத் மீரானைத் தெரியுமா?" என்று கேட்டான் அப்பு.

"கேள்விப்பட்டிருக்கிறேன். நேரில் பழக்கமில்லை" என்றான் ராமநாதன்.

"நமக்கு ரொம்பவும் வேண்டியவர் அவர். இந்தத் திருச்சி வட்டாரத்தில் அவரைத் தப்பி இந்த மாதிரி ஒரு காரியம் நடவாது. போலீஸுக்கே சில சமயங்களில் வழி சொல்லிக் கொடுக்கிறவர் அவர்! பெரிய பெரிய திருட்டுக் கேஸ்களில் போலீஸுக்கே அவர்தான் துப்புத் துலக்க வேண்டும், தெரியுமா?" என்றான் அப்புலிங்கம்.

"சரி! இப்பொழுது அவரைக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்?"

"அவரைக் கூப்பிட்டு விடுவதற்கெல்லாம் பஞ்சாங்கம் பார்க்கக் கூடாது தம்பி. இப்படியே ரவீந்திரன் வீட்டுக்குப் போய் நாம் உட்கார்ந்து கொண்டு, நம்முடைய தோட்டக்காரனை அனுப்பினால் உடனே வந்து விடுவார் உஸ்தாத். எங்கே எப்படிக் கன்னம் வைத்திருக்கிறான் என்பதைப் பார்த்ததுமே, அவருக்குக் கன்னம் வைத்த ஆசாமி யார் என்று இனம் தெரிந்துவிடும்!" என்றான் அப்புலிங்கம்.

"இந்த ராத்திரியே அவருக்கு ஆள் அனுப்ப வேண்டுமா?......"

"தம்பீ! ஒரு வினாடி தாமதித்தாலும் போச்சு காரியம்! எதிரி போய் அவரை அணுகுவதற்குள் நம்முடைய ஆள் அவரிடம் போய் நிற்கவேண்டும். அவர் காரியம் அப்படி! எல்லாருக்கும் வேண்டியவர் அவர்! புரிந்ததா?" என்றான் அப்புலிங்கம் அழுத்தந் திருத்தமாக!

ராமநாதனும் அப்புலிங்கமும் வேகமாக நடந்தார்கள். தாயுமானவர் தெருவில் நுழைந்து திரும்பியதுமே, ராமநாதன் சற்று முன்னால் நடந்து சென்று ரவீந்திரன் வீட்டுக் கதவை மெதுவாகத் தட்டினான்.

எப்பொழுது வருவான் ராமநாதன் என்று, ஆவலும் பயமும் மேலிட்டவளாக ஏகாந்தமாய் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டே இருந்த சந்திரிகா வேகமாக வந்து கதவைத் திறந்தாள்.

ராமநாதனும் அப்புலிங்கமும் வீட்டுக்குள்ளே நுழைந்தார்கள். தோட்டக்காரன் அவர்கள் உத்தரவுக்காகக் காத்தவனாக, வெளியே திண்ணையில் நின்றான்.

ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே ராமநாதனும் அப்புலிங்கமும் நுழைந்ததும், சந்திரிகாவுக்குச் சற்றுத் தைரியம் ஏற்பட்டது.

"இவர்தான் அப்புலிங்கம். மூதூர் மிராசுதார்!" என்றான் ராமநாதன். சந்திரிகா பணிவும் பரிவும் தோன்றக் கைகூப்பி வணங்கினாள்.

"உட்காரு அப்புலிங்கம்" என்று ஊஞ்சலைக் காட்டினான் ராமநாதன். நாற்காலியிலே அவன் உட்கார்ந்து கொண்டான். சந்திரிகா உள் வீட்டு அறையின் கதவிலே சாய்ந்தவாறு நின்று கொண்டாள்.

அந்த நேரத்தில் வெளியே தெருவில் கார் வந்து நின்ற ஓசை கேட்டது. டாக்டர் சுரேஷும், ரவீந்திரனும் காரிலிருந்து இறங்கி ஒரே திகைப்போடு வீட்டுக்குள்ளே வந்தார்கள்.

## 12. அல்லாஹ் பேரில் ஆணை!

டாக்டர் சுரேஷ் தமது பங்களாவுக்குள்ளே ரவீந்திரனைக் கைத் தாங்கலாக அழைத்துச் சென்றார் அல்லவா? அப்படிச் சென்றவர் அவனைச் சாய்வு நாற்காலியில் அமர்த்திவிட்டு, வழக்கம்போல் ஒரு கண்ணாடித் தம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்துக் குடிக்கச் சொன்னார்.

"குளிர்ந்த தண்ணீரைப் போலச் சிறந்த மருந்து இந்த உலகில் வேறு எதுவுமே இல்லை. இதைக் குடியுங்கள், மிஸ்டர் ரவீந்திரன். உங்கள் படபடப்பு அடங்கட்டும்!" என்றார் டாக்டர்.

தண்ணீரைக் குடித்ததும் ரவீந்திரனுடைய முகத்தில் மெதுவாகத் தெளிவு உண்டாக ஆரம்பித்தது.

“சரி; சொல்லுங்கள். என்ன விபரீதம் நடந்து விட்டது? ஏன் இப்படி அவசரம் அவசரமாக ஓடி வந்தீர்கள்?” என்று கேட்டார் சுரேஷ்.

உள் மனத்தில் எத்தனை ஆவலும் பதற்றமும் அவருக்கு இருந்தபோதிலும் வெளியே அவற்றைக் காட்டிக் கொள்ளவில்லை டாக்டர்.

ரவீந்திரன் மெதுவாக விஷயத்தைச் சொன்னான். டாக்டர் மனத்துக்குள்ளேயே கொஞ்சம் குழம்பினரென்றாலும், வெளியே சிரித்துக் கொண்டார்.

“சரி; ஆண் குரல் கேட்டது. அதனால் என்ன?” இப்படி ரவீந்திரனிடம் கேட்டுக் கொண்டே தம்முடைய மூளைக்குள்ளே தாமே அந்தக் கேள்வியை யோசித்துப் பார்த்தார்.

ரவீந்திரனே டாக்டரின் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. அவனுக்கே அவனுடைய சந்தேகத்தை வெளியிட்டுச் சொல்லக் கூச்சமாக இருந்தது!

“மிஸ்டர் ரவீந்திரன்! ஒன்று சொல்கிறேன். கோபித்துக் கொள்ளாதீர்கள். இந்தக் கலைஞர்களே எப்பொழுதும் இப்படித்தான். சர்வ சந்தேகப் பிராணிகள்! சட்டென்று அவர்களுக்குக் கற்பனை பலமாக வேலை செய்து விடும். வேறு யாருக்குமே தோன்றாத முறையிலெல்லாம் அவர்கள் பிறரைச் சந்தேகிக்க ஆரம்பித்து விடுவார்கள்! அதிலும் அன்பு யாரிடம் அதிகமாக இருக்கிறதோ அந்த மனிதர்களிடத்திலே தான் அதிகமாகச் சந்தேகப் படுவார்கள்—உங்களை மாதிரி!”

இவ்வாறு ரவீந்திரனைச் சிரிக்கப் பண்ணுவதற்கு முயன்றார் சுரேஷ். ஆனால் அவனோ சிரிப்பதாகக் காணோம்.

“மிஸ்டர் ரவி, வேடிக்கைப் பேச்சு ஒருபுறம் இருக்கட்டும். வாஸ்தவமாகவே கேட்கிறேன், சொல்லுங்கள். மாடியிலே உங்கள் உறவினர் யாராவது வந்திருக்கக் கூடாதா? அல்லது சந்திரிகாவின் அண்ணனோ தம்பியோ வந்திருக்கக் கூடாதோ?”

"அவளும் ஒரு அனுதைதான் டாக்டர், என்னைப் போல!" என்றுன் ரவீந்திரன்! அந்தக் குரலிலேதான் எத்தனை விரக்தி!

சுரேஷுக்கு ரவீந்திரனுடைய மனநிலை புரிந்தது. சொன்னுர்:

"மிஸ்டர் ரவி, இன்றிரவு ஆஸ்பத்திரியிலே என்னைச் சந்தித்ததிலிருந்து நான் சொல்கிறபடியே ஓரளவு கேட்டு நடந்து விட்டீர்கள். இனிக் குறையும் கேட்டு விடுங்கள். என்னேடு இப்பொழுதே கிளம்புங்கள். நேரே உங்கள் வீட்டுக்குப் போவோம். உங்களுடைய சந்தேகம் தெளிந்தால் ஒழிய உங்களுக்கு நிம்மதி இராது. அதைத் தெளிய வைத்தால் ஒழிய எனக்கும் நிம்மதி வராது!"

இப்படி டாக்டர் சொன்னபோது, உண்மையில் அவருக்குமே அந்தச் சந்தேகத்தைத் தெளிவித்துக் கொள்ள வேண்டும் என்று ஆவலாக இருந்தது!

ரவீந்திரனும் டாக்டர் சுரேஷும் காரிலே கிளம்பித் தாயுமானவர் தெருவை அடைவதற்கும், அப்புலிங்கமும் ராமநாதனும் ரவீந்திரன் வீட்டினுள் நுழைவதற்கும் சரியாக இருந்தது!

**வீ**ட்டினுள் ரவீந்திரன் அடியெடுத்து வைத்ததுமே சந்திரிகா 'கோ' என்று கதற ஆரம்பித்து விட்டாள். அதைப் பார்த்ததும், ரவீந்திரனுக்கு உள்ளம் எல்லாம் அப்படியே கரைந்து போய்விட்டது. எழுந்து போய் உள் அறையில் அவளுக்கு அருகே நின்று கொண்டான்.

"சந்திரிகா! ஏனம்மா இப்படி அழுகிருய்? என் பேரில் உனக்குக் கோபமா?" என்று கேட்டான் ரவீந்திரன்.

இந்த இடத்தில் டாக்டருக்குச் சிரிப்பு வந்தது! ஆனுலும் அதை அடக்கிக் கொண்டு, 'கோபப்பட்டு அப்படியே 'விரிச்'சென்று திரும்பி நடந்த அதிசய மனிதன இப்பொழுது இப்படிக் கேட்கிருன்! பாசந்தான் எத்தனை விநோதமானது!' என்று எண்ணிக் கொண்டார் அவர்.

ஐந்து நிமிஷத்தில் நடப்புக்கள் எல்லாம் வெட்ட வெளிச்சம் ஆயின. ரவீந்திரனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. பிரமை பிடித்தாற் போல் அப்படியே உட்கார்ந்து விட்டான் அவன்!

டாக்டர் சுரேஷும் அப்புலிங்கமும் அன்றிரவு நடந்த சம்பவங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். ராமநாதன் இடையிடையே நாகரத்தினத்தைப் பற்றிய அநுபவத்தைச் சொல்லிக் கொண்டிருந்தான். முடிவில் டாக்டருக்கு அப்புலிங்கம் கூறிய யோசனை பிடித்திருந்தது. உஸ்தாத் மீரானைப் பற்றி அவருக்குத் தீர்க்கமாகத் தெரியும். அவர் வந்து விட்டால் திருடனே பிடிபட்ட மாதிரித்தான் என்று அவர் நன்றாக அறிவார். எனவே அவர் சொன்னார்:

"மிஸ்டர் அப்புலிங்கம்! என்னுடைய காரை வேண்டுமானாலும் நீங்கள் எடுத்துக் கொண்டு செல்லலாம். தோட்டக்காரன் இங்கேயே காவலாக இருக்கட்டும். நீங்களே போய் அவரைக் கையோடு அழைத்து வாருங்கள். பிறகு பேசிக் கொள்வோம்!" என்றார் டாக்டர் சுரேஷ்.

தாயுமானவர் தெருவில் இத்தனை பேச்சு நடந்து கொண்டிருந்தபோது, உஸ்தாத் மீரான் வீட்டிலோ ஒரு எதிர்பாராத சம்பவம் நடந்து விட்டது!

* * *

**உ**ஸ்தாத் மீரானுக்கு ஆமினா என்று ஒரு மகள். அவளைப் பெற்றெடுக்கும் போதே, அவளுடைய தாயாருக்கு ஜன்னி கண்டு இருபத்து நான்கு மணி நேரத்திலெல்லாம், அவள் இந்த உலகை விட்டுப் பிரிந்தாள். அந்த வினாடியிலிருந்து மீரானே தாயும் தகப்பனுமாக இருந்து எத்தனையோ பிரயாசைப்பட்டு அந்தச் சிசுவை வளர்த்தார். இது காரணமாக அவருடைய உள்ளத்தில் பிள்ளைப் பாசம் என்பது ஒரு தாயின் அன்பைப் போல அத்தனை தீவிரமாக இருந்து வந்தது.

உஸ்தாத் மீரான் இயற்கை அறிவு நிரம்பியவர். இங்கிலீஷ் படிப்புப் படித்திருந்தால் ஒரு கல்லூரியின்

பிரின்ஸிபலாக விளங்கியிருக்க வேண்டியவர். ஆனாலும் ஜாதகம் பொய்த்தா போய்விடும்? இன்றைக்கும் அந்த குரு ஸ்தானத்துக்கு யாதொரு குறைவுமின்றி நித்திய நிரந்தர "உஸ்தா"தாகவே அவர் விளங்கி வந்தார்.

என்றாலும் மீரானுக்கு மனத்துக்குள்ளே ஒரு பெரிய குறைதான்! அந்தக் காலத்தில் பள்ளிக்கூடத்திலே படிக்காமல் புத்தியைக் கடன் கொடுத்து விட்டோமே என்று எண்ணி வருந்துவார். அதற்குப் பிராயச்சித்தமாக இப்பொழுது அவருக்கு ஒரு மகன் மட்டும் இருந்தால் அந்த மகனை நிச்சயம் பெரிய கலாசாலைப் பேராசிரியராகவே ஆக்கி விட்டுத்தான் கண்ணை மூடுவார். ஆனால் பாவம்! அல்லாஹ் அவருக்கு அந்தப் பாக்கியத்தை அருளவில்லை. ஒரு மகளைத்தான் கொடுத்தான். மகனுக்காக வேண்டி இப்பொழுது இன்னொரு 'நிக்காஹ்' செய்து கொள்ளலாம் என்றால், மகளை வளர்த்து ஒரு நல்ல நிலைக்குக் கொண்டுவர முடியாமற் போய் விட்டால்?... இரண்டாவது மனைவி எப்படி நடந்து கொள்வாளோ? என்ன சொல்ல முடியும்?

இதையெல்லாம் உத்தேசம் பண்ணியே, மீரான் தம்முடைய மனைவி இறந்தபின் இரண்டாவது 'நிக்காஹ்' செய்து கொள்ளவில்லை. மகன்தான் இல்லை, தனக்கு வருகிற மருமகனாவது ஒரு கலாசாலை 'ப்ரொபஸரா'க இருக்கவேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். இந்த ஆசையை, பருவம் வந்த பிறகு தம்முடைய மகளிடம்கூட வெளிப்படையாகச் சொன்னார் உஸ்தாத் மீரான்!

ஆமினா நல்ல அழகி. சுண்டினால் ரத்தம் வந்து விடும். அத்தனை மெல்லிய செம்மேனி அவளுக்கு. கூந்தலோ சுருள் சுருளாகக் 'கரு கரு' என்று அடர்ந்து அந்தச் சிவப்பு முகத்தின் அழகை இன்னும் எடுப்பாகக் காட்டும். இப்படிப்பட்ட அழகியின் மனத்தில் இருந்த ஆசை?......

தன்னுடைய 'பாவா' நினைப்பதில் பிசகில்லை. அன்பினால் அப்படி நினைக்கிறார். ஆனால், தான் 'நிக்காஹ்' செய்து கொள்ளப் போவது ஒரு வாலிபனையா, அல்லது அவனுடைய உத்தியோகத்தையா?...

உஸ்தாத் மீரானுடைய சிலம்பப் பள்ளிக்கூடத்தில் அப்துல் மஜீத் என்று ஒரு வாலிபன் இருந்தான். நல்ல உயரமான இளைஞன். பெரிய நிலைமையிலிருந்து க்ஷீணித்துப் போன ஒரு கண்யமான பட்டாணிக் குடும்பத்தைச் சேர்ந்தவன். அரபு நாட்டின் சுந்தரக்களை சொட்டுகிற முகம். அதைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். பசி எடுக்காது. ஆனால் அவன் ஒரு கலாசாலைப் பேராசிரியர் இல்லை! உண்மையில் அவனுடைய படிப்பு எல்லாம் எட்டாவது வகுப்போடு சரி. அவனுடைய தாதா ஒரு ஹபீஸ். அவர் அவனுக்குத் திருக் குர்ஆன் முழுதும் நன்ருகச் சொல்லி வைத்திருந்தார். இசையோடு அவன் அதை ஓதுவதைப் பார்த்து ஹேமமும்,பக்கீரும், மௌல்விகளும் மூக்கின்மேல் விரல் வைத்து அதிசயிப்பார்கள். அவனுடைய குரலில் இயல்பாகவே உருக்கம் உண்டு. அந்த உருக்கமான ஒலியோடு அவன் குரானை ஓதும்போது, கல் நெஞ்சங் கூடக் கரைந்து விடும்.

ஆமினுவுக்கு மஜீதிடம் ஒரு விவரிக்க ஒண்ணுத பிரியம். அவனை 'நிக்காஹ்' செய்துகொள்ள வேண்டும் என்று அவள் விரும்பினுள். ஆனால் உஸ்தாத் மீரானே அவளுக்குக் கல்லூரி மாணவர்களிலே ஒரு மாப்பிள்ளை அகப்பட மாட்டானு என்றுதான் தேடிக் கொண்டிருந்தார்!

ஆமினு தன்னுடைய தகப்பனுரிடம் மறைமுகமாகவும் சில சயங்களில் வெளிப்படையாகவும் கூடத் தன்னுடைய மனத்தைச் சொல்லிப் பார்த்தாள். ஆனுல் பாவா அசைய வில்லை!

ஒரு நாள் அப்துல் மஜீதும் ஆமினுவும் தனியாக மீரான் வீட்டுத் தோட்டத்தில் சந்தித்தார்கள். தகப்பனுருடைய சம்மதம் பெற்று 'நிக்காஹ்' நடப்பது என்பது முடியாத காரியம் என்று அவர்களுக்குத் தெளிவாகத் தெரியும். ஆனுல் இதயங்களோ ஐக்கியப்பட்டு நின்றன. இந்த நிலையில் என்ன செய்வது?

அப்துல் மஜீதுக்கு ரங்கூனில் ஒரு 'சாச்சா' இருந்தார். மஜீத் சொன்னுன்: "நாம் இருவரும் ரகசியமாக 'நிக்காஹ்'

செய்து கொண்டு யாருக்கும் தெரியாமல் இங்கிருந்து ரங்கூனுக்கு ஓடிப்போய் விட்டால் என்ன?''

இந்த யோசனை முதலில் ஆமினுவுக்குப் பயங்கரமாக இருந்தது. ஆனாலும் அவளுடைய மனத்தில் மஜீத்துக்காகப் பொங்கிப் பெருகிய அன்போ, ஒரே வெள்ளமாக இருந்தது! அவள் சொன்னாள்:

"ஓடிப்போய்விடலாம். ஆனால் பாவா என்ன செய்வார்?''

மஜீத் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக ஐந்து நிமிஷம் இருந்து விட்டுப் பிறகு அவன் சொன்னான்:

"ஆமினு! எனக்கு மட்டும் அவரிடம் மரியாதை இல்லையா? உனக்குப் பாவா என்ற பிரியம். எனக்கு என்னுடைய உஸ்தாத் என்ற பிரியம். ஆனால் நம் இருவருக்கு மத்தியிலும் இருக்கிற பிரியமோ இந்த இரண்டையும் கடந்து விட்டதே!''

ஆமினு பலமாக யோசனை செய்தாள். சொன்னாள்:

"ரங்கூனிலேயே போய் நிக்காஹை முடித்துக் கொண்டு விடலாமே!''

'பளிச்' சென்று பதில் சொன்னான் மஜீத்:

"ஆமினு! நிக்காஹ் ஆகாத ஒரு பெண்ணோடு ஓடிப் போனவன் என்ற பழி எனக்கு உண்டாவதை மட்டும் நான் விரும்ப மாட்டேன். எத்தனையோ மௌல்விகளும், ஹபீஸ்களும் பிறந்த குடும்பம் என் குடும்பம். என் தாதா எனக்குச் சொல்லிக் கொடுத்த திருக் குர்ஆனுக்கு விரோதமான ஒரு காரியம் நான் செய்யவே கூடாது!''

ஆமினு ஒரு மானைப் போல மருண்டு மருண்டு பார்த்தாள். அவள் நிலையை உணர்ந்து மஜீத் சொல்லுவான்:

'பீவீ, ஒன்று சொல்கிறேன், கேள். இந்த ஊர் காஜியாரிடம் நம்முடைய நிக்காஹ் பதிவாகுமானால் அதிகக் கஷ்டம் இல்லை. அவருக்கும் நான் குர்ஆன் ஓதுவதைக் கேட்டதிலிருந்து என்னிடம் ஒரு பிரியம். இதை விட்டு விட்டு ரங்கூன் போன்ற அயல் இடத்தில் போய் இருந்து கொண்டு, 'ரியால்' பலகைக்கு முன் நின்று 'தஸ்தகத்'

புஸ்தகத்தில் நம்முடைய பெயரைப் பொறிப்பது என்ருல் அது மிக மிக இடைஞ்சலான காரியம். ஆயிரம் கேள்விக்கு இடம் உண்டாகும்!"

மஜீத் சொன்ன இந்த சமாதானம் ஆமிளுவுக்கு நியாயம் என்று பட்டது.

**ப**ண்டிகை நாள் அது. மீரான் இரவு முழுதும் கோதாவிலே கழிக்கிற சமயம். எனவே, இரவுக்கு இரவே இருவரும் வீட்டிலிருந்து கிளம்பி, வைகறைக்கு முன்ஞல் காஜியாரைப் போய்ப் பார்த்துச் சம்மதம் பெற்று விடுவது என்று தீர்மானித்தார்கள்.

காஜியார் எளிதில் ஒப்புக் கொண்டு விடுவாரா? அதிலும் உஸ்தாத் மீரானுடைய மகள் என்று தெரிந்தால் எத்தனை கேள்விகள் போடுவார்? பெண்ணின் 'பாவா' அங்கீகரிக்கவில்லை யென்ருல், சிற்றப்பா அல்லது தாய் மாமன் யாராவது உடன் இருக்க வேண்டுமே?

மஜீதுக்கு உள்ளூரிலும் ஒரு 'சாச்சா' இருந்தார். முற்போக்கான மனிதர் என்று தம்மைச் சொல்லிக் கொள்வதிலும், புரட்சிகரமான செயல்களில் ஈடுபட்டு முடித்து வைப்பதிலும் ஒரு திருப்தி உடையவர் அவர்! மஜீத் தன்னுடைய யோசனைக்கு அவருடைய அங்கீகாரத்தை வாங்கி விட்டான்!

கோதாவில் இரவு நெடு நேரம் இருந்து களைத்துப் போனவராக, வீட்டுக்குள்ளே சென்று தேயிலை குடித்து வரலாம் என்று போன மீரான் அப்படியே திகைத்துப் போய் நின்ருர்! உள்ளே கூடத்தில் பாயிலே படுத்திருந்த அவருடைய மகளைக் காணவில்லை!

"ஆமிஞ......ஆமிஞ......" என்று இரண்டு முறை கூப்பிட்டுப் பார்த்தார். பதில் இல்லை. அவருக்கு உடம்பெல்லாம் சினம் பொங்கி ஓடியது. ஆளுலும் சிஷ்யப் பிள்ளைகள் யாரிடமும் வெளியிட்டு விட்டால் அவமானம் என்று எண்ணி, கோதாவுக்குத் திரும்பி வந்து, வழக்கம் போல் ஏதோ திடீர் அவசர காரியமாய் வெளியே போவதாகச் சொல்லி விட்டு, மாடிக்கு வந்து 'பிச்சுவா'வை

மட்டும் எடுத்து இடுப்பிலே சொருகிக்கொண்டு, விறுவிறு என்று நடந்தார் மீரான். நேரே அப்துல் மஜீதின் சாச்சா வீட்டுக்குத்தான் வந்தார்.

சாச்சாவை வீட்டிலே காணேம். அவ்வளவுதான். கள் குடித்துப் போதை ஏறிய ஒரு மூர்க்கனைப் போலத் தெருவெல்லாம் நடந்தார். சந்து பொந்துகளில் எல்லாம் படர்ந்தார். சுமார் ஒரு மணி நேரம் மதம் கொண்ட யானை யாக, திருச்சிப் பாலக்கரைத் தெருக்களில் எல்லாம் புகுந்து புகுந்து வந்தார் உஸ்தாத் மீரான்!

வானம் தெளிகிற சமயம் அது. மசூதியிலிருந்து முஸ்லீம்களைத் தொழுகைக்குக் கூப்பிடுகிற உருக்கமான ஓசை காற்றிலே மிதந்து வந்தது. களைப்பும் வேதனையும் குழப்பமுமாகத் தெருவிலே நின்ற மீரான், ஒரு வினடி அந்தப் பரிசுத்தமான பிரார்த்தனைக் குரலிலே வசமாகி நின்ருர்.

திக்கற்ற மனிதர்களுக்கு வழி காட்டுகிறேன் என்று வரவேற்கிற புனிதமான குரல்! இருள் சூழ்ந்த இந்தக் கண்ணற்ற உலகில் கைவிளக்குத் தருகிறேன் என்று கூப்பிடுகிற தெய்வத்தின் அழைப்பு அது!

மீரான் ஒரே கிறக்கத்தோடு பள்ளி வாசலுக்குள்ளே நடந்தார். ஆனல் என்ன ஆச்சரியம்! அது காஜியாரின் பேச்சுக் குரல் மாதிரியல்லவா இருக்கிறது! மீரான் ஒரு வினடி நின்று கேட்டார்.

“ தம்பி! என்னதான் உன்னுடைய சாச்சா சம்மதித் தாலும், பெண்ணுக்கு உறவினர்கள் ஒருவரும் வேண் டாமா? விருப்பப்படுகிற ஆணையும் பெண்ணையும் தடை செய்யக் கூடாதுதான். ஆனலும் உன்னை நம்பி ஒரு பெண் கடல் கடந்து வருவதற்குத் தயாராக இருக் கிறது என்ருல், அதை ரட்சிக்க வேண்டியது என்னுடைய கடமையல்லவா? நீ அதைக் கைவிட மாட்டாய் என்று நான் எப்படி நம்புவது?” என்று உணர்ச்சியுடன் கேட்டார் காஜியார்.

சற்று நேரத்துக்கு முன்பு தெய்விக அழைப்பிலே கிறங்கி நின்ற மீரானுக்கு, இப்பொழுது சினம் தலைக்கு

ஏறிற்று. அப்படியே குரல் வந்த திசையை நோக்கி எட்டிப் பார்த்தார்.

துரோகம்! பாவாவுக்குத் துரோகம் செய்த மகள்—எத்தனை பிரியத்தோடு அவளை வளர்த்தார்! உஸ்தாதுக்குத் துரோகம் செய்யும் சீடன்—எத்தனை பிரியத்தோடு அவனுக்கு வித்தை கற்பித்தார்!

மீரானுக்குத் தலை சுற்றியது. அப்படியே 'பிச்சுவா'வை இடுப்பிலிருந்து உருவிக் கொண்டே பாய்ந்தார் மீரான்! ஆனால் இதென்ன?......

"இது மசூதி. அல்லாஹ் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன். கத்தியை விடு!"

இவ்வாறு சொல்லிக் கொண்டே மீரானின் கையைப் பிடித்தார் காஜியார்.

இந்த நேரத்திலேதான் டாக்டர் சுரேஷின் காரை வீதி யெங்கும் ஓட்டிக் கொண்டே உஸ்தாத் மீரானைத் தேடித் தேடி அலைந்து கொண்டிருந்தான் அப்புலிங்கம்!

## 13. மீரான் சபதம்!

"இது மசூதி. அல்லாஹ் பேரில் ஆணை! கத்தியை விடு."

இந்த வார்த்தைகள் காஜியாரின் இதயத்திலிருந்து வந்தன. மீரானுடைய இதயத்திலே சென்று தாக்கின.

"அல்லாஹ் பேரில் ஆணை!"—எத்தனை பெரிய வார்த்தை அது.

உஸ்தாத் மீரானுக்குத் தலை வேகமாகச் சுற்றியது. ஓங்கிய கையிலிருந்து பிச்சுவா தளர்ந்தது. அப்படியே கையைத் தொங்கப் போட்டுக் கொண்டே தலையை வளைத்துக் காஜியாருக்கு 'சலாம்' செய்தார் மீரான்.

" பாவா " என்று கத்திக் கொண்டே மீரானுடைய காலிலே வந்து விழுந்தாள் ஆமினு. மீரானுக்கு மனத்தை என்னவோ ஓர் உணர்ச்சி வந்து தளர்த்தியது. அவருடைய இதயத்தில் பிள்ளைப் பாசம் என்பது ஒரு தாயின் அன்பாக அல்லவா இருந்தது? அந்த அன்பு இப்பொழுது அவரை ஆட்கொண்டது.

" மீரான், என்ன காரியம் செய்வதற்கு இருந்தாய்! உட்காரம்மா !" என்ருர் காஜியார், மீரானைப் பார்த்து. அளவு கடந்த பரிவோடு பேசும் போது ஆண்களையும்கூட " அம்மா " என்றுதான் அன்போடு கூப்பிடுவார் காஜியார். இப்பொழுது அந்த " அம்மா " என்ற அழைப்பு மீரானுடைய உள்ளத்தில் இரட்டிப்பு வேகத்தோடு சென்றது. உண்மையில் மீரான் ஆமினுவின் அப்பா மட்டுமில்லை. அம்மாவுந்தான்! அந்தப் பாசத்தையே கிளறுவது போன்று வந்த காஜியாரின் ' அம்மா !' என்ற வார்த்தை, இறந்துபோன மனைவியின் நினைவை அப்படியே பசுமையாக மீரானின் உள்ளத்தில் கொண்டு வந்து நிறுத்தியது.

காஜியார் பேச ஆரம்பித்தார் :

" திருக் குர்ஆன் சொல்கிறது : ' **விசுவாசிகளே ! பெண்களுடைய விருப்பத்துக்கு மாருக, அவர்களை நீங்கள் வாரிசுகளாக ஆக்கிக் கொள்வது கூடாத செய்கையாகும். அவர்கள் மணம் செய்து கொள்வதிலிருந்தும் அவர்களைத் தடை செய்ய வேண்டாம்... அவர்களை அன்போடு நடத்துங்கள். நீங்கள் அவர்களை வெறுத்தால், அல்லாஹ் பெரிதும் நன்மை வைத்துள்ளதை நீங்கள் வெறுப்பதாகி விடும்.**"

இப்படிச் சொல்லிக் கொண்டே மயில் பீலியை எடுத்து மீரானுடைய உடம்பிலே ஒரு தரம் ஏற இறங்கத் தடவி விட்டார் காஜியார். மீரானுக்கு உடம்பு புல்லரித்தது.

காஜியார் மசூதியின் பளிங்குக் கல்லிலே உட்கார்ந்தார். மீரான், ஆமினு, அப்துல் மஜீத் மூவரையும் உட்காரச் சொன்னுர்.

“நடந்திருப்பது சாமானிய விஷயமில்லை. இரண்டு பேருடைய வாழ்க்கையைப் பொறுத்த விஷயம். கோபப் பட்டு, ஒன்றும் முடிவு செய்ய வேண்டாம். நீங்கள் மூவரும் இப்படியே வீட்டுக்குப் போங்கள். நன்ருக ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வாருங்கள். அதன் பிறகு எனக்குத் தகவல் கொடுங்கள்” என்ருர் காஜியார்.

மீரான் ஒன்றும் பதில் பேசவில்லை. காஜியார் தொடர்ந்து சொன்ஞர்:

“மீரான்! உன்னுடைய மனம் எத்தனை புண் பட்டிருக்கிறது என்பது எனக்கு நன்ருகத் தெரியும், நீ வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் ஓய்வு எடு. பாவம், இரவெல்லாம் முழித்திருக்கிருய். தூக்கம் இல்லையென்ருலே மனிதனுக்குப் புத்திக் குழப்பம் ஏற்பட்டு விடும். மஜீத், உனக்கும் ஒரு முக்கியமான வார்த்தை சொல்லவேண்டும். நானும் மீரானும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வருகிறவரை, நீ ஆமிஞவைப் பார்க்கவே கூடாது. தெரிந்ததா? நீங்களாக ஒரு முடிவுக்கு வந்து, நீங்களாகவே ஒரு காரியத்தைச் செய்வது என்பதை இந்த நிமிஷத்திலிருந்து விட்டுவிட வேண்டும். நியாயமான ஒரு கோரிக்கைக்குப் பிறரை இசையப் பண்ணுவதிலேதான், அந்தக் கோரிக்கையின் நியாயமும் பிறருக்குப் புரியும்!” என்று ஒரு போடு போட்டார் காஜியார்.

மீரான் எழுந்தார்.

“ஹஸ்ரத்! உங்களுடைய கருணைக்கு ஆயிரம் சலாம். உங்களுடைய கட்டளையை மீறுவதற்கு இந்த ஆயுளில் எனக்கு அதிகாரம் கிடையாது. உங்களுடைய மயில் பீலிக்கு முன்ஞல், என் கத்தி தலை வணங்கி வளையும். சந்தேகமில்லை. ஒரு பெரிய கொலைக் குற்றத்திலிருந்து என்னைக் காப்பாற்றினீர்கள். ஒரு பெரிய கொலையிலிருந்து அவனுடைய உயிரைத் தப்புவித்தீர்கள். எனக்கு உண்மையாகவே புத்தி குழம்பித்தான் இருக்கிறது. நான் வருகிறேன். யோசித்து அதன் பிறகு தங்களை வந்து பார்க்கிறேன்—”

"மீரான்! உன்னோடு ஆமினாவையும் அழைத்துப் போ. உன்னைக் கேட்காமல் இப்படி நடந்து கொண்டாளே என்று அவளிடம் கோபப்படாதே. உன்னிடம் அவளுக் குள்ள பிரியம் எனக்கு நன்றாகத் தெரியும். அல்லாஹ் வுக்கும் தெரியும். அவளை வித்தியாசமாக நினைக்காதே. நம்முடைய அங்கீகாரம் இல்லாமல் அவள் இனி ஒன்றும் செய்ய மாட்டாள்."

மீரானுக்குக் கண் கலங்கியது. காஜியார் சொன்னார்:

"மீரான்! இப்பொழுது அவள் செய்த குற்றம், அவளுடைய குற்றமில்லை. அதுதான் வயதின் குற்றம் என்பது. அதற்காக அவளை மன்னித்து விடு. அப்துல் மஜீத் நல்ல பையன். திருக் குர்ஆன் முழுதும் நன்றாகப் படித்திருக்கிறான். புத்திசாலி. எனக்கு அவனிடத்தில் அலாதியான பிரியம். மற்றப்படி முடிவு செய்கிற பொறுப்பை உன்னிடமே விடுகிறேன். கோபத்தை யெல்லாம் மறந்து விட்டு யோசனை செய். ஒரு பத்து நாளில் மறுபடி என்னைப் பார்!"

"அப்படியே ஹஸ்ரத்!" என்று சொல்லி விட்டு மசூதியிலிருந்து புறப்பட்டார் மீரான். அப்துல் மஜீத் அவருக்கு முன்பாக நடந்து வந்து அவருடைய காலில் விழுந்தான்.

"சிஷ்யா!—" என்று ஏதோ வேகத்தோடு பேச ஆரம்பித்த மீரான் காஜியாரை உத்தேசித்து வார்த்தை களை அடக்கிக் கொண்டார்.

'சிஷ்யன்' என்ற அந்த வார்த்தைக்குப் பொருத்த மானவன் மஜீத். மேனாட்டு வாத்திய கோஷ்டியில் பிசகில்லாமல் தாளம் போடுவதற்காக ஒரு இயந்திரம் வைத்திருக்கிறார்களே, அப்படி ஒரு இயந்திரத்தை வைத்தாலும் அதன் தாளத்திற்குப் பிசகாமல் சிலம்பம் ஆடக் கூடியவன் மஜீத். இப்பொழுது அவனுடைய செயலில் அல்லவா தாளம் தவறிப் போய் விட்டது!

காஜியார் சொன்னார்:—"தரையிலே உடம்பு படும் படியாக விழுந்து வணங்குகிறவர்களை, அல்லாஹ் மன்னிக்கிறான். அல்லாஹ்வுக்குப் பணியும் ஆண்களும்,

அல்லாஹ்வுக்குப் பணியும் பெண்களும், விசுவாசம் கொண்ட ஆண்களும், விசுவாசம் கொண்ட பெண்களும் ஆகிய இவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான வெகுமதியையும் தயாரித்துள்ளான்.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே இந்தக் கருத்துக்களைச் சொல்லுகிற முப்பத்து மூன்று—முப்பத்தைந்தாவது திருவாக்கியங்களை ஓதும்படி அப்துல் மஜீதிடம் சொன்னார் காஜியார்.

திருக் குர்ஆன் முழுதும் முறையான விதத்தில் ஓதக் கற்றுக் கொண்டிருந்த மஜீத், மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு அந்தத் திருவாக்கியங்களை ஓதினன். அப்படியே மீரானும் மண்டியிட்டுக் கொண்டு அந்த வாக்கியத்தின் பொருளிலும் மஜீதின் குரலிலே இருந்த உருக்கத்திலும் வசமானர்.

குர்ஆன் திருவாக்கியம் முடிந்ததும் அந்தப் புனிதமான மன நிலையிலேயே அவர்களை வழியனுப்பினர் காஜியார். மஜீதிடம் மட்டும் மீண்டும் ஒரு முறை வற்புறுத்தினர்.

"மீரானுக்குத் தெரியாமல், என்னுடைய அங்கீகாரம் இல்லாமல் ஆமினவைச் சந்திப்பதை, அல்லாஹ் பேரில் சொல்லுகிறேன், இன்றேடு விட்டு விடு. மீரானுடைய சம்மதத்தை என்று பெறுகிருயோ, அன்று என்னுடைய அங்கீகாரமும் உனக்கு உண்டு.''

மஜீத் காஜியாருக்கு மண்டியிட்டு வணங்கினன். அப்படியே மீரானுக்கும் சலாம் செய்து விட்டு, மறு பக்கம் திரும்பி ஒரே பய பக்தியோடு நடந்து சென்றன்.

மகளை அழைத்துக் கொண்டு மீரான் மசூதிக்கு வெளியே வந்தார். படிகளிலே இறங்கியிருப்பார். என்ன ஆச்சரியம்! மசூதிக்கு வெளியே ஒரு கார் வந்து நின்று கொண்டிருந்தது. மீரான் கூர்ந்து பார்த்தார். அப்புலிங்கம் அந்தக் காரிலிருந்து வேகமாகக் கீழே இறங்கினன். மீரானைக் கண்டதும் அப்படியே ஒரு துள்ளுத் துள்ளிச் சலாம் செய்தான்.

"உஸ்தாத்! கடந்த இரண்டு மணி நேரமாக உங்களை வலை போட்டுத் தேடுகிறேன். கடைசியில் அல்லாஹ் தான் கண் பார்த்தான். தொழுகைக்குப் போயிருப்பீர்கள் என்று ஒரு நினைப்பு வந்தது. இந்த இடத்தை மட்டும் விடுவானேன், இங்கேயும் தேடிப் பார்த்து விடுவோமே என்று நினைத்து வந்தேன்."

இவ்வாறு சொல்லிக் கொண்டு படிகளில் ஏறி மேலே வந்தான் அப்புலிங்கம். அவன் வருவதைக் கண்டதும், 'பர்தா'வை இழுத்து மூடிக் கொண்டு மசூதியின் தூணுக்கு மறைவிலே சென்றுள் ஆமினு.

"என்ன மிராசுதார்த் தம்பீ! அப்படி என்ன இத்தனை அவசரம்?" என்று கேட்டுக் கொண்டே அப்பு லிங்கத்துக்கு அருகிலே வந்தார் உஸ்தாத்.

உஸ்தாத் மீரானுக்கு மூதூர் மிராசுதார் குடும்பத்தில் அளவு கடந்த அன்பு. தனக்கு ஏதாவது பண உதவி வேண்டியிருந்தால், வேறு யாரிடமும் போக மாட்டார் மீரான். மானஸ்தர். மூதூர் மிராசுதார் ஒருவரிடந்தான் அவருக்கு நம்பிக்கை. மிராசுதாருக்கும் மீரானிடத்தில் அபாரமான பிரியம். பண்ணை யாட்களோடு ஏதாவது கலகம் ஏற்படும் போல இருந்தால், உடனே மீரானைத்தான் மத்தியஸ்தம் செய்யக் கூப்பிட்டு விடுவார். இப்படிப் பல ஆண்டுகளாக அவர்களுக்குள்ளே ஒரு தொடர்பு. அப்புலிங்கத்திடமோ மீரானுக்கு ஒரு தனிப்பட்ட பிரியம். "தங்கமான பிள்ளை. நம்மையெல்லாம் போல் ஏழைக் குடும்பத்தில் பிறந்திருக்க வேண்டியது. தப்பிப் போய் மிராசுதார் வீட்டில் பிறந்திருக்கிறது. அத்தனை நல்ல பிள்ளை!" என்று அப்புலிங்கத்தைப் பற்றி மீரான் விமர்சனம் செய்வதுண்டு.

"உஸ்தாத்! என்ன இது! ஏன் இப்படி முகம் எல்லாம் வெளிறிப் போய் இருக்கிறது? இப்படித் தூக்கம் முழிக்கலாமா?" என்று அளவற்ற அன்போடு கேட்டான் அப்புலிங்கம்.

"அதெல்லாம் இருக்கட்டும், தம்பீ! இத்தனை அவசரமாக என்னைத் தேடி வந்த காரணம் என்ன? அதைச் சொல்லு!" என்று கேட்டார் உஸ்தாத்.

"அது ஒரு முக்கியமான விஷயம். அவசரமான விஷயம்!" என்று சொல்லிக் கொண்டே, மீரானை மசூதியின் ஓரமாக அழைத்துச் சென்றான் அப்புலிங்கம். பாவம், அவனுக்கு உஸ்தாதின் அப்போதைய மன நிலை எப்படித் தெரியும்?

"உஸ்தாத்! நமக்கு உயிருக்கு உயிரான இடத்தில் நேற்று யாரோ ஒரு போக்கிரி மாடியிலே ஏறி வம்பு செய்ய வந்தான். நல்லவேளை! நான் முழித்துக் கொண்டிருந்த சமயம் அது!......"

அப்புலிங்கம் முழுதும் சொல்வதற்குள் மீரான் இடைமறித்தார்.

"யார் வீட்டில்? ரவீந்திரன் வீட்டிலேதானே?" என்று குறுக்குக் கேள்வி போட்டார், மீரான். அத்தனை மனக் குழப்பத்தின் இடையேயும் அவருடைய துப்பறியும் சக்தி மட்டும் வேலை செய்து கொண்டுதான் இருந்தது.

"ஆமாம், ரவீந்திரன் வீட்டிலேதான்! நாகரத்தினம் என்று......"

"லால்குடிப் பையன், கனகசுந்தரத்தின் பிள்ளை. நம்முடைய சிலம்பப் பள்ளிக்கூடத்திலே கூடக் கொஞ்ச நாள் மண்ணை வாரிப் போட்டான்!" என்றார் உஸ்தாத்.

"அவனுடைய வேலைதான் போலிருக்கிறது. ஆனால் மாடியில் ஏறிக் குதித்தவன் வேறு ஒரு ஆள்......"

"தம்பி அதெல்லாம் எனக்கு இப்பொழுது புரிந்தது. திருடன் என்ன ஆனான், சொல்லு!" என்றார் உஸ்தாத்.

"நான் பின்தொடர்ந்ததும் அவன் துப்பாக்கியைக் கீழே போட்டு விட்டு ஓடி விட்டான். இப்பொழுது ரவீந்திரன் வீட்டில் உங்களுக்காக நாலைந்து பேர் காத்திருக்கிறோம். திருச்சி ஏ. டி. எம். ஓ. வேறு அங்கே உட்கார்ந்திருக்கிறார். அவருடைய கார்தான் இது!"

“ டாக்டர் எங்கே அங்கு வந்தார் ? யாருக்கும் உடம்பு ஒன்றும் இல்லையே ?” என்று கேட்டார் மீரான்.

“ இல்லை. ரவீந்திரனுடைய மனைவி ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். அவ்வளவுதான் ” என்றான் அப்புலிங்கம்.

“ கல்யாணி அம்மாள்தானே ?”

“ ஆமாம். உங்களுக்கு எப்படி அவர்களுடைய பெயர் தெரியும் ?”

“ தம்பீ ! எனக்குக் கல்யாணியம்மாளைப் பற்றியும் தெரியும். சந்திரிகாவைப் பற்றியும் தெரியும். நன்றாகத் தெரியாது. விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். அதற்குள் நம்மை மீறி இத்தனை காரியம் நடந்திருக்கிறது. சரி, பரவாயில்லை. இனிமேல் அவரைப் பற்றி விசாரிக்கிற எண்ணத்தைக் கை விட்டு விட்டேன். ரவீந்திரன் எப்படிப்பட்ட மனிதனாக இருந்தாலும் சரி, இனி அவர் நம்முடைய ஆள் !”

“ அது சரி...ஆனாலும் நீங்கள் அவருடைய வீட்டுக்கு வந்து......”

“ தம்பீ, நீ இவ்வளவு கஷ்டப்பட்டு வந்து பார்த்ததற்காகத்தான் ரவீந்திரனை நம்முடைய ஆள் என்று சொல்கிறேன் என்று நினைக்காதே. அதுவும் ஒரு காரணந்தான். என்றாலும், முக்கியமான காரணம் நாகரத்தினந்தான் ! என்னையும் என் வார்த்தையையும் மீறி அவன் ஒரு காரியம் செய்யப் போனான் என்றால் இந்த உஸ்தாதை அவன் என்னதான் நினைத்து விட்டான் ? பார்த்து விடுகிறேன், இனிமேல் எந்தப பயல் ரவீந்திரன் வீட்டுத் திசைப் பக்கம் வருகிறான் என்று !”

ஏற்கனவே உணர்ச்சியின் வசமாகி நின்ற மீரானுடைய உடம்பு இப்பொழுது அப்படியே ஆவேசத்தினால் குலுங்கியது.

“ உஸ்தாத், உங்கள் அன்புக்கு சலாம். நீங்கள் இத்தனை சொன்னதே போதும். எதற்கும் இப்பொழுது நீங்கள் ஒரு தரம் வீட்டு வரை—”

“ தம்பீ, இப்பொழுது என்னுடைய மனம் ஒரு நிலையில் இல்லை. எந்த உஸ்தாதை எதிர்த்து எவனும் நிற்கமுடியாது என்று நினைக்கிருயோ, அந்த உஸ்தாதை எதிர்த்து அவனுடைய......”

“ என்ன உஸ்தாத் ! சொல்லுங்கள்.”

“ ஒன்றுமில்லை, உஸ்தாதினுடைய சிஷ்யர்களே அவனுக்குத் துரோகம் செய்தால் எப்படி யிருக்கும்—”

“ உஸ்தாத் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் ?” என்று படபடப்போடு கேட்டான் அப்புலிங்கம். உஸ்தாத் அப்பொழுதுதான் என்ன சொல்வதற்கு இருந்தோம் என்பதை உணர்ந்தார். கொஞ்சம நிதானித்துக் கொண்டார்.

“ ஒன்றுமில்லை. நாகரத்தினம் நம்முடைய சிஷ்யன் தானே !” என்று சொல்லிய வண்ணம் சிரிப்பை வர வழைத்துக் கொண்டார். ஆனலும் அப்புலிங்கம் அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். வழக்கமான சிரிப்பு இல்லை அது ! அதில் ஏதோ வேதனை இருந்தது.

“ சரி, உஸ்தாத் ! உங்களுக்கு இப்பொழுது வரச் சௌகரியம் இல்லையென்ருல் நாளைக்கு வாருங்கள். பரவா யில்லை. நான் புறப்படுகிறேன். அப்படியே உங்களையும் உங்கள் வீட்டிலே கொண்டு போய் விட்டு விட்டுச் செல்கிறேன் !” என்ருன் அப்புலிங்கம்.

“ சுக்ரியா பாயி !” என்று சொல்லிச் சிரித்தார் உஸ்தாத். ஏதோ யோசித்த வண்ணம் தொடர்ந்து சொன்னுர் :

“ இன்றைக்கு ஒரு நாள் உன்னுடைய காரிலே வீட்டுக்குப் போய் விட்டால் போதுமா ? தினமும் நான் வீடு போய்ச் சேர்வதற்கு ஒரு கார் கொடு. அந்தச் சமயத்தில் ஏறிக் கொள்கிறேன். இப்பொழுது நீ கொடுக்கிற கார் எலெக்ஷனில் ஓட் போடச் சொல்லிக் கூப்பிட்டு வருகிற கார் மாதிரி, தம்பீ !”

“ உஸ்தாதுக்கு இல்லாத காரா ? உங்களுக்கு என்றே ஒரு கார் தருகிறேன். இது என்ன பிரமாதம்!” என்ருன் அப்புலிங்கம்.

"வேடிக்கைக்குச் சொன்னேன், தம்பி நமக்கெல்லாம் கார் ஒத்து வராது. காரிலே சவாரி செய்ய ஆரம்பித்து விட்டால், பிறகு கால் சொன்னபடி கேளாது. தெரியுமா? எனக்கு என்றே தனியாக ஒரு கார் தேவைப்படுகிற அளவுக்குக் கலகம் முற்றக் கூடும். சம்பவங்கள் அப்படி நடக்கின்றன. எனவே, அந்தச் சமயத்தில் பார்த்துக் கொள்ளுவோம்" என்று சொல்லிக் கொண்டே சிரித்தார் மீரான். இப்பொழுதும் அவருடைய முகத்தைக் கூர்ந்து பார்த்தான் அப்புலிங்கம். அந்தச் சிரிப்பு இதயத்தி லிருந்து பொங்கிக் கொண்டு வரவில்லை. ஏதோ ஒரு வேதனை உள்ளத்தின் ஆழத்திலிருந்து அந்தச் சிரிப்புக்கும் மேலே வந்து பாசி போல் படர்ந்திருந்தது.

"உஸ்தாத்! அப்படியானால் நான் வருகிறேன். ஏதோ உங்கள் மனம் இப்பொழுது சரியாக இல்லை என்று சொன்னீர்கள். வீட்டுக்குச் சென்று கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். என்னிடம் சொல்லக் கூடிய விஷயம் எதுவும் இருந்தால், தாராளமாகச் சொல்லலாம்" என்றான் அப்புலிங்கம்.

"தம்பீ! நீ இத்தனை தூரம் அலைந்து வந்து என்னைப் பார்த்ததால், ஏதோ குழப்பத்தையெல்லாம் அடக்கிக் கொண்டு பேசுகிறேன். மற்றப்படி உள்ளே ஒன்று வேதனை செய்து கொண்டிருக்கிறது. ஆனால் அந்த வேதனை கூடாது.காஜியார் பேச்சுக்கு மறு பேச்சு இல்லை. அவர் சொல்லி முடித்த பிறகு நான் அது விஷயமாக வேதனைப் படக்கூடாது. என்றாலும், இந்த மனசு இருக் கிறதே இது ஒரு சைத்தான். இந்தச் சைத்தானை அல்லாஹ் பேர் சொல்லித்தான் அடக்க வேண்டும். சிலம்பத்துக்கெல்லாம் பயப்படாது இது!"

அப்புலிங்கத்துக்கு உஸ்தாதின் மனக்குழப்பம் இப்பொழுது தெளிவாகத் தெரிந்தது. ஏதோ மிகவும் சொந்தமான அந்தரங்க விஷயம்போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டான்.

"அப்பு, அப்படியானால் நீ புறப்படு. சௌகரியப் பட்டால் நாளை ராத்திரி நம்முடைய வீட்டுப் பக்கம் வந்து

சேர். உனக்குத் தெரியாத ரகசியம் ஏது? ஒரு நிக்காஹ் விஷயமாக உன்னிடம் ஆலோசனை செய்ய வேண்டும்; தெரிந்ததா?"

"சரி உஸ்தாத்!" என்றான் அப்புலிங்கம்

"நாகரத்தினத்தைப்பற்றிக் கவலைப்படாதே, ஒரு கை பார்த்து விடுவோம். ஆனால் ஒரு சிறு எச்சரிக்கை செய்து வைக்கிறேன். நாகரத்தினம் சாதாரணப் போக்கிரி இல்லை. முறைகெட்ட போக்கிரி அவன். தான் எண்ணியதை முடிப்பதற்கு என்ன வேண்டுமானாலும் செய்வான். பணவசதி வேறு இருக்கிறதல்லவா!" என்றார் உஸ்தாத். அப்புலிங்கம் ஒன்றுமே பதில் பேசவில்லை. உஸ்தாத் மறுபடியும் சொன்னார்:

"அப்பு, போக்கிரிகளிலும் இரண்டு வகை உண்டு. சில போக்கிரிகள் முழுக்க முழுக்க முறை கெட்டுப் போவார்கள். சிலர் வம்புத்தனத்திலும் ஒரு முறையோடு தான் போவார்கள்—நம்மை மாதிரி என்று வைத்துக் கொள்ளேன்!" என்று சொல்லிச் சிரித்தார் மீரான். அதுவும் பழைய சிரிப்பைப் போலவேதான் இருந்தது. மணிக்கூண்டுக் கடிகாரத்தில் சில சமயங்களில் ஏதோ பழுது ஏற்படும்போது, இரண்டு முள்ளும் பிடிப்பு இல்லாமல் 'கிர்' என்று சுழன்று சுற்றும். அப்படிப் பிடிப்பில்லாத சுழல் சிரிப்பாக இருந்தது அது.

"உஸ்தாத்! என்னை மன்னியுங்கள். உங்கள் சிரிப்பையும் பேச்சையும் மீறி ஏதோ ஒரு வேதனை மனசைக் கஷ்டப்படுத்துகிறது. இத்தனை நேரம் நானும் வேறு வந்து தொந்தரவு கொடுத்து விட்டேன். தவறுதான். உங்களுடைய பெருந் தன்மையினால் என்னோடு நின்று பேசுகிறீர்கள். மற்றப்படி மனசுக்குள் அளவு கடந்த துன்பம் இருப்பது தெரிகிறது. நான் புறப்படுகிறேன். நாளை இரவு உங்களை வந்து சந்திக்கிறேன்!"

இவ்வாறு சொல்லி விட்டு அப்புலிங்கம் காரிலே ஏறிக் கொண்டு மலைக் கோட்டையை நோக்கிப் புறப்பட்டான். அவன் சென்ற ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் மீரான் ஆமினாவை அழைத்துக் கொண்டு மசூதிக்கு அருகிலே

இருந்த ஒரு சிறிய குறுகலான வீதியின் வழியாக வீடு நோக்கி நடந்தார். வழியெல்லாம் ஒரே மௌனம்தான். மகளோடு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. உள்ளம் முழுதும் குழப்பமும் வேதனையும் பின்னிச் சுருண்டன.

மதங் கொண்ட யானை எங்கெங்கோ சென்று முட்டி மோதிவிட்டுக் கடைசியில் ஏதோ ஒரு விவரிக்க முடியாத சோர்வோடு கூடத்துக்கு மீளுமே, அப்படி யிருந்தது மீரானுடையநிலை.

பல ஆண்டுகளுக்கு முன்பு மீரான் ஒரு கருப்புப் பூனை வாங்கினார். அதை வாங்குவதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. குஸ்தியிலே போட்டி போட்டுக் கை கொடுக்கும் எதிரியின் ஆட்கள், ஐந்தாம் படை வேலையும் செய்வதுண்டு. வெளியிலிருந்து ஏதாவது சாப்பிடக் கொண்டு கொடுத்தால், விஷச் சத்தைக் கலந்து கொடுத்து விடுவார்கள். கையையும் காலையும் முடக்கி விடும் அது! மீரான் இதை உத்தேசித்துத்தான் பூனை வாங்கினார். தான் எது சாப்பிட்டாலும் முதலில் அதற்குக் கொடுத்து விட்டுத்தான் பிறகு சாப்பிடுவார். பால் குடிப்பதற்கு முன்னால் முதலில் அந்தப் பூனை ஒரு வாய் குடிக்கும். பதினைந்து நிமிஷம் கழித்துத்தான் மீரான் மீதிப் பாலைக் குடிப்பார். ஆனால் நாளாக நாளாக அந்தப் பூனையிடம் பிரியம் அதிகமாகிவிட்டது. பூனைக்குக் கொடுக்கிற ஆகாரத்தைத் தான் முதலிலே ருசி பார்த்து விட்டுப் பிறகுதான் அதற்குக் கொடுப்பார்! அத்தனை பிரியம் உண்டாகி விட்டது. ஆனால் அதுவும் இப்படித் தான் ஒரு நாள் வீட்டை விட்டு ஓடியது. அப்பொழுது அவர் மனைவி எத்தனை துடியாகத் துடித்தாள்?...... இப்போது அவள் மட்டும் உயிரோடிருந்தால்......!

அப்புலிங்கத்தின் மனமும் குழப்பத்திலேதான் இருந்தது. உதவிக்குப் போன இடத்தில், மீரானுடைய மன நிலையைக் கண்டு அவன் வேதனைப்பட்டான். எதற்கும் அஞ்சாத தீரன் இப்படிக் குழம்பிப் போக வேண்டுமானால், காரணம் மிக மிகப் பெரிதாகத்தான் இருக்க வேண்டும் என்று அப்புலிங்கம் யோசித்தான்.

மௌனமாக வீடு நோக்கி விரைந்த மீரானுக்கு அங்கேயும் ஒரு ஆச்சரியம் காத்திருந்தது. வீட்டுக்குள்ளே அடியெடுத்து வைத்ததும் அப்படியே ஸ்தம்பித்து விட்டார்! திண்ணையில் நாகரத்தினமும் குப்புசாமியும் மிக்க ஆவலோடு உஸ்தாதின் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்!

# 14. சூரப் புலி

உஸ்தாத் மீரானுக்கு ஒரு நிமிஷம் ஒன்றுமே ஓட வில்லே. திண்ணையிலே உட்கார்ந்திருந்தது நாகரத்தினமும் குப்புசாமியுந்தானு என்று கண்களை இரண்டு மூன்று தடவை மூடி மூடி விழித்தார்.

குப்புசாமியும் நாகரத்தினமும் உஸ்தாதுக்கு முன்னால் பயத்தையும் மரியாதையையும் நன்ருக வரவழைத்துக் கொண்டு திண்ணையிலிருந்து எழுந்து நின்ருர்கள்.

"என்னடா குப்புசாமி!" என்று குப்புசாமியைத்தான் முதலில் வரவு விசாரித்தார் உஸ்தாத். அவனுக்கு உடம் பெல்லாம் அப்படியே வளைந்தது. புளியம்பழம் சாப்பிடும் சிறுவர்களின் முகம் எப்படியெல்லாம் கோணுமோ, அப்படிக் கோணியது குப்புசாமியின் முகம்!

" லால்குடி முதலாளி உட்காருங்கள்! நிற்கிறீர்களே!" என்ருர், அடுத்தாற்போல் நாகரத்தினத்தை.

உஸ்தாத் "கரமா"க இருக்கிருர் என்று நாகரத்தினத் துக்குத் தெரிந்து விட்டது. முதலாளி என்றல்லவா தன்னை அழைக்கிருர்! இந்த மரியாதை நல்லதுக்கு அடையாளம் இல்லையே!

நாகரத்தினம் உஸ்தாத் மீரானுடைய கோபத்துக்குக் காரணம் என்னவாக இருக்கக்கூடும் என்று யோசனை செய்து கொண்டே, திண்ணையில் மறுபடியும் உட்கார்ந் தான்.

"என்னடா குப்புசாமி, என்ன சமாசாரம்? இந்த நேரத்திலே இரண்டு பேரும் சேர்ந்து வந்திருக்கீங்க?" என்று கேட்டார் உஸ்தாத்.

இந்தக் கேள்விக்குக் குப்புசாமிக்குப் பதிலாக நாகரத்தினமே பதில் சொன்னான்.

"உஸ்தாத்! இக்கட்டான நிலைமை எப்போ உண்டாகுதோ, அப்போல்லாம் இங்கேதானே வந்தாகணும்! வேறே எங்கே போக்கு எங்களுக்கு!"

"பரவாயில்லையே! லால்குடி முதலாளி ரொம்பப் பக்குவமாப் பேசப் படிச்சிருக்கீங்களே! ஏண்டா குப்பு சாமி, உன்னைக் கேட்ட கேள்விக்கு இவரு பதில் சொல்லுறாரு—என்னடா தம்பி! நீங்க ரெண்டு பேரும் சினிமாவுலே சொல்றாங்களே ஈருடல் ஓருயிர் அப்படீன்னு—அந்த மாதிரியாடா?"

நாகரத்தினம் பேசாமல் இருந்தான். குப்புசாமி உடம்பை நெளித்தான்.

"ஏண்டா குப்புசாமி! வாயிலே என்னடா போட்டிருக்கே? நாக்கு இருக்கா, இல்லை, அதையும் துப்பாக்கியோட சேர்த்து அந்த மாடியிலே போட்டுட்டு ஓடி வந்துட்டியா?"

நாகரத்தினத்துக்கு ஒரு விநாடி உடம்பில் மின்சாரம் பாய்ந்தது. குப்புசாமி திண்ணையில் ஒன்றிப் போய் நின்று விட்டான்!

"என்ன லால்குடி முதலாளி! நீங்கதான் பதில் சொல்லுங்களேன்!"

நாகரத்தினம் தொண்டையை ஒரு தரம் இருமிச் சரிப்படுத்திக் கொண்டு உஸ்தாதிடம் பேச ஆரம்பித்தான்.

"உஸ்தாத்! நீங்க ஏதோ கொஞ்சம் கோபமா..."

"கொஞ்சமா? கொஞ்சம் கோபமா? சரியாப் போச்சு! தம்பீ நாகரத்தினம். எனக்கு இப்போ உங்க

ரெண்டு பேரிடத்திலேயும் இருக்கிற கோபத்துக்கு ஒரு அளவே கிடையாது தெரிஞ்சுதா — கொஞ்சம்னு சொல்றது அதை !"

"உஸ்தாத்! நாங்க இப்போ எதுக்காக வந்திருக்கோம் என்கிற விஷயத்தைக் கேட்டா நீங்க அப்படிக் கோபப்படவே மாட்டீங்க—"

"நீங்க வந்திருக்கிற விஷயம்தானே? அதை வேறே கேக்கணுமா நான்! உண்மையைச் சொல்றதா இருந்தா நீங்க ரெண்டு பேரும் இப்போ வந்தீங்களே, அதனுலே தான் எனக்குக் கோபம்! வராம இருந்திருந்தா, நான் இவ்வளவு கோபப்பட்டிருக்க மாட்டேன்!"

"உஸ்தாத்! நான் உங்களை நேற்று ராத்திரி பார்த்திட்டுப் போனதுக்குப் பிறகு நடந்த சமாசாரம்......"

"நாகரத்தினம்! அதெல்லாம் எனக்குத் தெரியும்! ஏண்டா குப்புசாமி, பண்டிகையிலே புலிவேஷம் போட்டுப் போட்டு ரொம்பத் தேர்ந்திட்டேடா நீ! இப்போ திருட்டு வேஷத்துக்கே வந்துட்டியே! பரீட்சை தேறிட்டே சிஷ்யா! இனிமே இந்தப் பள்ளிக்கூடத்திலே நீ படிக்கிறதுக்குப் பாடமே இல்லே!"

குப்புசாமி இப்பொழுது வார்த்தைகளை ஒவ்வொன்ருக அடுக்கிச் சேர்த்துத் தயங்கிக் கொண்டே பேச ஆரம்பித்தான்.

"வாத்தியாரய்யா! எந்தக் காரியமும் உங்களுக்குத் தெரியாமல் செய்தா இப்படித்தான் ஆகும். எனக்கு இப்போதுதான் அந்தப் புத்தி வந்தது—"

"புத்தியா! உனக்கா! அது அவ்வளவு சீக்கிரம் வந்திடுமா! ஏண்டா தம்பி, உனக்குப் புத்தியை வரவழைக்கணும்டா! தானு அது வராது! பார்ப்போம், வரவழைக்க முடியுமா இல்லேயான்னு—"

நாகரத்தினத்துக்கு முகத்தில் கொஞ்சம் கடுமை உண்டாயிற்று. ஆனுலும் உஸ்தாதிடம் எப்படிக் கோபத்தைக் காட்டிக் கொள்ளுவது? சொன்னுன்:

"உஸ்தாத்! சந்திரிகா விஷயத்தில் என்னுடைய மனம் எத்தனை கொதித்துப் போயிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரிந்தால், நீங்கள் இத்தனை கோபப் பட மாட்டீர்கள். நேற்றிரவு எனக்கு இருந்த வேகம் அத்தனை! நீங்கள் கொஞ்சம் பொறுமையோடு நான் சொல்வதைக் கேளுங்கள். அதன் பிறகு—"

"நாகரத்தினம், ஒரு கேள்வி கேட்கிறேன். அதுக்கு மட்டும் பதில் சொல்லு. நேற்று ராத்திரி நான் உன்னிடத் திலே என்ன சொல்லி அனுப்பினேன், நீ என்ன செய் திருக்கே?"

"உஸ்தாத், உங்ககிட்டே யாரோ வந்து தவறுதலா என்னவோ சொல்லி யிருக்காங்க. அதுனாலேதான் நீங்க இப்படி யெல்லாம் பேசுறீங்க—"

"நாகரத்தினம், இந்த உஸ்தாதுக்குத் தெரியாமல், இந்த உஸ்தாத் வார்த்தையை மீறி, இந்த உஸ்தாதுக்கு விரோதமாக ஒரு காரியம் செய்துடலாம்னு ரெண்டு பேரும் நினைச்சீங்க? அல்லாஹ் ஒரு குட்டுக் குட்டினான்! இப்போ மறுபடியும் உஸ்தாதைத் தாஜா பண்ணலாம்னு வந்திருக் கீங்க? ஆனா உஸ்தாத் முழிச்சுட்டான்! அதான் விஷயம்! ஏண்டா குப்புசாமி! குருவுக்கு மிஞ்சின சிஷ்யா! சரிதா னேடா நான் சொல்றது! திருட்டுப் பயலே! புலிப் பார்வையா பாக்கிறே! சொல்லுடா பதில்!"

குப்புசாமிக்கு உடம்பு பதறியது.

"ஏண்டா, திருட்டு வேஷத்தைக் கலைச்சுட்டு வந்திட்டே! குருநாதன் பார்த்து உனக்கு ஸர்டிபிகேட் கொடுக்க வேண்டாமா? அதுக்குள்ளே அவசரமா? அட சூரப் புலியே!"

"உஸ்தாத்—" என்று நாகரத்தினம் தொடங்கினான்.

"தெரியும் எனக்கு; முட்டாள்த்தனமா மாடியிலே ஏறிக் குதிச்சாச்சு! எதிர் வீட்டுக்காரன் வேறே வந்து பார்த்தாச்சு! நிலைமை ஒரு மாதிரிச் சுழன்று போச்சு! அதுனாலே இப்போ உஸ்தாதுட்டே உதவிக்கு வந்திருக் கீங்க! மீரானைப் பைத்தியக்காரப் பயல்னுதானே நினைச்

சிருக்கீங்க— இல்லே, ஒரு வேளை லால்குடி முதலாளியோட பணம் இந்த மீரானை விலைக்கு வாங்கி விடும்னு நினைப்போ? ஏண்டா குப்புசாமி, நீ எத்தனை ரூபாய்க்குடா உன்னை வித்திருக்கே? வழக்கப்படி உனக்கு அஞ்சு ரூபாய். உன் வேஷத்துக்கு அஞ்சு ரூபாய். போன இடத்திலே உதை விழுமே, அந்த உதைக்கு அஞ்சு ரூபாய். மொத்தம் எத்தனை ஆச்சு?''

நாகரத்தினம், குப்புசாமி— இரண்டு பேருமே ஒன்றும் பேசவில்லை. ஐந்து நிமிஷம் மௌனம் நிலவியது. பிறகு உஸ்தாத் மீரானே பேசினார்:

"தம்பீங்களா! நல்லத் தெளிவாகக் கேட்டுக்குங்க— எந்த நிமிஷத்திலே என் வாத்தையை மீறி இப்படி ஒரு காரியம் செஞ்சுட்டீங்களோ, அந்த நிமிஷமே, அந்த விநாடியே இந்த உஸ்தாதுடைய உதவியை மறந்துட வேண்டியது! அதை விட்டுட்டு, மறுபடியும் என்னிடத்திலேயே வந்து என்னையும் உங்க திருட்டுக் கூட்டத்திலே சேர்க்கலாம்னு நினைச்சீங்களே! அதைப் பார்த்தாத்தான் ஆவேசம் வருது! இத்தனை நாள் என்னோடு பழகினதுக்கு, என்னைப்பத்தி எத்தனை உயர்வா நினைச்சிருக்கீங்க! அடாடாடா!''

இந்த இடத்தில் நாகரத்தினத்துக்குக் கோபம் வந்தது. அந்தக் கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்க முயன்றான்.

"முதலாளிக்கு, கோபம் வருது போலிருக்கு! அப்படியானா போயிட்டு வாங்க! அடே குருவுக்கு மிஞ்சின சிஷ்யா, குப்புசாமி! இனிமே இந்தத் திசைப் பக்கம் திரும்பினே, விலா எலும்பு நொறுங்கி விடும்! ஜாக்கிரதை! புறப்படு—கடைசி முறையாச் சொல்லுறேன். இந்த உஸ்தாத் இனிமேல் ரவீந்திரனுடைய ஆள்! அந்த ரவீந்திரன் கருப்போ, சிவப்போ, யோக்கியனோ, அயோக்கியனோ, பணக்காரனோ, ஏழையோ?— எப்படியிருந்தாலும் சரி, அதைப் பற்றி மீரானுக்குக் கவலை இல்லை. எவனாவது இனிமேல் ரவீந்திரன் வீட்டுப் பக்கம் அப்படி இப்படி நடமாடினானோ, இந்த மீரானுக்கு

அவன் பதில் சொல்லி ஆகணும்! இது அல்லாஹ் உத்தரவுடா அட தம்பிங்களா! அல்லாஹ் உத்தாவு, தெரிஞ்சுதா ? கவனமா நடந்துக்குங்க."

நாகரத்தினம் திண்ணையை விட்டு எழுந்தான். குப்பு சாமி 'திரு திரு'வென்று விழித்துக் கொண்டே திகைத்தான்.

"என்னடா, ஆடு திருடினவன் மாதிரி முழிக்கிறே, கிளம்புடா! உன்னுடைய புருஷன் எழுந்தாச்சு! நீ இன்னும் உட்கார்ந்திருக்கிறே!"

நாகரத்தினம் சொன்னான்: "உஸ்தாத்! நீங்க இத்தனை தூரம் கோபப்படுவீங்கன்னு, நாங்க நினைக்கலே. குப்புசாமிக்கு—"

"தம்பீ! குப்புசாமிங்கிற வார்த்தையை இன்னொரு தரம் சொல்லாதே. வீட்டிலே அம்மைக்கு உடம்பு சரி யில்லேன்னு சொல்லி ராத்திரி அந்த நேரத்திலே கோதா விலே யிருந்து கிளம்பி வந்து எனக்குத் தெரியாம என்னோட யோசனைக்கு விரோதமா இப்படி ஒரு காரியம் எப்போ செஞ்சானோ, அவன் என் சிஷ்யனா! அவன்தான் என்னுடைய முதலாவது விரோதி. அவனை அந்த மாதிரிச் செய்யும்படி விலே பேசி வாங்கினானே ஒரு துரோகி, அவன் நம்முடைய ரெண்டாவது விரோதி! தெரிஞ்சுதா ? புரிஞ்சுதா ?"

நாகரத்தினத்துக்கு இதற்கு மேல் ஒன்றும் பேச ஓடவில்லே.

"நான் அப்போ சாவகாசமாப் பார்க்கிறேன், உஸ்தாத்! சலாம்!"

"சாவகாசமாப் பார்க்கிறதா! இனிமே உங்க ரெண்டு பேரையும் பார்க்கிறது சாவகாசத்திலே இல்லே. அப்படியே 'தர தர'ன்னு காய்ச்சின எண்ணெய் மாதிரிக் கொதிக்குமே ஒரு படபடப்பு, அந்தப் படபடப்பிலேதான் இனிமேல் உங்க ரெண்டு பேரையும் நான் பார்க்கணும்—அந்தச் சாயத்திலே உங்களே நீங்கதான் பாதுகாத்துக்கணும்—அல்லாஹ் கை விட்டுடுவான்! ஜாக்கிரதை!"

மீரானுடைய முகம் உண்மையில் எண்ணெய் காய்கிற இருப்புச் சட்டியாகத்தான் இருந்தது. அதைக் கவனித்த நாகரத்தினம் அந்த இடத்தை விட்டு நகர்ந்தான். குப்புசாமி மட்டும் கொஞ்சம் காலைத் தேய்த்தான்.

" தன்னுடைய வாலையே கடித்துக் கொண்டு சுத்திச் சுத்தி வருமே நாய், பாத்திருக்கியாடா குப்புசாமி! அதை நினைப்பு வச்சுக்க! உன்னுடைய வாலை இன்னொருத்தன் வெட்ட வேண்டிய அவசியமில்லை! நீயே அதுக்குத் தயாராகியாச்சு! போடா! போ! உலக்கை மாதிரி என் முன்னாலே நிக்காதே! அவமானமாயிருக்குடா! போ! போய்த் தொலை! உடம்பை மட்டும் பார்த்துக்க! நான் வளர்த்து விட்ட உடம்புடா அது!"

குப்புசாமியும் நாகரத்தினமும் அங்கிருந்து புறப் பட்டார்கள். குப்புசாமி அப்படியே இடி விழுந்தவன் மாதிரிஒன்றுமே பேசாமல் நடந்தான். நாகரத்தினத்துக்கு மனத்துக்குள் கஷ்டமாக இருந்தாலும், குப்புசாமியை உத்தேசித்து அந்தக் கஷ்டத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் நடந்தான். அவனுடைய மனமோ பலமாக ஒரு புதிய யோசனையில் ஈடுபட்டது.

" குப்புசாமி! கவலையே படாதே. இதுக்கும் ஒரு யோசனை பண்ணிட்டேன். இந்த உலகத்திலே உஸ்தாத் மீரான் ஒருத்தர்தான் மனுஷனோ! தம்பி, பணம் பத்தும் செய்யும்னு வசனம் கேட்டதில்லையா நீ? நம்ப ஐவேஜை காலியாயிட்டாலும் பாதகமில்லை. இதிலே ரெண்டுலே ஒன்று பார்த்துத்தான் விடுறதுன்னு தீர்மானிச்சிட்டேன். உஸ்தாத் என்ன திமிரோட பேசுறுரு. நாம்ப இவரைக் கேக்காம ஒரு காரியம் பண்ணிட்டோமாம், இவருக்குக் கோபம் வந்துட்டுதாம்! எப்படியிருக்குது கதை! காப்பி சாப்பிடுறது, டீ சாப்பிடறது கூட உஸ்தாதைக் கேட்டுத் தான் செய்யணும்னு சொல்லுவார் போலிருக்கு—"

" அப்படியில்லை, நாகரத்தினம்! உஸ்தாத் சொன்னது என்னன்னா......"

"குப்பு! இன்னும் உனக்கு இந்த உஸ்தாத் பைத்தியம் விடல்லையா? உன்னைத்தான் என்னென்ன பேச்செல்லாம் பேசிட்டாரு. இன்னும் நீ அவரை மறக்கலையா? ஆனாலும் குரு பக்திங்கிறது உனக்கு அளவுக்கு மீறி இருக்குது, குப்புசாமி! இத்தனை வேண்டியதில்லை. வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலே உண்டு தம்பீ."

"அப்படின்னா இப்போ என்ன செய்யணும்னு சொல்றே?"

"குப்புசாமி அதெல்லாம் யோசனை பண்ணி முடிச்சிட்டேன். சிலம்பப் பள்ளிக்கூடம் ஒண்ணு இருக்கிறதினாலேதானே இத்தனை திமிரோடு பேசுறாரு, மீரான்! இன்னும் ஒரு வாரத்திலே அந்தப் பள்ளிக்கூடம் என்ன ஆகுது, பார்! மீரான் பள்ளிக்கூடத்துக்கு எதிராக பகோரான் பள்ளிக்கூடம் ஒண்ணு கிளம்பாட்டா என் பேர் நாகரத்தினம் இல்லை!"

"என்ன பகோரானா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் குப்புசாமி.

"ஆமா, பகோரான் பள்ளிக்கூடந்தான்!"

"யார், நம்ப சட்டாம்பிள்ளை பகோரானா? மஜீத்தோட சாச்சா மகனா?"

"ஆமா! சட்டாம் பிள்ளைன்னா என்ன அவரு கடவுளா? மனுஷன்தானே! தம்பி, அதான் சொன்னேனே, லால்குடி நன்செய் பூராக் காலியாகிறதுன்னாலும் சரி. விடுறதில்லை. இன்னைக்கு மீரான் இத்தனை பேசினதுக்கு ஒரு கை பார்க்காம விடப் போறதில்லை. அவரு ரவீந்திரனைக் கட்டி அழட்டும். நமக்குக் கவலையில்லை. பகோரான் நம்ப கட்சி. உஸ்தாதின் சிஷ்யர்கள் அத்தனை பேரும் நம்ப கட்சி. பாரு என்ன நடக்குதுன்னு. இனிமேல் குப்புசாமிதான் நம்முடைய சட்டாம்பிள்ளை!"

"என்ன! சட்டாம்பிள்ளையா? நானா!" என்று கேட்டான் குப்புசாமி. அப்படிக் கேட்கும்போதே அவனுக்கு நாக்கில் தண்ணீர் சொட்டியது.

"ஆமா தம்பி! சட்டாம் பிள்ளைன்னு என்ன அவருக்கு ரெண்டு கொம்பா முளைச்சிருக்கணும்! அப்படியே கொம்பு முளைச்சுத்தான் ஆகணும்னலும் உனக்குக் கொம்பு முளைக்கப் பண்றது! அவ்வளவுதானே! குப்புசாமி, அதான் சொன்னேனே பணம் பத்தும் செய்யும், பதினயிரமும் செய்யும் தம்பீ!"

இப்படிப் பேசிக்கொண்டே நடந்தார்கள், குப்புசாமியும் நாகரத்தினமும், பாலக்கரை வீதியிலே! அங்கே மலைக் கோட்டையிலோ......?

**மீ**ரானை அழைத்துவரப் போன அப்புலிங்கமோ, காரோ வெகு நேரம் வரை திரும்பக் காணோம். ரவீந்திரனுக்கும் ராமநாதனுக்கும் கவலை ஏற்பட்டது. சந்திரிகா மனம் குழம்பினுள். டாக்டருக்குக் கவலையோ குழப்பமோ இல்லாவிட்டாலும், ஆஸ்பத்திரிக்குக் காலையிலே செல்ல வேண்டிய கடமை இருந்தது.

"ரவீந்திரன், விடிகிற நேரம் ஆகி விட்டது. நான் ஒரு டாக்ஸியில் வீட்டுக்குச் சென்று விடுகிறேன். காலை எட்டு மணிக்குள் நான் ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டும். நீங்களும் குளித்துச் சாப்பிட்டு விட்டு ஆஸ்பத்திரிக்கு வாருங்கள். அப்புலிங்கத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். மீரானே பல ஜோலிக்காரர். அவர் எங்காவது போயிருப்பார். எப்படியும் மீரானைச் சந்திக்காமல் அப்புலிங்கம் வரமாட்டார். அதனுல்தானே அவரைக் காரிலே அனுப்பினேன். இல்லையென்ருல் தோட்டக்காரன் போனலே போதும் என்று சொல்லியிருப்பேனே! எப்படியும் மீரானேடு வந்தால் சரிதான். நேரம் ஆவதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்!" என்று சொல்லிவிட்டு டாக்டர் புறப்பட்டார். அவரை வழியனுப்பலாம் என்று வெளியே வந்த சந்திரிகாவுக்கு உண்மையிலேயே கண் கலங்கி விட்டது. டாக்டர்களுக்கு இதயம் கிடையாது என்றும், கல் மனிதர்கள் அவர்கள் என்றும், சொல்கிருர்களே, அது எவ்வளவு பிசகு என்று மனத்திற்குள் நினைத்துக் கொண்டாள் அவள்!

"உங்களுக்குத்தான் எங்களால் எத்தனையோ சிரமம்!" என்று நன்றி தோய்ந்த குரலில் டாக்டரிடம் பேச ஆரம்பித்தான் ரவீந்திரன்.

"மிஸ்டர் ரவீந்திரன், சரியாப் போச்சு! எனக்கு 'வோட் ஆப் தாங்க்ஸ்' சொல்ல ஆரம்பித்து விட்டீர்களே அதற்குள்ளே! இன்னும் நிகழ்ச்சிகள் முடியவில்லையே, ஸ்வாமி!" என்று ரவீந்திரனிடம் சொல்லிக் கொண்டே ராமநாதனிடம்,

"மிஸ்டர் ராமநாதன்! ஒன்று சொல்கிறேன் கேளுங்கள், என் அநுபவத்தை. பொதுவாக டாக்டர் 'பின் குஷன்' மாதிரி. எங்கள் மேஜைகளில் இருக்குமல்லவா குண்டூசிகளைக் குத்தி வைப்பதற்காக, அந்த மாதிரிக் குஷன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்! யார் வேண்டுமானாலும் வருகிற நேரத்தில் எல்லாம் ஒரு ஊசியைக் குத்தி வைத்துவிட்டுப் போவார்கள். அதற்கு நேரம் பொழுது என்று கிடையாது. குஷனுக்கு வலிக்குமே என்று கவலைப்படுவதுண்டா? அப்படிக் கவலைப்படுவதிலே தான் அர்த்தமுண்டோ?"

இவ்வாறு சொல்லிப் பலமாக ஒரு சிரிப்புச் சிரித்தார் டாக்டர்.

ரவீந்திரன் பளிச்சென்று பதில் சொன்னான்: "டாக்டர், நீங்கள்தான் எல்லாரையும் பிடித்து ஊசி குத்துகிறீர்கள் என்று நாங்கள் சொல்லுகிறோம். நீங்களானால், எங்களைச் சொல்கிறீர்களே!"

"ரவீந்திரனா பேசியது. பலே! சபாஷ்! ஒருமட்டும் உங்களுடைய வழக்கமான வேடிக்கை வரப் பார்க்கிறதே!" என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டார் டாக்டர் சுரேஷ்.

டாக்டர் சென்று அரை மணி நேரத்துக்குள் அப்புலிங்கம் வந்து சேர்ந்து விட்டான்! ஆனால் எதிர் பார்த்தபடி மீரான் அவனுடன் வரவில்லை.

ஏமாற்றத்தோடு அவனை வரவேற்ற நண்பர்களிடம் அப்புலிங்கம் விவரங்களையெல்லாம் சொன்னான். அதிலும்

"ரவீந்திரன் எப்படிப்பட்ட மனிதனுக இருந்தாலும் சரி, இனி அவர் நம்முடைய ஆள்!" என்று மீரான் சபதம் கூறியதைச் சொல்லும்போது உள்க் கூடத்திலேயிருந்து பேச்சைக் கேட்டுக் கொண்டே வந்த சந்திரிகா தன்னையும் மீறி, "கடவுள் காப்பாற்றினுர்!" என்று சொல்லிய வண்ணம் ரவீந்திரனுடைய முகத்தை மிக்க அன்போடு பார்த்தாள்.

அந்தக் கவலையான முகத்தில் ஒரு விஞடி நிம்மதி ஒளி வீசிற்று.

*　　　*　　　*

காலை எட்டரை மணி யிருக்கும். டாக்டருடைய காரை ஓட்டிக் கொண்டு ஆஸ்பத்திரிக்குள்ளே நுழைந்தான் அப்புலிங்கம்.

கார்ச் சத்தத்தைக் கேட்டு, அப்புலிங்கத்தின் தகப்பனுர் பதினைந்தாம் நம்பர் அறையிலிருந்து மெதுவாக எழுந்து வராந்தாவுக்கு வந்தார். அப்புலிங்கம், ராமநாதன், ரவீந்திரன் — மூவரும் படிகளில் ஏறி வராந்தாவுக்குச் சென்றுர்கள்.

ஆனுல் இதென்ன எதிர்பாராத நிகழ்ச்சி? பன்னிரண்டாம் நம்பர் அறையிலிருந்து பதறிக் கொண்டு வெளியே வருவது யார்? நாகரத்தினமா? கல்யாணி அம்மாளின் அறையிலிருந்தா வருகிருன்?

"யார் நாகரத்தினமா? இங்கேயா இருந்தாய் இத்தனை நேரம்?" என்று கேட்டுக் கொண்டே அப்புலிங்கத்தின் தகப்பனுர் முருகானந்தம், ஒரே வியப்போடு பன்னிரண்டாம் நம்பர் அறையை நோக்கி நடந்தார். ஆனுல் நாகரத்தினம் அவரைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. விறு விறு என்று ஓட்டமும் நடையுமாக அந்த அறைக்கு அப்பால் நடந்தான்.

"நாகரத்தினம்! நாகரத்தினம்!" என்று இரண்டு முறை கூப்பிட்டுப் பார்த்தார் முருகானந்தம். பதிலே

இல்லை! அவன் அந்த அறைகளைத் தாண்டி வராந்தாவின் திருப்பத்திலே மறைந்து விட்டான்.

“நாகரத்தினம்!” என்ற வார்த்தை காதிலே விழுந்ததுதான் தெரியும். காரிலிருந்து இறங்கிய மூவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

“யார் நாகரத்தினமா? கல்யாணியின் அறையிலிருந்து அவன்தானா போகிறான்?” என்று கேட்டுக் கொண்டே வராந்தாவில் வேகமாக ஏறினான் ரவீந்திரன்.

“ரவி!” என்று அவனுடைய கையைப் பிடித்து இழுத்தான் அப்புலிங்கம்.

“ரவீ! தயவுசெய்து நாகரத்தினத்தைப் பின் தொடராதே! ஏதாவது எக்கச் சக்கமாக நடந்துவிடப் போகிறது. சொல்கிறதைக் கேள்! ரவீ” என்றான் அப்புலிங்கம்.

“நாகரத்தினமா? எக்கச் சக்கமாகவா!” இப்படிச் சொல்லும்போதே ரவீந்திரனுடைய குரலில் ஒரு வெறி கிளம்பியது. அடுத்த கணம் அப்புலிங்கத்தின் கையிலிருந்து தன் கையை வேகத்தோடு உதறினான் ரவீந்திரன். ராமநாதனைத் தாண்டிக் குதித்தான்.

“நாகரத்தினம்!” என்று ஆவேசமான ஒரு கூப்பாடு! அடுத்த விநாடி தடுத்தவர்களுடைய பிடியிலிருந்து சுண்டிக் கொண்டு, சுழன்று அடிக்கும் சூறாவளியின் வேகத்திலே எவ்விப் பாய்ந்து, மறைந்தோடும் நாகரத்தினத்தைப் பின் தொடர்ந்தான் ரவீந்திரன்!

## 15. “ ஜிகிஜம் ! ஜிகிஜாங்கிஜம் !”

டாக்டர் சுரேஷ் தமது அறையிலிருந்தபடியே கார் வந்து நின்றதையும் அதிலிருந்து ராமநாதன், அப்பு லிங்கம், ரவீந்திரன் மூன்று பேரும் இறங்கியதையும் கவனித்தார். அடுத்த நிமிஷமே “ நாகரத்தினம் !” என்ற கூப்பாடும் அதைத் தொடர்ந்து, “ ரவீ !” என்று அப்பு லிங்கம் கதறித் தடுத்த குரலும் டாக்டருக்குக் கேட்டன. உடனே எழுந்து வெளியே வந்தார்.

டாக்டர் வெளியே வந்ததைப் பார்த்ததும் அப்பு லிங்கம் அவரிடம்சென்று ஒரே பதற்றத்தோடு சொன்னான்: “ டாக்டர், ரவீந்திரனைக் கொஞ்சம் தடுத்து நிறுத்துங் களேன். நாகரத்தினத்தைத் துரத்திக் கொண்டு போகிறான்.”

புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டே “ ரவி ! மிஸ்டர் ரவீந்திரன் !” என்று கூப்பிட்டார் டாக்டர் சுரேஷ். என்ன ஆச்சரியம்! அந்தக் குரலுக்கு அத்தனை சக்தி இருந்ததா! வேகமாகச் செல்கிற ரவீந்திரன் அப்படியே நின்று விட்டான் !

ரவீந்திரன் நின்ற இடத்துக்கு டாக்டர் வேகமாக நடந்தார்.

“ என்ன ரவி! இப்பொழுது என்ன அவசரம் அப்படி? யானை, புலி, சிங்கம் முதலிய காட்டு மிருகங்களைப் பிடிக்க வேண்டும் என்றால் இப்படியெல்லாம் துரத்திப் போகக் கூடாது. தெரிந்ததா ? சாமர்த்தியமாகக் கண்ணி வைத்துப் பிடிக்க வேண்டும். ‘கிட்டா’ என்றால் தெரியுமா உங்களுக்கு ? மைசூர்க் காடுகளிலே யானையைப் பிடிக்கிற முறை அது !” என்று சொல்லிக் கொண்டே, ரவீந்திர னுடைய தோளிலே கைகொடுத்து அவனைப் பக்குவமாக அழைத்துக் கொண்டு தமது அறைக்கு வந்தார் சுரேஷ்.

“ உட்காருங்கள் மிஸ்டர் ரவி ! வாருங்கள், அப்பு லிங்கம் ! ராமநாதன் ! எல்லாருமே வரலாம் உள்ளே !”

ரவீந்திரன் டாக்டருக்கு எதிரேயிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான்.

"டாக்டர் ஸார்! உங்களிடம் ஏதோ மந்திர சக்தி தான் இருக்கிறது! நீங்கள் கூப்பிட்டதும் மறுகணம் நின்று விட்டானே ரவி! நாங்களும்தான் தடுத்து நிறுத்தப் பார்த்தோம்! முடிந்ததா!" என்றான் அப்பு லிங்கம்.

ரவீந்திரனுக்கு இந்த வார்த்தைகள் ஒன்றும் காதில் ஏறவில்லை. டாக்டரைப் பார்த்து அவன் சொன்னான்.

"டாக்டர்! நீங்கள் நாகரத்தினத்தைக் காட்டு மிருகம் என்று சொன்னீர்கள். அது தப்பு டாக்டர். யானை, புலி, சிங்கம் என்றால் அது நம்முடைய பேரில் பாய்வது நேருக்கு நேராகக் கண்ணுக்கு நன்றாகத் தெரியுமே! நாகரத்தினம் ஒரு நல்ல பாம்பு டாக்டர். தரையிலே நம்முடைய கண்ணுக்குத் தெரியாமல் ஊர்ந்து வருகிற விஷ ஜந்து! திடீரென்று படம் எடுத்து ஒரு போடு போட்டு விடும் அது!" என்றான் ரவி.

"ரொம்ப சரி, மிஸ்டர் ரவீந்திரன்", டாக்டர் சொன்னார், "ரொம்ப சரி, அந்த நாகப் பாம்பைப் பிடிப்பதற்குக்கூட மகுடி என்று ஒன்று இருக்கிறது அல்லவா? அதைக் கையிலே வைத்து ஊதிக் கொண்டு சென்றுதான் அந்த நாகப் பாம்பைப் பிடிக்க வேண்டும். இப்படி யெல்லாம் சும்மா துரத்திக் கொண்டு ஓடக் கூடாது! தெரிந்ததா!"

"மகுடி மட்டும் இல்லை, டாக்டர்! கையில் வேரும் இருக்கவேண்டும்! சிரியா நங்கை வேர்!" என்றான் ராமநாதன்.

"பேஷ்! பேஷ்! ரொம்ப சரி. மிஸ்டர் ராமநாதன்! ரொம்ப சரி. சிரியா நங்கையோ சிரிக்கும் நங்கையோ அந்த ரக்ஷை கையில் இருக்க வேண்டும்! என்ன மிஸ்டர் அப்புலிங்கம்! நீங்கள்தான் சித்தர் பாடல்களில் தேர்ந்தவர் ஆயிற்றே? சொல்லுங்களேன், அதன் பெயர் சிரியா நங்கையா அல்லது சிறிய நங்கையா? எது சரி?" என்று கேட்டவாறு பேச்சை மாற்றினார் டாக்டர் சுரேஷ். ரவீந்திரன் நாற்காலியில் இப்பொழுது சற்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"டாக்டர்! இந்தச் சொல் ஆராய்ச்சிக்கு எல்லாம் இது நேரமில்லை. விஷயம் தலைக்கு மிஞ்சி விட்டது. நான் இல்லாத சமயம் இந்த அயோக்கியன் நாகரத்தினம் கல்யாணியின் அறைக்குச் சென்று இத்தனை நேரம் தூபம் போட்டிருக்கிறான்! என்னால் இதை ஒரு விநாடி கூடச் சகிக்க முடியாது. தெரிந்ததா?"

டாக்டர் சிரிப்பையெல்லாம் அடக்கிக் கொண்டு ஒரே சிரத்தை நிறைந்த முகத்தோடு ரவீந்திரனைப் பார்த்துக் கேட்டார்:

"சரி, நீங்கள் சொல்வது உண்மையான வார்த்தை. அதற்கு இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?"

"செய்வதென்ன! இனிமேல் ஒரு நிமிஷங்கூட என் மனைவி இந்த ஆஸ்பத்திரியிலே இருப்பதற்கில்லை. இன்று சாயந்திரத்துக்குள்—"

"சாயந்திரமா! மிஸ்டர் ரவி! காலை பத்து மணிக் கெல்லாம் அவளை நீங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்லலாம் என்று நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். நீங்களானால் சாயந்திரம் என்கிறீர்களே! சாயந்திரம் வரை தாமதிப்பானேன்!" என்றார் டாக்டர் சுரேஷ்.

ராமநாதனும், அப்புலிங்கமும் குழப்பத்தோடு டாக்டரைப் பார்த்தார்கள், ஒரு வேளை கோபத்திலே அப்படிச் சொல்கிறாரோ என்று!

"மெய்யாகத்தான் சொல்கிறேன் மிஸ்டர் அப்பு! கல்யாணிக்கு உடம்பில் ஒரு கோளாறும் இல்லை. நரம்பு அதிர்ச்சிக்கு நேற்று மருந்து கொடுத்தேன். இன்று காலை நான் ஆஸ்பத்திரிக்கு வந்தபோது, அப்பொழுது தான் மயக்கம் தெளிந்தும் தெளியாமலும் இருந்தாள். ஹிருதயம், ஸ்வாசப் பை, ஒன்றிலும் பிசகு இல்லை. நோயாளியிடம் பணம் பறிக்கிற இடமாக இருந்தால், இன்னும் ஒரு வாரம் அவளுக்கு 'ஆக்வா' சிகிச்சை செய்து நாள் கடத்தலாம். ஆனால் பாருங்கள், இப்பொழுது இந்த ஆஸ்பத்திரியில் இட நெருக்கடி அதிகம். 'ஆக்வா'வோ ரவீந்திரன் வீட்டுக் குழாயில் தாராளமாகக்

கிடைக்கும். அதிலும் அவர் மலைக் கோட்டையில் ரிஸர் வாயருக்குப் பக்கத்திலேயே குடியிருக்கிறார். இரவும் பகலும் விடாமல் தண்ணீர் கொட்டிக்கொண்டே யிருக்கும். என்ன.மிஸ்டர் ரவி, அப்படித்தானே ?'' என்று கேட்டுக் கொண்டே,

"வாருங்கள் ! கல்யாணி அம்மாளுடைய அறைக்குச் செல்லுவோம்'' என்று சொல்லி நாற்காலியை விட்டு எழுந்தார் டாக்டர் சுரேஷ்.

"தஞ்சாவூர்ப் பொம்மை என்று ஒரு விநோத பொம்மை இருக்கிறதே பார்த்திருக்கிறீர்களா மிஸ்டர் அப்புலிங்கம் ! அதைப் போலத்தான் நாகரத்தினத்தின் மனம். எந்தப் பக்கம் சாய்த்து நிறுத்தி அதை எப்படி ஆறப் போட்டாலும், 'டபக்'கென்று அந்தப் பொம்மை மீண்டும் பழைய நிலைக்கே வந்து உட்கார்ந்து கொள்ளும் ! யார் எப்படிக் கையாண்டாலும் சரி; நாகரத்தினத்தின் மனம் அதே விஷம நிலைக்கே மீண்டும் வந்து நன்றாக உட்கார்ந்து கொள்கிறது. என்ன செய்ய! அவனுடைய உள்ளத்தின் விஷமம் அத்தனை பெரிய ஆஸனத்தில் அமர்ந்திருக்கிறது ! மூளையோ, அந்தத் தஞ்சாவூர்ப் பொம்மையைப் போல் சிறுத்துப்போன தலைக்குள்ளே சின்னஞ் சிறிதாக இருக்கிறது ! என்ன மிஸ்டர் ரவீ ! நான் சொல்வது சரிதானே ?'' என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

"ரொம்ப சரி, டாக்டர் சார் ! எங்கள் வீட்டில் ஒரு தஞ்சாவூர்ப் பொம்மை இருக்கிறது. நீங்கள் இப்பொழுது சொன்ன வார்த்தைகளைக் கேட்டதிலிருந்து, வீட்டுக்குப் போனதும் முதலாவது காரியமாக அந்தப் பொம்மையை எடுத்து முனிஸிபாலிடி குப்பைத் தொட்டியிலே எறிந்து விடுவது என்று தீர்மானித்து விட்டேன் ! இல்லையென்றால் அதைப் பார்க்கும்போதெல்லாம் நாகரத்தினத்தின் நினைவு அல்லவா உண்டாகும் !'' என்றான் ராமநாதன்.

"இதைத் தெரிந்துதான் திருச்சி முனிஸிபாலிடியார் வீதிகளில் குப்பைத் தொட்டி வைக்கும் விஷயத்தில்

சிக்கனமாக இருக்கிறார்கள்!" என்று ஒரு போடு போட்டான் ரவீந்திரன்!

*           *           *

திருச்சிப் பாலக்கரை வீதியிலே எதிர்கால யோசனைகளைச் சாமர்த்தியமாகத் திட்டமிட்டுக் கொண்டே குப்புசாமியும், நாகரத்தினமும் நடந்தார்கள் அல்லவா? அப்படியே ஆஸ்பத்திரி எல்லை வந்ததும், குப்புசாமியை அனுப்பிவிட்டு நாகரத்தினம் ஆஸ்பத்திரிக்கு உள்ளே நுழைந்தாள். அத்தனை வீறாப்போடு அங்கே இனி வருவதில்லை என்று சொல்லிப் போன நாகரத்தினம் மீண்டும் அதே இடத்தில் கொஞ்சமும் தயங்காமல் நுழைந்தாள். சகோதர பாசம் அதிகமாக இருந்ததா, அல்லது மீரானிடம் ஏற்பட்ட ஏமாற்ற உணர்ச்சியும், அதனால் உண்டான வேகமும் அதிகமாக இருந்தனவா என்று திட்டமாகச் சொல்ல முடியாது. உண்மை என்னவென்றால், இரண்டுமே அதிகமாகி நாகரத்தினத்தின் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தன.

"கல்யாணியைப் பார்த்துப் பேசி ஒரு விஷயத்தை நன்றாகத் தெளிவுபடுத்திவிட வேண்டும். காரியங்கள் போகிற போக்கைப் பார்த்தால், ஒரு காலத்தில் சர்க்கார் கோர்ட்டு வரை போகவேண்டி ஏற்படும். அப்பொழுது கல்யாணி திருச்சியை விட்டு விட்டு, லால்குடிக்கே வந்து இருக்கவேண்டிய நிலைமையுங்கூட ஏற்படலாம். கோர்ட்டிலே சந்திரிகாவைப் பற்றியும் ரவீந்திரனைப் பற்றியும் ஒளிவு மறைவு இல்லாமல் சாக்ஷியம் சொல்ல வேண்டிய அவசியமும் உண்டாகும். அதற்கெல்லாம் கல்யாணி தயாராக இருக்கிறாளா? இல்லையென்றால் தயாராக இருக்கும்படி அவளிடம் சொல்ல வேண்டும். முன் வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது!"

இவ்வாறெல்லாம் எண்ணமிட்டவளாய் நாகரத்தினம் ஆஸ்பத்திரியில் கல்யாணியின் அறைக்குள்ளே நுழைந்தாள்.

கல்யாணி அப்பொழுதுதான் மயக்க மாத்திரையின் வேகத்திலிருந்து விடுபட்டிருந்தாள். ஆனாலும் முழுதும் கண்களைத் திறந்து எழுந்து உட்காரவில்லை. நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு கட்டிலுக்கு அருகே வந்து உட்கார்ந்தான் நாகரத்தினம்.

கல்யாணி மெதுவாகக் கண்களைத் திறந்தாள். எதிரே நர்ஸுக்குப் பதில் நாகரத்தினம் இருப்பதைக் கண்டதும் அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"நீயா உட்கார்ந்திருக்கிறாய்? நம்பவே முடியவில்லையே! சொப்பனமா! இல்லை, நிஜந்தானா!"

"அக்கா!" என்று கூப்பிட்டான் நாகரத்தினம். உண்மையிலேயே அந்த அழைப்பில் சகோதர பாசம் தொனித்தது.

"அக்கா! நான்தான் வந்திருக்கிறேன். வேறு யாருமில்லை இங்கே!" என்றான் நாகரத்தினம்.

"அவர் எங்கே? வீட்டுக்குப் போய் விட்டாரா?" என்று கேட்டாள் கல்யாணி.

"அத்தான்தானே? நேற்று ராத்திரியே போய் விட்டார். அங்கே சந்திரிகா தனியாக இருக்கிறாள் அல்லவா? மனசு கேட்குமா அவருக்கு!" என்றான் நாகரத்தினம். எத்தனை கசப்பு அந்த வார்த்தைகளிலே!

இரவு முழுதும் நன்றாகத் தூங்கியதால் தெளிவோடு கண் விழித்த கல்யாணி, இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கலவரம் அடையவில்லை.

"அது சரி! அவரோடு அத்தனை தூரம் பேசி விட்டு ஓடினாயே, இப்பொழுது ஏன் வந்தாய் இங்கே?" என்று கேட்டாள் கல்யாணி.

"அக்கா! இந்த மனசு கேட்கவில்லை. உன்னை எத்தனை அருமையோடு வளர்த்தோம், கிளியை வளர்த்துப் பூனையின் வாயிலே கொடுத்து விட்டார்கள் அப்பா. அதை நினைக்க நினைக்க—"

" தம்பீ! அப்படியெல்லாம் பேசாதே. அது உனக்கும் நல்லதில்லை. எனக்கும் நல்லதில்லை. தெரிந்ததா !"

" அக்கா ! ஆனாலும் இவ்வளவு பைத்தியமாக நீ இருக்க வேண்டியதில்லை. உன் கண் முன்னால் இத்தனை அநியாயம் செய்கிறான் அந்த மனுஷன்! நானே உனக்காக இரண்டில் ஒன்று பார்த்து விடுவது என்று இருக்கிறேன். நீ கொஞ்சம் தைரியமாய் எனக்குப் பக்கபலமாக நிற்க வேண்டியதிருக்க, அதை விட்டு விட்டு இப்படி அசட்டுத் தனமாக—"

" தம்பீ !" என்று கடுமையாகப் பேச ஆரம்பித்தாள் கல்யாணி.

" தம்பீ ! நீ தயவு செய்து இங்கே யிருந்து போய் விடு. அவர் இப்பொழுது வந்தால் பழி விழுந்துவிடும். உன்னைத் தான் இங்கு வராதே என்று சொல்லி விட்டாரே ; மறுபடியும் ஏன் வருகிறாய் ?"

" கூடப் பிறந்த தோஷம் ஒன்று இருக்கிறதே அக்கா ! அதற்காகத்தான் வருகிறேன். மானம் மரியாதை எல்லாவற்றையும் விட்டு விட்டு மறுபடியும் வருகிறேன் !"

" இல்லை ! நீ வரவேண்டாம். என்றைக்கு என்னை ஒருவரிடம் ஒப்படைத்தாய் விட்டதோ அன்றைக்கே எல்லாம் முடிவாகி விட்டது. அன்றைக்கே நான் திருச்சியைச் சேர்ந்தவள். லால்குடிக்கும் எனக்கும் ஒன்றும் இல்லை !"

" அக்கா! முட்டாள் தனமாய்ப் பேசாதே! நாளைக்கு அந்தச் சந்திரிகா உன்னை வீட்டை விட்டுத் துரத்தும் போது, நீ லால்குடிக்குத்தானே வரவேண்டும், புரிந்ததா ? அதற்கு இடமில்லாமல் இன்றைக்கே உன்னை அன்போடு கூப்பிடுகிறேன். வந்து விடு. குழப்பம் இன்னும் முழுதும் ஆரம்பமாகவில்லை. பின்னால் ஒரு காலத்தில் சர்க்கார் கோர்ட்டு வரைக்கும் நாம் போகும்படியாக நேரும். அப்பொழுது இந்த—"

" நாகரத்தினம் ! அதிகமாகப் பேசாதே ! உனக்கு இந்த விஷயத்தில் தலையிடுவதற்கு எந்த உரிமையும்

கிடையாது. தெரிந்ததா? நேற்று அவர் என்ன சொன்னார் நினைவு இருக்கிறதா ?"

"நேற்றுத்தானே? சொன்னார் சோற்றுக்கு உப்பில்லை என்று! அவர்தான் மூர்க்கத்தனமாகப் பேசினார் என்றால்—"

"தம்பீ!" என்று ஆவேசமாகக் கூப்பிட்டுக்கொண்டே கட்டிலிலிருந்து எழுந்து உட்கார்ந்தாள் கல்யாணி. அவளுடைய கண்கள் சிவந்தன.

"தம்பீ! உன்னுடைய திட்டம் எல்லாம் புரிகிறது எனக்கு. தயவு செய்து நீ இங்கிருந்து போய் விடு. கண்டிப்பாகச் சொல்லுகிறேன். உனக்கு ஒரு அக்காள் இருக்கிறாள் என்பதையே இந்த நிமிஷத்திலிருந்து மறந்து விடு. வீண்வம்பை வளர்த்தாதே, போ!" என்றாள் கல்யாணி.

"அக்கா! நான் சொல்வதைக் கொஞ்சம் கேள், அக்கா!"

"நாகரத்தினம்! உன்னுடைய பேச்சு எனக்குப் பிடிக்கவில்லை. நீ போய் விடு. வீணாக என் மனசைப் பாழாக்காதே!"

"பாழாக்குவதா! பாழாக்குவது யார்? உன் மனசையும் உன் வாழ்வையும் பாழாக்குவது, பாழாக்கி விட்டிருப்பது நானில்லை அக்கா! உன்னை மனைவியென்று மாலையிட்டானே ஒரு மடையன், ஒரு அயோக்கியன், ஒரு—"

"நாகரத்தினம்!" என்று ஒரு கூப்பாடு போட்டுக் கொண்டே கட்டிலை விட்டு எழுந்து வர முயன்றாள் கல்யாணி.

"கல்யாணி! நீ ஒன்றும் என்னை எழுந்து வந்து துரத்த வேண்டாம். நானே போய் விடுகிறேன். இது வரை—"

"தம்பீ, உன்னுடைய எச்சரிக்கை யொன்றும் எனக்கு வேண்டியதில்லை. இனிமேல் சுகமோ துக்கமோ அவரோடு பகிர்ந்து கொள்ளத் தெரியும் எனக்கு. ஒரு

நாள் உன்னிடம் அவரைப் பற்றி ஆவலாதி சொன்ன உரிமையில்தானே நீ இவ்வளவு தூரம் பேசுகிருய். அது என்னுடைய தப்பு. அது என்னுடைய முட்டாள்த் தனம் !''

வெளியே கார் வந்து நின்ற ஓசை கேட்டது. அப்படியே பதறிப் போய் எழுந்து வந்து அறைக்கு வெளியே எட்டிப் பார்த்தான் நாகரத்தினம். ராமநாதன், அப்புலிங்கம், ரவீந்திரன் மூவரும் இறங்கிக் கொண்டிருந் தார்கள்.

நாகரத்தினத்துக்குக் கையும் காலும் பதறின. அப் படியே ஓட்டமும் நடையுமாக அந்த இடத்தை விட்டு அகன்ருன் அவன் ! பின்ஞல் ரவீந்திரன் அவனைத் துரத்திக் கொண்டு வந்தது தெரியும் ; என்ருலும் திரும்பியே பார்க்கவில்லை. வராந்தாவில் தாவி, திருப் பத்திலே வளைந்து ஒரே வேகமாக ஆஸ்பத்திரியிலிருந்து 'விறு விறு' என்று வெளியே படர்ந்தான் நாக ரத்தினம்.

புத்தி கொதித்தது. மனத்துக்குள்ளே இருந்த வேகம் பன்மடங்காக அதிகரித்தது. இதுவரை கல்யாணிக்காக இந்த விஷயத்தில் பிரவேசித்தான். இனி ?.........

இனி, கல்யாணிக்காக இல்லை. தனக்காகவே, தன் னுடைய சுய கௌரவத்துக்காகவே முழுத் துணிவோடு தொடர்ந்து வேலை செய்வது என்று தீர்மானித்தான் நாகரத்தினம், முன்வைத்த காலைப் பின் வைப்பதில்லை. குப்புசாமி தனக்காக எத்தனை கஷ்டப்பட்டான்! உஸ்தாத் மீரான் தன்னை எத்தனை அவமரியாதையாகப் பேசி விட்டார் ! கல்யாணி எத்தனை துச்சமாகத் தன்னை தூக்கி எறிந்து பேசிஞள் ! அத்தனைக்கு வந்து விட்டதா ? தான் என்ன அத்தனை கிள்ளுக்கீரையா ? விஷயம் இவ் வளவு தூரம் முற்றிய பிறகு இனி விடுவதா ? இரண்டில் ஒன்று பார்த்துத்தான் தீர்ப்பது! லால்குடி ஐயேஜா என்ன, தன்னுடைய உயிரே பணயம் ஆவதாஞலும் சரி. இதற்கு இல்லாத உயிர் வேறு எதற்குத்தான் இருக் கிறது ? தனக்கு என்ன பிள்ளையா, குட்டியா ! ஒன்றும்

இல்லை. நின்றவரைக்கும் நெடுஞ்சுவர், நிலை விழுந்தால் குட்டிச் சுவர்! இதற்காக இனிப் பயப்படப் போவதில்லை. பகோரான் இருக்கவே இருக்கிறான், பார்த்து விடலாம்!

இவ்வாறு யோசித்தவனாகப் பாலக்கரையைக் கடந்து, மணிக்கணக்காகப் பூட்டிக் கிடக்கும் அந்த ரயில்வே கேட்டைத் தாண்டி, ரஸ்தாவின் செங்குத்தான இறக்கத்திலே ஒரே வேகமாக நடந்து, பீம நாயக்கன் பாளையத்துக்கே வந்து சேர்ந்தான் நாகரத்தினம். அங்கே ராமாயணச் சாவடிச் சந்துக்கு அருகில் அக்பர் சதுக்கம் என்ற ஒரு சிறிய தோட்டத்தின் முனையிலே பகோரான் வீடு. அதை நோக்கி நடந்தான் அவன்.

"பகோரான் எத்தனை கெட்டிக்காரன்! எத்தனை பலசாலி! கேடயமும் 'கோப்ட்டா கத்தி'யும் இரண்டு கையிலும் பிடித்துக் கொண்டு கூட்டத்திலே பாய்ந்தான் என்றால், துப்பாக்கி கொண்டு சுட்டாலும் மேலே படாதே! அவனுடைய பலமும் சாமர்த்தியமும் யாருக்கு வரும்? உஸ்தாத் மீரானே பம்மிப் போக வேண்டியது தானே! மீரானுடைய பலம் எல்லாம் அந்தக் காலத்தோடு சரி, இப்பொழுது அவர் கிழட்டுப் புலி. கோபம் மட்டும் இருக்கிறது. உடம்பில் அத்தனை தெம்பு ஏது?"

இப்படி மனசுக்குள்ளே விமர்சனம் செய்து கொண்டு, பகோரானுடைய வீட்டுக்குள்ளே அடியெடுத்து வைத்தான் நாகரத்தினம்.

இதென்ன குரல்! யாரோ முனகுகிற மாதிரிக் கேட்டது. ஒருச்சாய்த்துச் சாத்தியிருந்த கதவின் இடுக்கு வழியாகக் குரல் வந்தது.

"ஜிகிஜம்! ஜிங்கிஜம்! ஜிகிஜாங்கிஜம்! ஜிம்! ஜிம்!! ஜிங்கிட ஜிம்!!! ஜிங்கிட ஜிங்கிட ஜிம்!!!" என்று ஏதோ ஒரு மெதுவான குரலில் உச்சாடணம் கேட்டது! அது பகோரான் குரல்!

நாகரத்தினத்துக்கு அளவு கடந்த ஆச்சரியம் உண்டாயிற்று. காதுகள் இரண்டையுமே வெளியே

எடுத்து ஒரு உதறு உதறுவது போலத் தலையை நன்றாகக் குலுக்கி விட்டுக் கொண்டு மீண்டும் ஒருமுறை கேட்டான்.

"இங்கே பார், தம்பீ! நான் சொல்லிக் கொடுத்த பாட்டைப் பிறகு பாடலாம். இப்பொழுது, இந்தக் கையைப் பார்! இதோ இந்த சோத்துக் கையைப் பார்! இந்த உள்ளங் கையைப் பார்! இதையே பார்! கண்ணை மூடாதே தம்பீ, கண்ணை மூடாதே. அப்படியே இங்கே பார். எங்கே, ஜிகிஜம்! ஜிங்கிஜம்! ஜிகிஜாங் கிஜம்! ஜிம்! ஜிம்! ஜிங்கிட ஜிம்!! ஜிங்கிட ஜிங்கிட ஜிம் !!!"

நாகரத்தினம் கதவின் இடுக்கு வழியாகக் கூர்ந்து பார்த்தான்.

பகோரானுடைய அறையில் சிங்கத்தின் தலை ஒன்று தெரிந்தது. அதற்கு அப்பால் ஒரு புலித் தலை. மான் களின் கொம்பு. சிறுத்தையின் உடம்பு முழுவதையும் உரித்துக் கொண்டு வந்து வைத்த நீளமான பயங்கரத் தோல். சுவரெல்லாம் படுதாக்கள்! ஒரு மூலையில் மனிதனின் மண்டை ஓடு. இன்னொரு பக்கம் எலும்புக் கூடு. ஓரத்தில் பயங்கரமான பிசாசு ஒன்று தலைவிரி கோலமாகக் கூத்தாடும் கோரமான படம்! ஒரு ஆந்தை கண்களை அப்படியே திறந்து தீக்கங்கைக் கொட்டுகிறது. ஒரு வேட்டை நாய் பசியும் மோப்பமும் பிடித்துத் தலையைத் தூக்கிக் கொண்டு கிடக்கிறது. அருகில் ஒரு பூதாகார மான கழுகின் உடல். உள்ளே பஞ்சு திணித்துத்தான் வைத்திருக்கிறது. ஆனாலும் என்ன பயங்கரம்! என்ன பயங்கரம்!

வேறொருவருக்கு என்றால் மூச்சு நின்றே போயிருக்கும். நாகரத்தினத்துக்கு அப்படியா! அவனுடைய தலை குடை ராட்டுப்போல் 'கிர்' என்று சுற்றியது உண்மை தான். ஆனாலும் தான் வந்த நோக்கத்தில் உள்ள சூழ்ச்சி காரணமாக, குடை ராட்டைத் தாங்கிக் கொண்டு தான் அசையாமல் நிற்குமே மத்திக்கம்பம், அதைப் போல நின்றது நாகரத்தினத்தின் நினைவிலே உறுதி! எதிரே

தெரிந்த சிங்கமும், புலியும், ராட்டினத்திலே சுற்றும் பொம்மைகளைப் போலவே நாகரத்தினத்தின் நினைவிலே சுற்றின! ஒரு கணம் கிறங்கி நின்றவன், அடுத்த விஞடி நிதானித்துக் கொண்டான், "பகேரான், மெஸ்மெரிஸம் செய்கிருன்!" என்று!

அறையின் மத்தியில் பூகோள உருண்டை ஒன்று நட்டமாக நின்றது. இந்த அகில உலகத்தையுமே தன்னுடைய ஒரு கையில் பிடித்து அழுத்துவதைப் போல இடது கையை அந்தப் பூகோள உருண்டையின் மேல் வைத்து அமுக்கிக் கொண்டு, வலது கையைச் சிறுவனை நோக்கி நீட்டியவாறு ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான் பகேரான். அவனுடைய உள்ளங் கையிலே பார்வையை நிறுத்திக் கண் இமைகளை மூடாமல் விழித்தவாறு நின்று கொண்டிருந்த சிறுவனுடைய முகத்தைக் கூர்ந்து பார்த்தான் நாகரத்தினம். சிறுவனின் விழிகள் கிறங்கியும் கிறங்காமலும் ஒரு படியாகச் சொக்கி வந்து கொண்டிருந்தன! மாலை நேரத்தின் முடிவிலே, ஒளி விலகி இருள் கவிகிறதுக்கு முன்பு நொடி நேரத்திற்கு இருளும் ஒளியும் ஒன்ருே டொன்று சங்கமிக்கும் அல்லவா? அதைப் போல நினைவின் உலகிலிருந்து ஏதோ ஒரு சொப்பன உலகிற்குச் செல்வதற்கு அறிகுறியாக அந்தச் சிறுவனுடைய விழிகள் நினைவும் மயக்கமும் சேர்ந்து கலந்த ஈரடியான நிலையிலே மறுகி நின்றன.

"ஊம்! பாடு!" என்ருன் பகேரான் அந்தப் பையனைப் பார்த்து. சிறுவன் பாட ஆரம்பித்தான்:

வண்டாடும் சோலையிலே—நீ
வந்து புனம் காக்கையிலே
மாடப் புருவென்று—என் கண்ணம்மா
மதிமயங்கிப் போனேண்டி!

மலர் பூக்கும் சோலையிலே—நீ
வந்து புனம் காக்கையிலே
மயிலோ குயிலோண்ணு—என் கண்ணம்மா
மதிமயங்கிப் போனேண்டி!

வாழைப் பழமே—என்
வைகாசி மாங்கனியே !
நீலக் கருங்குயிலே—என் கண்ணம்மா
நிலைமயங்கிப் போனேண்டி !

இப்படிப் பாடிக் கொண்டே மதிமயங்கி நிலை மயங்கிக் கீழே சாய்ந்தான் சிறுவன் !

நாகரத்தினம் இந்தப் பயங்கரமான காட்சியைக் கண்டு தன்னையும் மறந்து சற்றுப் பின் வாங்கினான்! அடுத்த வினாடி, "ஜிகிஜம்! ஜிங்கிஜம்! ஜிகிஜாங்கிஜம்!" என்ற அந்த உச்சாடணத்தைத் தானும் முன் ஜாக்கிரதையோடு மனத்துக்குள் சொல்லிக் கொண்டே மெதுவாக நிதானத்தோடு அறையினுள்ளே நுழைந்தான் நாகரத்தினம் !

## 16. புன்னாகவராளி

கல்யாணியின் அறைக்குள் ரவீந்திரன், ராமநாதன், அப்புலிங்கம்—மூவரையும் அழைத்துக் கொண்டு டாக்டர் சென்றபோது, அங்கே நர்ஸும், கல்யாணி அம்மாளும் இருந்த மாதிரியைப் பார்த்தால் அப்பொழுதே அந்த அறையைக் காலி செய்வதற்குத் தயாராக இருந்தது போலத் தோன்றிற்று.

"என்ன கல்யாணி ! உடம்பு எப்படி இருக்கிறது ?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்த ரவீந்திரன், இதைக் கண்டு மிகவும் ஆச்சரியப் பட்டான்.

"எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை என்று சொல்லுகிறார்கள். நான் ஏன் இங்கு ஆஸ்பத்திரியில் வீணாகத் தனியே இருக்கவேண்டும்?" என்று கேட்டாள் கல்யாணி.

ரவீந்திரனுக்கு இந்த வார்த்தைகள் குழப்பத்தைக் கொடுத்தன. 'கல்யாணி ஏன் இப்படிச் சொல்லுகிறாள் ? சந்திரிகாவும் தானும் தாயுமானவர் தெருவிலே

தனிமையில் இருப்பது அவளுக்கு விபரீதமாகப் படுகிறது போலும்! அங்கே நேற்று ஒரு நாள் இரவில் நடந்த சம்பவங்கள் இவளுக்கு என்ன தெரியும்?' என்று எண்ணியவனாய் மௌனமாக நின்றான் ரவீந்திரன்.

கல்யாணி தொடர்ந்து சொன்னாள் :

"கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நாகரத்தினம் இங்கு வந்தான். என்னுடைய வசவும் பாக்கியிருந்தது. அதை வாங்கிக் கொண்டு போயிருக்கிறான் இப்பொழுது!"

'நாகரத்தினம்' என்ற சொல்லைக் கேட்டதும் பாம்பாகப் படம் எடுத்து நின்றான் ரவீந்திரன். டாக்டர் அதைப் புரிந்து கொண்டு விட்டார்.

"மிஸ்டர் ரவீ! வீட்டுக்குப் போன பிறகு மனைவியிடம் சாவகாசமாகக் கேளுங்கள், என்ன நடந்தது என்று! எதைப் பற்றியும் ஆத்திரத்தோடு நடந்து கொள்ளாதீர்கள். இப்படி நான் சொல்வதற்காக நீங்கள் என் பேரில் கோபப்பட்டு விடாதீர்கள். உண்மையைச் சொல்கிறேன், இந்த உலகில் நான் இதுவரை வேறு யாரிடமும் இத்தனை பாசம் கொண்டதில்லை. உங்களைப் பார்த்து உங்களுடைய இதய அந்தரங்கங்களைத் தெரிந்து கொண்ட பிறகு எனக்கு உங்களிடம் விவரிக்க முடியாத ஒரு வாஞ்சை ஏற்பட்டு விட்டது. அதை யாராலும் இனி மாற்ற முடியாது. உங்களால்கூட முடியாது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

டாக்டர் சொன்ன அந்த வார்த்தைகளிலே அத்தனை பொருளும் உண்மையும் இருந்தன என்பதை யாரும் அப்பொழுது எண்ணிப் பார்க்கவில்லை. பின்னால், எத்தனையோ நாட்களுக்குப் பிறகு ராமநாதன் அந்த வார்த்தைகளை எண்ணி எண்ணி வியந்ததுண்டு. அன்பு என்ற சக்தியின் இரகசியத்தை, அதன் காரண காரியங்களை ஆராய்வதற்கு வேண்டிய சம்பவங்கள் தில்லி நகரத்திலே நடந்தன. அப்பொழுதெல்லாம் டாக்டர் சுரேஷும் அவருடைய இந்த வார்த்தைகளுந்தான் ராமநாதனுக்கு நினைவு வரும்!

ரவீந்திரனையும் கல்யாணியையும் தாயுமானவர் தெருவுக்கு அனுப்பி விட்டு டாக்டர் சுரேஷ், அப்புலிங்கத்தையும் ராமநாதனையும் தம்மோடு அழைத்துக் கொண்டு தமது பங்களாவுக்குச் சென்றார்.

"என்னுடைய சமையற்காரனுக்குத் தென்காசிப் பக்கம் சொந்த ஊர். புகழ் பெற்ற திருநெல்வேலித் தோசை எங்கள் வீட்டிலே கிடைக்கும், என்னோடு வாருங்கள். என் மனைவி ஊருக்குப் போனதிலிருந்து வீடே வெறிச்சென்றிருக்கிறது. இன்றைக்கு ஒரு நாள்தான் என்னோடு இருந்து இரண்டு பேரும் தோசை சாப்பிடுங்களேன்!" என்று அன்போடு அழைத்தார் டாக்டர்.

அப்பொழுது காலை பத்து மணிக்கு மேல் இருக்கும். டாக்டருக்கு இந்தமாதிரி இரண்டுங் கெட்டான் நேரத்தில் எல்லாம் சாப்பிட்டுப் பழக்கமாகி விட்டது! ராமநாதனுக்கோ அந்த நேரத்தில் தோசை சாப்பிட எப்படியோ இருந்தது. யோசித்தான். ஆனால் அவன் பதில் சொல்லுவதற்குள் அப்புலிங்கம் முந்திக் கொண்டு விட்டான்.

"திருநெல்வேலித் தோசை யென்றால் யோசனை என்ன! பேஷாகச் சாப்பிடுவோம்!" என்று உற்சாகமாகச் சொன்னான் அப்புலிங்கம்.

"மிளகாய்ப் பொடியும் நல்லெண்ணெயும் பிரமாதமாக இருக்கும் மிஸ்டர் ராமநாதன்! யோசியாதீர்கள்!" என்றார் டாக்டர். அவருக்கு நல்ல பசி. காலையில் ரவீந்திரன் வீட்டிலிருந்து டாக்ஸியிலே பங்களாவுக்குத் திரும்பியவர், 'விறு விறு' என்று குளித்துவிட்டு வெறும் காப்பியைச் சாப்பிட்டு விட்டு ஆஸ்பத்திரிக்குச் சென்றிருக்கிறார்! பசிக்குச் சொல்லவா வேண்டும்!

மூவரும் தோசை சாப்பிட்டு விட்டு, மாடி அறையிலே வந்து நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"தோசை பிரமாதம்!" என்றான் அப்புலிங்கம். சங்கீதத்தை அநுபவித்து அநுபவித்துப் பழகிப் போன ரசிகன் அவன். எதையும் சுவையோடு உட்கொண்டு

பாராட்டிப் பேசுகிற பண்பு அவனுக்கு! ராமநாதனுக்கோ மனம் அங்கே இல்லை! நாகரத்தினத்தையே சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது அவனுடைய சிந்தனை முழுதும்!

"ரவீந்திரனிடம் எனக்கு உண்மையிலேயே ஒரு பாசம் ஏற்பட்டு விட்டது! தங்கமான மனிதன்!" என்று பேச்சை ஆரம்பித்தார் டாக்டர் சுரேஷ்.

"ரொம்ப சரி, டாக்டர். எனக்கும் அவனை ரொம்பவும் பிடித்திருக்கிறது. அவனைச் சந்தித்ததே ஒரு ரஸமான சம்பவம்!" என்ருன் அப்புலிங்கம்.

"அப்படியா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் டாக்டர். அதன்பேரில் லேவாதேவிக் கடையிலே புல்லாங் குழலை அடகு வைக்க வந்தானே ரவீந்திரன், அந்தச் சம்பவத்தை டாக்டர் சுரேஷுக்குச் சொன்ஞன் அப்புலிங்கம்.

"அப்படியாஞல், ரவீந்திரனுடைய புல்லாங்குழல் உங்களிடமா இருக்கிறது! அட பாவமே!" என்று அநுதாபத்தோடு சொன்ஞர் டாக்டர்.

"ஆமாம் டாக்டர்! அதை இப்பொழுது திரும்பக் கொண்டு போய்க் கொடுத்தால், வாங்கிக் கொள்ளக்கூட மாட்டான் ரவீந்திரன்! மல் யுத்தத்துக்கே வந்து விடுவான்!" என்று பேச்சிலே தானும் சேர்ந்து கொண்டான் ராமநாதன்.

"ஆமாம், டாக்டர்! கடஞை வாங்கிய தொகையைத் திரும்பக் கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான் புல்லாங்குழலை வாங்கிக் கொள்வாஞம்! அதுவரை அந்தப் புல்லாங்குழல் என்னிடம் அடகாக இருக்க வேண்டும் என்று எத்தனை கண்டிப்போடு பேசிஞன் தெரியுமா!" என்று ஒரே வியப்பாக டாக்டரிடம் சொன்ஞன் அப்புலிங்கம்.

"மனச்சான்று என்று ஒன்று இருந்து கொண்டு அவனை வேதனை செய்கிறது! பாவம்! எத்தனையோ பணக் கஷ்டம் அவனுக்கு இருக்க வேண்டும்! ஆஞல் அதை வெளியே காண்பித்துக் கொள்ள வெட்கப்

படுகிறான் என்று தெரிகிறது!" என்றார் டாக்டர். ராமநாத னுக்கு இந்த வார்த்தைகளைக் கேட்டதும் உடம்பு சிலிர்த்தது. சொன்னான் :

" உண்மையான வார்த்தை, டாக்டர். எத்தனையோ பேர் அவனிடம் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி அவனை ஏமாற்றிப் பணம் வாங்கிக் கொண்டு போவதை நானே பார்த்திருக்கிறேன். தனக்கு இல்லை யென்றால்கூட இன்னொருவரிடம் கடன் வாங்கியாவது கொடுத்து விடுவான். நெருங்கிப் பழகினவர்களுக்குத்தான் அவ னுடைய இந்த சுபாவம் தெரியும் !" என்றான் ராமநாதன். டாக்டர் சொன்னார் :

" அது எனக்குத் தெரியாது. ஆனால் பணச் செழிப்பு அறவே இல்லை ! கல்யாணி அம்மாளுடைய கழுத்தைக் கவனித்தேன். மாங்கல்யத்தைத் தவிர ஒன்றையும் காணோம் ! பாவம் !" என்றார் டாக்டர். ராமநாதனுக்கு இதைக் கேட்கவே கஷ்டமாக இருந்தது.

" தொழிலே இல்லாதபோது ஏற்பட்ட பழைய கடன்களை ஒவ்வொன்றாகத் தீர்ப்பதற்கே இன்னும் பல வருஷங்கள் இவர் சம்பாதித்தாக வேண்டுமாம். ரவீந்திர னுடைய மாமனார் வருத்தப்பட்டுச் சொல்லிக் கொண் டிருந்ததாக எங்கள் அப்பா சொன்னார்கள், டாக்டர் !" என்றான் அப்புலிங்கம்.

ரவீந்திரனுடைய வாழ்க்கையின் சுக துக்கங்களைப் பற்றிப் பேச்சு நடந்தது. திடீரென்று ராமநாதன் கேட்டான் :

" சந்திரிகாவுக்கும் ரவீந்திரனுக்கும் உள்ள பாசத் தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் டாக்டர் ? நீங்கள்தான் எதையும் நன்றாக நினைத்துப் பார்த்து முடிவு சொல்பவர் ஆயிற்றே !"

" நான் நினைப்பதற்கு ஒன்றும் இல்லை ! அதைப் பற்றி ரவீந்திரனுக்கு எத்தனை தெரியுமோ அத்தனை எனக்கும் தெரியும் !" என்றார் சுரேஷ்.

" அப்படி யென்றால் ?..........." என்று ஆவலோடு கேட்டான் அப்புலிங்கம்.

"அந்த விஷயத்தைப் பற்றி இன்னொரு சந்தர்ப்பத்திலே பேசிக் கொள்ளுவோம்! இப்படி யெல்லாம் அவசரத்தில் பேசி முடிவு கட்டி விடக்கூடிய காரியமில்லை அது!" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியை விட்டு எழுந்தார் டாக்டர். மனம் வேறு ஏதோ ஒரு யோசனையில் ஆழ்ந்ததுபோலத் தோன்றியது.

"என்னோடு கடைத்தெரு வரைக்கும் நீங்கள் வந்தால் நல்லது. ஒரு முக்கியமான சாமான் வாங்க வேண்டும். காரிலே போய்விட்டு உடனே திரும்பி விடலாம். அதன் பிறகு அப்புலிங்கமும் தம்முடைய தகப்பனாரையும் தாயாரையும் ஆஸ்பத்திரியிலிருந்து அழைத்துக் கொண்டு போகலாம். என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் சுரேஷ். அவர் கேட்ட விதம் யாருமே அதற்கு மறுத்துச் சொல்ல முடியாதபடி இருந்தது!

மூவரும் எழுந்தார்கள்.

* * *

அப்பொழுது மாலை ஆறு மணி யிருக்கும். தெரு வாசலில் கோலம் போட்டு விட்டு, ரவீந்திரனுடைய அறையிலே தொங்கும் வெண்கலத் தகளி விளக்கிலே எண்ணெய் ஊற்றித் திரி ஏற்றி விட்டுப் பூஜை அறையிலே யிருந்த குத்து விளக்குக்குக் குங்குமம் இட்டு, நித்திய வழக்கப்படி தீபலக்ஷ்மிக்குப் பூஜை செய்யச் சென்றாள் கல்யாணி.

"தாயே! உன்னைக் கையெடுத்ததற்கு ஒரு குறையும் வராது, அம்மா! எவ்வளவோ பெரிய விபத்து எப்படியோ நீங்கிற்று. அவர் என்னிடம் எப்படி வேண்டுமானாலும் கோபப்படட்டும். என்னை இம்சை செய்யட்டும். கவலையில்லை. ஆனால் அவருக்கு ஒரு கஷ்டமும் நேரக் கூடாது, தாயே! அவருடைய மனசில் குழப்பம் ஏற்படாதவாறு நடந்து கொள்ளும்படி எனக்குப் பொறுமையைக் கொடு. அம்பிகே! தீபலக்ஷ்மி!" என்று கல்யாணி அவளுடைய உள்ளத்தில் தோன்றிய

எண்ணங்களை யெல்லாம் சொல்லிப் பிரார்த்திக்கலானாள். அப்பொழுது வெளியே யாரோ ஒரு பையன் வந்து ஒரு நீளமான சிறு பெட்டியையும் ஒரு கடிதத்தையும் கொண்டு ரவீந்திரன் கையிலே கொடுத்தான். பெட்டியைப் பார்த்தால் அது புல்லாங்குழல் பெட்டி போல இருந்தது. ரவீந்திரன் கடிதத்தை வாங்கிப் பரபரப்புடன் பிரித்தான் டாக்டர் சுரேஷ் எழுதி யிருந்தார் :

“ அன்புக்குப் பாத்திரமான ரவீந்திரனுக்கு !

‘ தோழனோடு ஏழைமை பேசேல் ’ என்பது வசனம். நண்பர்களோடு ஒருவன் தன்னுடைய வறுமையைப் பற்றிப் பேசக் கூடாது என்பது உண்மைதான். ஆனாலும் வாழ்க்கைப் பாதை யிலே நடந்து செல்லும் ஒருவனுக்கு அங்கங்கே சுமை தாங்கிகள் வேண்டும். பாரத்தைச் சற்று இறக்கி வைத்துக் களைப்பாற வசதியில்லை யென்றால் வாழ்க்கையின் யாத்திரை சலிப்புத் தட்டிவிடும். இதை உங்களுக்கு நினைவுபடுத்து கிறேன்.

இத்துடன் என்னுடைய அன்புப் பரிசாக ஒரு புல்லாங்குழல் வருகிறது. வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாமல் இதைப் பெற்றுக் கொள்ள வேண்டும். தங்களுடைய உள்ளம் இப்பொழுது இருக்கும் நிலையில் சங்கீதம் ஒன்றே அதற்குச் சரியான மருந்து. உங்கள் உள்ளத்தின் சுமையை யெல்லாம் இசையிலே கொட்ட வேண்டும். இல்லையெனில் மனசிலே பொங்கிப் பெருகும் உணர்ச்சிகளுக்கு வெளியீடு இல்லாமல், உங்களுடைய உடம்பு பாதிக்கப் படும். ஒரு வைத்தியன் என்ற முறையில் நான் கொடுக்கும் மருந்தாக இதை ஏற்றுக் கொள்ள வேண்டும். நண்பன் என்று என்னை நீங்கள் கருதும் பக்ஷத்தில், தங்களுடைய எதிர் கால முன்னேற்றத்துக்கு இதை என்னுடைய பிரார்த்தனைப் பரிசாகக் கருதி அங்கீகரிக்க

வேண்டும். தங்களுடைய தன்மான உணர்ச்சியினல் இதைப் புறக்கணித்து விடக் கூடாது. நேற்று என்னிடம் தங்களுடைய இதயக் கதவைத் திறந்தீர்கள். தங்களுடைய மனிதப் பண்பை அப்பொழுது நேருக்கு நேர் கண்டு கொண்டேன். தங்களுடைய உடம்பின் நிறை நூற்று மும்பத்தைந்து ராத்தல். ஆனல் உள்ளத்தின் நிறையை எடை போட்டுச் சொல்வதற்கில்லை. தங்களோடு பேசிய விநாடியிலேயே தங்களை எனக்குப் பிடித்து விட்டது. எந்தச் சமயத்திலும் தங்களுக்கு உதவி செய்ய ஒரு நண்பன் இருக்கிருன் என்று உரிமையோடு கருதுங்கள். எனக்கு அதைவிடச் சந்தோஷம் வேறென்றில்லை.

சுரேஷ்."

இந்தக் கடிதத்தைப் படித்ததும் ரவீந்திரனுக்குக் கண்ணீர் வந்தது! இருள் மயமான ஆகாசத்தில் திடீரென்று ஒரு மின்னல் மின்னினல் எப்படி யிருக்கும்! அப்படி யிருந்தது அவனுக்கு. தன்னுடைய துன்ப மயமான வாழ்வில், தன்னுடைய விசித்திரமான மனப் போக்குகளுக்கிடையே இப்படியும் ஒரு நட்பா? என்ன விந்தை என்று நினைத்துக் கொண்டான். அதே சமயத்தில் வழக்கமான சந்தேகமும் ஏற்பட்டது. 'இருளினூடு மின்னுகிற மின்னல் ஒரு கணம் ஒளி வீசி விட்டு மறைந்து விடுமே! நிலையற்றதாயிற்றே அது! டாக்டரின் இந்த அன்பும் அப்படித்தான் ஆகிவிடுமோ!'

இவ்வாறு எண்ணிக் கொண்டே புல்லாங்குழல் பெட்டியைத் திறந்தான். கடை வீதியிலே அன்றுதான் வாங்கி யிருக்க வேண்டும், அந்த வாத்தியத்தை! பெட்டியைத் திறந்தும், அதிலிருந்து 'புது வாசனை' அப்படியே வந்தது! அந்த வாசனையை நுகர்வதற்குள், பூஜை அறையினுள்ளிருந்து சாம்பராணி தூபத்தின் மணம் 'கம கம' என்று கமழ்ந்து வந்தது. ரவீந்திரனுடைய நெகிழ்ந்த உள்ளத்திலே அந்த வாசனை அப்படியே சென்று 'கம்' என்று நிரம்பிற்று. இடையிலே சில

நாட்களாக சங்கீத சரஸ்வதியின் சந்நிதியை மறைத்துக் கொண்டு படுத்திருந்த நந்தி விலகி விட்டது போன்ற ஒரு பிரமை ரவீந்திரனுக்கு உண்டாயிற்று. அவனுடைய மனக் கண்ணிலே ஸ்வர கன்னிகைகள் எழுவரும் கைகோத்து நடனமாட, நடுநாயகமாக சங்கீத சரஸ்வதி கொலு வீற்றிருந்தாள்! உடம்பு முழுவதும் தன்னை மறந்த ஒரு லயம் கூடிற்று. அந்தப் புல்லாங்குழலை எடுத்து உதட்டிலே பொருத்தினான். விரல்களிலே ஒரு காந்த சக்தி எழுந்து விளையாடிற்று. இதயத்திலே ஒலியின் ஊற்றுக் கண் திறந்து கொண்டது. அப்படியே நாத வெள்ளம் பெருகிப் புறப்பட்டுப் புல்லாங் குழலிலே பாய்ந்து வந்தது.

சங்கராபரண ராகமா அது! எத்தனை அமானுஷ்ய சக்தியோடு குதித்து வந்து நடனம் ஆடுகிறது அது!

மாடியிலே சிந்தனையில் உட்கார்ந்திருந்த சந்திரிகா அந்த இசையினால் கவரப்பட்டுப் படிகளிலே இறங்கி வந்தவள், ரவீந்திரனுடைய தன்னை மறந்த நிலையைக் கண்டு முதலாவது படியிலேயே நின்று விட்டாள். எத்தனை நேரம் அப்படி நின்றாள் என்று அவளுக்கே தெரியாது.

சங்கராபரணம், பைரவி, கோதார கௌளம், சாவேரி என்று ராகங்கள எல்லாம் ஒன்றை யொன்று தொடர்ந்து அணி அணியாக வந்து நின்று சேவை சாதித்தன. மனி தனையும் அவனுடைய சிறுமைகளையும், உலகையும் அதன் ஓட்டசாட்டங்களையும், கடந்த ஒரு அமானுஷ்யமான சொப்பனபுரியை நோக்கிப் புல்லாங் குழலின் கற்பனைக் காற்றிலே மேலே மேலே பறந்து கொண்டிருந்தான் ரவீந்திரன். இதோ! மத்திமம் பேசுகிறது! என்ன சுகம்! என்ன சுகம்! அந்தப் புல்லாங்குழலின் மென்மை யான துவாரங்களினூடு புன்னாகவராளி வளைந்து நெளிந்து வருகிறது! இணையொலிகள் எல்லாம் பின்னியும் தவழ்ந்தும் பேசுகின்றன! என்ன நாதம்! எத்தனை சுக பாவம்!

உச்சிப் பிள்ளையார் கோவிலில் இருந்து திரும்பிக் கொண்டிருந்த கந்தப்பன் அப்படியே மெய்ம் மறந்து ஒரு கணம் வீதியில் நின்ருன்! தாயுமானவர் தெருவிலிருந்தா வருகிறது இந்த இன்னெலி? கந்தப்பன் திகைத்துப் போனன்.

பொதிகைமலைக் காட்டிலே தன்னுடைய இனத்தவரான மலை ஜாதி மக்கள் விழாக் காலங்களிலே ஊதுகிற சொக்கி குழலைக் கேட்டு அனுபவித்ததுண்டு அவன். அந்த மலைப் பிராந்தியங்களில் புன்னகவராளியை ஒட்டிய ஒரு சிறு ராகத்தில் அதிக நெரடு இல்லாத ஒரு மெட்டை அவர்கள் வாசிப்பதுண்டு. அதுவே கேட்பதற்கு எத்தனையோ இதமாக இருக்கும். ஆனல் இந்த ராகமும், இதை வாசிக்கும் விதத்திலே உள்ள சாயல்களுமோ என்ருல் இதுவரை எங்குமே கேளாதனவாக அல்லவா இருக்கின்றன!

பொதிகை மலையிலே அந்திப் பொழுதில் சூரியன் அஸ்தமிக்கும் காட்சியைக் கந்தப்பன் பல முறைகள் பார்த்திருக்கிருன். எண்ண முடியாத வர்ணங்களும் கோலங்களுமாக மாலைக் கதிரவன் வானத்திலே அள்ளித் தெளிப்பான்! அப்படியல்லவா இருக்கிறது இந்தக் குழல் இசை!

கந்தப்பன் அந்த இசையின் காந்த சக்தியினல் வேகமாகக் கவரப்பட்டுத் தாயுமானவர் தெருவிலே 'விறு விறு' என்று நடந்தான். இசை வந்த வீட்டின் படிகளிலே சற்றும் தயங்காமல் ஏறினன்.

கந்தப்பன் திருச்சிராப்பள்ளிக்குப் புதியவன். பொதிகை மலைப் பளிஞர் கூட்டத்துத் தலைவனின் சகோதரி மகன் அவன். மலைஜாதியினரை முன்னேற்றும் நோக்கத்துடன் பாதிரிமார்கள் செய்த ஏற்பாட்டின் பலனக இப்பொழுது அர்ச் சூசையப்பர் கல்லூரிக்குப் படிக்க வந்திருக்கிருன். மற்றப்படி, மலைஜாதி மக்களுக்கே இயல்பாக அமைந்த அவனுடைய பரிசுத்தமான குழந்தை உள்ளத்தில், நகர வாழ்க்கையின் கறை இன்னும் படியவில்லை. வாலிப வயதின் வேகமும், கபடம் இல்லாத

மனசின் பாசமும், எல்லாவற்றிற்கும் மேலாக அவனுடைய மலை நாட்டுச் 'சொக்கி குழல்' என்ற வாத்தியத்தில் அவனுக்கு இருந்த பக்தியும் ஈடுபாடும்,—எல்லாமாகச் சேர்ந்து அவனுடைய கால்களின் வேகத்தை அதிகரித்தன. வாசலைத் தாண்டி அறைக்குள்ளே சென்றான் கந்தப்பன்!

ஆனால் என்ன பேராச்சரியம்! கந்தப்பன் அப்படியே திகைத்துப் போய் நின்றான்! தன்னை மறந்து புல்லாங்குழல் வாசித்துக்கொண்டிருந்த அந்த அற்புத புருஷனுக்கு எதிரே சற்றுத் தூரத்தில் ஒரு நல்ல பாம்பு படத்தை விரித்துக் கொண்டு நின்று இசையிலே கிறங்குகிறது! உள் அறையின் கதவோ சாத்தியும் சாத்தாமலும் இருக்கிறது. வேறு யாரும் மனிதர்களைக் காணோம், அந்த அறையில்! இந்நிலையில், அந்தப் புல்லாங்குழல் வித்துவான் இசையின் போக்கை மாற்றினால், அல்லது வாசிப்பதை ஒரு கணம் நிறுத்தினால் என்ன ஆகும்?

கந்தப்பனுக்கு நல்ல பாம்புகளின் சுபாவம் தெரியும். ஒரு கணம் நின்று தயங்கினான். இதற்குள் என்ன நேர்ந்தது?

மாடிப் படியிலிருந்து ஒரு பெண்ணின் குரல் பதற்றத்தோடு "ஐயோ! பாம்பு! பாம்பு!" என்று கதறியது. மறு விநாடி உள் அறையைத் திறந்து கொண்டு ஒரு பெண்மணி கையும் காலும் பதற ஓடி வந்தாள். புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த மனிதனோ இந்த உலகத்திலேயே இல்லை! வெளியே நின்று செயல் புரிய வேண்டிய அவனுடைய ஐந்து புலன்களும் உள்ளத்திலே போய் ஒன்றி நின்றிருந்தன அவனுக்கு! புன்னாகவராளி தவழ்ந்து நலியவே இப்பொழுது அதைப் பின்னித் தொடர்ந்து சிம்மேந்திர மத்யமம் வந்தது! கந்தப்பனுடைய முகக் குறி மாறிற்று. படம் எடுத்து நிற்கும் பாம்பையே கவனித்தவாறு ரவீந்திரனை நோக்கி நடந்தான் கந்தப்பன்!

## 17. சிலம்பப் பள்ளிக்கூடம்

அப்புலிங்கம் அந்தப் புஸ்தகத்தில் மூங்கி முழுகிப் போயிருந்தான்.

சீன தேசத்தில் கி. மு. மூன்றுவது நூற்றுண்டில் "யின்—யாங்" நிபுணர்கள் என்று அழைக்கப்பட்ட பேரறிஞர்கள் சிலர் இருந்தார்கள். அவர்கள் இயற்கையையும் அதன் போக்குகளையும், மனிதர்களையும் அவர்களுடைய செயல்களையும் ஆராய்ந்து பார்த்து ஒரு ரஸமான முடிவுக்கு வந்தார்கள். டாக்டர் ஸ்காட் என்ற அறிஞர் 'யீனிஸம்' வன்று வர்ணிக்கப்படுகிற அந்த இரகசியங்களையெல்லாம் விரிவான ஆராய்ச்சியாக எழுதியிருக்கிறுர். அதை எடுத்துப் படித்துக்கொண்டிருந்தான் அப்புலிங்கம்.

அப்புலிங்கத்துக்கு மனத்தில் நிம்மதி இல்லை என்றுல் ஒன்று சங்கீதம் கேட்கப் போவான்; அல்லது இந்த மாதிரி அறிவுக்கு உணவூட்டும் ஆராய்ச்சிப் புத்தகங்களை எடுத்துப் படிப்பான். இன்று அவன் எடுத்துப் படித்த புத்தகத்தில் அவனுடைய உள்ளத்தில் எழுந்து குமைந்து கொண்டிருந்த சந்தேகங்களுக்கு எல்லாம் ஒரு விளக்கம் இருந்தது.

இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சீனர்கள், உலகத்தின் ஆதார சக்திகளை இரண்டாகப் பிரித்து அவற்றை 'யின்' என்றும் 'யாங்' என்றும் பெயரிட்டார்கள். 'யாங்' என்பது சூரியனைப் போன்ற பிரகாச சக்தி. 'யின்' என்பது அதன் நிழல். உலகில் நல்ல விஷயங்களுக்கெல்லாம் ஆதாரமாக நிற்பது 'யாங்.' கேடுகளுக்கெல்லாம் வித்தாக இருப்பது 'யின்'! இந்த உண்மையைச் சூரியனும் அவனுடைய நிழலுமாகக் கண்டு சித்திரித்தார்கள் சீனர்கள். இந்த இரண்டும் ஒன்று சேர்ந்தே உலகம் இயங்குகிறது என்றுர்கள். இதுவே 'யின்யாங்' சித்தாந்தம்.

இதைப் படித்தபோது அப்புலிங்கத்துக்கு வியப்பும் தெளிவும் ஒன்று சேர்ந்து ஏற்பட்டன. ரவீந்திரனும் சந்திரிகாவும் ஒரு ஒளி வட்டம் போலவும், அந்த ரவி

சந்திரிகாவை விழுங்க வரும் நாகரத்தினமும் குப்புசாமியும் ராகு,கேதுவாகவும் மனத்துக்குள் நினைத்துக்கொண்டான்.

ராகு கேது என்பது ஏதோ மூட நம்பிக்கையினால் நம்மவர்கள் சொல்கிற அறியாமை என்று எண்ணுவது தவறு. நுட்பமான கருத்து அந்தச் சிந்தனைக்குள்ளே பொதிந்து கிடக்கிறது என்று அப்புலிங்கத்துக்குப் பட்டது.

இப்படி அவன் எண்ணமிட்டுக் கொண்டிருந்தபோது தான் ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே சர்ப்பம் நுழைந் திருந்தது. அதைவிடக் கொடிய சர்ப்பமான நாகரத்தினம் அதே சமயத்திலேதான் பகோரான் வீட்டுக்குள்ளேயிருந்து விஷப் பல்லை நன்றாகத் தீட்டிக் கொண்டு வெளியே வந்தான்!

ஆமாம்; காலையில் பகோரான் வீட்டுக்குள்ளே நுழைந்த நாகரத்தினம் அன்று இருட்டும் வரை அங்கேயே இருக்க நேர்ந்தது! இருந்து தீர்த்தான்!

காலையில் அத்தனை கர்ம சிரத்தையோடு பகோரான் வீட்டுக்குள்ளே நுழைந்தான் அல்லவா, நாகரத்தினம்! அப்பொழுது நிலைமை 'எக்கச் சக்கமாக' அல்லவா இருந்தது. அது காரணமாக அவன் பகல் முழுதும் அங்கேயே தங்க நேரிட்டது.

நாகரத்தினம் உள்ளே நுழைந்ததும், சிறுவன் 'மெஸ் மெரிஸ்'த்தினால் மயங்கி விழுந்ததும் ஒரே சமயத்தில் நடந்த சம்பவங்கள். உள்ளே சென்ற நாகரத்தினம் சற்று ஒதுங்கி நின்றான். பகோரானே அவனைப் பார்த்து விட்டான்.

"யார் நாகரத்தினமா ?" என்று கேட்டுக் கொண்டே, கீழே மயங்கி விழுந்த சிறுவனைத் தூக்கி எடுத்து அசைக் காமல் மேஜையிலே படுக்கப் போட்டான் பகோரான்.

"பகோரான்! நீ எத்தனை நாளாக இந்த மெஸ்மெரிஸ வேலையில் இறங்கி யிருக்கிறாய் ?" என்று கேட்டான் நாகரத்தினம்.

“அதெல்லாம் இப்பொழுது பேச நேரமில்லை. பையனுடைய மயக்கம் எல்லாம் முக்கால் மணி நேரம்தான்! தெரியுமா! அதற்குள் எத்தனையோ காரியம் செய்து முடிக்க வேணும். நீ போய் அது வரையில் மாடியில் உட்கார்ந்திரு. நான் கொஞ்ச நேரத்தில் மேலே வருகிறேன்!” என்றான் பகேரான். மெதுவாகத் தன்னைக் கத்தரிக்கிறானே என்று எண்ணித் தயங்கினான் நாகரத்தினம். உடனே “ஜிகிஜம்! ஜிங்கிஜம்! ஜிகிஜாங்கி ஜம்......” என்று சொல்லியவாறு கண்களை ஒரு மாதிரி வைத்துக் கொண்டே நாகரத்தினத்தைப் பார்த்த வண்ணம், “சரி, நீ மேலே போய்க் காத்திருக்கலாம்!” என்றான் பகேரான்! அவனுடைய அந்த நிலையைப் பார்த்தால், நாகரத்தினம் இன்னும் சற்றுத் தாமதிக்கும் பக்ஷத்தில் அவனையும் ‘மெஸ்மெரிஸம்’ செய்து கீழே விழத் தட்டி விட்டுவிடுவான் போலிருந்தது! நாகரத்தினம் மெதுவாக அந்த மெஸ்மெரிஸ அறையை விட்டு வெளியே வந்தான்.

‘பேசாமல் வந்த வழியே திரும்பிப் போய் விட்டால் என்ன! இங்கே இந்த ஜிங்கிட ஜம் வந்து குறுக்கே நிற்கிறதே!’ என்று ஒரு கணம் நினைத்தான் நாகரத்தினம். அடுத்த கணம் ‘காத்திருக்கச் சொல்லியும் போய் விட்டாயே!’ என்று பகேரான் தன் மீது சீறினால், எல்லாத் திட்டமும் வீணாகி விடுமே என்று கிலேசமும் உண்டாயிற்று.

“அட ஜிங்கிட ஜம்மே! ஜிங்கிட ஜிங்கிட ஜம்மே” என்று தலையில் அடித்துக் கொண்டே மாடிப் படிகளிலே மெதுவாக ஏறினான் நாகரத்தினம்.

இரவெல்லாம் தூக்கம் விழித்த களைப்பு. எடுத்த முயற்சிகள் எல்லாம் ஒவ்வொன்றாகத் தோற்றுக் கொண்டே வருவதால் ஏற்பட்ட சலிப்பு. ராமநாதன் வீட்டுத் திண்ணையிலே போய் ஒதுங்கப் போக, அவன் இவனைப் பார்த்துவிட, அதன் பிறகு நேர்ந்த விபரீதங்களால் ஏற்பட்ட அதிர்ச்சி, அக்காள் கல்யாணியின் கோபமான வார்த்தைகள், எல்லாவற்றிற்கும் மேலாக மீரானின் பகைமை— இப்படிப் பல குழப்பங்களும் சேர்ந்து தலையைச்

சுற்றின. பகோரான் வீட்டு மாடியிலே கிடந்த நார்க் கட்டிலின் மேல் துண்டை விரித்துப் படுத்தான். அப்படியே உறங்கி விட்டான்.

நாகரத்தினம் மறுபடி கண் விழித்த போது பகோரான் வீட்டுக் கடிகாரம் மூன்று மணி அடித்தது. அந்தக் கடிகாரத்தைப் பார்த்தான். அதில் ஒரு பெண் மணியின் படம் ஒட்டப்பட்டு பெண்டுலத்தின் இயக்கத்திலே அது அங்கும் இங்கும் நகரும்போதெல்லாம் கண்களைச் சிமிட்டி ஒரே பயங்கரமான மெஸ்மெரிஸமாகக் காட்சி தந்தது. பக்கத்தில் கிடந்த ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவண்ணம் பகோரான் ஏதோ ஒரு மாஜிக் புஸ்தகத்தைக் கையிலே வைத்து அதில் வரைந்திருந்த பயங்கரமான படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

“என்ன நாகு! ராத்திரி யெல்லாம் தூக்கம் முழிப்பா?’ என்று கேட்டான் பகோரான்.

“ஆமா தம்பி! அது விஷயமா ஒரு முடிவுக்கு வரத்தான் இப்போ இங்கே வந்திருக்கிறேன்!” என்றான் நாகரத்தினம்.

“வந்து ஒரே கவலையோடு நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறாய்!” என்றான் பகோரான்.

“களைப்பு அத்தனை அதிகம் தம்பி!” என்றான் நாகரத்தினம்.

இருவரும் விஷயங்களை அலச ஆரம்பித்தார்கள். நாகரத்தினம் மெதுவாகத் தனக்கும் அத்தான் ரவீந்திரனுக்கும் மனஸ்தாபம் உண்டானதைப் பற்றிச் சொன்னான்.

பகோரான் சொன்னான்: “நாகு, நீ ஏன் இத்தனை கஷ்டமான யோசனைகளை யெல்லாம் செய்கிறாய்? பேசாமல் ஆட்களை மட்டும் என்னிடம் இரகசியமாகக் காட்டி விடு! அப்படியே ஒவ்வொரு நபராக மெஸ்மெரிஸத்தில் கீழே விழத் தட்டி விடுகிறேன்!”

“அதெல்லாம் சரி தம்பீ! ஆனால் விஷயம் அப்படி யெல்லாம் எளிதாக இல்லை! ஆமாம்!”

"நாகு, என்ன சொன்னாய்? மெஸ்மெரிஸத்தைப் பற்றி உனக்கு என்னடா தெரியும் என் அண்ணனே! கொஞ்சம் ஒரு நிமிஷம் பார்க்கிறாயா இப்பொழுது? இந்தா இந்த உள்ளங்கையைப் பார் — இதோ சோத்துக் கையை—ஜிம், ஜிகிஜம், ஜிங்கிட ஜம், ஜிகிஜாங்கி ஜம்—"

"இந்தா தம்பி, தம்பீ! சரியாய்ப் போச்சு! என்னிடத்திலேயே ஆரம்பித்து விட்டாயா! நான் இப்பொழுது இருக்கிற நிலையில் மயங்கி விழவேண்டியது ஒன்றுதான் பாக்கி! அட கடவுளே!......"

"அதற்குச் சொல்லவில்லை நாகு! நீ என்னவோ மெஸ்மெரிஸம் என்றால் லேசாக நினைத்துத் தூக்கி எறிந்து பேசுகிறாயே?"

"பகோரான்! உன்னையோ உன்னுடைய மெஸ்மெரிஸத்தையோ நான் குறை சொல்லவில்லை. உன்னுடைய சக்தியைத்தான் நேருக்கு நேர் பார்த்தேனே. அந்தச் சின்னப் பையன்......"

"சின்னப் பையனா! எத்தனை பெரிய ஆளை வேண்டுமானாலும் கொண்டு வந்து நிறுத்தேன். ஒரு யானையை அப்படியே நாலு காலையும் சேர்த்துப் பீப்பாய்மேல் நிற்கும்படி சொல்லட்டுமா? எல்லாம் மெஸ்மெரிஸம் செய்கிற வேலையப்பா! அதிகம் எதற்கு! நீயேதான் கொஞ்சம் நின்று பாரேன். நிற்கக்கூட வேண்டாம். இதோ இந்த உள்ளங்கையைப் பார்—சோத்துக் கையை—எங்கே—ஜிம், ஜிகிஜம், ஜிங்கிட ஜம்......"

"தம்பீ, தம்பீ! பழையபடியும் ஆரம்பித்து விட்டாயே! நான் முழுதும் ஒப்புக் கொள்ளுகிறேன்—மெஸ்மெரிஸத்தினால் இந்த உலகத்தில் உள்ள எந்த மனிதரையும் உன்னால் மயக்கிக் கீழே தள்ளிவிட முடியும்! ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் உள்ளங்கையைப் பார்க்கச் சொல்கிறாயே, சோத்துக் கையை, மனிதர்களை அப்படிப் பார்த்துக் கொண்டே எதிரே வந்து மௌனமாக நிற்கும்படி செய்ய வேண்டுமே! அது எப்படி சாத்தியம்? உதாரணமாக நம்முடைய உஸ்தாத் மீரானை உனக்கு

எதிரே வந்து நின்று உன்னுடைய உள்ளங்கையைப் பார்த்துக் கொண்டு நிற்கும்படி சொல்ல முடியுமா ?"

"என்ன உஸ்தாதா ? உஸ்தாதா ? அவரை எதற்கு இங்கே கொண்டு வரவேண்டும் ? .அவருக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ? அல்லாவையே எதிர்க்கச் சொல்லு வாய் போலிருக்கிறதே ! நாகரத்தினம், நீஒரு பேவகூப்! உன்னை என்ன செய்ய வேண்டும் தெரியுமா—இந்தா, இங்கே பார்—"

"பழையபடியும் ஆரம்பித்து விட்டாயா, சோத்துக் கையைப் பார்க்கச் சொல்ல !"

"அது இல்லேடா நாகு. சும்மா பார்க்கச் சொன் னேன். என்னைப் பார்த்துப் பேசு என்று சொன்னேன். உஸ்தாதைப் பற்றியே இப்படிப் பேச உனக்கு என்ன துணிச்சல் என்று பார்ப்பதற்காகச் சொன்னேன்—"

நாகரத்தினம் இந்த இடத்தில் மௌனமாக இருந்து நிதானித்தான்.

"என்ன யோசிக்கிருய், நாகு ?"

"இல்லே. எல்லாரையும் மயக்கித் தள்ளி விடுவ தாகச் சொன்னுயே. உஸ்தாதையுங் கூடவா, என்று தெரிந்து கொள்வதற்காக அப்படிக்கேட்டேன். அதற்குள் நீ இத்தனை கோபப்பட்டு விட்டாயே ! என்ன பகோரான் நீ ! இப்படியா தப்பாக நினைப்பது ஒரு விநாடிக்குள் !"

பகோரானுடைய முகத்தில் மெதுவாக ஒரு சிரிப்பு வந்தது.

"அப்படிச் சொல்லு ! அதுதானே பார்த்தேன். யாரையும் கீழே விழத் தட்டி விடலாம் என்று சொன்னால், கடவுளையே எதிரே கூப்பிடட்டுமா என்று கேட்பது? நாகு, உஸ்தாத் என்ருல் எனக்கு அவர் நடமாடும் அல்லாஹ். என்னோடு பேசும் அல்லாஹ், அன்போடு சிரிக்கும் அல்லாஹ். எனக்குப் படியளக்கும் அல்லாஹ். என் னுடைய சக்திகளையும் எல்லாம் கடந்த மனித தெய்வம் அது !"

நாகரத்தினம் அப்படியே கிறங்கிப் போய் விட்டான். ‘குரு பக்தி என்பது பகோரானுக்கு எத்தனை தீவிரமாக இருக்கிறது. தன்னுடைய சக்திகளைப் பற்றி எத்தனை தன்னம்பிக்கையோடு — ஏன் கர்வத்தோடு கூடச் — சொல்லிக்கொள்ளத் தயாராகஇருக்கும் இந்தப் பகோரான், உஸ்தாத் என்றதும் கருடக் கொடியைக் கண்ட நல்ல பாம்பைப் போல அல்லவா படத்தைக் கீழே போட்டு விடுகிறான்! எப்படி அவனை ஒரு சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கச் செய்து உஸ்தாதுக்கு விரோதமாகக் கிளர்ச்சி பண்ணும்படி தயாரிப்பது! நடவாத காரியம் போலிருக்கிறதே!’ என்று சிந்தித்தான் நாகரத்தினம்.

“என்ன யோசனை பண்ணுகிறாய் நாகரத்தினம்? பகோரான் வெறும் வாய் வீச்சுக்காரன் என்றும் உஸ்தாத் என்றதும் இப்படி நடுங்குகிறானே என்றும் யோசிக்கிறாயா? இல்லை, அண்ணா! கேளு விஷயத்தை. இந்த பகோரான் உலகத்தையே எதிர்த்து நிற்கவும் தயார். மெஸ்மெரிஸம் மட்டும் இல்லை, கையில் கம்பு பிடித்துச் சண்டைக்கு வந்தால் இந்தப் பகோரானுடைய குச்சி, அதற்குப் பதில் சொல்லும். சுருளி பிடித்தால் இந்தக் கையும் சுருளி பிடிக்கும். கேப்ட்டாவா அதற்கும் தயார். இல்லை, துப்பாக்கியா அதுக்கும் ரெடி! இந்தத் திருச்சியில்லை, சென்னைப்பட்டினம் இல்லை, இந்த உலகமே எதிர்த்து வந்தாலும், அல்லாஹ் கிருபையினால், உஸ்தாத் பேரைச் சொல்லி ஒரு கை பார்த்து விடுவேன்! ஆனால் இந்த உடம்பு நிமிர்ந்து நிற்காத இடம் இரண்டு உண்டு. ஒன்று அல்லாஹுத் தாலாவின் திருமுன்பு. மற்றொன்று உஸ்தாத் சந்நிதி. இல்லை இல்லை. அதை மாற்றிச் சொன்னாலும குற்றமில்லை. ஒன்று உஸ்தாத். மற்றொன்று அல்லாஹ்!”

நாகரத்தினம் அசந்து விட்டான்!

“அதற்குச் சொல்லவில்லை பகோரான்! உன்னுடைய திறமை எனக்குத் தெரியாதா என்ன! நான் நினைத்தது என்னவென்றால்—”

“என்ன நினைத்தாய்? அதைச் சொல்லாமலேயே ஏதேதோ பேசுகிறாயே!”

"அதைச் சொல்லத்தான் என்னை விடவில்லையே நீ!"

"சரி, சொல்லு. வாயை மூடிக் கொண்டு கேட்கிறேன்."

நாகரத்தினம் தொண்டையை இருமிக் கொண்டு பேச ஆரம்பித்தான். அவனுடைய மூளையானது சூழ்ச்சி வலையைப் பின்னிக் கொண்டிருந்தது.

"பகோரான்! நெடு நாளாக எனக்கு ஒரு ஆசை இருந்து வருகிறது. சிலம்பம் என்பது ஒரு மிக அருமையான வித்தை. நம்முடைய நாட்டில் படிப்படியாக அது மங்க ஆரம்பித்து விட்டது அல்லவா? இதை மங்க விடாமல் வளர்க்க வேண்டும் என்று ஆசைப் படுகிறேன். உஸ்தாதுக்கோ வயது ஆகிவிட்டது. அவரைக் கொண்டு இந்த ஆசையை நிறைவேற்றுவது என்பது இனிமேல் முடியாது. எனவே, உன்னைக் கொண்டு ஒரு சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கச் செய்து, உனக்கு வேண்டிய பண உதவிகள் எல்லாம் செய்யலாம் என்று நினைத்தேன். இதைச் சொல்வதற்குள் நீ 'ஜிங்கிட ஜம்' ஆரம்பித்து விட்டாய்! என்ன செய்ய!"

பகோரானுக்கு இந்த யோசனையைக் கேட்டதும் முகத்தில் அப்படியே சந்தோஷம் மலர ஆரம்பித்தது.

"நாகு! அருமையான யோசனை சொன்னாய்! சபாஷ்!" என்றான் பகோரான். மீண்டும் தொடர்ந்து சொன்னான்:

"உஸ்தாதே என்னிடம் அடிக்கடி இந்த யோசனையைச் சொல்லியிருக்கிறார். அவரும் உடன் இருந்தே ஆரம்பித்துக் கொடுப்பார். அவருக்கு முதலில் தேங்காய் தட்டி மரியாதை செய்து விட்டே இந்தப் பள்ளிக்கூடத்தை ஆரம்பிக்கலாம். நாகு எத்தனை பேஷான யோசனை சொன்னாய்! ஆண்டவன்தான் உன்னை இங்கே அனுப்பி வைத்திருக்கிறான், இங்கே பார்—"

"தம்பீ, அந்தப் பேச்சு மட்டும் வேண்டாம். உன்னையும் உன்னுடைய சோத்துக் கையையும் பார்க்கிற காரியம்

மட்டும் நம்மிடம் வைத்துக் கொள்ளாதே—ஜிகி ஜம்மா, ஜிங்கிடஜம்மா—அதை வேறு எங்காவது பார்த்துக் கொள். நமக்கு லால்குடியில் ஒரு குடும்பம் இருக்கிறது. ஏதோ கடவுள் புண்ணியத்தில் என்பார்களே, அப்படிக் கொஞ்சம் நிலபுலனும் இருக்கிறது. அவசியமானல் நம்முடைய சிலம்பப் பள்ளிக்கூட விஸ்தரிப்புக்காக அவைகள் பிரயோஜனப்படும். ஆகையால் 'இங்கே பார்' என்ற பேச்சை மட்டும் சொல்லாதே, தெரிந்ததா !"

பகோரான் சிரித்து விட்டான். ஏதோ நாகரத்தினம் பிரமாதமாக ஹாஸ்யம் பேசி விட்டான் என்றில்லை! அவனிடம் அந்த இரண்டு நிமிஷத்தில் இத்தனை பரிவு உண்டாகி விட்டது பகோரானுக்கு ! சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிப்பது என்பது அத்தனை தூரம் பகோரானுடைய நெடுநாளைக் கனவாக இருந்து வந்திருக்கிறது.

நாகரத்தினம் இதைக் கவனித்துக் கொண்டு தன்னுடைய சூழ்ச்சியை மேலும் விவரிக்க ஆரம்பித்தான்.

" நாம் ஆரம்பிக்கப் போகும் பள்ளிக்கூடத்துக்குப் 'பகோரான் பள்ளிக்கூடம்' என்றே பெயர் வைக்க வேண்டும்—"

" நாகு, உஸ்தாதே அப்படித்தான் சொல்லுவாரப்பா !" என்றான் பகோரான்.

" ரொம்ப சரி. மீரான் பள்ளிக்கூடம் என்று ஒன்று இருப்பது போலவே, பகோரான் பள்ளிக்கூடமும் புகழோடு விளங்க வேண்டும். மீரான் பள்ளிக்கூடத்தில் இல்லாத விஷயம் ஒன்று நம் பள்ளிக்கூடத்தில் உண்டு. யாராவது கொஞ்சம் முறைத்துப் பார்த்தான் என்றால், ஜிகிஜம் இருக்கவே இருக்கிறது! என்ன பகோரான், நான் சொல்வது சரிதானே ?"

பகோரான் சிரித்துக் கொண்டே சொல்லுவான் : " அதெல்லாம் சரி நாகு ! ஆனல் அசந்து மறந்துகூட உஸ்தாதிடம் இந்தப் பேச்சை உச்சரித்து விடக் கூடாது. அவருக்கு மெஸ்மெரிஸம், மந்திர தந்திரம் இது ஒன்றும் பிடிக்காது. கையால் ஆகாதவன் செய்கிற காரியம் அதெல்லாம் என்று சண்டைக்கே வந்து விடுவார்.

அவருடைய மந்திரம் எல்லாம் அல்லாஹுத் தாலாவின் திருநாமம் ஒன்றுதான். அதை இப்பொழுதே சொல்லி வைக்கிறேன், ஜாக்கிரதை !''

" அது சரி, பகேரான்! இன்னொரு முக்கிய விஷயமும் சொல்ல வேண்டும். பகேரான் பள்ளிக்கூடத்தில் பகேரான்தான் உஸ்தாத். நம்முடைய பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்குப் பகேரான்தான் எல்லாம்.. எப்படி மீரான் பள்ளிக்கூடத்தில் மீரான்தான் உஸ்தாதோ, அப்படியே பகேரான் பள்ளிக்கூடத்தில் பகேரான்தான் உஸ்தாத். பகேரான் வைத்ததுதான் வரிசை. இதையும் அதையும் குழப்பக் கூடாது !''

" ரொம்ப சரி; மீரானுக்கே அந்த மாதிரிக் குழப்புவது பிடிக்காது. சீடர்களை உஸ்தாதுகளாக்கிப் பார்க்கிறதில் உள்ள சுகத்தை நன்றாகத் தெரிந்தவர் ஆயிற்றே, நம்முடைய உஸ்தாத்! வாழையடி வாழையாகத் தாய் வாழையும் அதன் அருகிலே கன்றுமாக நின்று சீட பரம்பரை வளர வேண்டும் என்று எத்தனை தடவை சொல்லி யிருக்கிறார் தெரியுமா அவர் !''

" பேஷ்! ஆகையினால் நம்முடைய சீடர்கள் முழுக்க முழுக்க நமக்குத் துணையாக, நமக்காக எதையும் கொடுக்கத் தயாராக இருப்பார்கள் !'' என்றான் நாகு.

"எதையுமா? நம்முடைய பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் நம் பள்ளிக்கூடத்துக்காக உயிரையே கூடக் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும். அப்படி யில்லாதவன் நமக்கு வேண்டியதில்லை !'' என்றான் பகேரான். அந்தக் குரலிலே தான் எத்தனை தீர்மானம் !

" ஒருவேளை உஸ்தாத் மீரானுடைய சீடர்களே நம்மைப் பற்றி அவதூறாகப் பேசவோ, அல்லது நடக்கவோ ஆரம்பித்தாலுங்கூட நம்முடைய பிள்ளைகள்–''

" நாகு! என்ன சொல்லுகிறாய் நீ! உஸ்தாதின் சீடன் ஒருவனாவது, நம்மை அவதூறாகப் பேசுவதாவது— அந்த மாதிரி நினைப்பே பைத்தியக்கார நினைப்பாயிற்றே!''

" அது சரி பகேரான்! ஒரு பேச்சுக்குச் சொல்லி வைத்தேன். அதாவது எந்தச் சந்தர்ப்பத்திலும் நம்

13

முடைய பிள்ளைகள் நம்மைக் கைவிட்டு விடக் கூடாது என்பதற்காகச் சொன்னேன். இன்னொரு முக்கிய விஷயம் மறந்தே போய் விட்டேன் !''

"என்னப்பா அது ?"

"இந்தப் பள்ளிக்கூடத்துக்கும் எனக்கும் உள்ள தொடர்பு வெளியே யாருக்கும் தெரியக் கூடாது. சிலம் பத்துக்காக நான் ஆயிரக்கணக்காகப் பணம் செலவழிக் கிறேன் என்று வெளியே தெரிந்தால், லால்குடியில் எங்கள் அப்பா பிரமாதமாகச் சண்டைக்கு வந்து விடுவார். வயதான மனிதர் பார். பணத்தாசை அதிகம். ஏதோ இன்னும் நூறு வருஷமா இருக்கப் போகிருர்? அது இல்லை. அவர் இருக்கிற வரைக்கும், இன்னும் கொஞ்ச நாளைக்கு அவருக்குப் பயந்த பிள்ளையாகத்தான் இருந்து விட்டுப் போவோமே !''

"ரொம்ப சரி நாகு. அப்பாவோடு என்னத்துக்கு வம்பு ?...''

"அதனல் எனக்கும் உனக்கும் உள்ள சிநேகம் யாருக்குமே தெரியக் கூடாது. வெளிப் பார்வைக்கு எல்லாமே பகேரானுடைய காரியம் என்றுதான் இருக்க வேண்டும். உஸ்தாத் மீரானுக்குக்கூட இது தெரியக் கூடாது !''

"அதென்ன அப்படி?'' என்று ஆவலோடு கேட்டான் பகேரான்.

"உஸ்தாத் பழைய காலத்து மனுஷர். சூது வாது கிடையாது. நான் பணம் செலவழித்து இந்தப் பள்ளிக் கூடம் நடத்துகிறேன் என்று தெரிந்தால், அந்தச் சந்தோ ஷத்தில், அந்த உற்சாகத்தில் நாலு பேரிடம் இதைச் சொல்லி வைப்பார். சொல்ல வேண்டாம் என்ருல் கூடத் தம்மையும் மறந்து பேச்சு வாக்கில், ஆனந்தத்தில் சொல்லி விடுவார். பிறகு லால்குடிக்கும் நாகரத்தினத் துக்கும் அறுந்துபோய் விடும்! நம்முடைய திட்டம் எல்லாம் குட்டிச் சுவர்தான் !''

"குட்டிச் சுவரா! என்ன நாகு, நல்ல காரியத்தைப் பேசும்போதே இந்த வார்த்தையெல்லாம் சொல்லு

கிருய்......" என்று ஒரே பக்தி சிரத்தையோடு கேட்டான் பகோரான்.

"அதற்கில்லை. நட்பைச் சொன்னேன். அவ்வளவு தான். உஸ்தாதுக்கு என்னைப் பற்றி ஒன்றுமே சொல்லாமல் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதானல் சொல்லு. நாளைக்கே எல்லா ஏற்பாடுகளும் செய்து விடுவோம்" என்ருன் நாகரத்தினம்.

"அதைப் பற்றிக் கவலைப்படாதே. காரியம் கெட்டு விடக் கூடாது என்பதற்காகத்தானே நீ இதைச் சொல்லுகிருய். நியாயந்தான். உஸ்தாதிடம் உன்னுடைய தொடர்பையே சொல்லவில்லை. சரிதானு?"

"என் பேச்சே அங்கு இருக்கக் கூடாது. உஸ்தாதுக்குக் கொஞ்சம் கோடி காண்பித்தாலும் கூட விஷயத்தைக் கண்டு பிடித்து விடுவார். மகா புத்திசாலியாயிற்றே அவர்!"

பகோரான் சொன்னுன்:

"உஸ்தாதிடம் உன்னைப் பற்றிய பேச்சே இருக்காது, சரிதானு?"

"பேச்சா! நம்முடைய பெயரை அங்கே உச்சரிப்பது கூடக் கூடாது. காரியம் கெட்டு விடும். அதற்குத் தயார்தானே நீ?"

"நாகு இன்னுமா உனக்குச் சந்தேகம்?" என்று கேட்டான் பகோரான்.

"அப்படியில்லை, பகோரான்! உன்னுடைய குரு பக்தி அத்தனை தீவிரமாக இருக்கிறது. அதை நினைத்தால் தான் பயமாக இருக்கிறது. அதனுல்தான் இத்தனை சந்தேகம்!"

"குரு பக்திக்கும், இதற்கும் என்ன சம்பந்தம் நாகரத்தினம்? அதைப்பற்றி நீ கவலைப்படாதே. உன் பெயரையே உச்சரிக்க மாட்டேன். சந்தேகம் தீர்ந்ததா?"

"சபாஷ்! அத்தோடு நம்ப குப்புசாமி இருக்கிருனே—"

"யாரு சண்டியன் குப்புசாமியா?"

" ஆமாம், அவனும் நம்ப கட்சி !"

" கட்சியா, அப்படி யென்றால்...?" என்று கேட்டான் பகோரான்.

" அதாவது நம்முடைய பள்ளிக்கூடம் என்றேன் !"

" தொழில் தெரிந்த ஒரு ஆசாமிதான் குப்புசாமி. புலிவேஷத்தில் சிங்கம் ஆயிற்றே அவன் !"

" அவனைப் பற்றியும் உஸ்தாதிடம் சொல்லி வைக்காதே. அவனிடத்தில் ஏதோ கொஞ்சம் கோபம் போலிருக்கிறது, உஸ்தாதுக்கு !"

" குப்புசாமியிடந்தானே ! யாருக்குத்தான் அவனிடம் கோபம் உண்டாகாது. தொழிலில் கெட்டிக்காரனே தவிர, முன் யோசனையில்லாத அசட்டுப்பயல் அவன். கிணற்றிலே குதி யென்றால், அடுத்த விநாடி கிணற்றுக் குளளே யிருந்துதான் குரல் கொடுப்பான். மடையன் !"

" பகோரான் ! அப்படியெல்லாம் சொல்லாதே. உன்னை மாதிரி சரியான பச்சரிசி மாமரத்திலே குப்புசாமி போன்ற ஒரு நார் மாம்பழச் செடியை ஒட்டுவைத்தால், எவ்வளவு நன்றாகக் காய்க்கும். சொல்லவா வேண்டும். தவிரவும, நம்முடைய பள்ளிக்கூடத்துக்கு அவன்—"

" அதைப் பற்றி நான் தப்பாகச் சொல்லவில்லையே. சிலம்ப வித்தையில் அவனை அடிப்பதற்கு இந்த ஊரில் ஆள் இல்லை. அது தெரியாதா எனக்கு. நான் அவனுடைய புத்தியைப் பற்றி யல்லவா இப்பொழுது சொன்னேன் !"

"பகோரான் ! அதெல்லாம் எதற்கு இப்பொழுது ? குப்புசாமி நம்முடைய பள்ளிக்கூடத்துக்கு மாடாக உழைப்பான். சட்டாம்பிள்ளை என்று ஒரு பட்டத்தைக் கட்டி விட்டால், காற்றிலே எவ்வியே பறந்து கொண்டிருப்பான் ! நமக்கு அப்படி ஒரு ஆள் வேண்டும் பார் ! அதனால் அவனைப் பற்றியும் உஸ்தாதிடம் ஒன்றும் சொல்லி வைக்காதே !"

" அது சரி, உஸ்தாத் கொஞ்சம் சாந்தமான பிறகு சொல்லிக் கொள்ளுவோம்."

" அதுவும் குப்புசாமியைக் கொண்டே உஸ்தாதிடம் சொல்லும்படி செய்ய வேண்டும். நாம் ஒன்றும் அவனைப் பற்றி உஸ்தாதிடம் பேச வேண்டாம். தெரிந்ததா ?"

" சரி !" என்ருன் பகேரான்.

" பகேரான், நாளை உன்னை மறுபடி வந்து பார்க்கிறேன். முடிந்தால் குப்புசாமியையும் கூட்டிக் கொண்டு வருகிறேன். எப்படியும் நமது பள்ளிக்கூடம் ஈடு இணையில்லாமல் ஓங்க வேண்டும். தெரிந்ததா ? அது வரை, இந்த ஜிங்கிட ஜம்மைக் கொஞ்சம் மறந்து வை !" என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் நாகரத்தினம்.

" அது சரி ; ஆனால் ஒட்டுமாங்கன்று என்று குப்புசாமியைச் சொனனுயல்லவா ? அந்த ஒட்டுமாங்கன்று, அது போய் ஒட்டிக் கொள்கிற நல்ல மரம் முழுவதையுமே பாழ்படுத்தி விடக் கூடாது! அதுவும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் !" என்ருன் பகேரான்.

" அப்படி யென்ருல் ?" என்று சற்றுத் துணுக்கோடு கேட்டான் நாகரத்தினம்.

" அதாவது நல்லதும் கெட்டதும் சேரும்போது, கெட்டது நல்லதாகவும் கூடும். நல்லது கெட்டதாகவும் கூடும் அல்லவா!" என்று சொல்லிச் சிரித்தான் பகேரான்.

அந்த நேரத்தில் வெளியே " பகேரான் !" என்று குரல் கேட்டது. அப்படியே நாகரத்தினத்துக்கு உடம்பெல்லாம் பனிக்கட்டியாக ஜில்லிட்டது.

" பகேரான் !" என்று தெரு வாசல்படியிலே நின்று மறுபடியும் வந்தது அந்தக் கம்பீரமான குரல். அது வேறு யாருமில்லை, உஸ்தாத் மீரான் தான் !

# 18. பாம்பு கடித்தது!

உஸ்தாத் மீரானுடைய குரலைக் கேட்டதும், நல்ல பாம்பைக் கண்டவனைப்போல அப்படியே நாகரத்தினம் நடுநடுங்கிப் போன அதே சமயத்திலேதான், ரவீந்திர னுடைய வீட்டுக்குள்ளே மெய்யாகவே விஷப் பாம்பு நுழைந்திருந்தது. அதே வேளையிலேதான் புல்லாங் குழலின் இனிய ஒலியினால் கவரப்பட்டு ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே கந்தப்பனும் நுழைந்திருந்தான்.

என்ன எதிர்பாராத நிகழ்ச்சி! "ஐயோ! பாம்பு!" என்று மாடிப்படிகளிலிருந்து சந்திரிகா கதறியதும, உள் அறையிலிருந்து கல்யாணி கதவைத் திறந்து கொண்டு ஓடி வந்ததும், ரவீந்திரன் மெய்ம் மறந்த லயத்திலே புன்னகவராளி ராகத்திலிருந்து சிம்மேந்திர மத்யமத் துக்குச் சென்றதும்—எல்லாம் சேர்ந்து கந்தப்பனை ஒரு சுழற்றுச் சுழற்றின. நல்ல பாம்போ படத்தை நன்றாக விரித்துக் கொண்டு நின்றது. இனி ஒரு கணம் தாமதித் தாலும் விபரீதம் நேர்ந்து விடும் என்று கருதிய கந்தப்பன் அப்படியே ரவீந்திரனை நோக்கி நடந்தான்.

இதற்குள் என்ன நேர்ந்தது? இதுவரை புன்னாக வராளியிலே கிறங்கிப் போய் நின்ற அந்த நல்ல பாம்பு, இப்பொழுது ஸ்வரங்கள் பேதித்து சிம்மேந்திர மத்யமமாக மாறியதும் அப்படியே சீறியது. ரவீந்திரனுக்குத் தன் னுடைய உதட்டிலே பொருத்தியிருந்த புல்லாங்குழலின் துவாரங்களில், ஏதோ வந்து அடைப்பது போன்ற ஒரு பிரமை ஒரு கணம் உண்டாயிற்று. ஒலிக் கோவையிலே பின்னிப் போய் நின்றிருந்த அவனுடைய மனம் ஒரு விநாடி திகைத்தது. புல்லாங்குழலின் ஓசையும் அந்த ஒரு விநாடிக்குத் திகைத்து மருண்டது. ரவீந்திரனுடைய கண்ணுக்கு முன்பு இப்பொழுது நல்ல பாம்பு நிற்பது தெரிந்தது. அவனுடைய உடம்பெல்லாம் பதறியது. இதற்குள் பாம்பு தலையைப் பின்னாலே வளைத்துப் பாய் வதற்கு எவ்வி விட்டது!

வேகமாக ரவீந்திரனை நோக்கி நடந்த கந்தப்பன் அதைக் கவனித்து விட்டான். அப்படியே சர்ப்பத்தின்

மேல் பாய்ந்து வலது கையினல் அதைப் பிடித்தான். ஆனல் எந்த இடத்திலே பிடிக்க நினைத்தானே அந்தக் குறி தவறிப்போய் வால் பக்கமாகப் பிடித்துத் தூக்கினன்! ஒரே ஆங்காரமாகத் துவண்ட சர்ப்பம் அவனுடைய கையிலே பின்னிக் கொண்டே கழுத்தை ஒரு வளைப்பு வளைத்து, ஒரு போடு போட்டது, கந்தப்பனுடைய வலது கையில். பாம்பைப் பிடித்திருந்த கை தளர்ந்தது. தொப்பென்று பாம்பு கீழே விழுந்து, ஏதோ வந்த காரியம் முடிந்தது போன்று நகர ஆரம்பித்தது. கந்தப்பன் கீழே சாய்ந்தான்.

எல்லாம் ஒரு கணத்தில் நடந்த காரியம். கையும் காலும் 'வெட வெட' என்று நடுங்க, ரவீந்திரன் கீழே சரிகிற கந்தப்பனை ஏந்திப் பிடிப்பதற்காகப் பாய்ந்தான். கல்யாணியும் சந்திரிகாவும் கூக்குரல் இட்டுக் கொண்டே ஓடி வந்தார்கள்.

"ஐயோ! ஒரு கழி இருந்தால் கொண்டு வாருங்களேன்! பாம்பு இப்படி நகர்கிறதே!" என்று கூப்பாடு போட்டாள் கல்யாணி. அவளுக்கு உடலெல்லாம் பதறியது.

கீழே சாய்ந்த கந்தப்பன், "தயவு செய்து அந்தப் பாம்பை அடிக்காதீர்கள்!" என்று சொல்லிக் கொண்டே தரையில் உட்கார்ந்து கொண்டான்.

"ஐந்து நிமிஷம் என்னை ஒன்றும் செய்யாதீர்கள். ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் பசும் பால் கொண்டு வாருங்கள்!" என்று சொல்லி விட்டு அப்படியே கண்களை மூடிக் கொண்டே கிறக்கத்தில் ஆழ்ந்தவனைப் போல சுவரிலே தலையைச் சாய்த்தவாறு உட்கார்ந்தான் கந்தப்பன்.

ரவீந்திரனுக்கு ஒரு படபடப்பு வந்தது. யாரென்று தெரியாத ஒரு வாலிபன் தன்னுடைய வீட்டுக்குள்ளே நுழைந்திருக்கிறன், தன்னைக் காப்பாற்றுவதற்காகப் பாம்பைப் பிடித்திருக்கிறன், அது அவனைக் கடித்து விட்டது, அதன்பிறகும் பாம்பை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சொல்கிறனே அவன் — இப்படி

நினைத்துத் திகைப்பும் கவலையுமாக அந்த வாலிபனை இரண்டு கையாலும் அன்போடு அணைத்துக் கொண்டே நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"ஐயா! என்னை ஒரு ஐந்து நிமிஷம் ஒன்றும் செய்யாதீர்கள். நீங்கள் உள்ளே போய் ஒரு கிண்ணத்தில் பால் எடுத்து வாருங்கள்" என்றான் வாலிபன்.

"தம்பீ! என்ன அநியாயம் இது! என்னை அது கடித்து விடும் என்று பயந்து நீ தடுக்க வந்து அந்த விஷத்தை நீ வாங்கிக் கொண்டு விட்டாயே! இப்பொழுது என்ன செய்வேன்! இன்னும் ஐந்து நிமிஷத்தில் நீ என்ன ஆவாய் — ஐயோ! தம்பீ! நீ யாரப்பா? சொல்லு. உடனே உனக்கு ஏதாவது சிகிச்சை செய்ய வேண்டும்."

"சிகிச்சையா! எனக்கா! அதான் சொன்னேனே பால் கொண்டு வரும்படி—"

இவ்வாறு சொல்லிக் கொண்டே புன்முறுவல் செய்தான் கந்தப்பன். இதற்குள் கல்யாணி அம்மாள் ஒரு தம்ளரில் பால் கொண்டு வந்து வைத்தாள். பதறுகிற நிலையில் சந்திரிகாவும் அங்கு வந்து நின்றாள்.

"ஐயோ! அவருக்குத் தலை சுற்றுகிறது. யாராவது டாக்டரைக் கூட்டிக் கொண்டு வாருங்களேன்!" என்று கூச்சலிட்டாள் சந்திரிகா. அவளுக்குக் கண்ணீர் பொல பொலவென்று பொங்கியது.

"அந்தப் பிள்ளைதான் அப்படிச் சொல்லுகிறது என்றால் நீங்களும் சும்மா நிற்கிறீர்களே!" என்றாள் கல்யாணி.

இதற்குள் அந்த வாலிபன் தம்ளரைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, கண்களை மூடியவாறு ஏதோ தியானத்தில் இருப்பதுபோல் மௌனமாக அசைவற்று இருந்தான்.

"தம்பீ! என்ன இது! எங்களை ஏன் இப்படிக் குழப்புகிறாய்? என்னுடைய வீட்டுக்குள்ளே வந்த நீ

என்னைக் கடிக்க வந்த பாம்புக்கு உன்னைக் கொண்டு கொடுத்து விட்டு இப்படிச் சொல்கிறாயே—''

"ஐயா! என்னை மன்னியுங்கள். சற்றுப் பொறுமையாக இருங்கள்!'' என்று சொன்னான் கந்தப்பன்.

"தம்பீ! அந்தப் பாம்பு என்னைக் கடித்திருந்தால்கூட இத்தனை கவலைப்பட்டிருக்க மாட்டேன். ஆனால்—'' என்று சொல்லிக் கொண்டே குழறினான் ரவீந்திரன்.

"ஆனால் உங்களை மட்டும் அது கடித்திருந்தால் நீங்கள் இதற்குள் சுழன்றிருப்பீர்கள். என்னைக் கடித்ததால் பிழைத்தீர்கள்'' என்று நிதானமான குரலில் பேசினான் கந்தப்பன்.

"நான் பிழைத்து விட்டேன். ஆனால் எனக்காக நீதான் ஆன்மத் தியாகம் செய்கிறாயாக்கும்—'' என்று வேகத்தோடு கேட்டான் ரவீந்திரன். அளவற்ற துக்கத்தினால் அவனுக்குக் கண் கலங்கியது.

"ஐயா! அந்தப் பாம்பு என்னைக் கடித்ததால் நாம் இருவருமே பிழைத்து விட்டோம். பாம்புதான் இப்பொழுது ஆன்மத் தியாகம் செய்கிறது!'' என்றான் கந்தப்பன்.

"தம்பி! நீ என்ன சொல்கிறாய்—விசித்திரமாக இருக்கிறதே! நீ யாரப்பா?'' என்று கேட்டான் ரவீந்திரன்.

"ஐயா! நான் பொதிகைமலைப் பளிஞர் கூட்டத்துத் தலைவனுடைய சகோதரி மகன். பாம்புகளோடு பிறந்து வளர்ந்தவன். என் வார்த்தைகளை நம்புங்கள். என்னைக் கடித்த நல்ல பாம்பு இன்னும் கொஞ்ச நேரத்தில் இறந்து விடப் போகிறது. அந்த நாக சாந்திக்காகத்தான் பால் கொண்டு வரும்படி சொன்னேன். இப்பொழுது ஒரு விநாடி அந்தப் பாம்புக்காகத்தான் கையில் பாலை வைத்துக் கொண்டு பிரார்த்தனை செய்தேன்!''

"தம்பீ! என்ன சொல்கிறாய் நீ? சுய நினைவோடு தான் பேசுகிறாயா? உண்மையாகவே நீ பிழைத்து விடுவாயா?'' என்று கேட்டாள் கல்யாணி.

"நான் பிழைத்து விடுவேன், அம்மா! பாவம், பாம்பு தான் செத்துப் போகும்! அதனால்தான் அதை அடிக்க

வேண்டாம் என்றேன்!" என்று சொல்லியவாறு, முகத்தைச் சட்டையின் விளிம்பினால் துடைத்துக் கொண்டே கையைச் சுடக்கிட்டுக் கொண்டு, எழுந்தான் கந்தப்பன்.

"இந்த வாசலோடுதானே சென்றது பாம்பு! என்னோடு வாருங்கள். தாழ்வாரத்தைத் தாண்டிப் போயிருக்காது அது, அதற்குள் சுருண்டு விழுந்திருக்கும்!" என்று சொல்லி ரவீந்திரனையும் அழைத்துக் கொண்டு வெளித் தாழ்வாரத்துக்கு வந்தான் கந்தப்பன்.

என்ன ஆச்சரியம்! கந்தப்பன் சொல்லியபடியே அந்த நல்ல பாம்பு தாழ்வாரத்திலே சுருண்டு மடங்கிப் போய்ச் சணல் கயிறாகக் கிடந்தது. கல்யாணியும் சந்திரிகாவும் வேகமாக வந்து அதைப் பார்த்தார்கள்.

"அதை ஒரு கழியால் எடுத்துத் தூர வீசுங்களேன்!" என்றாள் கல்யாணி. ஒரு சிறு குழந்தையைப்போல் உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டு நின்றாள் சந்திரிகா.

"கழிதானே? அதுதான் கூடாது!" என்று சொல்லிக் கொண்டே கந்தப்பன் பயபக்தியோடு சென்று அந்த நாகப் பாம்பை வலது கையினால் எடுத்துக் கொண்டு, "வாருங்கள், வெளியே போவோம். மடத்துக்குப் பக்கத்திலே உள்ள நந்தவனத்தில் இதைப் புதைத்து விட்டு வரவேண்டும்!" என்றான்.

"இந்தப் பாலை என்ன செய்யச் சொல்லுகிறாய் தம்பீ?" என்றான் ரவீந்திரன்.

"இந்தப் பாலை ஊற்றி விட்டுத்தான், குழியிலே மண்ணைப் போட்டு மூட வேண்டும்!" என்றான் கந்தப்பன்.

ரவீந்திரனும் கந்தப்பனும் மெதுவாக வெளியே நடந்தார்கள்.

"என்ன ஆச்சரியம்! இப்படியும் உண்டா!" என்றாள் கல்யாணி, சந்திரிகாவைப் பார்த்து. சந்திரிகாவோடு அவள் முகம் கொடுத்துப் பேசுவதற்கு இப்படி ஏதாவது ஆச்சரியகரமான சம்பவம் நடந்தால்தான் உண்டு!

"அக்கா! அந்தப் பையனைப் பார்த்தால் ஒரே இரக்கமாக இருக்கிறது! பாவம், என்னதான் அவன் தைரியம் சொன்னாலும் அவனுக்கு ஒன்றும் ஆகக்கூடாது என்று மனசு படபடக்கிறது!" என்றாள் சந்திரிகா.

"அவன்தான் பொதிகைமலைப் பளிஞன் என்று சொன்னானே. பளிஞர்களுக்குப் பாம்பு பயப்படும் என்று அப்பா அடிக்கடி சொல்லுவார்கள்!" என்றாள் கல்யாணி.

"என்னவோ அக்கா! அவருக்கு ஒரு பெரிய கண்டம் தான் இன்று. கடவுள் காப்பாற்றினார்!" என்றாள் சந்திரிகா. இந்த வார்த்தைகள் வந்ததும் கல்யாணியின் முகக் குறி மாறிற்று. அந்த "அவரை"ப் பற்றி அத்தனை உரிமையோடு சந்திரிகா பேசியது கல்யாணிக்கு விஷம் தலைக்கு ஏறியதுபோல் இருந்தது.

"கண்டம், கண்டம்! அவருக்குத்தான் நித்திய கண்டமாக இருக்கிறதே!" என்றாள் கல்யாணி. சந்திரிகாவுக்கு முதலில் அந்த வார்த்தைகளின் விஷயம் புரியவில்லை.

"நித்தியகண்டம் பூரண ஆயுசு என்பார்கள் அக்கா. அதுபோல அவருக்கும் ஒரு கெடுதலும் வராது அக்கா!"

இப்படிச் சந்திரிகா சொன்னபோது கல்யாணியின் முகத்தில் ஏற்பட்ட கடுமையைக் கவனித்தாள். விஷயம் புரிந்து விட்டது. அப்படியே 'விறு விறு' என்று உள்ளே போய் மாடிப் படிகளிலே ஏறினாள் சந்திரிகா. இதயம் விம்மியது. முந்தானையால் முகத்தைப் பொத்திக் கொண்டே சென்றாள்.

கல்யாணி வீட்டுக்குள்ளே போய்ப் பூஜை அறையில் நுழைந்து குத்து விளக்குக்கு முன்னால் நின்றாள்.

"அம்மா! தாயே! என்னுடைய மஞ்சளைக் காப்பாற்றினாய் அம்பிகே!" என்று சொல்லிக் கொண்டே கண்ணீர் வடித்தாள். அப்படியே கைகூப்பிய வண்ணம் தீபலக்ஷ்மியின் சந்நிதியில் வெகு நேரம் நின்றாள் கல்யாணி.

நல்ல பாம்பை அடக்கம் செய்து விட்டு ரவீந்திரனும் கந்தப்பனும் வீட்டுக்குள்ளே நுழைந்தபோது, டாக்டர் சுரேஷின் கார் அங்கு வந்து நின்றது. டாக்டரும் அப்புலிங்கமும் அதிலிருந்து இறங்கினர்கள்.

"என்ன மிஸ்டர் ரவீந்திரன், உங்களோடு பேசுவதற்காக, இப்பொழுது சீன தேசத்துத் தத்துவ உலகிலிருந்து மிஸ்டர் யின் யாங் அப்புலிங்கத்தை எழுப்பிக் கொண்டு வந்திருக்கிறேன். தெரியுமா! அடடே! இது யார், இந்த இளைய நண்பர்?" என்று கேட்டுக்கொண்டே வீட்டுக்குள்ளே வந்தார் டாக்டர்.

அப்புலிங்கம் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டான். டாக்டரும் ரவீந்திரனும் நாற்காலிகளில் அமர்ந்தார்கள்.

"உட்காரு தம்பி!" என்று பக்கத்திலே கிடந்த இன்னொரு நாற்காலியைக் கந்தப்பனுக்குக் காட்டினன் ரவி. தயக்கத்தோடு அதில் உட்கார்ந்தான் கந்தப்பன்.

"பொதிகை மலையில் பளிஞர் என்று கேட்டிருப்பீர்களே டாக்டர்—" என்று ஆரம்பித்தான் ரவீந்திரன்.

"ஓ! சரி சரி, தம்பி நீ அர்ச் சூசையப்பர் கல்லூரியில் படிக்கிருயோ?" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

"ஆமாம்" என்ருன் கந்தப்பன்.

"உங்களுக்கு எப்படி அது தெரியும்?" என்று டாக்டரைக் கேட்டான் அப்புலிங்கம்.

"எனக்குத் தெரிந்த பாதிரியார் ஒருவர் ஒரு நாள் சொல்லிக் கொண்டிருந்தார். மலை ஜாதியினரை முன்னேற்றும் நோக்கத்தோடு அவர்களுடைய பிள்ளைகள் சிலரைப் பாளையங்கோட்டைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்திருந்ததாகவும், பளிஞர் தலைவனுடைய சகோதரி பையன் எஸ். எஸ். எல். ஸி. தேறிய பிறகு, இங்கே ஸெண்ட் ஜோஸெப்ஸ் கல்லூரியில் மேல் படிப்புப் படிப்பதாகவும் சொன்னர். என்ன தம்பி சரிதானே நான் சொல்வது?" என்று கேட்டார் டாக்டர். கந்தப்பன் 'சரி' என்பதற்கு அடையாளமாகச் சிரித்தான்.

"உன்னுடைய பெயர் என்ன தம்பீ?" என்று கேட்டார் சுரேஷ்.

"கந்தப்பன்" என்று சொல்லும்போதே அவனுடைய முகம் புதுமை உணர்ச்சி காரணமாக வெட்கத்தினுல் சிவந்தது.

"கந்தப்பன்! பேஷ். அழகான பெயர். மலைநாட்டுக் கடவுள் அல்லவா முருகன்! அவருடைய பெயரைத்தான் வைத்துக் கொண்டிருக்கிருய்!" என்ருர் சுரேஷ்.

"வள்ளிதான் எங்கள் குல தெய்வம்!" என்ருன் கந்தப்பன். அப்போது அவனுடைய முகத்தில் சூதில்லாத ஒரு பெருமிதம் எழுந்து ஒளி வீசியது.

"வள்ளிதானே! அவள்தான் உங்களுக்குச் சொந்தக் காரி,—நெருங்கிய உறவு ஆயிற்றே! என்ன மிஸ்டர் அப்புலிங்கம், உங்கள் சித்தர் பாடல்களில் இதற்கு ஆதாரம் இருக்குமே?" என்ருர் டாக்டர்.

"பேஷாக இருக்கிறது. 'குறவர் குடிசை நுழைந் தாண்டி' என்று அருட்பாவே இருக்கிறதே!" என்ருன் அப்புலிங்கம்.

"டாக்டர், நம்முடைய பாரதியார் கூடப் பாடி யிருக்கிருர், கேட்டதில்லையா நீங்கள்.

**சொல்லினைத் தேனிற் குழைத்துரைப்பாள் சிறு**
**வள்ளியைக்—கண்டு**
**சொக்கி மரமென நின்றனை**
**தென்மலைக் காட்டிலே!"**

என்று பாடினுன் ரவீந்திரன்.

"மிஸ்டர் ரவீந்திரன்! உங்களுக்குப் புல்லாங்குழல் தான் வரும் என்று நினைத்தேன். வாய்ப்பாட்டுக் கூட பேஷாக இருக்கிறதே!" என்ருர் டாக்டர்.

"நான்கூட இனிப் புல்லாங்குழலை விட்டு வாய்ப் பாட்டிலேயே இறங்கலாமா என்று யோசிக்கிறேன், டாக்டர்!" என்ருன் ரவீந்திரன். டாக்டருக்கு ஒரு

நிமிஷம் ஒன்றும் ஓடவில்லை. தான் புல்லாங்குழல் அனுப்பியதை ஒரு வேளை விபரீதமாக எடுத்துக் கொண்டானோ என்று யோசித்து, ரவீந்திரனுடைய முகத்தையே பார்த்தார். ஆனால் அதில் விபரீதமான நினைப்பு ஒன்றும் தெரியவில்லை. இதற்குள் ரவீந்திரனே தொடர்ந்து பேசினான், தான் புல்லாங்குழல் வாசித்ததும் நாகப் பாம்பு வந்ததும் பற்றி! பாம்பு மடிந்து விட்டது என்று ரவீந்திரன் சொன்னதும் அப்புலிங்கத்துக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

"அப்படியா! அப்படியா!" என்று இரண்டு மூன்று தடவை கேட்டான்.

"என்ன. டாக்டர்! வேடிக்கையாக இருக்கிறதே. கோல்ட் ஸ்மித் என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய ஒரு பாட்டுத்தான் எனக்கு இப்பொழுது நினைவு வருகிறது!" என்றான் அப்புலிங்கம்.

"ஆமாம். நான்கூட எஸ். எஸ். எல். ஸி. யில் படித்த ஞாபகம். நாய் கடித்து விட்டது என்று சாங்கோபாங்கமாக வர்ணித்து விட்டுக் கடைசி வரியில் 'ஆனால் இறந்தது நாயாக்கும்!' என்று ஹாஸ்யத்தோடு முடிக்கிறார் கோல்ட் ஸ்மித். அதைத்தானே சொல்கிறீர்கள் அப்புலிங்கம்?" என்று கேட்டார் சுரேஷ்.

"ஆமாம்!" என்று சொன்ன அப்புலிங்கம் அந்தக் கவிதை முழுதையும் நினைத்து ஒரு முறை பலமாகச் சிரித்தான்.

"என்ன ரவீந்திரன், ஆச்சரியத்தோடு பார்க்கிறீர்கள்! டாக்டருக்கும் கவிதைக்கும் என்ன சம்பந்தம் என்று நினைக்கிறீர்களாக்கும். சம்பந்தம் இல்லைதான். ஆனாலும் இந்தக்கவிதை நாய்க் கடி விஷத்தைப் பற்றியதல்லவா! அதனால்தான் நன்றாக நினைவிருக்கிறது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

கந்தப்பன் இந்தப் பேச்சு ஒன்றிலும் கலந்துகொள்ள முடியாதவனாக மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தான். இதைக் கவனித்த டாக்டர் அவனைப் பார்த்துக் கேட்டார் :

"ஏன் தம்பி! உன்னைக் கடித்தால் பாம்பு ஏன் இறந்து போகிறது என்ற விஷயம் உனக்குத் தெரியுமா?" என்றார்.

"தெரியும். ஆனால் நீங்கள் டாக்டர். நான் சொன்னால் கேலியாக இருக்கும்!" என்றான் கந்தப்பன்.

"அப்படியானால் நானே சொல்லட்டுமா?" என்றார் டாக்டர். கந்தப்பன் திகைத்தான்.

"உங்கள் மலை நாட்டில் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போதே ஒரு வேரைக் கரைத்துக் கொடுக்கிறீர்கள். அப்படித்தானே!" என்றார் டாக்டர்.

"ஆமாம்" என்றான் கந்தப்பன்.

"அந்த வேருக்கு உரிய செடி தெரியுமா உனக்கு?" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

"தெரியும். எங்கள் கூட்டத்தில் அதற்குப் பாம்பு வேர் என்று பெயர். அதில் மூன்று விதம் இருக்கிறது!"

"ஓ! அதில் மூன்று விதம் இருக்கிறதா! எனக்கு ஒன்று மட்டும்தான் தெரியும். அது சிவப்பாகப் பூப் பூக்கும்!"

"நீங்கள் அந்தச் செடியைப் பார்த்திருக்கிறீர்களா டாக்டர்!" என்று ரவீந்திரன் வியப்போடு கேட்டான்.

"பார்த்திருக்கிறேன், படத்தில்!" என்றார் சுரேஷ், சிரித்துக் கொண்டே.

அப்புலிங்கம் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தான். டாக்டர் சொன்னார்:

"இந்தப் பாம்பு சம்பந்தமான மருந்துச் செடிகளில் சர்ப்பகந்தி என்று ஒரு வகை. இது நமது நாட்டு மலைகளில் ஏராளமாக வளர்கிறது. பதினாறும் நூற்றாண்டில் ஒரு ஜெர்மன் டாக்டர் இதை எடுத்து ஆராய்ச்சி பண்ணியதன் பயனாக, இப்பொழுது நாங்களும் இதன் சத்தை மருந்து வடிவில் உபயோகிக்கிறோம்!"

"அப்படியென்றால்?" என்று கேட்டான் ரவீந்திரன் ஆவலோடு.

"ஸெர்ப்பென்டீனு என்று அதற்கு மேனுட்டான் பெயர் கொடுத்திருக்கிருன்! பெயர் அன்னியமாக இருந்தாலும், சரக்கு நம்முடைய நாட்டுச் சரக்குத்தான் மிஸ்டர் ரவீந்திரன்! நம்முடைய ரஸம் இருக்கிறதே மிளகு ரஸம், மிளகுத் தண்ணீர்; அதைத்தான் இங்கிலீஷ் காரர்கள் 'மிலகுடானி' என்கிருர்கள். சரக்கு நம் முடையதுதானே" என்ருர் சுரேஷ்!

கந்தப்பன் ஒரே வியப்போடு டாக்டரைப் பார்த்தான்.

"கந்தப்பன்! நான் சொல்வது உனக்குப் புதிதாக இருக்கலாம். நீ சொன்ன மூன்று வகையான செடிகளில் ஒரு செடியை மட்டும் இப்பொழுது ஆராய்ந்து மருந்து செய்திருக்கிருர்கள். அதாவது செடியை நாம் கடலுக்கு அப்பால் அனுப்ப வேண்டியது. அவர்கள் அதைக் குழாய்களிலே போட்டு வடிகட்டி மருந்தாக்கிப் பாட்டில் களிலே நமக்கு அனுப்புவார்கள். நாங்களும் ஏதாவது புரியாத பெயராகச் சொல்லி உங்களையெல்லாம் பய முறுத்தி மருந்து கொடுத்து வருகிறோம்! நீங்களும் அப்படிப் பயமுறுத்துகிற நீளமான பெயர்களைப் புரியாத பாஷையில் சொன்னுல்தானே நம்புகிறீர்கள், என்ன மிஸ்டர் அப்புலிங்கம்?" என்று கேட்டார் சுரேஷ்.

"டாக்டர், உங்களுடைய தேச பக்தி எனக்கு இப் பொழுதுதான் தெரிகிறது. உண்மையில் உங்களை மாதிரி......"

"அப்பு! தேசபக்தி என்ற பெரிய வார்த்தையை மட்டும் உபயோகிக்காதீர்கள். காந்திஜியும், நேருஜியும் வாழ்கிற பாரத நாட்டில் நாமும் வாழ்வதே ஒரு பாக்கியம். மற்றப்படி அவர்களுடைய தேச பக்தியின் பயனை நாம் நன்ருக நிம்மதியோடு அனுபவிக்கிறதைத் தவிர, நமக்கும் தேச பக்தி இருக்கிறது என்று சொல்வதில் என்ன அர்த்தம்! மிஸ்டர் ரவீந்திரன், நீங்களே சொல்லுங்கள். சர்ப்பகந்திக்கும் தேச பக்திக்கும் என்ன சம்பந்தம்? நாம் அதை சர்ப்பகந்தி என்கிறோம். வட நாட்டில் சோட்டா சாந்த் என்றும் சந்திரிகா என்றும் பெயர்!"

"என்ன சந்திரிகாவா?" என்று கேட்டான் ரவீந் திரன், ஆச்சரியத்தோடு.

" ஆமாம்! சந்திரிகா என்ற இந்த மூலிகையும் இதோடு சேர்ந்த இன்னும் இரண்டு மூலிகைகளும்தான் இன்று உங்களுக்கு உயிர் கொடுத்தன. பாம்பின் உயிரைக் கொண்டு போய் விட்டன !"

" அப்படியா சொல்கிறீர்கள் ?" என்று கேட்டான் அப்புலிங்கம்.

" இந்த வேரின் சத்து சிறு வயதிலிருந்தே மலை ஜாதியாரின் உடலில் கொஞ்சம் கொஞ்சமாகப் பாலின் மூலம் சேர்ந்து விடுகிறது. அதனால் உடம்புக்குப் பாம்பின் விஷத்தை எதிர்த்துக் கொன்று விடக் கூடிய சக்தி ஏற்பட்டு விடுகிறது. பாம்புக்கோ, அது அந்த உடம்பைக் கடித்தால் மருந்தின் வேகம் பாம்பைத் தாக்கி விடுகிறது! இந்த விஷயம் மேனாட்டு ஆராய்ச்சி முறையில் சொல்லுகிற காரியம். ஆனாலும் இந்த மூலிகைகளின் தன்மையை அவர்கள் இன்னும் முழுவதும் ஆராய்ந்து விடவில்லை. ஸெர்ப்பென்டினாவை இரத்தக் கொதிப்பு, பைத்தியம் முதலிய நோய்களுக்கு இப்போது கொடுக்கிறார்கள் !" என்றார் சுரேஷ்.

கந்தப்பன் சொன்னான் : " டாக்டர் சார் ! இந்த மூன்று மருந்துகள்தான் எங்களுக்கு எல்லா நோய்களுக்கும் உதவுகின்றன. கடுமையான ஜுரம் வந்தால் கூட இதன் இலைகளைச் சாப்பிடுவோம். உடம்பில் ரணம் ஏற்பட்டால் இலையைப் பிழிந்து அந்தச் சாறு பட்டால் போதும் !"

இப்படிக் கந்தப்பன் பேசிக் கொண்டிருக்கும் போதே கல்யாணி அம்மாள் கூடத்துக்கு வந்தாள்.

" உங்களைத்தானே ! நீங்கள் பாட்டுக்கு எதையெல்லாமோ பேசிக் கொண்டிருக்கிறீர்களே ! பாம்பு வந்தாச்சு, இந்த வீட்டிற்குள். இனி ஒரு நிமிஷங்கூட இங்கே குடித்தனம் பண்ணக் கூடாது ! தெரிந்ததா !" என்றாள் கல்யாணி.

" அப்படியானால் ?" என்று ஒரே திகைப்போடு கேட்டான் ரவீந்திரன்.

" அதெல்லாம் உங்களோடு வாதாட எனக்குச் சக்தியில்லை. இந்த நிமிஷமே இந்த வீட்டைக் காலி பண்ணி

யாகவேண்டும். இன்றைக்கு ராத்திரி நான் இந்த வீட்டில் அடுப்புப் பற்ற வைக்கப் போவதில்லை. நல்ல பாம்பு நுழைந்த வீட்டிலே ஒரு நிமிஷங்கூட இருக்கக் கூடாது என்று அப்பா அடிக்கடி சொல்லுவார்கள்!"

தன்னுடைய தகப்பனுரை மேற்கோள் காண்பித்து அந்தக் கடைசி வாக்கியத்தைக் கல்யாணி அம்மாள் சொல்லி முடித்தாளோ இல்லையோ, ரவீந்திரனுக்குக் கோபத்தினுல் முகம் சிவந்தது. "என்ன விபரீதம் ஆகப் போகிறதோ தெரியவில்லையே!" என்று கவலை மேலிட்டவனுக அப்புலிங்கம் டாக்டரின் முகத்தையே கூர்ந்து பார்த்தான்.

## 19. உஸ்தாத் மகள்

"மிஸ்டர் ரவீந்திரன்!" என்ருர் டாக்டர் சுரேஷ். படபடப்போடு கல்யாணியின் பேச்சிலே மனம் பொங்கி நின்ற ரவீந்திரன் டாக்டரைப் பார்த்தான். கல்யாணி அப்படியே திகைத்துப் போய் நின்ருள்.

"ஸ்கங்க் என்பதாக வட அமெரிக்கக் காடுகளில் ஒரு மிருகம் இருக்கிறது, கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று பேச்சை ஆரம்பித்தார் டாக்டர்.

"கேள்விப்பட்டதில்லையே!" என்ருன் ரவீந்திரன்.

"அதற்குக் கோபம் வந்தால் என்ன ஆகும் தெரியுமோ? உடனே அதைச் சுற்றி ஒரு துர்நாற்றம் உண்டாகும். அதைத் தாக்க வருகிற மிருகங்களால் சகிக்க முடியாதபடி இருக்கும் அது. அப்படியே எதிரி ஓடியே போய் விடும்!"

ரவீந்திரனுக்கு முகம் சுருங்கியது. இதை எதற்கு டாக்டர் சொல்லுகிருர் என்று அவனுக்குப் புரியவில்லை. சுரேஷ் தொடர்ந்து பேசினுர்:

"மனிதர்களும் அந்த மாதிரி ஸ்கங்குகளாகத் தங்களை மாற்றிக் கொண்டு விட்டால் பிறகு எதிரி மட்டுமில்லை,

நண்பர்களுமே அவர்களை நெருங்க முடியாதுதான்!" என்றார் டாக்டர்.

அப்புலிங்கத்துக்கு டாக்டரின் பேச்சில் அபஸ்வரம் விழுவதுபோல் பட்டது. ஆனாலும் யோசனையில்லாமல் பேசமாட்டாரே என்று உடனேயே ஒரு திகைப்பும் உண்டாயிற்று.

"நாகரத்தினம் இந்த மாதிரி ஒரு காட்டுப் பிராணியாக நடந்து கொள்வதால்தான் அவனுக்கு நண்பர்களோ பகைவர்களோ நிலைத்து நிற்பதில்லை. பகைவர்கள்கூட அவனுக்குப் பக்கத்திலே போய்ச் சண்டை போடக் கூசுவார்கள். உண்மையில் நம்முடைய உணர்ச்சிகளை அடக்கிப் பேசக் கற்றுக் கொண்டு விட்டோமானால் அதுவே பெரிய கலை!"

எங்கோ ஆரம்பித்து எப்படியோ வட்டம் சுற்றினார் டாக்டர். அப்புலிங்கத்துக்கு இப்பொழுது விஷயம் புரிந்தது. கல்யாணியின் பேச்சைத் தொடர்ந்து இனி வரப் போகும் யோசனைகளையும் முடிவுகளையும் ரவீந்திரன் பொறுமையோடு செவி கொடுத்துக் கேட்க வேண்டும் என்பதற்காகவே, இப்படி ஒரு கூர்மையான குத்தல் வார்த்தையைப் போட்டு டாக்டர் ரவீந்திரனை வளைக்கிறார் என்று அப்புலிங்கம் புரிந்து கொண்டான். ரவீந்திரனுடைய முகத்தைப் பார்த்தான். சுருங்கிய முகத்தில் இப்பொழுது நாகரத்தினத்தைப் பற்றி டாக்டர் செய்த விமர்சனம் ஒரு மலர்ச்சியைக் கொடுத்தது. ரவி சொன்னான்:

"டாக்டர், நீங்கள் பேச்சை ஆரம்பித்ததைப் பார்த்தால் என்னைத்தான் அந்த அமெரிக்கக் காட்டு மிருகம் என்று சொல்லப் போகிறீர்களோ என்று பயந்தேன்—"

"மிஸ்டர் ரவி! யோசித்துப் பார்த்தால் நாம் ஒவ்வொருவருமே அந்த மிருகத்தைப் போலத்தான் ஒரொரு சமயம் நடந்து கொள்ளுகிறோம். யார்தான் 'ஸ்கங்க்' இல்லை? சொல்லுங்கள். மனிதனுடைய இயற்கை அது. ஆனால் அந்த இயற்கையைக் கட்டுப்படுத்தி,

மனசில் எழுகிற கோபத்தை அடக்கிக் கொண்டு நிதானம் தவருமல் பேசுவதிலும், நடந்து கொள்வதிலுந்தான் மனிதன் மிருகத்திலிருந்து மாறுபடுகிருன். அதான் சொன்னனே அப்படிக் கட்டுப்பாட்டோடு பேசுவது ஒரு கலேயென்று, புல்லாங்குழல் வாசிப்பதைப் போல! அபஸ்வரந்தான் மனிதனுடைய இயற்கை. அதை அடக்குவதிலும், ஆரோஹண அவரோஹணக் கிரமத்தில் சஞ்சரிப்பதிலும்தானே உங்களுடைய கலேத் திறமை இருக்கிறது !" என்று ஒரு போடு போட்டார் டாக்டர் சுரேஷ் !

கோபமும் ஆனந்தமும் ஒன்றையொன்று சமன் செய்து விடுகிற முறையிலே இருந்தன ரவீந்திரனுக்கு டாக்டரின் வார்த்தைகள் ! மௌனமாக இருந்தான்.

" மிஸ்டர் ரவி ! ஒன்று மட்டும் சொல்கிறேன். முன் கோபத்தை அடக்கி சுஸ்வரமாகப் பேசுகிற கலே இருக்கிறதே அது, புல்லாங்குழல் வாசிப்பதைவிட ஒன்றும் கஷ்டமான கலே இல்லே ! சங்கீதம் என்ற நுண் கலேயே ஒருவருக்கு அபாரமாக வந்திருக்கும்போது, வேறு எது தான் கஷ்டம் !"

ரவீந்திரனுக்கு இந்த இடத்தில் சிரிப்பு வந்து விட்டது. அப்புலிங்கம் சொன்னுன் : " ஆகையினுல் ஸ்ரீமான் ரவீந்திரன் அவர்கள் பொறுமையோடு இருக்க வேண்டும் என்பதாக இந்தச் சங்கத்தின் சார்பில் கேட்டுக் கொள்ளுகிறேன் !"

இரண்டு கைகளேயும் தட்டிக் கொண்டே " நான் அதை ஆமோதிக்கிறேன் !" என்று சொல்லி மீண்டும் கைகளேப் பலமாகத் தட்டினுர் டாக்டர் சுரேஷ்.

" டாக்டர் ! அப்படியென்ருல் இந்த வீட்டைக் காலி பண்ண வேண்டும் என்று நீங்களும் சொல்கிறீர்கள். அப்படித்தானே ?" என்ருன் ரவீந்திரன். மீண்டும் அவனுக்கு முகம் சிவந்தது.

" மிஸ்டர் ரவீந்திரன் ! பார்த்தீர்களா ? மறுபடியும் கோபம் எட்டிப் பார்க்கிறதே. கொஞ்சம், கொஞ்சம் பொறுமையாக இருங்கள் !" என்ருர் டாக்டர் சுரேஷ்.

" அதற்குச் சொல்லவில்லை, டாக்டர்! பாம்பு வந்தது, அதனால் வீட்டைக் காலி பண்ண வேண்டும் என்ற அர்த்த மற்ற ஒரு மூட நம்பிக்கைக்கு நானும் உடன்படுவதாக இருந்தால், பிறகு—"

" இல்லை. அதற்காக உடன்பட வேண்டாம். வேறு காரணங்களுக்காக நீங்கள் வேறு வீடு பார்த்துப் போக நேர்ந்தால், அந்தச் சமயத்திலும் இந்த மூட நம்பிக்கையை எதிர்ப்பதற்காக என்றே, நீங்கள் இந்த வீட்டிலேயே இருந்துதான் தீருவது என்று பிடிவாதம் பிடிக்கக்கூடாது அல்லவா ?" என்றார் டாக்டர் சுரேஷ்.

" அப்படிச் சொல்லவில்லையே நான். இந்த வீட்டை மாற்றுவதற்கு எத்தகைய காரணமும் இல்லை என்பது தான் என்னுடைய கருத்து."

" அப்படி வாருங்கள் வழிக்கு. இனிமேல் நான் சொல்லட்டுமா, இந்த வீட்டை மாற்ற வேண்டும் என் பதற்கான காரணங்களை ?" என்று கேட்டார் சுரேஷ். ரவீந்திரன் அவரையே பார்த்தான்.

" மிஸ்டர் ரவி ! ஒவ்வொரு காரணமாக விரல் விட்டு எண்ணிக் கொண்டு வாருங்கள். இரண்டு கையாலும் எண்ணுங்கள். ஒன்று, இந்த வீடு நாலு பேர் வரப் போக இடைஞ்சலான இடத்தில் இருக்கிறது. இரண்டு, இந்த வீடு அத்தனை பந்தோபஸ்தான முறையில் இல்லை. மூன்று, திருடத் தெரியாத அப்பாவித் திருடன்கூட வெகு எளிதில் ஏறிக் குதித்துவிடக் கூடிய மொட்டை மாடியிலே இருந்துதான் நீங்கள் சங்கீதம் பழக வேண்டியதிருக்கிறது. நாலு, அந்த மொட்டை மாடியை யொட்டிய சிறு அறையைத் தவிர வீடு என்று சொல்வதற்கு இங்கே வேறு இடம் கிடையாது. ஐந்து, காற்றோட்டம் என்பது கீழ் வீட்டில் மருந்துக்குக்கூட இல்லை. டாக்டர் என்ற முறையில் உங்கள் மனைவியின் ஆரோக்கியத்தை உத்தே சித்து இதைப் பலமாக ஆட்சேபிக்கிறேன். இனி, ஆறு— அடுத்த கைவிரல்களை மடக்க ஆரம்பியுங்கள்—ஆறுவது காரணம் நண்பர் அப்புலிங்கம் மாதிரி உங்களோடு சதா ஒரு நண்பர் இன்னும் கொஞ்ச நாளைக்காவது

ஒத்தாசைக்கு இருக்கவேண்டும். ஆனால் அவர் இருக்கிற இடமோ எட்டியிருக்கிறது. ஏழு, இந்தத் தெருவில் உள்ள உங்களுடைய ஒரே நண்பர் ராமநாதன். அவரும் இப்பொழுது வடக்கே உத்தியோகமாகிப் போகிறார், எட்டு...''

ரவீந்திரனுக்கு இதற்கு மேல் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை.

" டாக்டர், தயவுசெய்து என்னை இப்படி யெல்லாம் நச்சரிக்காதீர்கள். உஙகளுக்கு என்னிடம் உள்ள அன்பு எனக்கு நன்றாகத் தெரியும். சுற்றி வளைக்காமல் சொல்லுங்கள்......''

" மிஸ்டர் ரவி, இன்று மாலையில் நான் அப்புலிங்கம் வீட்டுக்குப் போனபோது அவர் ஒரு யோசனை யதேச்சையாகச் சொன்னார். நீங்கள் இருவருமாகப் பேசி அது சம்பந்தமாய் ஒரு முடிவுக்கு வாருங்கள். நான் ஆஸ்பத்திரிப் பக்கம் போகிறேன். நாளைக் காலையில் மறுபடி வருகிறேன் '' என்று சொல்லி விட்டு, ஸ்டதஸ்கோப்புடன் உள்ளே சென்று கல்யாணி அம்மாளைப் பரிசோதித்தார்.

" காலையிலேதான் சொன்னேனே, உங்கள் மனைவிக்கு உடம்பெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. மனசுக்குத்தான் கொஞ்சம் ஓய்வு வேண்டும். நாலு பேரோடு பேசப் பழக வசதியாக ஒரு சூழ்நிலை இருந்தால் சரியாகப் போகும். எல்லாம் அப்புலிங்கம் சொல்லுவார். நான் வருகிறேன் !'' என்று சொல்லிக் கொண்டு டாக்டர் புறப்பட்டார்.

பகோரான் வீட்டிலோ ?......

* * *

" உஸ்தாத் இந்த நேரத்தில் இங்கே பகோரான் வீட்டுக்கு வரவேண்டிய காரணம் என்ன ? ' வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தது ' என்று சொல்லுவார்களே, அப்படி ஆகிவிடுமோ நம்முடைய திட்டம் ? இந்தப் பகோரானை எத்தனை சிரமப்பட்டு ஒரு வகையாகச் சரிக்கட்டி வைத்திருக்கிறோம் ! இந்த நேரத்தில் உஸ்தாத் வந்து தொலைத்திருக்கிறாரே ! நாம் வேறு அவருடைய கண்ணில் பட்டு வைக்கக் கூடாதே ?''—இவ்வாறு நூறு

எண்ணங்கள் நாகரத்தினத்தின் மனத்தில் வேலை செய்தன.

" பகோரான்! தயவுசெய்து என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே!" என்று சொல்லிக் கொண்டே நாரரத்தினம் 'மளமள'வென்று பகோரான் வீட்டு மாடிப் படிகளில் ஏறி, மேல் அறைக்குள்ளே சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு நார்க் கட்டிலில் உட்கார்ந்தான். அவனுடைய நெஞ்சு 'திக்கு திக்கு' என்று அடித்துக் கொண்டது.

பகோரான் வாசலுக்கு வந்து உடம்பை வளைத்து உஸ்தாதுக்கு மிக்க மரியாதையோடு 'சலாம்' செய்தான். பயபக்தியோடு அவரை வீட்டுக்குள்ளே மெதுவாக அழைத்து வந்தான்.

நாகரத்தினம் மாடியிலே போய் ஒளிந்து கொள்ள வில்லையென்றால், பகோரான் உஸ்தாதை நேரே மாடிக் குத்தான் அழைத்துச் சென்றிருப்பான். அந்த மெஸ் மெரிஸ அறைக்குள்ளே உஸ்தாதை அழைத்துச் சென்றால் ஆயிரம் கேள்விக்குப் பதில் சொல்லியாக வேண்டும் என்பது பகோரானுக்கு நன்றாகத் தெரியும். எனவே, அவன் உஸ்தாதை மெதுவாக வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்று கொண்டே சற்றுத் தயங்கினான். உஸ்தாதிடமிருந்து ஒரு காரியத்தை மறைப்பது இது வரையில்லாத ஒரு புதிய பழக்கம் அவனுக்கு!

" தம்பி! உன்னோடு தனியாகக் கொஞ்சம் பேச வேண்டும். முக்கியமான விஷயம்!" என்றார் உஸ்தாத்.

" தோட்டத்துக்கே போய் விடுவோமா?" என்று கேட்டான் பகோரான்.

" சரி " என்றார் உஸ்தாத்.

இருவரும் பகோரான் வீட்டுக்குப் பின் புறம் இருந்த விசாலமான தோட்டத்துக்குச் சென்றார்கள்.

" பகோரான்! குருவுக்குத் துரோகம் செய்கிற சீடனுக்கு அல்லாஹ் என்ன தண்டனை விதிப்பான் தெரியுமா?" என்று பேச்சை ஆரம்பித்தார் மீரான்.

பகோரானுக்கு உடம்பெல்லாம் அப்படியே ஒரு விநாடி புல்லரித்தது. பதில் சொல்ல வார்த்தை வரவில்லை.

"திடீரென்று இப்படிக் கேட்கிறேனே என்று உனக்குத் திகைப்பாக இருக்கும். என்னுடைய வாழ்க்கையில் இது நாள் வரை இல்லாதபடி இப்பொழுது அப்படி ஒரு பெரிய சம்பவம் நடந்திருக்கிறது. துரோகம் செய்தவன் யாரென்று தெரிந்தால் உனக்குத் தூக்கி வாரிப் போடும் !" என்றார் மீரான்.

இப்பொழுது பகோரானுக்கு, நின்ற மூச்சுத் திரும்ப வந்தது. உஸ்தாத் சொல்ல ஆரம்பிப்பது வேறு விஷயம் என்று நிதானித்துக் கொண்டான். ஆனாலும் படபடப்புத் தீரவில்லை !

தோட்டத்தில் ஒரு மூலையில் நின்ற கொய்யா மரத்துக்குப் பக்கத்தில் மீரானும் பகோரானும் நின்று கொண்டார்கள்.

"உஸ்தாத் ! நீங்கள் சொல்வது விசித்திரமாய் இருக்கிறது. தங்களுக்குத் துரோகம் செய்யக்கூடிய அளவுக்கு யாரும் இது வரை துணிந்ததில்லை. ஒரு வேளை அறிவு கெட்டு ஆத்திரத்தில் யாராவது எதுவும் செய்திருந்தால் கூட........."

"பகோரான் ! விஷயத்தைக் கேட்டு விட்டுப் பிறகு பேசு !" என்றார் உஸ்தாத். பகோரன் மௌனமாகி விட்டான். உஸ்தாத் அப்துல் மஜீதைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

"ஆமினா எத்தனையோ நல்ல பெண். எவ்வளவோ பிரியத்தோடு அவளை வளர்த்தேன். கடைசியில் அவளே இப்படி நடந்து கொண்டு விட்டாள். இதை யெல்லாம் பார்க்கும் போது, மகளாவது தகப்பனாவது என்று தோன்றி விடுகிறது. ஒரு தகப்பன் எத்தனை பாசமாக இருந்தாலுங்கூடப் பருவம் வரும்போது, பெண்ணுக்கு அவளுடைய தகப்பனுமே அன்னியனாகி விடுகிறான் ! அல்லாஹுத் தாலாவின் படைப்பு இரகசியம் அது ! காஜியார்தான் சொன்னாரே, அது ஆமினாவின் தவறு இல்லை, பருவத்தின் தவறு என்று !"

இப்படிச் சொல்லிக் கொண்டே உஸ்தாத் பெரு மூச்சு விட்டார். பகோரானுக்கும் பெருமூச்சு வந்தது. தன்னுடைய குருநாதனின் கம்பீரமான முகத்தில் இதற்கு முன்பு இத்தனை சோகத்தை அவன் பார்த்ததில்லை.

"உஸ்தாத்! இப்பொழுது என்ன செய்ய வேண்டும்? மஜீத் எனக்குச் சொந்தக்காரப் பையன் என்பது உங்களுக்குத் தெரியும். அவனுடைய குடும்பம் ஒரு ஹபீஸ் குடும்பம். பெரிய மனிதர்களுக்குத் தெரிந்தால் அவன் செய்த இந்தக் காரியத்துக்கு அவனை என்ன வகையில் தண்டிப்பார்களோ, சொல்ல முடியாது. பாவம், திருக் குர் ஆன் எத்தனை உருக்கமாகப் படிப்பான் மஜீத்! கடைசியில் அவனுடைய புத்தி இப்படியா போக வேண்டும். கேட்கவே கஷ்டமாக இருக்கிறது உஸ்தாத்!"

பகோரானுடைய குரலில் மெய்யான வருத்தம் தொனித்தது. உஸ்தாத் சொன்னார்:

"பகோரான்! மஜீதைப் பற்றி எனக்குத் தெரியாதா என்ன! எத்தனையோ நல்ல பிள்ளைதான். அவனைக் குற்றம் சொல்ல மாட்டேன். உண்மையில் இந்த மாதிரி விஷயங்களில் எல்லாம் ஆண்களைக் குற்றம் சொல்லுவதே பிசகு. பொதுவாக ஒரு பெண் ஒரு ஆடவனுக்கு இடம் கொடுத்து இசைவாக நடந்து கொண்டால் ஒழிய ஒரு பொழுதும் ஆண் மகனுக்குத் துணிச்சல் உண்டாகாது. இதுதான் மனித சுபாவம். இசையாத பெண்ணிடம் பலவந்தப்படுத்தி நடந்து கொள்ளுகிற மிருக மனிதர்கள் மிக மிகக் குறைவு. மகளிடமுள்ள பாசத்தினால் இந்த உண்மையை நான் மறந்து விடக் கூடாது!" என்றார் உஸ்தாத்.

"அப்படிச் சொல்லாதீர்கள் உஸ்தாத்! ஆமினாவுக்கு என்ன தெரியும் பாவம்! சிறு குழந்தை. அவளுடைய மனசை அவ்வளவு தூரம் கெடுத்திருக்கிறான் இந்தப் போக்கிரி......"

"பகோரான்! கொஞ்ச நேரத்துக்கு முன்தானே மஜீதை நல்லவன் என்றாய். அதற்குள் இப்படிப் பேசுகிறாயே! தப்பு அது. மஜீத் உண்மையிலேயே நல்லவன்.

குற்றம் எல்லாம் ஆமினுவின் பேரிலேதான். அவள் ஆரம் பத்திலேயே மஜீதிடம் கடுகடுப்பாக நடந்து கொண் டிருந்தால், விஷயம் இத்தனை தூராத்துக்கு முற்றுமா? சிறு பிள்ளை என்கிருய். அதைப் போல் முட்டாள்தனமான பேச்சு வேறு இல்லை. பருவமான ஒரு பெண்ணுக்கு இம்மாதிரி யோசனைகளில் தோன்றுகிற புத்தி, ஒரு ஒரு வயதான ஆண் மகனுக்குக் கூட ஏற்படாது. 'புத்தி அறிகிற பருவம்' என்றே தெற்குப் பக்கங்களில் ஒரு வார்த்தை இருக்கிறது, தெரியுமா? பெண்களுடைய மன இயல்பு தெரியாதவர்கள்தான் உன்னை மாதிரிப் பேசு வார்கள். உண்மையில் ஒரு நாயகனை அடைய வேண்டும் என்று ஒரு பெண் உறுதி செய்து விட்டாள் என்ருல், அந்த உறுதியிலே அவளுக்குத் தோன்றுகிற யோசனைகள் ஒரு கலாசாலைப் பிரின்ஸிபலுக்குக் கூடத் தோன்ருது!" என்ருர் உஸ்தாத். எப்பொழுதுமே அவருடைய மதிப்பில் ஒரு காலேஜ் பிரின்ஸிபல்தான் அறிவின் எல்லைக்கோடு.

பகோரான் என்ன பதில் சொல்வது என்று தோன்ருமல் பேசாது நின்ருன்.

"பகோரான்! என்னென்னவோ சொல்லி உன்னைத் திணற அடிக்கிறேன் போலிருக்கிறது. பரவாயில்லை. யார்மேல் குற்றம் இருந்தாலும் இனிமேல் அதை ஆராய் வதில் அர்த்தம் கிடையாது. காஜியாருக்கு மனசுக் குள்ளே மஜீதிடம் ஒரு பிரியம் இருக்கிறது. எனக்கும் அவனிடத்தில் வேறு எந்த வகையான வெறுப்பும் கிடை யாது. நான் நினைத்தது ஆமினுவுக்கு ஒரு படித்த மாப்பிள்ளையாகப் பார்க்கலாமே என்றுதான். இந்தச் சிலம்ப வித்தையெல்லாம் நம்மோடு போகட்டும், நம் முடைய வீட்டுக்கு வருகிற மாப்பிள்ளையாவது குச்சியைப் பிடிப்பதற்குப் பதில் சுவடியைப் பிடிக்கட்டுமே என்று நினைத்தேன். ஆனால், சிலம்பக்காரன் மகளுக்குச் சிலம் பத்திலேதான் மனம் கவிகிறது! இதற்கு என்ன செய்ய!"

இவ்வாறு சொல்லிக் கொண்டு சிரித்தார் உஸ்தாத் மீரான். அந்தச் சிரிப்பில் வேதனை குலுங்கியது.

" உஸ்தாத்! உங்களுடைய மனசு எனக்குத் தெரியும். நீங்கள் எவ்வளவு கவலையில் இருக்கிறீர்கள் என்பது உங்களுடைய பேச்சில் நன்றாக—"

" பகேரான்! கவலைப் படுகிறவனைப் பார்த்து அல்லாஹ் சிரிப்பான்! சிரிப்பவனைப் பார்த்து அல்லாஹ் கவலைப் படுவான்! இரண்டும் இல்லாமல் நிதானத்தோடு இருக்கிறானே அவன்தான் அல்லாஹ்வுக்குப் பிரியமானவன். இனிமேல் நான் அப்படியிருக்க ஆசைப்படுகிறேன். ஆமினாவின் நிக்காஹை முடித்து விட்டு, மூதூர்ப் பண்ணையாருக்குக் கொடுத்த வாக்குறுதி ஒன்று இருக்கிறது,—அதையும் நிறைவேற்றி வைத்துவிட்டால் பிறகு சிலம்பப் பள்ளிக்கூடத்துக்கே ஒரு 'சலாம்' போட்டு விடலாம். பள்ளி வாசல் இருக்கவே இருக்கிறது. அதைத் தினந்தோறும் கூட்டித் தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தாலுங் கூடப் போதும். அல்லாஹுத் தாலாவின் மனம் குளிரும்!"

பண்ணையாருக்குக் கொடுத்த வாக்குறுதி என்று உஸ்தாத் தமது பேச்சுக்கு மத்தியில் ஒரு வார்த்தையைச் சொருகியது பகேரானுக்கு என்னவென்று புரியவில்லை. ஆனாலும் இந்தச் சந்தர்ப்பத்தில் அதைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கு மனம் ஓடவில்லை.

" உஸ்தாத்! நீங்கள் இவ்வளவு மனச்சோர்வோடு பேசி இது வரை நான் கேட்டதில்லை. மஜீத் விஷயத்தில் இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளை இடுங்கள். செய்து முடித்து விட்டு வந்து சொல்லுகிறேன்!"

இப்படிப் பேசும்போது பகேரானுடைய குரலில் ஆவேசம் இருந்தது. மாடியிலே போய் ஒளிந்து கொண்டு நின்ற நாகரத்தினம் இந்தக் கட்டத்தில் மெதுவாக ஜன்னலைத் திறந்து பார்த்தான்.

'பகேரானுக்குத்தான் தன்னுடைய உஸ்தாதிடம் எத்தனை பக்தி! இந்தப் பக்தியை எப்படியாவது மாற்றியாக வேண்டுமே! இல்லாவிட்டால் நம்முடைய திட்டம்

நிறைவேருதே! ஏ ஜிகிஜம், ஜிங்கிட ஜம்மே! நீதான் இதற்கு ஒரு வழி செய்ய வேண்டும்!' என்று பிரார்த்தனை செய்துகொண்டான் நாகரத்தினம். பிரார்த்தனை என்பது நல்லவர்களுக்கு மட்டுமே உரிய தனி உரிமையா என்ன?

பகேரானிடம் உஸ்தாத் சொன்னர்: "தம்பி! காஜியார் மசூதியிலே சொன்ன வார்த்தைகளுக்குப் பிறகு என்னுடைய மனம் மாறி விட்டது. நடந்துபோன விஷயங்களுக்காக வருத்தப்படுகிறேனே தவிர, இனி அதைத் தடுத்து நிறுத்தி விரோதமாக நிற்க நான் இஷ்டப்பட வில்லை. அது விவேகம் ஆகாது. இன்று ராத்திரி மூதூர்ப் பண்ணை அப்புலிங்கத்தை நம்முடைய வீட்டுக்கு வரச் சொல்லி யிருக்கிறேன். ஆமினுவின் நிக்காஹைப் பற்றிய என்னுடைய முடிவை அந்தத் தம்பியிடம் தெரிவித்தாக வேண்டும். நமக்கு எந்த விசேஷத்துக்கும் ஒத்தாசை செய்கிற குடும்பம் அந்தப் பண்ணை வீடு ஒன்றுதான். அதனுல்தான் உன்னிடம் இத்தனை அவசரமாக வந்தேன்!" என்ருர் உஸ்தாத்.

வார்த்தை அரைகுறையாக மாடியிலே நின்ற நாகரத்தினத்தின் காதில் விழுந்தது. தன்னைப் பற்றிய விஷயம் ஒன்றுமில்லை என்று தெரிந்து கொண்டதில் நாகரத்தினத்துக்கு ஒரு நிம்மதி. ஆனுலும், அப்புலிங்கத்தின் பெயரைக் கேட்டதும் கிலேசம் உண்டாயிற்று.

"பகேரான்! நீ மஜீதைத் தனியாகச் சந்தித்து என்னுடைய மன நிலைமையைச் சொல்லு. பிள்ளைப் பாசம் என்று ஒன்று இத்தனைக்கு மத்தியிலும் என்னை வேதனைப் படுத்துகிறது. மஜீத் ஆமினுவை நிக்காஹ் செய்து கொள்ளட்டும். ஆனுல் அவன் இதுவரை ஊரைச் சுற்றி வந்தது போல் இனிமேல் இருக்க முடியாது. ஏதாவது தொழில் செய்தாக வேண்டும். வேறு ஒன்றும் இல்லா விட்டாலும், ஒரு சிறு சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கட்டும். நாலு பிள்ளைகளுக்கு வித்தை சொல்லிக் கொடுத்து இரண்டு காசு சம்பாதித்தாலும் போதும். எனக்குத் திருப்திதான். மற்றப்படி மஜீத் வேறு என்ன தொழில் செய்ய ஆகும்? என்னுடைய ஆமினுவின் புருஷன் ஒரு காலேஜ் ப்ரொபசராக இருப்பான் என்று

எல்லாரிடமும் சொல்லி வந்தேன். அந்த வார்த்தைக்கு இனிமேல் முழு மதிப்பு இல்லா விட்டாலும், ஏதோ நூற்றுக்குப் பத்து பழுதில்லாத வகையில், மஜீதை ஒரு குட்டி உஸ்தாதாகவாவது ஆக்கிப் பார்த்து விட்டால் போதும். இதுவிஷயத்தில் நீயும் அவனோடு ஒத்துழைக்கத் தயாராக இருந்தால் சொல்லு. மஜீதிடம் இப்பொழுதே போய்க் கலந்து பேசி நிக்காஹுக்கு நாள் நிச்சயம் பண்ணிவிடலாம்!"

பகேரானுக்கு முகம் மலர்ந்தது. மாடியிலே நின்ற நாகரத்தினமோ அப்படியே கைகளை உதறினான்.

"உஸ்தாத்! நானே ஒரு சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்க வேண்டும் என்றும், உங்களிடம் அது விஷயமாய்க் கேட்க வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அல்லாஹ் கிருபையில் நீங்களே சொல்லி விட்டீர்கள்!"

"பகேரான்! மஜீதும் நீயும் சம ஜோடிகள். உண்மையில் எனக்குத் திருப்தியாக வித்தையை படித்துக் கொண்டவர்கள் நம்முடைய பள்ளிக்கூடத்திலேயே நீங்கள் இரண்டு பேருந்தான். மற்றப்படி யாரும் இல்லை. குப்புசாமி தொழில் தெரிந்தவன். ஆனால் விசுவாசம் இல்லாதவன். விசுவாசம் இல்லாதவனிடத்தில் வித்தை நிலைக்காது. அல்லாஹ் அந்த வித்தையை வளர்க்கமாட்டான். நீதான் சொல்லேன். இந்தக் குப்புசாமி இதுவரை சுய புத்தியோடு ஏதாவது ஒரு காரியம் செய்திருக்கிறானா?"

-

நாகரத்தினம் ஜன்னல் கதவை இன்னும் நன்றாகத் திறந்து வைத்துக் கொண்டு காதை மட்டும் கம்பிகளின் இடைவெளியிலே வைத்தவாறு, முகத்தை அறைக்குள்ளே திருப்பிக் கொண்டு நின்றான். குப்புசாமி என்ற வார்த்தை அந்தக் காதை அப்படி ஜன்னல்—கம்பிகளிலே கொண்டு ஒட்ட வைத்தது!

"பகேரான்! குரங்காட்டி வித்தை பார்த்திருக்கிறாயா! அந்தக் குரங்கு மாதிரித்தான் குப்புசாமி. இல்லை இல்லை, அது கூடத் தவறு. குரங்காவது கொஞ்சம் புத்தியோடு

நடந்து கொள்ளுமே. அப்படிக்கூட இல்லை குப்புசாமி. அந்தக் குரங்கு ஏறிச் சவாரி செய்யும் அல்லவா, "குத்தா" அது மாதிரித்தான் குப்புசாமி. இப்பொழுது சவாரி செய்வது நாகரத்தினம்! இந்த இரண்டையுமே பிடித்து ஆட்டி வைக்கிறது சைத்தான்."

"எந்த நாகரத்தினத்தைச்சொல்கிறீர்கள், உஸ்தாத்!" என்று கேட்டான் பகேரான். மாடியிலே நின்ற நாக ரத்தினத்துக்கு உடம்பு வியர்த்தது.

"லால்குடி மிராசுதாரின் நல்ல பெயரைக் கெடுப் பதற்கு என்று பிறந்திருக்கிறுனே அந்தப் பையன்தான். நம்முடைய பள்ளிக்கூடத்திலே கூடக் கொஞ்ச நாள் மண்ணைவாரிப் போட்டானே—உனக்குத்தான் அவனை நன்ருகத் தெரியுமே, பகேரான்!" என்ருர் உஸ்தாத். பகேரானுக்கு இந்த இடத்தில் இதயம் துடித்தது. "மாடி யிலேதான் இருக்கிருன்!" என்று சொல்லி விடலாமா என்று கூடப் பட்டது. ஆனல் அடக்கிக் கொண்டான். என்ருலும் உஸ்தாதுக்கு நாகரத்தினத்திடம் இத்தனை தூரம் கோபம் ஏற்படுவானேன் என்று அவனுக்குப் புரிய வில்லை. கலங்கி நின்ருன். உஸ்தாத் சொன்னர்: "நாகரத்தினமும் குப்புசாமியும் இப்பொழுது இரட்டைப் பிள்ளைகள்! அது ஒரு பெரிய கதை. சாவகாசமாகச் சொல்லுகிறேன். நீ மஜீதை எப்பொழுது பார்க்கிருய், அதைச் சொல்லு!" என்ருர் உஸ்தாத் மீரான்.

"இன்றைக்கு ராத்திரியே பார்க்கிறேன். ஆனல் ஒரே ஒரு சந்தேகம். புதிய பள்ளிக்கூடத்தில் நாக ரத்தினமும் குப்புசாமியும் நம்மோடு சேர்வதா யிருந்தால் வேண்டாம் என்ரு சொல்கிறீர்கள்!"

"பகேரான்! என்னுடைய சொந்த விருப்பு வெறுப் புக்களை உங்கள் பேரிலும் திணிக்கிறவன் இல்லை இந்த உஸ்தாத். சீடர்களுக்கு உரிமை கொடுத்துப் பார்ப்பதிலே தான் எனக்கு ஆனந்தம். ஆனல் அந்த இரண்டு பேரையும் பற்றிய விஷயத்தை முழுதும் தெரிந்துகொண்டு அதன் பிறகு நீயும், மஜீதும் ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டும் என்பதுதான் என் ஆசை. எல்லாவற்

றிற்கும் நீ மஜீதைப் பார்த்துப் பேசி விடு. நான் புறப்படு கிறேன்!" என்றார் உஸ்தாத்.

மாடிக்கு வெளியே யிருந்த மேடைத் தாழ்வாரத்துக்கு வந்து வளைவுச் சுவருக்கு அருகிலே நின்றவாறு உஸ்தாதையும், அவரை வழியனுப்ப வாசல் வரை சென்ற பகோரானையும் கூர்ந்து பார்த்தான் நாகரத்தினம். அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டான்.

ஆமாம்; அது 'லிலி ஓட் அவுஸ்'தான்! அவள் அருகே நின்றது அவளுடைய தகப்பனார் மிஸ்டர் ஓட் அவுஸ்தான்! அவளுடைய கண்ணிலேதான் எத்தனை குறு குறுப்பு! அந்த ஒய்யாரமான கவுனுடனும், அவளுடைய கேசத்தின் சுருளும் நெளிவும், மேனியின் மிடுக்கும் எத்தனை கவர்ச்சியாக இருக்கின்றன. சாதாரணமாக நமக்கெல்லாம் வருஷத்துக்கு ஒரு வயது அதிகரிக்கிறது, இந்த லிலிக்கு மட்டும் ஒரு வருஷத்துக்கு ஒரு வயது குறைகிறதா?

நாகரத்தினம் கிறங்கிப் போனான்! பழைய 'டெலி போன் எக்ஸ்சேஞ்'சும், காஜா மலையும் அப்படியே கண் முன்னால் மாறி மாறி வந்து சுழன்றன! இவர்கள் ஏன் இந்த நேரத்தில் இங்கு வரவேண்டும்? உஸ்தாதுக்கு ஒரு பெரிய சலாம் போடுகிறாரே மிஸ்டர் ஓட் அவுஸ்! இதோ லிலிகூட எத்தனை அழகாக உடம்பை வளைத்து உஸ்தா துக்குச் சலாம் செய்கிறாள்! அதோ இவர்களிருவருக்கும் பின்னால் பதுங்கிப் பதுங்கி நுழைகிறானே ஒரு சிறுவன், காலையிலே "ஜிங்கிடஜம்" முக்கு எதிரே நின்று மயங்கி விழுந்தானே அந்தப் பையன் அல்லவா இவன்? இவன் எங்கே இவர்களோடு வருகிறான்? பகோரான் வீட்டுக்கு இவர்கள் இத்தனை பேரும் ஒருமித்து வரக் காரணம் என்ன? உஸ்தாதும் இவர்களைத் தெரிந்த மாதிரி முகம் மலர்ந்து சிரிக்கிறாரே!

நாகரத்தினம் வளைவுச் சுவரிலே சாய்ந்தவாறு மனம் குழம்பினான்.

## 20. மலைப் பளிஞர்

மலைக்குள் மலை நடுவே
மலையாள தேசமப்பா
மலையாள தேசம் விட்டு
மயிலேறி வருவாயிப்போ
அரகரா அரகரா அரோகரா !

ஏருத மலை ஏறி
எருது ரெண்டும் தத்தளிக்க
பாராமல் கை கொடுப்பாய்
பழநிமலை வேலவனே
அரகரா அரகரா அரோகரா !

என்று பாடிக் கொண்டே ஐந்தாறு பரதேசிகள் பாப நாசத்து மலையிலே கல்யாண தீர்த்தத்தைத் தாண்டி நடந்து கொண்டிருந்தார்கள்.

"என்ன பழநிப் பண்டாரம்! கால் கடுக்குதோ!" என்று பழநிப் பண்டாரத்தைக் கேட்டுக் கொண்டே சட்டிப் பரதேசி அந்த மலைப் பாதையிலே நின்றுவிட்டார். சற்றும் தயங்காமல் வேகமாகப் படர்ந்து கொண்டிருந்த பழநிப் பண்டாரத்துக்கோ கால் வலிப்பதாகவே தெரிய வில்லை! விறுவிறு என்று மேலே நடந்து மலைப் பாதையிலே மறு பக்கம் திரும்பி மறைந்துவிட்டார்.

"என்ன சட்டிப் பரதேசி! யாருக்குக் கால்கடுக்குதோ என்று சொல்லுது! பழநிப் பண்டாரத்துக்கா! கேட்ட கேள்வியைக் கூடக் காதிலே வாங்கிக் கொள்ளாமல் அது போயிட்டுதே தொலை தூரம்!" என்று சொல்லிக் கொண்டே, பாறையிலே சட்டிப் பரதேசிக்கு அருகில் வந்து உட்கார்ந்து காலைச் சுடக்குப் போட்டுக் கொண்டது இலஞ்சிப் பரதேசி.

"கால் கடுத்தது பழநிப் பண்டாரத்துக்கு இல்லை, சாமி! சட்டிப் பரதேசிக்குத்தான் கால் கடுக்குது! அதைப் பழநிப் பண்டாரத்தோட காலிலே ஏற்றிச்

சொல்லுது ! சட்டிப் பரதேசி இலக்கணம் படிச்சுருக்கு துல்லே !" என்று சொல்லிக் கொண்டே தென்காசிச் சாமி இலஞ்சிச் சாமிக்குப் பக்கத்திலே வந்து நன்ருகச் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டது ! சுடக்குப் போடுவ தற்குக் கூட இயலாதபடி அத்தனை வலி அதன் கால்களில் !

பின்னல் வந்த வாழைப் பழச் சாமி சிரித்துக் கொண்டே தென்காசிக்கும் இலஞ்சிக்கும் மத்தியிலே வந்து பத்மாசனம் போட்டு உட்கார்ந்தது. இவர்களுக்குப் பின்னல் நடந்து வந்து கொண்டிருந்த இன்னும் இரண்டு சாமியார்களும் இப்பொழுது அங்கே வந்து, சொல்லி வைத்தாற்போல் 'டக்' என்று உட்கார்ந்து கொண் டார்கள். எல்லோருக்குமே கால் நன்ருகக் கடுத்தது !

"பழநிப் பண்டாரம் வெகு தொலை போயிட்டுது போலிருக்கே ! கண்ணுக்கு எட்டின தூரம் வரைக்கும் அந்தக் கட்டையைக் காணுமே !" என்று இழுத்தது சட்டிப் பரதேசி.

"சாமி ! அந்தக் கமன ஓடியைக் கொஞ்சம் இப்படிக் கசக்கிக் கொடுக்கட்டும் !" என்று சொல்லிக் கொண்டே இலஞ்சிச்சாமி தென்காசிப் பரதேசியைப் பார்த்துக் கையை நீட்டியது.

"பழநிப் பண்டாரத்துக்கு மலையிலே நடந்து நடந்து பழகிப் போச்சு ! திரும்பிக் கூடப் பார்க்காமல் அல்லவா அது பாட்டுக்கு நடக்குது ! இரண்டு காலுமே அதுக்கு இரும்புக் கால் தான் !" என்று சொல்லியவாறு, தோளில் தொங்கிக் கொண்டு கிடந்த காவிப் பையைக் கீழே பாறையின் மேலே வைத்து, அதிலிருந்த கஞ்சா இலைகளை வெளியே எடுத்துக் கசக்கிற்று தென்காசிப் பரதேசி.

இதற்குள் கொஞ்ச தூரம் மலைமேலே நடந்து சென்று விட்ட பழநிப் பண்டாரம், சகாக்களைக் காணுமல் அதே பழைய வேகத்தோடு பின் திரும்பி வந்தது.

"அடடே ! பழநியா ! வாலிபக் கட்டையல்லா அந்தச் சரீரம் ! விறு விறு என்று நடக்குது ! இந்தச் சடலங்க

ளாலே அப்படி முடியுமா! இப்படி வரட்டும் பழநிப் பண்டாரம்! உட்காரட்டும் பாறையிலே!" என்று பண்டாரத்தை உபசரித்து மலைப் பாறையிலே ஆசனம் வழங்கியது சட்டிப் பரதேசி,—எப்படியும் அது கொஞ்சம் உட்கார்ந்தால் போதும் என்ற நினைப்பிலே!

இப்பொழுது அந்த ஆறு சாமியார்களுமே பொதிகை மலையின் பாறையிலே உட்கார்ந்து கொண்டு, 'கமன ஓடி' என்று புனிதமாக அவர்களால் நாமகரணம் சூட்டப்பட்ட அந்தக் கஞ்சா இலையைக் கசக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது பழநிப் பண்டாரம் சொல்லிற்று: "என்ன தென்காசிச் சாமி! வர வர அந்தச் சடலத்துக்கு ரொம்பச் சிக்கனம் ஏற்பட்டு விட்டது போலிருக்கிறதே! ஏஞ்சாமி இன்னும் பத்து மைல் நடந்துபோனால், சொக்கப்பன் புண்ணியத்திலே செடி செடியாப் பறிக்கலாமே கமன ஓடியை! இதற்கு ஏன் இத்தனை தரித்திரம் இப்போ! கூடத்தான் ஒரு ஏழெட்டு இலையைச் சேர்த்துவைத்துக் கசக்கட்டுமே!"

சாமியார்கள் இப்படி அஃறிணைப் பாஷையிலே பேசிக் கொண்டே கஞ்சாக் குடிக்க ஆரம்பித்தார்கள்.

அப்பொழுது அந்த இடத்தை நோக்கி வேகமாக ஒரு வாலிபன் நடந்து வந்து கொண்டிருந்தான்.

"சாமி! வேற்று ஆள் வாடை அடிக்குது போலிருக்கிறதே! குழாயைத் தட்டிப் பைக்குள்ளே போட்டு விடட்டுமா?" என்று கொஞ்சம் மெதுவாகக் கேட்டது தென்காசிச் சாமி.

"சிவோகம்! முருகானந்தம்! சச்சிதானந்தம்! இங்கே கொடுக்கட்டும் குழாயை! உங்களுக்குப் பயமாக இருந்தால், வேற்று ஆளையும் அன்னிய மனிதனையும் இந்தக் கட்டை ஒரு கை பார்த்துக் கொள்ளும்! அஞ்சேல்!" என்று தீர்மானத்தோடு சொல்லிற்று இலஞ்சிப் பரதேசி. கஞ்சாவின் புகை அத்தனை வேலை செய்து விட்டது அதற்குள்ளே!

இதற்குள் அந்த வாலிபன் சாமியார்களின் கூட்டத்துக்குப் பக்கத்திலேயே வந்து விட்டான்.

“ தம்பி ! யாரப்பா நீ ?” என்று கம்பீரமாகக் கேட்டது இலஞ்சிப் பரதேசி. கஞ்சாவின் போதை, குரலிலே மிடுக்கேற்றி விட்டிருந்தது. ஒரு கிறக்கம், ஒரு மயக்கம், அதில் ஒரு உறக்கம்—அப்படியிருந்தது பண்டாரத்தின் போதையான பேச்சு !

வந்து நின்ற வாலிபன் சாமியார்களின் நிலைமையைப் புரிந்து கொண்டு விட்டான்.

“ எனக்கு இந்தப் பக்கம்தான் சாமிகளே ! தெற்கு மலைக்குப் போகிறேன் ” என்றான் வாலிபன்.

“ தெற்கு மலைக்கா ? நீலகண்டன் கசத்தையும் தாண்டியா ?” என்று கேட்டது தென்காசிச் சாமி.

“ ஆமா சாமி. கஞ்சாத் தோப்பையும் தாண்டிப் பளிஞர் குடியிருப்புக்குப் போகிறேன் !” என்றான் அந்த வாலிபன்.

“ ஓ ! அப்படியா ! சொக்கி குடியா ?” என்று கேட்டது இலஞ்சிப் பரதேசி.

“ அடே ! சொக்கி குடி தெரியுமா சாமிக்கு !” என்று ஆச்சரியத்தோடு கேட்டான் வாலிபன்.

இலஞ்சிச் சாமியைப் பார்த்துக் கேட்ட இந்தக் கேள்விக்குச் சட்டிப் பரதேசி பெருமையோடு பதில் சொல்லிற்று. “ தம்பீ, நம்ப சாமிக்கு இலஞ்சிதான் ஊரு தம்பி ! இந்த வட்டகை யெல்லாம் தலைகீழ்ப் பாடம் அதுக்கு !”

இலஞ்சிச் சாமிக்கு முகம் முட்டச் சிரிப்பு வந்தது. கஞ்சாவின் புகை மண்டைக்குள்ளே போய்க் கண் வழியாக வெளியே வருவது போல, இரண்டு கண்களும் ‘ஜிவு ஜிவு’ என்று இருந்தன. இப்பொழுது சிரிப்பும் சேர்ந்து கொள்ளவே வார்த்தைகள் ஒரு தனியான ஆனந்தத்தோடு புறப்பட்டு வந்தன.

“ தம்பி ! இந்தக் கட்டைக்குச் சொக்கி குடியும் தெரியும். அதுக்கு நாயகனான சொக்கப்பனையும் தெரியும் ! அதிகம் சொல்லுவானேன் ! அவன் புண்ணியத்திலே தான் தம்பீ இந்த கமன ஓடி நிரந்தரமாக நம்மைக் காப்

பாற்றிக்கொண்டு வருகிறது. ஒரு குறையுமில்லை முருகானந்தம்! ஷண்முகா! ஞான பண்டிதா!" என்றது இலஞ்சிச் சாமி.

"சாமிகள்! இப்போ இந்தப் பக்கமாக எங்கே புறப்பட்டது!" என்று தானும் அஃறிணைப் பேச்சை ஆரம்பித்தான் வாலிபன்.

"மூலிகை 'ஸ்டாக்' தீருகிற சமயம். சொக்கப்பனைப் பார்த்து விட்டு வரலாம் என்று இப்படி ஒரு கோஷ்டியாகக் கிளம்பி யிருக்கிறோம்!" என்றது இலஞ்சி.

"நானும் சொக்கி குடிக்குத்தான், சொக்கப்பனிடந்தான், போகிறேன்!" என்றான் வாலிபன்.

"முருகானந்தம்! சச்சிதானந்தம்! சிவோகம்! தம்பீ! நீயும் நம்முடைய கோஷ்டியிலே சேர்ந்தாச்சா! சபாஷ் முருகையான்னான்! அப்போ நாம் புறப்படுவோமா பழநிப் பண்டாரம்?" என்று கேட்டுக் கொண்டே குழாயைத் தட்டிப் பைக்குள்ளே போட்டது தென்காசிச் சாமி.

கால்களை மறந்து விட்டு, கோஷ்டி மறுபடியும் யாத்திரையைத் தொடங்கிற்று. வாலிபனும் சாமியார்கள் கூட்டத்தில் சேர்ந்து சொக்கிகுடியை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

* * *

பொதிகை மலைச் சாரலில், அகத்திய முனிவரும் நவநாத சித்தர்களும், நடமாடிப் புனிதம் விளைத்த பாபநாச தீரத்தில், மலையும் காடுகளும் அருவிகளுமாக அழகுக் காட்சி தரும் இயற்கையின் சுந்தரச் சூழ்நிலையில் கல்யாண தீர்த்தத்திலிருந்து பத்து மைல்களுக்கு அப்பால் மலைக்குள்ளே பளிஞர்களின் குடியிருப்பு இருந்தது. 'பளிஞர்' என்றும் 'புளிஞர்' என்றும் 'பளியர்' என்றும் அழைக்கப்படுகிற மலைஜாதியினரின் குடியிருப்பு அது. அதன் தலைவன் தான் சொக்கப்பன். அவனுடைய வட்டகையில் ஏராளமாக வளர்ந்து நின்ற கஞ்சாச் செடிகளுக்கு ஆசைப்பட்டுத்தான், சாமியார்கள் இவ்வளவு சிரத்தையோடு இப்பொழுது மலைப் பாதையிலே நடந்தார்கள்.

சொக்கப்பனுடைய வட்டகையில் கஞ்சாவின் போதையைவிட அதிகமாகப் போதை தரும் ஒரு பூங் கொடி வளர்ந்திருந்தது. அந்தப் பூங்கொடிக்குச் சொக்கி என்று பெயர்.

நாகரிகம் என்றபெயரில் இயற்கையான எழிலைப்பூச்சுக் களாலும் பொடிகளாலும் போர்த்தி மூடிவிட்டுச் செயற்கை அழகு என்ற போர்வையிலே வளையவரும் பெண்ணில்லை அவள். செயற்கை அலங்காரமும் வெளிப் போர்வைகளும் இல்லாத ஒரு கோயிலின் சிற்பக் கன்னியைப்போல் அந்த மலைக் காட்டிலே ஒய்யாரமாக வளையவரும் வனதேவதை அவள். சங்கு வளையல்களும், புலித் தோலும், பாம்புச் சட்டையும், மானினுடைய மேனி மூடாக்குமாக அவள் மான்களோடு மானாகவும், பெண் புலியோடு பெண் புலி யாகவும், சில சமயங்களில் மயில்களோடு மயிலாகவும் உலாவி வருவாள். மதம் பிடித்துத் திரியும் யானைகளும் கூட அவளுடைய குரலிலே கிறங்கி நிற்கும். படம் எடுத் தாடும் பாம்பு அவளுடைய ஸ்பரிசம் பட்டால் தாம்புக் கயிறாகக் கீழே படுத்து விடும். சீறுகிற புலிகள் எல்லாம் அவளைக் கண்டால் நாய்க்குட்டியைப் போல வாலைக் குழைத்து நிற்கும். மான்கள் எல்லாம் அவளுடைய தெம்மாங்குப் பாடலைக் கேட்டுப் புல்லாங் குழலின் ஓசை யிலே கவரப்பட்டு வருகிற ஆட்டு மந்தையைப் போல அவளைச் சுற்றிக் கூடும். அவளுடைய நடை சில சமயங் களில் பாறைகளிலே தத்தித் தத்தி ஓடும்சிற்றோடையைப் போல் துள்ளிச் செல்லும். சில சமயங்களில் காட்டுத் தண்ணீரிலே மிதந்து செல்லும் வன வாத்தைப் போல மிதப்பு நடை போடும்! மற்றும் சில சமயங்களில் அவள் நடந்து செல்வதைப் பார்த்தால், புள்ளி மான் குதிப்பது போலவும், புலி பாய்வது போலவும், காட்டு யானை வேக மாகப் படர்வது போலவும் இருக்கும். அவளுடைய உள்ளமோ ஒரு வானவில். அதன் வர்ண ஜாலங்கள் எல்லாம் அவளுடைய நடையிலும், பேச்சிலும், மேனியின் மெய்ப்பாட்டிலும் பிரதிபலிக்கும். பளிஞர்கள் எல்லாரும் வள்ளியம்மையே தங்கள் தலைவனுக்குக் கருணை கூர்ந்து செல்வ மகளாக வந்து பிறந்திருக்கிறாள் என்று சொல்லுவார்கள்.

இப்படிப்பட்ட கன்னி சொக்கி, பௌர்ணமி யன்று மாலையிலே மலை நீரோடையின் கரை வழியாகப் பெரிய ஆண் யானை ஒன்றை அதன் கொம்பைப் பிடித்து நடத்திக் கொண்டு குடியிருப்பிலிருந்து சற்றுத் தொலையிலே உள்ள நிலாக் காட்டுக்குச் சென்று கொண்டிருந்தாள். அப்போது, திடீரென்று கொம்பு ஊதும் சத்தம் கேட்டது. பளிஞர் குடியிருப்பிலிருந்துதான் வந்தது அந்தக் கொம்பின் ஒலி. ஐந்து ஐந்து தடவையாக மூன்று தரம் கேட்டது அந்த ஓசை.

சொக்கி திகைத்து நின்றாள். அவளைப் போலவே யானையும் திகைத்து நின்றது. ஏனென்றால் கொம்பின் பாஷை சொக்கியைப் போலவே அவளுடைய கொம்பன் யானைக்கும் தெரியும்.

பௌர்ணமி இரவுகளில் பளிஞருடைய குல வழக்கப்படி நிலாக் காட்டை நோக்கிக் கன்னிப் பெண்கள் செல்வார்கள். மலையருவி ஒன்று அங்கே 'கல கல' வென்ற இனிய ஒலியோடு விழுந்து, ஒரு சிற்றோடையாக ஓடுகிறது. அதன் கரையில் செண்பகக் காடு அடர்ந் திருக்கும். அதிலிருந்து வருகிற மணம் அந்த ஓடைப் பிராந்தியம் முழுதும் கம கம என்று இதயத்தை நிரப்பி வாசங் கமழச் செய்யும். இந்தப் பிரதேசத்திலேதான் உயரமான 'நிலவுப் பாறை' ஓடையின் தண்ணீருக்குள் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறது. இதன்மேல் அமர்ந்துதான் பளிஞர் குலத்தின் கன்னிப் பெண்கள், தங்களுடைய எதிர்காலக் கணவர்கள் நல்ல வீரர்களாக விளங்க வேண்டும் என்று பௌர்ணமி இரவு களிலே பாட்டுப் பாடிப் பிரார்த்தனை செய்வார்கள். இந்த வைபவம் ஒவ்வொரு பௌர்ணமியிலும் நடைபெறும். ஆடவர்கள் யாரும் இதில் கலந்து கொள்ள அநுமதிக்கப் படுவதில்லை. சொக்கிகுடி என்ற குடியிருப்பு ஒன்றிலே தான் இந்த விநோதமான பழக்கம் இருந்து வந்தது. இந்தப் பழக்கம் தொடர்ந்து தவறாமல் நடந்து வந்ததற்கு முக்கிய காரணம் சொக்கி இந்த விழாவிலே உத்சாகமாகக் கலந்து கொண்டதுதான். பௌர்ணமியில் சந்திரன்

உதிக்கத் தவறினலும் சொக்கி 'நிலாப் பாறை'க்குச் செல்லத் தவறுவதில்லை. அத்தனை கண்டிப்பு அவளுக்கு!

அந்த நிலையிலேதான் இப்படி எதிர்பாராத விதமாக அந்தக் கொம்பொலி இப்பொழுது கேட்டது! சொக்கிக்கு ஆச்சரியத்தை விடத் தன் தகப்பனிடம் கோபமே உண்டாயிற்று. ஏனென்ருல், ஐந்து ஐந்து ஒலியாக விட்டு விட்டு மூன்று முறை அந்தக் கொம்பு ஒலிக்குமேயானல், சொக்கி குடியின் பளிஞர்கள்—ஆண்கள் பெண்கள்—எல்லாருமே உடனே எங்கிருந்தாலும் ஓடோடிச் சென்று தலைவனுடைய குடிசைக்கு முன்னல் கூடிவிட வேண்டும். அத்தனை கண்டிப்பான கட்டளை—ஒலி அது! அப்படிப் பட்ட ஒலி இன்று நிலவு விழாவுக்கு இடையூருக ஒலித்தது என்ருல் எப்படியிருக்கும் சொக்கிக்கு!

கோபம் உண்டானபோதிலும், சொக்கி அந்தக் கொம்பொலியை அலட்சியம் செய்ய விரும்பவில்லை. தானே அதற்கு மதிப்புக் கொடுக்கவில்லையென்ருல் அது எத்தனை பிசகு! இவ்வாறு எண்ணியவளாகச் சொக்கி தனது கோபத்தை அடக்கிக் கொண்டு யானையின் கொம்பைப் பிடித்தவாறு, 'கதி கரு கம் கபு' என்ருள். ஏற்கனவே நடந்து செல்வதை நிறுத்தி உத்தரவுக்காகக் காத்திருந்த அந்த மாபெரும் யானை, இப்பொழுது வந்த வழியாகத் திரும்பி நின்று கொண்டது. உடனே சொக்கி அதைப் பார்த்து "கதூ கக் கசு" என்ருள். உடனே அந்த யானை தனது முன் காலைத் தூக்கிப் பாதத்தை வளைத்தது. அப்படியே சொக்கி ஒரு துள்ளுத் துள்ளி ஏதோ படியிலே ஏறிச் செல்வது போல அந்த யானையின் பாதத்தில் ஒரு மிதி மிதித்து, அடுத்த துள்ளிலே அதன் முதுகிலே போய் உட்கார்ந்து கொண்டாள். "கவே கக கமா கபோ" என்ருள் சொக்கி. அவ்வளவுதான். இது யானையா அல்லது ஆகாய விமானமா என்று அதிசயிக்கும்படியாக அந்த யானை காற்ருகப் பறந்தது!

சொக்கப்பனுடைய தலைமைக் குடிசைக்கு முன்பாக ஒரே கூட்டம். பளிஞர் குலத்தின் ஆண்களும் பெண்களும் தேனீக்களாக மொய்த்து நின்ருர்கள். அந்தக் கூட்டத்

தைக் கண்டதும் யானை ஒருதரம் பிளிறிற்று. உடனே கூட்டம் இரண்டு கூறாகப் பிரிந்து நின்று கொண்டு, சொக்கிக்கு வழி விட்டது.

தன்னுடைய வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த தகப்பனைக் கண்டதும் சொக்கி அப்படியே யானையின் மேலிருந்து ஒரு குதி குதித்து வந்து, உடம்பை வளைத்து மண்டி யிட்டுத் தரையை ஒருதரம் வலது உள்ளங் கையினால் தொட்டு விட்டு எழுந்து நின்றாள். முகத்தில் மட்டும் கோபக் குறி தெரிந்தது. சொக்கப்பன் தன் மகளுடைய கோபத்தின் காரணத்தைப் புரிந்து கொண்டு சிரித்தவாறு குடிசைக்கு வலதுபுறம் கையைக் காட்டினான். அங்கே ஐந்தாறு சாமியார்களும் ஒரு வாலிபனும் நின்று கொண்டிருந்தார்கள்.

அந்த வாலிபனைப் பார்த்ததும் சொக்கிக்கு விஷயம் புரிந்து விட்டது. மாதத்துக்கு ஒருமுறை திருச்சியில் தனது அத்தான் கந்தப்பனிடமிருந்து செய்தி கொண்டு வருகிற ஆள் அவன் !

சொக்கிக்கு இப்போது கோபம் எல்லாம் மறைந்து முகத்திலே கோபத்துக்குப் பதிலாகப் பெரிய துக்கம் படர்ந்தது. அத்தானிடமிருந்து ஏதோ செய்தி வந்து அதன் நிமித்தமாக அல்லவா இப்பொழுது இத்தனை அவசரமாக எல்லாரையும் கூட்டியிருக்கிறான் தன்னுடைய தகப்பன் என்று புரிந்து கொண்டதும், சொக்கிக்கு என்னவோ ஏதோ என்று கண் கலங்கியது. அந்த வாலிபனை என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறான் என்று தெரிந்து கொள்வதற்காக ஆவலோடு பார்த்தாள். அவன் சொன்னான் :—

“கந்தப்பன் சுகமாக இருக்குது அம்மா !”

இதைக் கேட்டதுந்தான் சொக்கி ஒரு பெருமூச்சு விட்டுக் காலைக் கீழே நன்றாகப் பாவிக் கொண்டாள். வாலிபன் தொடர்ந்து பேசினான்:

“கந்தப்பன் சுகமாக் இருக்குது. ஆனால் அது தற்செயலாக ஒரு வீட்டுக்குள்ளே நுழையப் போக

அங்கே யிருந்த நல்ல பாம்பு அதைக் கடித்து விட்டது!" என்றான் அவன்.

"பாம்பா!" என்று சொல்லிக் கொண்டே அநுதாபத்தோடு "உச் உச்" என்றாள் சொக்கி. அநுதாபம் பாம்பினிடத்திலேதான் என்பது அவளுடைய முகக் குறியில் தெரிந்தது.

"பாம்பு இறந்து போய் விட்டதால் இந்தச் சொக்கி குடியின் வழக்கப்படி நாகருக்குப் பௌர்ணமி பூஜை போடும்படி கந்தப்பன் சொல்லி அனுப்பி யிருக்குது!" என்றான் வாலிபன்.

சொக்கிக்கு மட்டுமில்லை, அங்கு கூடியிருந்தவர்கள் அனைவருக்குமே இப்பொழுது பயமும் பக்தியும் உண்டாகி விட்டன.

"சரி, சரி!" என்று பல நூறு குரல்கள் ஏக காலத்தில் கோஷமிட்டன.

"சொக்கி, நீ போய் உடனே முழுகிட்டு வரணுமாக்கும்!" என்றான் சொக்கப்பன். அவனுடைய குரலிலும் பேச்சிலும் இழைந்த மழலை ஒலியில், ஏதோ ஒரு விவரிக்க முடியாத கவர்ச்சி இருந்ததைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே சாமியார்களின் மத்தியிலே நின்ற சட்டிப் பரதேசி, இரண்டு அடி முன்னால் நடந்து வந்தார்.

"என்ன சட்டிப் பரதேசி! இலக்கணம் படிச்சிருக்குது அந்தக் கட்டை! இவர்களுடைய பாஷையை ஆராய்கிறதாக்கும்?" என்று ஒரு வேடிக்கையை வீசிக் கொண்டே தென்காசிச் சாமியும் இரண்டு அடி முன்னால் வந்து நின்று கொண்டது.

"தமிழ்தான் பேசுவார்கள் இந்தப் பளினர்கள். ஆனால் மலையாளம் போல் இருக்கும். அத்தோடு அங்கங்கே வருகிற கொச்சைச் சொற்களில் ஒரு கவர்ச்சியான மழலை ஒலிக்கும்!" என்று விளக்கம் கொடுத்துக் கொண்டே பழநிப் பண்டாரம் முன்னேறினார்.

"நம்ப ஆளுகளா! இப்பம் பூசைக்கு எல்லாரும் கூடேணுமாக்கும்!" என்றான் சொக்கப்பன்.

இந்தக் கட்டளை வந்த மறு விநாடி அந்தப் பளிஞர் கூட்டம் தீவட்டியைக் கொண்டு கலைத்த தேனீக்களைப் போல இரைந்து கொண்டே கலைந்தது.

"என்ன சட்டி! ராத்திரி பூஜைக்குப் பிறகு நம்முடைய சொக்கப்பனுடைய தயவிலே மூலிகை ஏராளமாகக் கிடைக்கும். கவலைப்பட வேண்டாம், தெரிகிறதா!" என்று சொல்லிக் கொண்டே இலஞ்சிப் பரதேசி, சட்டியின் முதுகிலே ஒரு தட்டுத் தட்டியது. விஷயத்தைப் புரிந்து கொண்ட சொக்கப்பனும் சிரித்துக் கொண்டான்.

சொக்கிகுடியிலே உள்ள நாகர் பீடத்துக்கு முன்னால் பௌர்ணமி பூஜைக்காக ஒரே அமர்க்களமாக ஏற்பாடுகள் ஆரம்பமாயின. சொக்கி சிற்றோடைக்குப் போய்க் குளித்து விட்டு வருவதற்குள், பீடத்துக்கு முன்னால் பளிஞர்கள் எல்லாரும் கூடி விட்டார்கள். தாரையும் தப்பட்டமும் ஒலித்தன. கொம்புகள் 'கும்கும்' என்று இயம்பின. சல்லரிகள் முழங்கின. கொட்டு 'டும் டும்' என்றது. சொக்கிகுடியின் ஆஸ்தானவித்வான்கள் என்று சொல்லும்படியான குழலர்கள் சொக்கி குழலை உதட்டிலே பொருத்திக் கொண்டு, வன மோகினிகள் எல்லாம் சொக்கும்படியான ஒரு குறிஞ்சிப் பண்ணை வாசிக்க ஆரம்பித்தார்கள். தலைவனும் ஈட்டியைக் கொண்டு வந்து நாகர் பீடத்துக்கு முன்னால் நட்டு விட்டான். எதிரேயிருந்த தூபக் குழியிலே சந்தனச் சீவல்களையும் தூவி ஆயிற்று. சொக்கியும் மூங்கிற் குழலிலே தேனை எடுத்து நாகரிலே கொண்டு கொட்டுவதற்கு ஆயத்தமானாள். அந்த நேரத்திலே "ஓ" என்று ஆவேசக் குரல் கேட்டது. எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள். 'அருள்' என்றும், 'பேருணர்வு' என்றும் பண்பட்ட மொழிகளிலே ஞானிகள் சொல்கிறார்களே, அப்படிப்பட்ட ஒரு சன்னதமா அது! யாரும் எதிர்பார்க்கவில்லை. கூட்டத்துக்குள்ளே நின்று கொண்டிருந்த 'அகவல் மகளு'க்கு ஆவேசம் வந்து அவள் குறி சொல்லத் தொடங்கினாள்.

## 21. நிலவுப் பாறை

"யாராக்கும் அது! அகவல் மகளோ! ஓ!" என்றான் பளிஞர் தலைவன், ஒரே வியப்போடு!

'அகவல் மகள்' என்ற சொல் காதில் விழுந்ததுமே, கூட்டத்திலிருந்து சற்றுத் தொலையிலே ஒதுங்கி நின்று இதுவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பழநிப் பண்டாரம், சற்று முன்னால் நடந்து வந்தது. இலக்கண இலக்கியம் படித்த சாமியார் அல்லவா அது! அந்த 'அகவல் மகள்' என்ற சொல் அதற்கு அத்தனை வியப்பைத் தந்தது.

"என்ன பண்டாரம்! இப்படி ஆச்சரியத்தில் மூழ்கிப் போய் விட்டது!" என்று கேட்டுக் கொண்டே சுட்டிப் பரதேசியும் அதன் அருகிலே வந்து நின்று கொண்டது.

"ஒன்றுமில்லை. இந்த அகவல் மகள் என்ற சொல்லை எங்கோ சங்கப்பாடலிலே படித்த நினைவு. 'அகவன் மகளே, அகவன் மகளே!' என்று கூப்பிட்டுக் கொண்டே யாரோ குறிகாரியைக் குறி சொல்லும்படி கேட்பதாக ஒரு ஞாபகம். குறுந்தொகையிலா, அல்லது குறிஞ்சிக் கலியிலா என்று இப்பொழுது சரியாக நினைவில்லை. அதனால்தான் இந்தக் கட்டை இப்படி முழித்தது!" என்று சொல்லிற்று பழநிப் பண்டாரம். இதைக் கேட்டுக் கொண்டே வந்த தென்காசிச் சாமி "அந்தக் கட்டை கமன ஓடியின் போதையிலே நிற்கிறதல்லவா! நினைவு இப்பொழுது ஒரு மாதிரியாகத்தான் இருக்கும்! அதனால் என்ன, பரவாயில்லை. இந்தச் சடலத்துக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. அகவல் மகளாக இருந்தாலும் சரி, அவல் தின்னும் மகளாக இருந்தாலும் சரி—வாயைத் திறந்து என்ன மெல்லுகிறாள் பார்க்கலாம்!" என்றது.

வாழைப்பழச் சாமி இந்த இடத்தில் தானும் வந்து சேர்ந்து கொண்டது.

"அகவல் என்ருல் அது ஒரு பாட்டு வகையல்லவோ! ஏஞ்சாமி, இலக்கண இலக்கியமே! பழநிப் பண்டாரமே! கொஞ்சம் சொல்லட்டும் அதை!" என்றது வாழைப் பழச் சாமி, வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவதுபோல!

இதற்குள் அகவல் மகள், ஆவேசத்தோடு வந்தவள், நாகர் பீடத்துக்கு வணக்கம் செய்து விட்டுத் தரையில் உட்கார்ந்தவாறு 'அகவ' ஆரம்பித்தாள்:

சொக்கையா சொக்கையா
சோறு வையடா
சொக்கையன் பெண்டாட்டிக்கு
நீறு வையடா!

இப்படி அகவல் மகள் பாட ஆரம்பித்தாளோ இல்லையோ, சொக்கப்பன் உடனே பயபக்தியோடு தலையைக் குனிந்த வண்ணம், வாய் பொத்தி வந்து, தினைச் சோற்றுப் படையலில் இருந்து கவளம் பிசைந்து எடுத்து, அகவல் மகளின் வலது உள்ளங் கையிலே வைத்தான். அவனுடைய மனைவியோ, அப்படியே திருநீற்றுக் கப்பரையை எடுத்து வந்து தனக்கு நெற்றியிலே திருநீறு பூசி விடும்படி உடம்பை வளைத்து அகவல் மகளுக்கு முன்னல் நின்ருள்.

மற்றப் பளிஞர் எல்லாரும் சூழ்ந்து நின்று கொண்டார்கள்.

அகவல் மகள் தன்னுடைய பாடலைத் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய உதடுகள் இரண்டும் துடித்துக் கொண்டிருந்தன. நாக்கு படபடவென்று அடித்துக் கொண்டது. உடம்பெல்லாம் மின்சாரத்தில் கைபட்ட மாதிரி ஒரு அதிர்ச்சியிலே 'ஜிவ் ஜிவ்' என்று ஆடியது. அவள் பாடினுள்:—

ஊரான ஊர்விட்டு
ஒருத்தன் இங்கே வருவானும்!
பேரான சீமைவிட்டு
ஒருத்தன் இங்கே வருவானும்!

கட்டான ஆண்பிள்ளையும்
கண்மணியாம் பெண்பிள்ளையும்
திட்டான வார்த்தையிலே
திசைமாறி நின்றிடுவார் !
ஆனாலும் இந்தமலை
அருமையான மலையல்லோ
போனாலும் வந்தாலும்
புண்ணியந்தான் சேருமல்லோ !
ஆகையினாலே—

இவ்வாறு சொல்லிக் கொஞ்ச நேரம் மூச்சு எடுத்துக் கொண்டாள் அகவல் மகள். பிறகு, நாலு திசையிலும் ஒரு முறை சுற்றிப் பார்த்துக் கொண்டு தனது பாடலைத் தொடர்ந்தாள் அவள் :—

சொக்கி குடிதனிலே சோதனைகள் நடவாமல்
பக்கம் இருந்திடுவான் பாங்கான முருகனுமே !
பளிஞர் குலத்தினிலே பருவத்தில் பூத்திட்ட
பளிங்குக் கொடியான பத்தினிக் கன்னிக்கு
பாக்கியங்கள் வந்திடுமாம் பர்த்தாவும் வந்திடுவான்
ஆக்கினைகள் செய்திடுவாள் அரசாட்சி நடத்திடுவாள் !
மானுக்காய் இரங்கியிந்த மான்போலும் கன்னியிவள்
போன உயிர்காத்த புண்ணியத்தால் நன்மையுண்டு !
இத்தனைதான் இந்நேரம் ; இனியுள்ள சேதியெல்லாம்
பித்துடனே வருமந்தப் பேரான மனிதனிடம்
சொல்ல வருவேன்நான் ; சொக்கையா கேட்டாயோ !
மெல்ல நடந்திடுவேன் மேலேறிச் செல்லுகிறேன் !

இப்படிப் பாடி முடித்ததும் அகவல் மகளுடைய முகத்தில் ஒரு தெளிச்சல் கொடுத்தது. அவளுடைய உடம்பெல்லாம் வியர்த்தது. அவளுக்கு அருகிலே வந்து நின்று, ஒரு பளிஞன் மயில் விசிறியினால் அவளுக்குக் காற்று வீசினான்.

கவலையோடு குறி கேட்டுக் கொண்டிருந்த சொக்கப்பனும் அவன் மனைவியும், பேசுவதற்கு வார்த்தை வராமல் மௌனமாக நின்றார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் இதுவரை பேசாமல் நின்ற மலைநாட்டுக் கன்னி சொக்கி, இப்பொழுது ஒரு பெண் புலியின் தைரியத்தோடு அகவல் மகளுக்கு முன்னால் வந்து நின்று கொண்டாள்.

"ஆச்சி! நீ சொன்னதெல்லாம் சரி. எனக்குக் கண்ணாலம் ஆகப் போகுதுன்னு சொன்னே! புரிஞ்சுது. ஆனா யாரோ, ஏதோ ஒரு ஊரிலே உள்ள ஒரு ஆண் பிள்ளைக்கும் பெண் பிள்ளைக்கும் என்னமோன்னு சொன்னியே அது என்ன? எங்களுக்கும் அவங்களுக்கும் என்ன சம்பந்தம் வந்தது? புரியலையே! சொல்லு!" என்றாள் சொக்கி.

"இந்தா கன்னிப் பெண்ணே! அதென்ன அப்படிக் கேட்டே நீ, இந்த அகவல்காரியைப் பார்த்து! அதான் அப்பவே சொன்னேனே, யாரோ ஒருத்தன் இங்கே வரப்போறான். ஆனா எல்லாம் முருகன் புண்ணியத்திலே நல்லதா முடியப் போகுதுன்னேனே! அதுக்கு மேலே எனக்குத் தெரியாது. குறி கலைஞ்சு போச்சு இப்போ! அவ்வளவுதான்!" என்றாள் அகவல் மகள்.

இப்படித் தீர்மானமாக அவள் சொன்ன பிறகு அவளை எதிர்த்துப் பேச யாருக்கும் தைரியம் வரவில்லை. போதையிலே கிறங்கி நின்று கொண்டிருந்த பழநிப் பண்டாரம் மட்டும், கூட்டத்துக்கு மத்தியிலே வேகமாக வந்து நின்று கொண்டு, அகவல் மகளைப் பார்த்துக் கேட்கும் :—

"ஏ குறிகாரி! என்னமோ பெரிசாக் குறி சொல்ல வந்துட்டியே! உனக்கு அகவல் மகள் என்று யார் பேர் வச்சது! அதைச் சொல்லு முதல்லே! குறியிலே அது துலங்குதா பார்க்கலாம்!" என்றது பழநி.

அகவல் மகளுக்கு அப்படியே கண் சிவந்தது.

"பண்டாரம்! கஞ்சாவிலே பேசுதா கட்டை, இல்லை, சுயபுத்தியிலேதான் பேசுதா?" என்று அஃறிணை

யிலேயே ஒரு அதட்டல் அதட்டினுள் அகவல் மகள். அவ்வளவுதான், நிலைமை விபரீதமாக வக்கரிக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட சட்டி, அபபடியே பழநி பண்டாரத்தின் மேலே பாய்ந்து பழநியைச் செந்தூக்காகத் தூக்கிக் கூட்டத்துக்கு வெளியே கொண்டு வந்து விட்டது! இதைப் பார்த்த வாழைப்பழம் அப்படியே நழுவி ஓடிற்று. இவர்களைப் பின்தொடர்ந்து தென்காசிச் சாமியும் மற்றப் பரதேசிகளும் 'நமக்கு எதற்கு வம்பு?' என்ற எண்ணத்தில் விசாலமான ஆலமரத்தை நோக்கி நடந்தார்கள்.

சொக்கிக்கு இப்பொழுதுதான் மூச்சு சரியாக வந்தது. பழநிப் பண்டாரம் ஏதாவது இசைவு கேடாகக் கேட்டு வைத்து விடக் கூடாதே என்று அவள் மெய்யாகவே பயந்தாள். அதிலும் மானைப் பற்றியும் உயிர் காத்த அந்தப் புண்ணியத்தைப் பற்றியும் அகவல் மகள் சொன்னுளே, அது என்ன சமாசாரம் என்று யாரும் கேட்டு வைத்து விடக் கூடாதே என்று சொக்கிக்கு அளவுகடந்த அச்சம்! ஏனென்ருல், தான் அவ்விதமான ஒரு சாகசச் செயல் செய்ததை இதுவரை தன் தகப்பனிடங் கூடச் சொல்லியதில்லை அவள்! சொன்னுல் சொக்கப்பன் இனி அவளை அந்த நிலாக் காட்டுக்கே போகக் கூடாது என்று தடுத்து விட்டால்?...

சொக்கிக்கு ஒரு விநாடி அந்தச் சம்பவம் காட்டாற்று வெள்ளம் போல நினைவில் பொங்கிச் சுழித்துக் கொண்டு வந்தது!

ஒரு வருஷம் இருக்கும், அது நடந்து! அன்று பௌர்ணமி. நிலாக் காட்டிலே கன்னியர்களின் பிரார்த்தனை நடக்கும் தினம் அது. பொழுது சாய்வதற்குச் சற்று முன்பாகவே, சொக்கி தன்னுடைய கொம்பன் யானையைப் பிடித்துக் கொண்டு வழி நடக்க ஆரம்பித்தாள். மற்றக் கன்னியர்கள் நிலா வந்ததும் வந்து விடுவார்கள் அல்லவா? சொக்கி அவர்களுக்கு முன்பாகவே நிலாப் பாறைக்குச் சென்று மாலை தொடுத்துவிட வேண்டும்!

அவள் தொடுத்த மாலையை, அவள் கையாலேயே வெகு மதியாகப் பெறுவதில், மற்றப் பளிஞர் பெண்களுக்கு ஒரு தனியான ஆனந்தம்! சொக்கிக்கு இது நன்ருகத் தெரியும். எனவே பௌர்ணமி தோறும் சொக்கி இந்தப் பூமாலைச் சடங்கை நடத்தத் தவறுவதில்லை. ஆனல் இன்று அவள் புறப்படும்போதே சகுனம் சரியாக இல்லை. எந்நாளும் இல்லாத விதமாகக் காட்டுப் பூனை ஒன்று குறுக்கே ஓடியது. பளிஞர் கூட்டத்தில் இந்த மாதிரி ஒரு துர்க்குறி கண்டால் உடனே மேலே நடவாமல் நின்று விடுவதுதான் பழக்கம். என்ருலும், சொக்கி இதைப் பொருட்படுத்தவில்லை. நடந்தாள். ஆனல் கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு நரி ஊளையிட்டது. ‘காடு என்ருல் நரி ஊளை இடாமல் இருக்குமா!’ என்று எண்ணிக் கொண்டே சொக்கி மேலும் நடந்தாள். மறுபடியும் கொஞ்ச தூரம் சென்றதும் எங்கோ ஒரு ஆட்டின் அலறல் கேட்டது. ‘அந்தப் பக்கமாகப் புலி நடமாடுகிறது போலும்!’ என்று எண்ணிக் கொண்டே மேலும் நடந்தாள் சொக்கி. தைரியம் ஒரு புறமிருக்க, நிலாப் பாறைக்குச் செல்ல வேண்டும் என்பதிலே அவளுக்கு அத்தனை கண்டிப்பு! ஆனல் மலைப் பாதையின் வளைவிலே அவள் திரும்பியதும், என்றும் கலங்காத கொம்பன் யானை கலங்கி நின்றது. தலையைத் திருப்பிச் சொக்கியைப் பார்த்துத் தும்பிக்கையைத் தூக்கியது, “குடிசைக்குப் போய் விடுவோம்!” என்று சொல்லுகிற பாவனையில்! ஆனல் சொக்கி இதற்கும் தயங்கவில்லை.

“கநி கல் கலா கதே!” என்ருள் யானையைப் பார்த்து. யானை தும்பிக்கையை ஆட்டிக் கொண்டே பார்த்தது.

“கந கட” என்று ஒரு பயங்கரமான அதட்டு அதட்டினுள் சொக்கி. அந்த அதட்டலை மீறுகிற அளவுக்குத் தைரியம், அதாவது, யஜமானத் துரோகம் இல்லை, கொம்பன் யானைக்கு! அப்படியே.கீழ்ப்படிந்து நாய்க்குட்டியைப் போல் வாலை ஆட்டிக்கொண்டு நடந்தது யானை! இதைக் கண்டு திருப்தியோடு புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டே, குறுகலான சிற்ருேடையின் கரையோரமாக நடக்க ஆரம்பித்தாள் சொக்கி. ஆனல் அது என்ன?

ஓடையின் இந்தக் கரையில் ஒரு மான்—பெண் மான்—நின்று கொண்டு அக் கரையில் எதைக் கூர்ந்து பார்த்துக் கொண்டு சொக்குகிறது? சொக்கி தலையைத் தூக்கிப் பார்த்தாள். சிற்ருேடையின் மறு கரையில் ஓர் ஆண் மான் நின்றது. யானை தன்னோடு வந்தால் மான் கலைந்து ஓடி விடும் என்று நினைத்த சொக்கி, யானையைப் பார்த்துச் சொன்னாள் :

"கநி கல் !"

கொம்பன் யானைக்கு ஏற்கனவே மனம் கலைந் திருந்தது! எனவே சொக்கி தனியாக நடப்பதைச் சம்மதிக் காமல், மேலும் ஒரு அடி எடுத்து வைத்தது அது.

இதைக் கண்டதும் சொக்கிக்கு மும்மடங்கு கோபம் உண்டாயிற்று. ஒரு ஹுங்காரம் கொடுத்துக் கொண்டே சொன்னாள் : "கநி கல் ! கவ கரா கதே !"

பாவம் ! யானை மிரள மிரள விழித்துக் கொண்டே நின்று விட்டது. சொக்கி ஓடையை நோக்கி நடந்தாள்.

நடந்து கொண்டே திரும்பிப் பார்த்தாள் சொக்கி. தன்னை வரச் சொல்லுவாள், அநுமதிப்பாள் என்று எதிர் பார்ப்பதற்கு அடையாளமாக யானை மீண்டும் ஒரு அடி எடுத்து வைத்தது. அவ்வளவுதான் ; சொக்கிக்கு ஒரே ஆவேசம் வந்து விட்டது !

"கச கத் கதி கய கம் ! கவ கரா கதே !" என்று உரத்த குரலில் கட்டளை இட்டாள் சொக்கி. யானை மறு பக்கம் திரும்பிச் சோகமே உருவாக நின்று கொண்டது. சொக்கி பெண் மானின் அருகிலே வந்தாள்.

இங்கே பெண் மான். எதிர் கரையிலே ஆண் மான் நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்தவாறு கிறங்கியது இந்தப் பெண் மான். பாசத்தின் காந்தத் திலே ஒன்றினால் ஒன்று ஈர்க்கப்பட்டு இரண்டு மான்களும் மறுகி நின்றன. இரண்டுக்கும் மத்தியிலோ ஓடை ஆவேசக் கூப்பாட்டுடன் ஓடிக் கொண்டிருந்தது. அன்று மலையின் உட்புறத்திலே நல்ல மழை பெய்திருக்க வேண்டும். தண்ணீர் சுழித்துக் கொண்டு ஓடியது. சொக்கி பெண் மானின் அருகிலே சென்ருளோ

இல்லையோ, ஆண் மான் என்ன நினைத்ததோ தெரிய வில்லை, அப்படியே ஒரு குதி குதித்தது தண்ணீருக்குள்! பெண் மான் தன் இருசெவிகளையும் மேலும்கீழும் அடித்துக் கொண்டது. நீரிலே குதித்த ஆண் மானே பெண் மானை நோக்கி நீந்தி வர ஆரம்பித்தது. ஆனல் தண்ணீரின் வேகத்தை அதனல் சமாளிக்க முடியவில்லை. இதோ கசமான ஒரு பெரிய சுழியிலே சிக்கிக் கொண்டது ஆண் மான். வேகமாகச் சுருண்டு சுழன்று வட்டமிடும் அந்த வெள்ளச் சுழியிலே சிக்கிய ஆண் மான், இரண்டு முறை தானும் தண்ணீரோடு சேர்ந்து வட்டம் சுற்றி விட்டது. இனி அடுத்த சுழியில் மான் தண்ணீருக்குள் ஆழ்ந்துவிட வேண்டியதுதான்!

" தடால் " என்ற சத்தம் கேட்டது. சொக்கி தண்ணீருக்குள் குதித்து விட்டாள். இந்தச் 'சத்தத்தைக் கேட்ட யானை திரும்பிப் பார்த்தது. காலைத் தேய்த்தது.

" கச கத் கதி கய கம் !" என்று அல்லவா சத்தியம் இட்டிருக்கிருள் சொக்கி. எப்படி அந்த இடத்தை விட்டு நகருவது ?

கைகளை வேகமாக வீசிக் கொண்டு நீந்திய சொக்கி, இதோ சுழியின் எல்லை வட்டத்துக்குச் சென்று விட்டாள். கையை வீசி ஆண் மானின் கொம்பைப் பிடித்து ஒரு இழுப்பு இழுத்தாள். ஒரு ஹுங்காரத்தோடு தெம்பினள். அடுத்த கணம் சுழலில் இருந்து விடுபட்ட மான், எம்பி ஒரு துள்ளுத் துள்ளிக் கொண்டே இக்கரையை நோக்கிப் பெண் மானைப் பார்த்தவாறு நீந்தியது. சொக்கி அதைப் பின் தொடர்ந்தாள்.

ஏதோ கண்ணை மூடி விழிக்கும் நேரம் என்று சொல்வார்களே, அந்தக் கணக்கில் நடந்தது இத்தனையும், ஒரு விநாடிக்குள்ளே! அடுத்த விநாடி கரையிலே வந்து குதித்த ஆண் மான் ஒரு உதறல் உதறித் தண்ணீரைத் தெளித்துக் கொண்டே பெண் மானேடு குதித்தோடி விட்டது.

சொக்கி கரையிலே வந்ததும் பெருமூச்சு விட்டுக் கொண்டே கூந்தலைப் பிழிந்தவாறு திரும்பிப் பார்த்தாள்.

கொம்பன் யானை அவளுடைய உத்தரவை எதிர்நோக்கி ஒரே கவலையோடு நின்று கொண்டிருந்தது. "மனிதன் தான் சத்தியத்துக்குக் கட்டுப்பட மாட்டான்! கொம்பன் யானை அப்படியா!" என்று சொல்லுவதுபோல சொக்கியின் முகத்தில் ஒரு புன்முறுவல் வந்தது. "கவா!" என்றாள் யானையைப் பார்த்து. அந்த வார்த்தை வந்ததோ இல்லையோ, ஒரே எட்டில் அவள் அருகே படர்ந்து வந்து நின்று, மத்தகத்தினால் சொக்கியின் மேனியிலே தடவியது யானை. அதனுடைய தும்பிக்கை சொக்கியின் கேசத்தை நன்றாகப் பிழிந்தது.

"கதூ கக் ககு!" என்றாள் சொக்கி. யானையின் பாதத்திலே மிதித்து மேலே ஏறினாள் அவள். "கந கட" என்றாள். ஆபத்திலிருந்து விடுபட்ட உற்சாகத்தில் யானை வெகு வேகமாக நடந்தது.

இதன் பிறகு நிலாப் பாறைக்குச் சென்றதுவரை எவ்வித இடைஞ்சலும் இல்லை. நிலாப் பிரார்த்தனையும் எந்த விக்கினமும் இல்லாமல் நடைபெற்றது. ஆனாலும் நிதானமாக யோசிக்கும்போது சொக்கிக்குத் தான் ஓடையிலே குதித்தது குறித்து அத்தனை திருப்தி ஏற்படவில்லை. மானைக் காப்பாற்றுவதற்காக இப்படி ஒரு காரியம் செய்தது சரிதான் என்றாலும், காட்டோடையில் தண்ணீர் பெருகி வரும்போது தான் அசட்டுத் தைரியத்துடன் குதித்த விவரம் தகப்பனுக்கு மட்டும் தெரிந்தால் எத்தனை விபரீதம் நேர்ந்து விடும்! இனிமேல் தனியாகப் போகவே கூடாது என்று சொல்லி விடுவானே சொக்கப்பன்! ஏன், நிலாப் பிரார்த்தனையே வேண்டாம் என்றுகூடத் தடுத்து நிறுத்தி விடுவான்!—இப்படி எண்ணியே இந்தச் சம்பவத்தை யாரிடமும் சொல்லாமல் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொண்டாள் சொக்கி. எப்பொழுதாவது அதை எண்ணிப் பார்க்கும்போது, மனத்தில் ஒரு விதமான திகில்கூட உண்டாகும் அவளுக்கு. ஆனால் இன்று அகவல் மகள் இத்தனை தூரம் அந்தச் சம்பவத்தைச் சொல்லி, மானைக் காப்பாற்றிய புண்ணியத்தினால் நன்மை உண்டு என்று பாடியதும், இதயத்துக்குள்ளே சொக்கி சந்தோஷப்பட்டுக் கொண்

டாள். மானைக் காப்பாற்றிய காரியத்துக்கு வேறொரு பலன்கூட வேண்டுமா? தான் உயிர் தப்பியதே பெரிய புண்ணியந்தானே? இல்லையென்றால் அத்தனை கெட்ட அறிகுறிகள் தோன்றியதற்கு, அன்று எத்தனை பெரிய அபாயம் தனக்கு நேர்ந்திருக்க வேண்டும்!

இப்படியெல்லாம் சொக்கி மன உலகின் நினைவுக் காட்டுக்குள்ளே சென்று அந்தச் சம்பவத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டாள். இப்பொழுது பழனிப் பண்டாரம் அகவல் மகளை இது குறித்து வாயைக் கிண்டாமல் விட்டதுங்கூட அந்தப் புண்ணியத்தின் பலன்தான் என்று நினைத்து மகிழ்ச்சி அடைந்தாள் சொக்கி!

இதற்குள் நாகர் பீடத்துக்கு முன்பு படையலுக்காகச் செய்ய வேண்டிய தீபாராதனைச் சடங்கு ஆரம்பமாயிற்று. நீளமான கொம்பு ஒன்றை ஊதினான் ஒரு பளியன். அகவல் மகளுக்காகக் குழல் ஊதுவதை இதுவரை நிறுத்தியிருந்த குழலர்களும இப்பொழுது காவடிச் சிந்து போன்ற, ஆனால் இன்னுங்கூட மிக எளிமையான, ஒரு பிரார்த்தனை மெட்டை ஏக காலத்தில் பலர் சேர்ந்து ஊதினார்கள். உறுமி என்ற தாள வாத்தியம் மங்களகரமாக முழங்கியது. இந்த ஒலியிலே கவரப்பட்டு மலை முகட்டிலே காட்டு மயில்கள் எல்லாம் தோகை விரித்தாடின. பளியர் குலத்தின் கன்னி ஒருத்தி பீடத்துக்குச் சற்றுத் தொலைவிலே யிருந்த ஒரு விசாலமான பரணில் ஏறி, கவண் ஒன்றைக் கையில் பிடித்து அதில் கல்லுக்குப் பதிலாக ஒரு பொரி உருண்டையை வைத்துச் சுண்டி வீசினாள். வன தேவதைகள் அருவமாக நின்று அதை ஏற்றுக் கொள்ளும் என்று பளியரின் சம்பிரதாயம்!

அந்த நேரத்தில், 'யாரோ வர்றாங்கோ!' என்று கதறினான் ஒரு பளியன். அப்பொழுது கூட்டத்தை விலக்கிக் கொண்டு மூன்று 'நாகரிக' மனிதர்கள் உள்ளே நுழைந்தார்கள். மூவரில் முன்னால் நடந்து சென்ற வாலிபன் தங்களுக்கு அருகிலே வந்த பிறகுதான் அது யாரென்று பளியர்களுக்குத் தெரிந்தது. நகரத்து முறையில் அவன் ஆடை அணிந்திருந்ததுதான்

அதற்குக் காரணம்! "கந்தப்பன்" என்றது ஒரு குரல். அடுத்த விநாடி "கந்தப்பா, கந்தப்பா!" என்று ஏக காலத்தில் நூற்றுக் கணக்கான குரல்கள் எழுந்தன. பளிஞர் குலம் அத்தனையும் அவனைச் சூழ்ந்து பாய்ந்தது. "தயவு செய்து வழி விடுங்கள்!" என்று பளிஞருக்குச் சொல்லிக் கொண்டே தன் பின்னால் வந்த இரண்டு நண்பர்களையும் "வாருங்கள் உள்ளே" என்று அழைத்தான் கந்தப்பன். ஆச்சரியப்பட்டவர்கள் எல்லாரும் வியப்பி லிருந்து மீளுவதற்குள், மற்றொரு பெரிய ஆச்சரியமாக இரண்டு 'நகர நாகரிக' மனிதர்கள் கந்தப்பனின் பின்னோடு பளிஞர் கூட்டத்துள்குள்ளே வந்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை. அப்புலிங்கமும் டாக்டர் சுரேஷ் அவர்களுமே! டாக்டர் சுரேஷின் கழுத்தைச் சுற்றி 'ஸ்டதஸ்கோப்' தொங்குவதற்குப் பதிலாக, இப்பொழுது ஒரு நீளமான வார் வளைந்து கொண்டு கிடந்தது. அதில் தொங்கிய புகைப்பட கருவி ஒன்று, ஒரே வியப்போடு கண்களை அகலமாக விழித்துப் பார்த்தது!

## 22. இடமாற்றம்!

அன்று மாலை டாக்டர் சுரேஷ், ரவீந்திரனையும் அப்புலிங்கத்தையும் 'புதிய யோசனையை'த் தங்களுக்குள் கலந்து பேசும்படி சொல்லிவிட்டு ஆஸ்பத்திரிக்குப் போய் விட்டார் அல்லவா? அதன் பிறகு அப்புலிங்கம் தன் னுடைய யோசனையை ரவியிடம் சொல்வதற்குச் சற்றும் தயங்கவில்லை. ஏனென்றால், வீடு மாற்றுவது சம்பந்தமாக ஒருவாறு ரவீந்திரனுடைய மன நிலையைச் சரிப்படுத்தி வைத்து விட்டார் டாக்டர், தாம் ஆஸ்பத்திரிக்குப் புறப் படுவதற்கு முன்பே! இப்பொழுது அப்புலிங்கம் அதைத் தொடர்ந்து பேசுவதற்கு ஆரம்பித்தான்.

"மிஸ்டர் ரவி! டாக்டர் சுரேஷ் சொன்ன பிறகாவது இந்த வீட்டை மாற்றுவது என்று தீர்மானித்து விட்டீர்கள் அல்லவா?"

" அப்பு ! அப்படியானால் எனக்குச் சுயபுத்தி இல்லை என்றுதானே சொல்லுகிறீர்கள்? என்னை ஒரு கிளிப் பிள்ளை என்று நினைத்து விட்டீர்கள். வாஸ்தவந்தான். நான் ஒரு கிளிப்பிள்ளைதான். அதிலும் சந்தர்ப்பங்கள் என்ற கூண்டுக்குள் அடைபட்டு நிற்கும் ஒரு கிளிப் பிள்ளை! உண்மைதான்!" என்று கூறினான் ரவி. இந்தப் பதில் அப்புலிங்கத்துக்கு எதிர்பாராத விபரீதமாக இருந்தது!

" அப்படியில்லை ரவி! உங்களுடைய சுய புத்தியைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லையே இப்பொழுது—"

" பின் அர்த்தம் என்ன அப்புலிங்கம்! டாக்டர் சொன்ன பிறகு என் புத்தியில் ஏறி விட்டது என்று தானே சொல்ல வருகிறீர்கள்—"

" அப்படியில்லை. காரண காரியங்களோடு டாக்டர் சொன்னதால், உங்களுடைய வியவகார அறிவுக்கு அது பொருந்தி யிருக்கும் என்று சொன்னேன்."

" பேஷ்! அப்படியானால் இனிமேல் நான் டாக்டர் சொன்னதற்கு மாறாகப் பேசினால் என்னை அறிவு இல் லாதவன் என்று சொல்வீர்கள். அப்படித்தானே?"

பேச்சு இப்படி நடந்து கொண்டிருந்தபோது கல்யாணி அம்மாள் குறுக்கிட்டாள்.

"அவரிடம் ஏன் இப்படி வரட்டு வாதம் செய்கிறீர்கள்? வீடு மாற்றுவதோ உறுதி என்று ஆகிவிட்டது—"

அப்புலிங்கம் பேச ஆரம்பித்தான் :

"இன்று சாயந்திரம் இங்கே வருவதற்கு முன்னமேயே உங்கள் வீடு சம்பந்தமாக டாக்டர் என்னோடு சொல்லிக் கொண்டிருந்தார் அம்மா. காற்றோட்டமான வீட்டில் இருந்தால் உங்கள் உடம்புக்கு நல்லது என்று சொன்னார். நானும் ஒரு யோசனை கூறினேன்."

மௌனமாக இருந்த ரவி, "அந்த யோசனையைத்தான் சொல்லுங்களேன், அப்பு!" என்று வேகத்தோடு கூறினான்.

" அவர் அதைச் சொல்லும்படி விட்டால்தானே நீங்கள்!" என்று கல்யாணி அம்மாள் சொன்னாள்.

பொதுவாகக் கணவன் கோபப்படாத வேளைகளில் மனைவிக்கு ஏற்படுமே ஒரு கண்டிப்பு, அத்தக் கண்டிப்பு இருந்தது, கல்யாணி அம்மாளின் குரலில். ரவீந்திரன் மெதுவாகச் சிரித்துக் கொண்டான்.

"மிஸ்டர் அப்பு! உங்கள் கட்சிக்குத்தான் பலம் சேர்கிறது! பேசுங்கள்! உங்கள் யோசனையைச் சொல்லுங்கள்!" என்ருன் ரவி.

அப்பு சொன்ஞன்: "ஆண்டார் தெருவில் எங்கள் வீடு உங்களுக்குத் தெரியும். அத்தனை பெரிய வீட்டில் அப்பாவையும் அம்மாவையும் தவிர நான் ஒருவன்தான்."

"ஆமாம். நீங்கள்தான் நைஷ்டிக பிரும்மச்சாரி ஆயிற்றே! ஒற்றைக் கட்டை!" என்ருன் ரவி.

"அதற்குச் சொல்லவில்லை. அத்தனை பெரிய வீட்டில் நாங்கள் மூன்றே பேர்தான். எங்கள் வீட்டு வளைவுக்குள் அவுட்ஹவுஸ் ஒன்று இருக்கிறதல்லவா? அந்த முற்றத்து வீட்டில் யாருமே இல்லை. பூட்டிக் கிடக்கிறது. அந்தக் காலத்தில் எங்கள் தகப்பஞர் 'தியொஸாபிகல் ஸொஸைடி'யில் சேர்ந்து தீவிரமாக வேலை செய்தவர். அப்பொழுதெல்லாம் வெளியூரிலிருந்து பல பேர் வருவார்கள். அந்த விருந்தாளிகளுக்கு என்றே முற்றத்தில் ஒரு வீட்டைக் கட்டிஞர்கள். இப்பொழுது 'தியாஸபி' அப்பாவுக்கு ஒத்து வரவில்லை. வீடு பூட்டிக் கிடக்கிறது!" என்ருன் அப்புலிங்கம்.

"ஓகோ! அந்த வீட்டுக்கு நாங்கள் குடி வந்து விடலாம் என்கிறீர்களோ? கிளியை உங்களுடைய கூட்டிலேயே அடைத்து விடப் பார்க்கிறீர்களா?" என்று கேட்டான் ரவீந்திரன்.

"தயவுசெய்து கிளிப் பிள்ளையைக் கொண்டு வராதீர்கள் இப்போது. டாக்டர் சுரேஷுக்குக்கூட இன்று அந்த வீட்டைத் திறந்து காட்டினேன். நல்ல காற்ரோட்டம். மாடி அவருக்கு மிகவும் பிடித்திருக்கிறது. கீழே உங்கள் மனைவிக்குச் சௌகரியமான ஒரு பூஜை அறை இருக்கிறது. மாடியிலும் ஒரு நல்ல ஹால் இருக்கிறது!" என்ருன் அப்புலிங்கம்.

"நடனம் ஆடுவதற்குச் சௌகரியம் என்கிறீர்கள். அப்படித்தானே? சந்திரிகா! சந்திரிகா!" என்று கூப்பிட்டான் ரவி.

மாடியிலிருந்து சந்திரிகா கீழே வேகமாக இறங்கி வந்தாள்.

கந்தப்பன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தவன் எழுந்து நின்று கொண்டான்.

"நீ உட்கார் தம்பி! சந்திரிகா, இப்படி இந்த நாற்காலிக்கு வா. இவர் என்ன யோசனை சொல்கிறார் தெரிந்ததோ, உனக்கு?" என்று கேட்டான் ரவி.

"அரைகுறையாகக் காதில் விழுந்தது. உங்களுக்குச் சம்மதமாக இருக்க வேண்டுமே என்றுதான் பிரார்த்தனை செய்கிறேன். ஏனென்றால் இந்த மொட்டை மாடி எனக்கும் அலுத்து விட்டது!"

"பேஷ்! அலுத்து விட்டது என்பது மட்டும் இல்லை. திருடன் வந்து போனதிலிருந்து பயமாகவே போய்விட்டது என்று சொல்!" என்றான் ரவி. இப்படிச் சொல்லி விட்டு அப்புலிங்கத்தைப் பார்த்துக் கேட்டான் ரவி:

"மிஸ்டர் அப்பு! உங்களுடைய முற்றத்து வீட்டில் குடியேற எங்களுக்குச் சம்மதமே. உங்கள் அன்புக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை!"

"சொல்லுங்கள். என் யோசனையை நீங்கள் ஒப்புக் கொள்ளும்போது, உங்கள் நிபந்தனையை நான் ஒப்புக் கொள்ள வேண்டியதுதானே? எப்படியும் எனக்கு நல்ல சங்கீதம் தினந்தோறும் காதில் விழுமே என்ற ஆனந்தம் தான்!"

"உங்கள் வீட்டில் குடியிருக்கிறேன். ஆனால் நண்பன் என்ற முறையில் அல்ல, வாடகைக்காரன் என்ற முறையில்!"

"அப்படியென்றால்?" என்று கேட்டான் அப்பு.

"நட்பு என்பது வேறு விஷயம். வீட்டு வாடகை என்பது வேறு விஷயம். மாதம் இத்தனை ரூபாய் என்று

ஒரு முடிவு சொல்லுங்கள். நான் உங்கள் வீட்டில் குடியிருக்கத் தயார். மற்றப்படி நட்பையும் இதையும் போட்டுக் குழப்புவது எனக்குப் பிடிக்காது!" என்றான் ரவி.

"ரொம்ப சரி. டாக்டரையும் ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு, வாடகை எவ்வளவு என்று முடிவு செய்து விடுவோம். நீங்கள் நல்ல நாள்ப் பார்த்துக் குடி வந்து விடலாம்."

"நல்ல நாள் என்ன! ராகுவும் கேதுவும் சேர்த்து ஒன்பது கிரகங்களுமே நல்லவைதான், பக்தர்களுக்கு. சந்திரிகா, சம்பந்தர் தேவாரம் நினைவிருக்கிறதா?

ஞாயிறு திங்கள் செவ்வாய்
புதன் வியாழன் வெள்ளி சனி
பாம்பிரண்டுமுடனே

ஆசறு நல்ல நல்ல
அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே!"

என்று பாடினான் ரவி.

கல்யாணி அம்மாள் இந்த இடத்தில் பேச ஆரம்பித்தாள்:

"பாம்பு வந்த பிறகு நாள்ப் பார்த்துப் போகிறது என்ற பேச்சே கிடையாது. அது எந்த நிமிஷம் வந்ததோ, அந்த நிமிஷமே வீடு மாற்றுகிறதற்கு நல்ல முஹூர்த்தந்தான்—"

"கல்யாணி! இன்னும் அந்தப் பாம்பு விஷயத்தைப் பேசினாயோ, பிறகு வீடு மாற்றுவதே இல்லை என்று தீர்மானித்து விடுவேன். தெரிந்ததா!"—இப்படிச் சொல்லும் போது பாம்பைப் போல் படமே எடுத்து விட்டான் ரவீந்திரன்!

அப்புலிங்கத்துக்குக் கலவரமாகப் போய் விட்டது. கல்யாணி அம்மாளிடம் உண்மையில் அவனுக்கு இரக்கமே உண்டாயிற்று. கலக்கத்தோடு அவன் ரவியைப்

பார்த்தான். இந்தக் கட்டத்தில் சற்றும் எதிர்பாராத விதமாகக் கந்தப்பன் பேச ஆரம்பித்தான்!

“ஐயா! என்னை மன்னிக்க வேண்டும். நான் இது வரை இங்கு நடந்த விஷயங்களை யெல்லாம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது பாம்பைப் பற்றி நீங்கள் இப்படிச் சொன்னது எனக்குப் பிடிக்கவில்லை. நல்ல பாம்பைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? கடவுள் புண்ணியத்தில் ஒரு முறை நீங்கள் சொக்கிகுடிக்கு வந்து எங்கள் நாகர் பீடத்தைப் பார்த்தால், எத்தனையோ விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவீர்கள். அதெல்லாம் எதற்குச் சொல்கிறேன் என்றால், அம்மாள் அவர்கள் சொல்லுவதிலும் உண்மை இருக்கிறது. நான் அதிகமாகப் படித்ததில்லை. என்றாலும், நாகப் பாம்புகள் விஷயத்தில் உங்களை விட நான் அதிகம் தெரிந்தவன். நீங்கள் நாளைக்கே இந்த வீட்டைக் காலி பண்ணிவிட வேண்டும். என்னோடு வாதாடினால் எனக்குப் பதில் சொல்லத் தெரியாது! அத்தனைக்குப் படிக்கவில்லை நான்!” என்றான் கந்தப்பன். அவனுடைய முகத்தில் கபடம் இல்லை. அவனுடைய வார்த்தைகளில் பக்தியும் சிரத்தையும் இருந்தன. ரவீந்திரனுக்கு எதிர்த்து வாதாட இடம் இல்லை.

“மிஸ்டர் அப்பு! வெற்றி உங்கள் கட்சிக்குத்தான். என்ன காரணமாய் இருந்தாலும் சரி, நாளைக்கே வீடு மாற்றி விடுவோம். கந்தப்பன், நீயும் நாளைக்குக் கட்டாயம் வந்துவிட வேண்டும். டாக்டர் சுரேஷும் அவசியம் வருவார்!”

* * *

வெள்ளிக்கிழமை காலையில் ஒன்பது மணிக்கெல்லாம் அப்புலிங்கத்தின் முற்றத்து வீடு, ரவீந்திரன் குடும்பத்தை வரவேற்கத் தயாராக இருந்தது. இரவோடு இரவே நாலு பேரை அமர்த்தி வீடு முழுவதையும் ஒட்டடை அடித்துக் கழுவிச் சுத்தப்படுத்தி விட்டான் அப்புலிங்கம்.

சங்கீதத்திலும் கல்வியிலும் அப்புலிங்கத்துக்கு எல்லையில்லாத ஈடுபாடு. ரவீந்திரனைப் பிடிப்பதற்கு முன்பே அவனுடைய சங்கீதத்தைப் பிடித்து விட்டது அப்புலிங்கத்துக்கு. பிறகு அவனோடு பழகப் பழக ரவீந்திரனுடைய கோபதாபங்களுங்கூட அவனுக்குப் பிடித்துப் போய் விட்டன. ரவீந்திரனுடைய புல்லாங் குழலின் கீதம் மேலும் கீழும் ஸ்தாயிகளிலே ஏறி இறங்குவ தில்லையா? அது போலத்தான் இருந்தது ரவியினுடைய உணர்ச்சிகளும் என்று எண்ணி, சங்கீதத்தைப் போலவே அந்த உணர்ச்சிகளையும் ரஸிக்க ஆரம்பித்து விட்டான் அப்பு.

ரவீந்திரன், கல்யாணி, சந்திரிகா மூவரும் டாக்டர் சுரேஷின் காரிலேயே அப்புலிங்கத்தின் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். டாக்டர் சுரேஷ் ஒரே உத்சாகத்தோடு காணப்பட்டார்.

“மிஸ்டர் அப்பு, ரவீந்திரனுடைய வீட்டில் தட்டு முட்டுச் சாமான்களே மிக மிகக் குறைவு. ஆணி அடிக் கிறது, படம் மாட்டுகிறது, கட்டிலை இழுக்கிறது, பெஞ்சு களைச் சுவரோடு கொண்டுப் போட்டு, அதிலே உட்கார்ந் திருப்பவர்கள் தலையிலுள்ள எண்ணெயை யெல்லாம் சுவரிலே மெழுகுவது,—இந்த மாதிரித் தொந்தரவு எல்லாம் கிடையாது! உங்கள் பாடு நல்ல யோகந்தான்! வாடகைக்கு இந்த மாதிரி ஒரு குடித்தனம் கிடைக்க வேண்டுமே, அப்புலிங்கம்!” என்றார் சுரேஷ்.

புது வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் முதலாவது காரியமாகக் கல்யாணி அம்மாள் பூஜை அறைக்குள்ளே சென்று குத்து விளக்கு ஏற்றினாள். உடனே அடுப்பைப் பற்ற வைத்துப் பால்காய்ச்சினாள். இதற்குள் கந்தப்பனும் அங்கு வந்து சேர்ந்து விட்டான்.

தட்டு முட்டுச் சாமான்களைப்பற்றி டாக்டர் பேசியதில் இழைந்த நுட்பத்தைப் புரிந்து கொண்டவனாக, அப்பு லிங்கம் தனது பங்களாவிலிருந்து நண்பர்கள் உட்காருவ தற்காக ஐந்தாறு நல்ல ஆசனங்கள் எடுத்து வரச் சொன்னான்.

"உங்களைத்தானே? நீங்கள் பேசாமல் நிற்கிறீர்களே, எல்லாரையும் பால் சாப்பிடச் சொல்லுங்களேன்!" என்றாள் கல்யாணி, ரவீந்திரனைப் பார்த்து.

சந்திரிகா அடுக்களைக்குள்ளிருந்து பால் எடுத்து வந்தாள்.

"நாங்கள் எல்லாரும் சாப்பிடுவது இருக்கட்டும். முதல் முதல் கந்தப்பன்தான் பால் சாப்பிட வேண்டும். அதுதான் முறை!" என்றார் டாக்டர் சுரேஷ்.

சந்திரிகாவின் கையிலிருந்த பால் டம்ளரை வாங்கிக் கந்தப்பனிடம் பரிவோடு கொடுத்தான் ரவி.

"டாக்டர் சார்! இந்தச் சந்தர்ப்பத்தில் இங்கே பால் சாப்பிடுவதில் உண்மையிலேயே எனக்கு சந்தோஷம். ஏனென்றால் பால் ஒன்றுதான் எங்கள் குலத்தில் எந்தச் சாந்திக்கும் நாங்கள் உபயோகிக்கிற புனிதமான பொருள்!" என்றார் கந்தப்பன்.

"அப்படியென்றால்? நீங்கள் வேறு பானங்கள் எதுவுமே சாப்பிடுவதில்லை என்று சொல்கிறாயோ தம்பி?" என்று வேடிக்கையோடு கேட்டார் சுரேஷ்.

"டாக்டர் ஸார்! நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது! எங்கள் பக்கத்தில் கஞ்சாத் தோட்டங்கள் அதிகம்தான். அந்த இலைகளைப் பாலிலே அரைத்துக் கலந்து, விழாக் காலங்களில் நாங்கள் ஒரு வகையான பானம் செய்து சாப்பிடுவது வழக்கம். அதைப் பற்றிக் கேள்விப்பட்டுத்தான் நீங்கள் இப்படிச் சொல்லுகிறீர்கள் என்று நினைக்கிறேன்" என்றான் கந்தப்பன்.

"ரொம்ப சரி. ஆனால் சாந்தி என்று ஒரு வார்த்தை உபயோகப்படுத்தினாயே தம்பி, அது என்ன?" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

கந்தப்பன் பௌர்ணமி இரவுகளில், அவசியம் நேர்ந்த போது நாகசாந்தித் திருவிழா கொண்டாடப்படுவதைக் குறித்துச் சொன்னான். அப்புலிங்கமும் ரவீந்திரனும் அந்தப் பேச்சை ஆவலோடு கூர்ந்து கேட்டார்கள்.

"நாகசாந்தி என்பது அத்தனை முக்கியமான ஒரு சடங்கு. நாளை மறுநாள் பௌர்ணமியல்லவா? எங்கள்

சொக்கி குடியில் நாகசாந்தி செய்வதற்காகத் தகவல் சொல்லி யனுப்பி விட்டேன் !" என்ருன் கந்தப்பன்.

டாக்டர் ஆச்சரியத்தோடு கேட்டார் : " என்ன கந்தப்பன் ! ரவீந்திரன் வீட்டில் நாகம் இறந்து போனதற் காகச் சொக்கி குடியில் சாந்தி செய்யப் போகிருர்களா ?"

கந்தப்பன் சொன்னுன் : " நல்லதோ கெட்டதோ அந்த நாகத்துக்கு நான் அல்லவா யமனுக வந்து சேர்ந் தேன். அதனுல் சாந்தி செய்ய வேண்டியது என் பொறுப்புத்தானே !"

டாக்டர் சுரேஷ் கேட்டார் :"நீ எப்படித் தம்பி தகவல் அனுப்பினுய் ?"

" அது ஒன்றும் கஷ்டமில்லை டாக்டர். வழக்க மாகவே ஒவ்வொரு மாதமும் இங்கிருந்து செய்திகொண்டு போகிற ஆள் ஒருத்தன் இருக்கிருன். அவனிடந்தான் இதையும் சொல்லியனுப்பி யிருக்கிறேன்."

" அப்படியானுல் நாளை மறுதினம்—அதாவது— இன்று வெள்ளிக்கிழமை அல்லவா ? நாளை மறு தினம் ஞாயிறன்று—உங்கள் மலைக் காட்டிலே நாகசாந்தி நடக்குமோ ?"

" ஆமாம். பௌர்ணமி பூஜை பிரமாதமாக நடக்கும்!" என்று ஒரே பெருமையோடு சொன்னுன் கந்தப்பன்.

" எனக்கு ஒன்று தோன்றுகிறது மிஸ்டர் அப்பு லிங்கம் ! நீங்கள்தான் ரஸிகர் ஆயிற்றே. உங்களுடைய உள்ளம் ஒரு 'ப்ளாட்டிங் பாட்' மாதிரி. எழுத்துள்ள பக்கத்தில் எங்கெங்கே பசை யிருக்கிறதோ அதை மட்டும் ஒத்தி எடுத்து விடுவீர்கள். இந்த மலையரசர் கூட்டத்தில் நடக்கும் விழாவையும், அப்படி ஒத்தி எடுத்துக் கொண்டு வந்தால் என்ன ! நாளைக்கோ எனக்கு மாசத்தில் மூன்ருவது சனிக்கிழமை. நாளை மறுதினமோ ஞாயிறு தான். இரண்டு நாட்களும் சேர்ந்தாற்போல் லீவு. அப்படியே ஒரு உல்லாச யாத்திரை புறப்பட்டுப் போய் வந்தால் என்ன !" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

" நான் அந்தக் காட்சிகளை உள்ளத்தில் படம்பிடிக்கப் போகிறேனே இல்லையோ, உங்களுடைய காமிராவில்

அவற்றையெல்லாம் பிடித்துக்கொண்டு வந்துவிடுவீர்கள், அப்படித்தானே டாக்டர்?" என்று கேட்டான் அப்புலிங்கம். ரவீந்திரன் இப்பொழுது பேச ஆரம்பித்தான் :

"அதுமட்டும் இல்லை, அப்பு! டாக்டருக்கு சர்ப்ப கந்தியைப் பற்றிக் கேட்டதிலிருந்து அதைக் கொஞ்சம் ஆராய்ச்சி செய்யவேண்டும் என்று ஆசை. அதனால் தான் இந்த யாத்திரையில் இத்தனை அக்கறை! அப்படித் தானே டாக்டர்!"

டாக்டர் சுரேஷ் இதற்குப் பதில் சொல்லாமல் சிரித்தார்.

"எது எப்படியானாலும் ரவீந்திரன் இந்த இடத்திலிருந்து நகரமாட்டார். அதிலும் புது வீட்டுக்கு வந்தவுடன் 'காம்ப்' கிளம்புவது என்றால் அவருக்கு—"

"அது மட்டுமில்லை டாக்டர்! நான் இனி இந்த வீட்டிலிருந்து கிளம்புவதென்றால் அது அநேக விஷயங்களைப் பொறுத்தது. அந்த அயோக்கியன் நாகரத்தினத்துக்கு ஒரு வழி செய்தால் ஒழிய நான் திருச்சியிலிருந்து கிளம்பப் போவதில்லை. கந்தப்பனுடைய ஊருக்குப் போக வேண்டிய கடமை ஒன்று இருக்கிறது உண்மைதான். ஆனால் அதற்கு ஒரு சந்தர்ப்பம் வேண்டும். என் உயிரையே ரட்சித்திருக்கிற இந்த உத்தம இளைஞனுக்கு நான் காணிக்கை செலுத்தவேண்டிய சந்தர்ப்பம் நேர வேண்டாமா? அதற்காகத்தான் காத்திருக்கிறேன்" என்றான் ரவி. அப்பொழுது உணர்ச்சியினால் அவனுடைய குரல் கம்மிற்று. கந்தப்பனுக்கு மனம் நெகிழ்ந்தது.

"ஐயா! எங்கள் மலைப் பிராந்தியத்தில் உங்களுடைய அற்புதமான சங்கீதம் எழுந்து ஒலிக்கும்படியான புண்ணியம் என்று நேர்கிறதோ அன்று எங்கள் குலமே தழைக்கும். எங்கள் குலதெய்வமே களிக்கும். அதில் சந்தேகமில்லை" என்றான் கந்தப்பன்.

உணர்ச்சியின் வசத்தால் சற்று நேரம் மௌனம் நிலவியது. பிறகு சுரேஷ் பேச ஆரம்பித்தார் :

"என்ன கந்தப்பன்! உனக்கு ஞாயிற்றுக் கிழமை விடுமுறை நாளதானே?" என்று கேட்டார்.

“ஏன் சனிக்கிழமையும்தானே?” என்று கேட்டான் ரவி.

“இல்லை ரவி! சூசையப்பர் கல்லூரியில் புதன் கிழமையும் ஞாயிற்றுக் கிழமையுந்தான் விடுமுறை. அப்படித்தானே தம்பி?”

“ஆமாம் ஐயா! அதனால் என்ன! நீங்களே இத்தனை சிரத்தையோடு புறப்படும்போது நான் மட்டும் தயங்கலாமா? சனிக்கிழமை ஒரு நாள் லீவு போடுகிறேன். நாளைக் காலையில் புறப்பட்டு நேரே அம்பாசமுத்திரம் வரையில் ரயிலில் போய் விட்டால், பிறகு—”

“பிறகு அங்கிருந்து பாபநாசம் போய் மலையிலே நடக்க வேண்டும். அப்படித்தானே?” என்று கேட்டார் சுரேஷ்.

“ஆமாம்” என்று சொல்லி விட்டுச் சிரித்தான் கந்தப்பன்.

“அதைப்பற்றிக் கவலையில்லை. அப்புலிங்கமும் நானும் காலில் வலு உள்ளவர்கள்தான். சில பேரைப் போல நாங்கள் ஆனை உண்ட விளாங்கனியில்லை” என்றார் டாக்டர்.

“அப்படி யென்றால்?” என்று கேட்டான் ரவி.

“யானை விளாம்பழம் சாப்பிட்டால்,தோடு அப்படியே இருக்கும். உள்ளே உள்ள சதைப் பற்றை மட்டும் யானை உட்கொண்டு விடும். பிறகு அந்தப் பழத்தை உடைத்துப் பார்த்தால் அது வெறும் போலாக,பொக்காக, இருக்கும். தோடு மட்டும் அப்படியே மூடியவாறு இருக்கும்— அப்படித்தானே டாக்டர்? தமிழ்ப் பாடல்களில் வருகிறது இதைப்பற்றி—” என்றான் அப்பு.

“அது சரி, ஆனால் ‘யானை உண்ட விளாங்கனி’ என்று சொல்வது நாம் பார்க்கும் யானையை அல்ல. யானை என்று ஒரு நோய் இருக்கிறது. அந்த நோய் விளா மரத்துக்கு வந்து விட்டால் அதிலுள்ள பழங்கள் எல்லாம் வெறும் பொக்காக இருக்கும். தோடு மூடியிருக்கும். உடைத்தால் உள்ளே ஒன்றும் இருக்காது!” என்றான் கந்தப்பன்.

"அப்படியா! எனக்கு இதுவரை தெரியாதே. ஏதோ யானைதான் விளாம்பழத்தைச் சாப்பிடுவதில் இப்படி ஒரு மந்திரம் செய்கிறது என்றல்லவா நினைத்தேன்! ஆனால் அதே சமயம் இது ஸையன்ஸோடு ஒத்து வராத காரிய மாக இருக்கிறதே என்று நான் நினைத்ததுண்டு."

இவ்வாறு சொல்லிக் கொண்டு டாக்டர் சுரேஷ் கூறினார்: "அப்படிப்பட்ட யானை உண்ட அதாவது யானை நோயுண்ட விளாம்பழம் இல்லை நாங்கள். உடம்புக் குள்ளே நல்ல திராணி எங்களுக்கு இருக்கிறது. ஆகை யால் நாங்கள் நடக்கத் தயார்தான்!'' என்றார்.

பிரயாணம் உறுதியாயிற்று. மறுநாட் காலையே டாக்டர் சுரேஷ், அப்புலிங்கம், கந்தப்பன் மூவரும் சொக்கி குடிக்குப் புறப்பட்டார்கள்.

திருச்சி ஜங்ஷனில் மூவரும் ரயில் ஏறுவதற்குச் சென்றபோது, அங்கே ப்ளாட்பாரத்தில் டெலிபோன் எக்ஸ்சேஞ் லிலி 'ஒட்' அவுஸும் அவளுடைய தகப்பனார் ஓட் அவுஸும் உஸ்தாத் மீரானும் நின்று கொண்டிருந் தார்கள்!

## 23. ஓட் அவுஸ் குடும்பம்

மாடியில் நாகரத்தினம் எக்கச்சக்கமாக அடை பட்டுக் கிடந்தவாறு கீழே என்ன நடக்கிறதென்று பார்த்துக் கொண்டிருந்த சமயம், உஸ்தாத் மீரானும், லிலி ஓட் அவுஸும், அவளுடைய தந்தையும், அவர்களோடு கூட ஒரு சிறுவனும் ஒருமித்து நின்ற காட்சியைக் கண்டு திகைத்தான் அல்லவா? இப்பொழுது அந்த ஓட் அவுஸ் களும் அச் சிறுவனும் உஸ்தாதும் ரெயில்வே ஸ்டேஷ னுக்கு எப்படி வந்து சேர்ந்தார்கள்?

இந்தச் சிக்கலுக்குக் காரணமாக அமைந்த சம்பவம் மெய்யாகவே ஒரு பெருஞ் சிக்கலாகத்தான் இருந்தது. எல்லாம் அந்த 'ஜிங்கிட ஜம்' செய்த வேலை!

திருச்சி டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் வேலை பார்த்து வந்த லிலி ஓட் அவுஸுக்கு இரண்டு சகோதரர்கள். ஒருவன் பெயர் ஜான். மற்றவன் பெயர் ஹென்ரி. ஜான் லிலிக்கு அண்ணன். ஹென்ரி லிலியின் தம்பி—சிறு பையன்.

மிஸ்டர் ஓட் அவுஸின் குடும்ப வாழ்க்கை ஒரு கனகாம்பரப் பூ மாதிரி. வெளிப் பார்வைக்கு அழகாக இருக்கும். ஆனல் அதில் வாசனை இல்லை. பாவம், மனைவியின் ஒத்தாசை அதிகமாகத் தேவைப் படுகிற ஐம்பதாவது வயதில் ஓட் அவுஸை நிர்க்கதியாய் விட்டு விட்டு அவள், இந்த உலகினின்றும் பிரிந்தாள்.

அதன்பின் ஓட் அவுஸின் வாழ்க்கையில் சோகம் அதிகரிக்க ஆரம்பித்தது. "அழுகிறவர்கள் பாக்கிய வான்கள்" என்று ஏசுநாதர் சொன்ன வார்த்தைப்படி பார்த்தால், ஓட் அவுஸ் மிக மிக பாக்கியவான்தான். ஏனென்றல் வாழ்க்கையில் மனைவியின் மரணத்திற்குப் பிறகு அவர் கண்ணீர் வடித்த சந்தர்ப்பங்கள் எத்தனை எத்தனையோ! ஆனல் ஆண்டவனுடைய திருக்குமாரரின் அருள் வாக்கிலே உள்ள "அழுகை" அந்த வகையான அழுகை அல்லவே! உள்ளம் உருகி உருகிக் கரைகிற புனித ஏக்கம் அல்லவா ஏசுநாதர் குறிப்பிட்டது! அந்தப் புனிதமான பரிசுத்த ஏக்கத்திற்கு இடமில்லாமல் ஓட் அவுஸின் ஏக்கம் முழுவதையும் தானே வாங்கிக் கொண்டான், அவருடைய புத்திர பாக்யம் ஜான். அவனுடைய நடத்தைகளை நினைத்து நினைத்துத்தான் கண்ணீர் வடித்தார் தந்தை ஓட் அவுஸ்.

ஜான் அப்படி என்ன அக்கிரமம் செய்தான்? நடத்தைப் பிசகு அவனிடம் இருந்ததா? கெட்டவர்களோடு சகவாசம் பண்ணிக் கொண்டு, அயோக்கியனுக நடந்தானு அவன்? இல்லை. பின் ஏன் ஓட் அவுஸ் அவனுக்காகக் கவலைப்பட்டார்?

ஜானுக்குச் சிறு வயதிலிருந்தே ரேகை சாஸ்திரத்தில் ஒரு பைத்தியம். பள்ளிக்கூடத்துப் பாடப் புத்தகங்களைப் படிக்க மாட்டான். "ஷீரோவின் ரேகை சாஸ்திரம்" "உலகப் பெரியார்களின் கைகள்", "ரேகைகளின் நுட்ப

விளக்கங்கள்'', ''உள்ளங் கையிலே உன்னுடைய விதி'' என்றெல்லாம் பலபல தலைப்பிலே நூற்றுக் கணக்கான ஆங்கிலப் புஸ்தகங்கள் ஜானின் அலமாரியிலே இருந்தன. ஒரு நாள் ஓட் அவுஸ் தம்முடைய சீற்றத்தில் அந்தப் புஸ்தகங்களை யெல்லாம் எடுத்து மூட்டை கட்டினார். அப்படியே வண்டி வாடகை கொடுத்து அந்த மூட்டையை ஏற்றிப் போய்ப் பழைய புஸ்தகக்காரனிடம் இலவசமாகக் கொடுத்து விட்டு வந்து விட்டார்! ஆனாலும் அதன் பிறகாவது ஜானின் பைத்தியம் நின்றதா? இல்லை! யாரோ ஒருவர் நாடி சோதிடம் பார்க்கிறார் என்று கேள்விப்பட்டு, அவரிடம் போய்த் தினமும் நோட்டு நோட்டாக எதிர் காலப் பலன்களை எழுதி வர ஆரம்பித்து விட்டான் ஜான்! அவனுடைய சொந்த எதிர்காலத்தில் ஆரம்பித்த நாடி சோதிடம், படிப்படியாக வளர்ந்து அவர்கள் வீட்டில் வளருகிற ''மடி'' நாய்க் குட்டியின் எதிர்காலம் வரை நோட்டு நோட்டாகக் குவிய ஆரம்பித்தது! உண்மையில், அவர்கள் வீட்டுப் பூனைக் குட்டிக்குக்கூட ஒரு நோட்டு தனியாக எழுதி வைத்திருந்தான் ஜான்! அந்தப் பூனைக் குட்டி நித்தம் எத்தனை எலிகளைத் தாக்கும் என்றுகூட அதில் ஒரு கணக்கு எழுதி வைத்திருந்தான் அவன்! இதையெல்லாம் கண்டு, ஓட் அவுஸுக்கு ஆவேசமே வந்து விட்டது! ஆனால் இந்தத் தடவை அவர் அந்த நோட்டு களைப் பழைய புத்தகக் கடைக்கு எடுத்துப் போகவில்லை. மகன் வெளியே போயிருந்த நேரம் பார்த்து அவற்றில் ஒன்றை எடுத்துப் படித்துப் பார்க்கலாம் என்று புரட்டினார். அந்தக் குறிப்புப் புஸ்தகம் ஜானின் வாழ்க்கை ஏடு!

ஓட் அவுஸுக்குச் சாதாரணத் தமிழ் எழுத்துக்களை வசனம் கூட்டிப் படிப்பதே சிரமம். திருச்சியில் நீண்ட நாள் இருந்ததன் பயனாக ஏதோ கொஞ்சம் தடவிப் பார்த்து வாசிப்பார்! அவ்வளவுதான். ஆனால் இப் பொழுது நோட்டிலிருந்த பலன்களோ ஒரே செய்யுளாக இருந்தன! ஆனாலும் ஓட் அவுஸ் முயற்சியைக் கைவிட வில்லை. முதலாவது பாடலை எடுத்துத் தைரியமாக எழுத்துக் கூட்டிப் படித்தார்.

ஏதோ விசுவாமித்திரரும் வசிஷ்டரும் அந்தக் கை ரேகைக்கு "உடமஸ்தஞ"ன மனிதனைப்பற்றித் தர்க்கம் பேசுவதாக எழுதியிருந்தது. அதை யெல்லாம் புரட்டிக் கொண்டு மேலே விஷயத்துக்கு வந்தார்.

> "இவன் நாமம் முழத்தில் பாதி;
> இவன் தந்தை என்பான் மரவீடு"

என்று எழுதி இருந்தது. இதைப் பார்த்ததும் அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. தலை சுற்றியது. சுற்றிய தலைக்குள்ளே போய்க் கோபமும் 'குபீர்' என்று ஏறியது. "ஜான் வரட்டும்! இன்று இரண்டில் ஒன்று பார்த்து விடுகிறேன்! முழமாம். பாதியாம், மர வீடாம். என்ன அக்கிரமம்!" என்று முடிவு கட்டினுர்.

அன்று மாலை ஜான் வந்ததும் ஓட் அவுஸுக்கு ஆவேசம் வந்தது. ஆவேசத்தில் பெரிய பெரிய இங்கிலீஷ் வார்த்தைகளைப் போட்டு மகனைத் திட்டினுர். எப்பொழுதுமே அவருக்குக் கோபம் அதிகமானுல், வார்த்தைகளும் நீளம் நீளமாக வரும். முழம் முழமாக வரும்! ஆனுல் ஜான் இவற்றைப் பொருட்படுத்துவதில்லை. பொருட்படுத்த முயன்ருலும் அவற்றின் பொருள் அவனுக்குப் புரிவதில்லை! பெரிய சௌகரியம் அது! அப்பாவைப் பேச விட்டு விட்டு, அவன் பேசாமல் கேட்டுக் கொண்டே இருப்பான்! இடை இடையே 'கூஸ்', 'பூல்' என்று எளிய சொற்கள்—எல்லாருக்கும் புரிகிற வார்த்தைகள்—வரும். அப்பொழுது மட்டும் நிமிர்ந்து உட்கார்ந்து கொள்வான். ஆனுல் இன்றைக்கோ அப்பாவின் கோபத்தில் ஆங்கிலச் சொற்களோடு பெரிய பெரிய லத்தீன் சொற்களும் வர ஆரம்பித்தன. முறைத்துப் பார்த்தான். சொன்னுன்:

"அப்பா! இந்த நோட்டுப் புத்தகத்தில் உங்களுடைய பெயர் கூட வந்திருக்கிறது தெரியுமா! எல்லாம் என் கை ரேகையைப் பார்த்து, ஒரு பழைய ஓலைச் சுவடியிலிருந்து எடுத்து எழுதிய பாட்டு!" என்று பெருமையோடு சொன்னுன்.

"ஓலேச் சுவடியா?" என்று சீறுகிற ஆங்கிலத்திலே கேட்டார் ஓட் அவுஸ்.

"ஆமாம்! என்னுடைய பெயர் 'முழத்தில் பாதி' என்று வந்திருக்கிறது. ஒரு முழத்தில் பாதி ஒரு ஜாண் அல்லவா! என்னுடைய பெயர் ஜான்தானே! அதனுல் தான் முழத்தில் பாதி என்று அந்த ஏட்டிலே சொல்லி யிருக்கிறது. உங்களுடைய பெயர் ஓட் அவுஸ் அல்லது உட் அவுஸ், அதை மர வீடு என்று சொல்லியிருக்கிறது, அப்பா!" என்று பையன் விளக்கம் கொடுத்தான்.

தகப்பனுருக்குக் கோபம் வந்தாலும் ஒரு பக்கம் ஆச்சரியமும் சேர்ந்து வந்தது!

"என்னடா, ரேகையைப் பார்த்துப் பெயரைக் கூடச் சொல்கிருனு?" என்று கேட்டார்.

"என் பெயரை மட்டுமா? மம்மியின் (அம்மாவின்) பெயர் கூடச் சொல்லி யிருக்கிருன் அப்பா. 'வயலெட்' என்பதை,

'நிறம் ஒரு பெயராம்
இவன் தாயொரு செந்நீலி!'

என்றே சொல்லி யிருக்கிறது. நம்முடைய லிலியை என்ன சொல்லி யிருக்கிறது தெரியுமா?

'இவன் தங்கையும் தானே அல்லி எனும்
தாமரைப் பூம் பெயர் கொண்டாள் மாதோ!'

என்று லிலி என்பதை விளக்கிச் சொல்லி யிருக்கிறது!"

மகன் இப்படிச் சொன்னதும் ஓட் அவுஸுக்கு ஒன்றுமே ஓடவில்லை.

"தம்பீ, இத்தனே தமிழ் நீ எங்கே படித்தாய்?" என்று வியப்போடு கேட்டார்.

"எல்லாம் நாடி சோதிடரிடந்தான்!" என்ருன் பையன். தகப்பனுர் கிறங்கி விட்டார். இதைக் கண்டதும் மகனுக்கு உற்சாகம் வந்து விட்டது.

"என்னுடைய எதிர்காலம் இந்த ஏட்டில் ரொம்பவும் உயர்வாகச் சொல்லியிருக்கிறது, அப்பா! நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்?" என்று தகப்பனுருக்குப் புத்திமதி சொல்ல ஆரம்பித்தான் ஜான்!

இதன் பிறகு ஓட் அவுஸ் தம்முடைய மகன் விஷயத்தில் அதிகமாகத் தலையிடுவதை நிறுத்தியதோடு, அடிக்கடி அழுவதையும் கோபப்படுவதையும் குறைத்துக் கொண்டார். ஆனல் பையனுடைய எதிர்காலம் என்னவோ, இறந்த காலத்தைப் போலவேதான் இருந்து வந்தது. "உயர்வை"க் காணேம்!

'நாடி சோதிடத்தில் பெயர் சரியாக இருக்கிறது, கழிந்தகாலம் சரியாக இருக்கிறது, ஆனல் எதிர்காலம் வரும்போதுதான் ஒருமாதிரி உதைக்கிறது!" என்று ஒரு புதிய சமாதானம் சொல்ல ஆரம்பித்தான் ஜான். அவனுடைய மனத்திலும் உண்மையிலேயே இப்பொழுது குழப்பம் ஏற்பட ஆரம்பித்தது.

உத்தியோகம் இல்லாமல் சும்மா இருக்க இருக்க, ஜானின் உள்ளம் எதிர்காலப் பலன்களை ஆராய்வதிலேயே சென்றது. இதன் பயனுக ஒரு பெரிய மெஸ்மெரிஸ நிபுணருடைய சிநேகமும், அவர் மூலம் பகேரானுடைய தொடர்பும் ஏற்பட்டன ஜானுக்கு. சிறு பையன்களை மெஸ்மெரிஸத்திஞல் மயக்கி விழச் செய்து, அவர்கள் மூலம் நமது எதிர்காலத்தைப் பற்றிய கேள்விகளுக்கு விடை தெரிந்து கொள்ளலாம் என்று முயற்சிக்க ஆரம் பித்தான் ஜான். பழக்கம் அதிகமாக அதிகமாகத் தனது தம்பி ஹென்ரி என்ற சிறுவனையே இந்த மெஸ்மெரிஸப் பையனுகத் தயாரிக்க முனைந்தான் ஜான். 'அப்பாவுக்குத் தெரியக்கூடாது!' என்ற மட்டும் ஆங்கில முறையிலே ஒரு 'ப்ராமிஸ்' வாங்கிக் கொண்டான், தம்பியிடம்!

லிலி ஓட் அவுஸின் அண்ணன் ஜானும், தம்பி ஹென்ரிச் சிறுவனும் பகேரானுடைய வீட்டிலேயே வாசம் செய்ய ஆரம்பித்தார்கள்.

இப்படி இரண்டு மாதம் கழிந்தது. இதற்குள் ஓட் அவுஸ் கல்கத்தாவுக்கு ஒரு நடை சென்று வந்து, தம்

முடைய எட்டிய உறவினரான ஆங்கிலோ இந்திய துரை ஒருவர் மூலம் கல்கத்தா ரெயில்வே நிலையத்தில் மகனுக்கு 'பயர்மன்' வேலை சம்பாதித்துக்கொண்டு வந்தார். ஜானும் வேறு வழியில்லாமல், பகேரானிடம் பிரியா விடை பெற்றுப் பிரிந்தான். ஆனால் தன்னுடைய ஸ்தானத்தில் தனது தம்பி ஹென்ரியை நியமித்து விட்டுத்தான் கல்கத்தா புறப்பட்டான் ஜான்!

இந்த நிலைமையிலேதான் பகேரான் தன்னுடைய மெஸ்மெரிஸ ஆராய்ச்சியை அந்தச் சிறுவன் ஹென்ரியை வைத்துக் கொண்டே இப்பொழுது தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தான்.

ஹென்ரிக்குத் தமிழ் அதிகமாக வராது. ஆங்கிலோ இந்தியர்கள் பேசுகிற வழக்கமான வீட்டுச் சொற்களைத் தவிர, வேறு அதிகமான தமிழ் வார்த்தைகள் அவனுக்குத் தெரியாது. உருது, ஹிந்துஸ்தானி யெல்லாம் அவனுக்குத் தொலைதூரம். இந்த நிலையில் தமிழ் மொழியில் உள்ள வல்லினங்களை 'கசடதபற' என்று ஒரு தரம் உரக்க உச்சரித்து விட்டாலே நடுநடுங்கி மயக்கம் போட்டு விழுந்து விடுவான் ஹென்ரி. இப்பொழுது "ஜங்கிடஜம்"மும் சேர்ந்து விட்டால் சொல்லவா வேண்டும்! சந்தேகமேயில்லை; ஒரே மெஸ்மெரிஸ மயந்தான்!

மெஸ்மெரிஸம் இப்படிக் கோலாகலமாக நடந்து கொண்டிருந்த சமயந்தான் நாகரத்தினம் பகேரானுடைய வீட்டுக்குள்ளே நுழைந்தது!

உஸ்தாத் மீரான் பகேரான் வீட்டுக்கு வரவேண்டிய காரணந்தான் ஆமினா—மஜீத் காதல்! ஆனால் இந்த ஓட் அவுஸ்களும் அங்கே வருவானேன்?

மூத்த மகன் ஜான் கல்கத்தாவுக்குப் போனதிலிருந்து பள்ளிக்கூட லீவு நாட்களில் ஹென்ரி 'பாலக் கரைக்குப் போகிறேன்' என்று வீட்டிலிருந்து கிளம்பினால், சாயந்திரம் இருட்டிய பிறகுதான் வீடு திரும்புவான்.

இப்படிப் பல நாட்கள் நடக்கவே தகப்பனருக்கு இது கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.

"பாலக்கரையில் யார் வீட்டுக்கு?" என்று கேட்க ஆரமபித்தார் தகப்பனர். ஒவ்வொரு லீவு நாளிலும் ஒவ்வொரு விதமாக விலாசம் கொடுத்தான் ஹென்றி. அதட்டிக் கேட்டால் கண் இமைகளைக் கூட மூடாமல் அப்படியே கல்லுளி மங்கனுக நின்றான்! ஓட் அவுஸுக்கு இது கவலை தந்தது.

ஒருநாள் தன் மகனைப் பார்த்து அவர் சொன்னர்: "உன் அண்ணன் கல்கத்தாவில் உதவிக்கு ஆளில் லாமல் தனியாக இருக்கிறன். நீ அங்கே போகிறயா?"

"ஊஹும்" என்று ஒரே இழுப்பாக இழுத்தான் ஹென்றி.

"ஏண்டா, அப்படி யென்ன என்னையும், உன் அக்காளையும் பார்க்காமல் நீ இருக்க முடியாதா?" என்று கேட்டார்.

"அதுக்கு இல்லை, ஆனலும் மாட்டேன்!" என்று சொன்ன பையன் அதற்கு மேல் ஒன்றுமே பேசவில்லை. கேட்டாலும் மௌனமாக இருந்தான்! இமையைக் கொட்டவில்லை!

ஜான் விஷயத்தில் முன்பெல்லாம் அழுதார் தந்தை! இப்பொழுது ஹென்றி விஷயத்தில் அவர் அழுவதில்லை. யோசிக்க ஆரம்பித்தார். தன்னிடமும் லிலியிடமும் இல்லாத அளவுக்கு அந்தப் பாலக்கரையிலே இந்தச் சிறுவனுக்கு என்ன அத்தனை பாசம் என்று யோசனை செய்ய ஆரம்பித்தார். இதன் பயனுக ஒரு நாள் மகன் வீட்டிலிருந்து கிளம்பியதும் அவனைப் பின் தொடர்ந்தார். பாலக்கரையில் எந்த வீட்டுக்குள்ளே போகிறன் என்று கண்டு பிடித்து விட்டு மௌனமாகத் திரும்பினர். திரும்பி வந்து அக்கம் பக்கத்தில் அந்த வீட்டுக்கு உடையவன் யார் என்று விசாரிக்க ஆரம்பித்தார்.

ஓட் அவுஸ் தீவிரமாகத் துப்பு விசாரித்ததின் பயனுக பகோரானைப் பற்றிய விவரங்கள் தெரிய வந்தன. அவன்

உஸ்தாத் மீரானின் பிரதம சிஷ்யன் என்றும், சிலம்ப விளையாட்டில் தீரன் என்றும் சொன்னார்கள். ஆனால் யாருக்கும் ஒரு விஷயம் சரியாகத் தெரியவில்லை. அதாவது பல நாட்களில் ஒரு சிறு பையனை வீட்டுக்குள்ளே அழைத்துப் போய் அறைக்குள்ளே ஏதோ செய்கிறான் பகோரான்; அப்பொழுது ஊதுவத்தி வாசனை வருகிறது. சில சாயங்களில் ஏதோ 'ஜங்கிட ஜிங்கிட' என்று உச்சாடணம் கேட்கிறது. மற்றப்படி விவரம் சரியாகத் தெரியவில்லை—என்று அண்டை அயல் வட்டாரங்களில் சொன்னார்கள். ஓட் அவுஸுக்குப் புத்தி பெரிதும் குழம்பியது.

ஒரு நாள் மகன் ஹென்ரியையும், லிலியையும் அழைத்துக் கொண்டு "பாலக்கரையில் ஒரு நண்பரைப் பார்த்து விட்டு வரலாம்!" என்று ஒரு சிறு சாமர்த்தியப் பொய்யைச் சொல்லிக் கொண்டு கிளம்பினார் ஓட் அவுஸ். மகள் லிலியிடம் மட்டும் சூசகமாக விஷயத்தைச் சொல்லியிருந்தார். பகோரானையே நேரிலே பார்த்து விடுவது என்று தீர்மானம்!

பாலக்கரை நெருங்க நெருங்கப் பையனுடைய நடை வேகமாக ஆரம்பித்தது. அக்பர் சதுக்கத்திலே திரும்பிய போது, தகப்பனார் தன்னோடு வருகிறார் என்பதைக்கூட மறந்து விட்டு, 'விறு விறு' என்று நடக்க ஆரம்பித்தான் ஹென்ரி. இதை ஓட் அவுஸ் நன்கு கவனித்தார். லிலியும் ஆச்சரியப்பட்டுப் போனாள்.

பகோரான் வீடு வந்ததும் பையன் சற்றும் கூச்சமின்றி உள்ளே நுழைந்தான். ஓட் அவுஸும் மகளும் உடன் சென்றார்கள். ஆனால் அங்கே உஸ்தாத் மீரான் நின்று கொண்டிருந்தார்!

ஓட் அவுஸுக்கு உஸ்தாத் மீரானை நன்றாகத் தெரியும். காஜா மலையில் முன்பு திருட்டுப் பயம் அதிகமாக இருந்த காலத்தில், இரவு நேரங்களில் 'ரோந்து' சுற்றுவதற்காக உஸ்தாதின் ஒத்தாசையைப் பெற்றதுண்டு ஓட் அவுஸ். அதிலிருந்து உஸ்தாத் இப்பொழுதும் என்றைக்காவது அந்தப் பக்கம் வந்தால்

கன்டோன்மென்டில் கோர்ட்டுக்குப் பக்கத்திலே இருந்த ஓட் அவுஸின் வீட்டுக்கு வரத் தவறுதில்லை. இப்பொழுது உஸ்தாதைக் கண்டதும் இருவரும் மிக்க மரியாதை யோடு சலாம் செய்தார்கள்.

"உஸ்தாத்! எத்தனை அருமையான சந்திப்பு இது!" என்றார் ஓட் அவுஸ்.

"எல்லாம் அல்லாஹுத்தாலாவின் செயல். எந்தச் சந்திப்பையும் ஆண்டவன் அர்த்தத்தோடுதான் கூட்டு விக்கிறான்!" என்றார் உஸ்தாத்.

"உஸ்தாத்! நீங்கள் சொன்னது நூற்றில் ஒரு வார்த்தை. நான் பகோரானிடம் நேரில் சில விஷயங்கள் பேசித் தெரிந்து போக வந்தேன். ஆனால் நீங்கள் இங்கே இருப்பதைப் பார்த்தால் உங்களிடந்தான் முதலில் அதைத் தெரியப்படுத்த வேண்டும் என்று கர்த்தரின் கட்டளை போலும்!" என்றார் ஓட் அவுஸ்.

"சரி; அப்படியானால் வாருங்கள் பேசிக் கொண்டே நம்முடைய வீட்டுக்குப் போவோம்! நான் இங்கே வந்து வெகு நேரம் ஆகிவிட்டது!" என்றார் உஸ்தாத்.

"சரி" என்று சொல்லித் திரும்பினார்கள் ஓட் அவுஸும் லிலியும்.

"உங்கள் பையன் வந்தானே எங்கே காணோம் அதற் குள்ளே!" என்று கேட்டார் உஸ்தாத்.

"பகோரானுடைய அறைக்குள்ளே ஓடியிருக்கிறான். பரவாயில்லை. நாம் போகலாம். பயல் பிறகு வருவான் தானாகவே!" என்றார் ஓட் அவுஸ்.

"என்ன இவ்வளவு அலட்சியமாகச் சொல்கிறீர்கள், பையனைப் பற்றி!" என்று கேட்டார் உஸ்தாத்.

"அலட்சியமில்லை உஸ்தாத். அது அவனுடைய வழக்கமாகப் போய்விட்டது. அதைச் சொல்லத்தான் வந்தேன் இங்கே!" என்று கவலையோடு சொன்னார் ஓட் அவுஸ்.

மூவரும் நடக்க ஆரம்பித்தார்கள். இப்படி அவர்கள் நடந்து சென்று, விஷயங்களை அலச ஆரம்பித்ததன் பயனுகத்தான் உஸ்தாதும் ஓட் அவுஸ¬களும் அன்று காலையில் திருச்சி ஜங்ஷனுக்கு வர நேர்ந்தது. ரயில் புறப் படும் நேரத்துக்கு முன்பே அவர்கள் கந்தப்பன், டாக்டர் சுரேஷ், அப்புலிங்கம்—மூவரையும் எதிர்பார்த்துப் பிளாட் பாரத்தில் காத்துக் கொண்டிருக்கவும் நேர்ந்தது!

"உஸ்தாத்! நாங்கள் வந்து சேரக் காலதாமதம் ஆகிவிட்டது. இப்பொழுது ரயில் புறப்படும் சமயம். ஓட் அவுஸ்களை அறிமுகம் செய்வதற்குத்தான் நேரம் இருக் கிறது. வேறு ஒன்றும் பேச நேரமில்லை. முக்கிய விஷயத்தை மட்டும் சொல்லி விடுங்கள்!" என்ருர் டாக்டர் சுரேஷ்.

உஸ்தாத் பேசினர்: "கந்தப்பா! உன்னை எனக்கு நேரிலே அதிகம் பழக்கமில்லை. என்ருலும் உன்னைப் பற்றி எனக்குப் பூரணமாகத் தெரியும். தயவு செய்து நீ திரும்பும்போது உங்களுடைய ஊரிலே இருந்து இந்தக் காகிதத்தில் எழுதியிருக்கிற சாமான்களை மட்டும் தயவு செய்து கொண்டு வா. பாக்கி விஷயம் எல்லாம் நீ வந்த பிறகு பேசிக் கொள்வோம்!" என்று சொல்லி ஒரு காகிதத் துண்டைக் கொடுத்தார் உஸ்தாத்.

ஓட் அவுஸையும் அவருடைய மகளையும், அப்பு லிங்கத்துக்கும் கந்தப்பனுக்கும் அறிமுகம் செய்வித்தார் டாக்டர் சுரேஷ். இதற்குள் ரயில் ஊதி விட்டது. உஸ்தாத் சலாம் செய்தார். மேனுட்டு முறையிலே "பைபை" என்ருர்கள் ஓட் அவுஸ்கள்.

ரயில் நகர்ந்தது.

"டாக்டர் ஸார், இந்த ஓட் அவுஸ்களை உங்களுக்கு நன்ருகத் தெரியும் போலிருக்கிறதே!" என்று கேட்டான் கந்தப்பன்.

"அது மட்டுமில்லை. இவர்கள் இங்கே இப்பொழுது வருவார்கள் என்றுமே டாக்டருக்குத் தெரியும் போல் இருக்கிறது!" என்ருன் அப்புலிங்கம்.

டாக்டர் சுரேஷ் சிரித்தார். "இவர்களை எனக்கு நன்ருகத் தெரியாது. ஆனல் இவர்கள் இப்பொழுது இங்கு வருவார்கள் என்பது மட்டும் நன்ருகத் தெரியும்! அத்தனை பெரிய ஆனைமுகத்து விநாயக மூர்த்திக்கு மூஞ்சூறு வாகனமாக இருக்கிறது போல, தம்பி கந்தப்பன் சிறு பிள்ளையாக இருந்தாலும் ஒரு மகத்தான காரியத்துக்கு ஆதாரமான கருவியாக அமைகிருன்!" என்ருர் டாக்டர் சுரேஷ்.

சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டு டாக்டர் மேலும் சொன்னர்:

"சொல்லப் போனல் பியானேவில் 'கீ நோட்' என்கிருர்களே அப்படிப்பட்ட ஆதார சுருதியே கந்தப்பன் தான். சந்திரிகாவின் வாழ்க்கைப் பாடல், ஜீவகானம் எப்படி எதிர்காலத்தில் ஒலிக்கப் போகிறது என்பதை எண்ணிப் பார்த்தால் எனக்குக் கந்தப்பனை வேறு விதமாக வர்ணிக்கத் தோன்றவில்லை."

இப்படி டாக்டர் சொன்னபோது அப்புலிங்கம் திகைப்பும் ஆவலும் மேலிட்டவனுக அவரையே பார்த்தான்.

## 24 இலஞ்சிச் சாமியார்

"இந்த உலகத்தில் அனுவசியம் என்று சொல்லக் கூடிய மனிதர்களோ நடப்புக்களோ எப்பொழுதுமே கிடையாது. உலக வாழ்க்கை என்ற தொடர்கதையில் எல்லா மனிதர்களுமே, எல்லா சம்பவங்களுமே முக்கியந் தான். ஆரம்பத்தில் நமக்கு அது தெரிவதில்லை. கொஞ்சம் தாமதித்துப் பார்த்தால் உரிய காலத்தில் தானுகத் தெரியும்!" என்று பேச ஆரம்பித்தார் டாக்டர் சுரேஷ்.

திருச்சியிலிருந்து புறப்பட்ட ரயில் மிக வேகமாக ஓடிக் கொண்டிருந்தது.

"மிஸ்டர் அப்புலிங்கம்! இந்த அகில உலகத்தையும் ஆராய்ந்து பாருங்கள். எந்த வஸ்துதான் அனுவசியம்? இறைவனுடைய படைப்பில் ஒரு சிறு புல்லுக்குங்கூட அவசியம் இருக்கிறது. இந்த உலகம் என்ற மாபெரும் நாடக அரங்கத்தில், மனிதவாழ்க்கை யென்ற நாடகத்தை ஏதோ ஒரு சக்தி நடத்திக்கொண்டு போகிறது. ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண் என்ற ஐந்து பூதங்களையும் பின்னணித் திரைகளாகத் தொங்க விட்டு, விதி என்ற சூத்திரக் கயிற்றினால் மனிதர்கள் என்ற கதாபாத்திரங்களைத் திரைக்குப் பின்னால் இருந்து இயக்குகிறது ஒரு கை. பின்னணித் திரையும் பாத்திரங்களும் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிக் கொண்டே யிருப்பதைப் பார்க்கிறோம். ரவீந்திரனுடைய வாழ்க்கை மட்டும் இதற்கு விதிவிலக்கா! இல்லையே!" என்றார் டாக்டர் சுரேஷ்.

அப்புலிங்கம் கேட்டான்: "சந்திரிகா ரவீந்திரன் இவர்களுடைய வாழ்க்கை கீதத்தில் இனிமேல் கந்தப்பன் ஆதார சுருதியாக விளங்குவான் என்று ஜோதிஷம் சொன்னீர்கள். அதே சமயம் ஓட் அவுஸ்கள் இந்த நேரத்தில் ஸ்டேஷனுக்கு வருவார்கள் என்று முன்னதாகவே உங்களுக்குத் தெரியும் என்றும் குறிப்பிட்டீர்கள். இப்பொழுது இப்படி ஒரு தத்துவத்தைப் போடுகிறீர்கள். என்ன டாக்டர், இதன் பொருள்?"

டாக்டர் சுரேஷ் சொன்னார்: "சபாஷ், அப்பு! நீங்கள் இந்தமாதிரி ஒரு கேள்வி கேட்க வேண்டுமே என்றுதான் இப்பொழுது பிரார்த்தனை செய்தேன். ஏனென்றால் ரவீந்திரனுடைய வாழ்க்கையில் உஸ்தாத் மீரானும், ஓட் அவுஸும், கந்தப்பனும் எதற்காகத் தோன்ற வேண்டும்? இவர்களுக்கும் ரவீந்திரனுக்கும் என்ன சம்பந்தம் ஏற்படப் போகிறது. இறைவன் ஏன் ரவீந்திரன் வாழ்க்கையில் இவர்களை யெல்லாம் கொண்டு வந்து விட்டிருக்கிறான், என்றெல்லாம் நீங்கள் எண்ணக் கூடும் அல்லவா? அதற்காகத்தான் இந்தத் தத்துவத்தைச் சொன்னேன்."

அப்பு சொன்னான்: "டாக்டர்! நீங்கள் சொல்கிற கருத்து உண்மையானது என்பதை ஒப்புக் கொள்ளு

கிறேன். ஒரு புல்லை அசைத்தால் இந்த உலகமே அசை கிறது, அதுதான் கடவுளுடைய படைப்பு என்று ஒரு ஆங்கிலக் கவிஞன் பாடினனும். அது சரிதான். ஆனல் இப்பொழுது ஓட் அவுஸ்களுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? அதைச் சொல்லுங்கள்!''

" இல்லை அப்புலிங்கம்! கொஞ்சம் இருந்து பார்த் தால் படிப்படியாகத் தெரியும். சம்பவங்கள் நடந்து போவதைப் பார்த்தால் இத்தனை மனிதர்களுமே ரவீந்திரனுடைய வாழ்க்கையோடு பின்னுகிருர்கள் என் றல்லவா அர்த்தம்!''

இப்படி அப்புலிங்கம் கேட்டுக் கொண்டிருந்தபோது, கந்தப்பன் தன்னுடைய கையில் உஸ்தாத் மீரான் கொண்டு வந்து கொடுத்த காகிதத் துண்டைப் பிரித்துப் பார்த்தான். அதில் எழுதி யிருந்தது :—

**ஆறடி உயரத்தில் இரண்டு அங்குலப் பருமன் உள்ள ஒரே தரமான கல் மூங்கில் நூறு.**

**வெப்பாலை மரத்தில் சீவி எடுத்த சிறு தடி, ஒரு முழ நீளத்தில் இருபத்தைந்து.**

**காட்டு மான் கொம்பு, நீளமானது, பன்னிரண்டு.**

**மிளாவின் கொம்பு ஐந்து.**

**புலித்தோல் மூன்று.**

**இவை தவிர டாக்டர் நேரிலும் சொல்லுவார்.**

கந்தப்பன் உஸ்தாதின் அந்தக் காகிதத் துண்டை அப்புலிங்கத்திடம் கொடுத்தான். அதைப் படித்து விட்டு அவன் கேட்டான்: " இதெல்லாம் எதற்குக் கேட்கிருர் உஸ்தாத்! சொக்கிகுடிக் காட்டிலே யிருந்து இத்தனை சாமான்களும் அவருக்கு வேண்டுமானல்...........''

" சிலம்பப் பள்ளிக்கூடம் தயாராகிறது என்று அர்த்தம்!'' என்று வாக்கியத்தை முடித்தார் சுரேஷ்.

இவ்வாறு சொல்லி விட்டு டாக்டர் சுரேஷ் தமது விளக்கத்தை ஆரம்பித்தார்.

"உஸ்தாத் மீரானுக்குத் தம்முடைய சிஷ்யன் பகேரானிடம் எல்லையில்லாத நம்பிக்கை யிருந்தது. எனவே, நாகரத்தினமும் குப்புசாமியும் அவருக்குத் துரோகம் செய்ததை எண்ணியதும், அவர் தம்முடைய எதிர்காலத் திட்டமான சிலம்பப் பள்ளிக்கூடத்தை பகேரானிடம்ஒப்படைக்க விரும்பினர். மகள் ஆமினுவுக்கும் மஜீதுக்கும் ஏற்பட்ட தொடர்பு அவருக்கு ஆரம்பத்தில் எத்தனையோ சீற்றத்தைக் கொடுத்த போதிலும், யோசித்துப் பார்த்ததில் 'நிக்கா'ஹுக்கு ஒப்புக் கொள்வதென்று தயாராகி விட்டார் உஸ்தாத். இந்த நிலையில் பகேரானிடம் சென்று தம்முடைய திட்டங்களைச் சொல்லி யிருக்கிறார். ஆனால் படுமோசச் சூழ்ச்சிக்காரன் நாகரத்தினம் அதேசமயம் பகேரான் வீட்டு மாடியில் நின்றிருக்கிறான். இது உஸ்தாதுக்குத் தெரியாது. பகேரானும் சொல்லவில்லை. போதாத குறைக்கு, ஓட் அவுஸ்கள் வேறு பகேரான் வீட்டுக்கு வந்து சேர்ந்திருக்கிறார்கள். பிறகு மூவருமாகப் பேசிக் கொண்டே வெளியே வந்த போது, ஓட் அவுஸ்கள் மூலம் உஸ்தாதுக்கு ஒரு பெரிய அதிர்ச்சியே ஏற்பட்டிருக்கிறது. உஸ்தாதுக்குத் தெரியாமல் பகேரான் தனியாக அறைக்குள்ளே ஊதுவத்தியை கொளுத்தி வைத்துக் கொண்டு மெஸ்மெரிஸம் செய்வது அவருக்குப் பிடிக்கவில்லை. பொதுவாக மந்திர தந்திரம் செப்பிடு வித்தைகளெல்லாம் உஸ்தாதுக்குக் கட்டோடு பிடிக்காது. நேருக்கு நேரான சண்டைதான் அவருடைய ராஜமார்க்கம்! எனவே ஓட் அவுஸின் பையனைத் தனியாகக் கூப்பிட்டுக் கொஞ்சம் பயமுறுத்தி விசாரித்தார் உஸ்தாத். விஷயங்கள் வெட்ட வெளிச்சம் ஆனதோடு நாகரத்தினம் பகேரானோடு அந்தரங்கமாக இருக்கும் காரியமும் உஸ்தாதுக்குத் தெரிய வந்தது. இந்த உலகில் வேறு எந்த விஷயத்தையும் உஸ்தாதினல் சகித்துக் கொள்ள முடியும். ஆனல் குருத் துரோகத்தை அவரால் தாங்க முடியாது. அளவற்ற சீற்றம் உண்டாயிற்று. ரவீந்திரனுக்கு உதவி செய்வதற்காக, ஒரு நல்ல காவலர்

படையே சேர்க்க வேண்டும் என்று நினைக்கிருர். பழைய மாணவர்களில் எந்தச் சீடனையும் நம்புவதற்கில்லை என்று கண்டு கொண்டதில் ஒரு விரக்தி அவருக்கு. இப்போது தானே தனியாக இன்னொரு சிலம்பக் கோஷ்டி தயாரிக்க எண்ணுகிருர் !'' என்ருர் டாக்டர் சுரேஷ்.

அப்பு கேட்டான்: "அப்படியானல் பகோரான், மஜீத் இவர்கள் என்ன ஆவது ?''

"பகோரானைக் கூப்பிட்டுக் கண்டிக்கப் போவதாக இருக்கிருர் உஸ்தாத். ஆனல் பகோரான் நாகரத்தினத்தின் போதனையினல் மஜீதையும் தன்னேடு சேர்த்து வைத்துக் கொண்டு, தனக்கு எதிராகக் கிளம்பக் கூடும் என்றும் உஸ்தாத் சந்தேகப்படுகிருர். அத்தோடு அப்படி இவர்கள் எல்லாரும் எதிராகப் போய் விட்டால் தன்னுடைய மகள் ஆமினுவின் கதி என்ன ஆவது? ரவீந்திரன் வீட்டில் நுழைந்து, அதாவது மிஸ்டர் அப்புலிங்கமாகிய உங்கள் வீட்டில் நுழைந்து, இவர்கள் ஏதாவது இடையூறு செய்தால்? பாவம், சந்திரிகாவின் கதி என்ன ஆவது ? நாகரத்தினமோ எப்பொழுது என்ன காரியம் செய்வான் என்று சொல்வதற்கில்லை. அந்த ராத்திருடன் குப்புசாமி வேறு அவர்கள் கட்சி ! நாம் எல்லாருமே எத்தனைதான் ஜாக்கிரதையாக இருந்த போதிலும், கள்ளன் பெரிதா, காப்பான் பெரிதா? சொல்லுங்கள் !''

இப்படிக் கேட்டு விட்டு டாக்டர் சுரேஷ் அப்புலிங்கத்தையே பார்த்தார். அவன் அப்படியே கண்களை அகலத் திறந்து கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"என்ன திகைத்துப் போய் உட்கார்ந்து விட்டீர்கள் அப்பு !'' என்ருர் டாக்டர்.

"இல்லை, ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்துக் கடைசியில் மனிதனையே கடிக்கிற நிலைமைக்கு வந்து விட்டது விஷயம் ! ரவீந்திரன், சந்திரிகா இவர்களுக்கு எதிராக இப்பொழுது ஒரு பெரிய பட்டாளம் அல்லவா முனைந்து வேலை செய்யப் பார்க்கிறது ! நல்ல வேளை

டாக்டர் ! ரவீந்திரன் நம்முடைய வீட்டுக்கு இடம் மாற்றினுன். இல்லை யென்ருல் அந்தத் தாயுமானவர் சந்தில் ஏகாந்தமாக எத்தனை பாடு படுவான் ! இதெல்லாம் தெரிந்துதான் நீங்கள் முன் கூட்டியே—'

" அதெல்லாம் இப்பொழுது ஒன்றும் சொல்லாதீர்கள். உங்கள் வீட்டு வளைவுக்குள் அவர்கள் வந்தாயிற்று. இனிமேல்—"

" இனிமேல் அவர்களுக்கு ஒரு தீங்கு ஏற்பட்டால் அது, எனக்குத்தான். அதிலென்ன சந்தேகம் !" என்ருன் அப்பு.

" தீங்கா ! அப்படி யென்ருல் ?" என்று கேட்டுக் கொண்டே நிமிர்ந்தான் கந்தப்பன்.

" ஸார் ! அத்தனை பெரிய நாகப் பாம்பே ஒன்றும் செய்ய முடியவில்லை. கேவலம் இந்த நாகரத்தினமா கேடு செய்து விடுவான் !" என்று கேட்டான் கந்தப்பன், அழுத்தமான குரலில்.

"அப்படிச் சொல்லாதே, கந்தப்பா! நாகப் பாம்புக்கும் மனிதனுக்கும் ஒரு முக்கியமான வித்தியாசம் இருக்கிறது. பாம்பின் விஷத்தைக் கொல்லுவதற்கு சர்ப்பகந்தி இருக்கிறது. ஆனுல் மனிதர்களுடைய உள்ளத்திலே இருக்கும் விஷத்திற்கு இந்த உலகில் என்ன மாற்று அல்லது மருந்து இருக்கிறது ?" என்ருர் டாக்டர்.

" உண்மையான வார்த்தை டாக்டர், உண்மையான வார்த்தை.

துணிவெளுக்க மண் உண்டு
எங்கள் முத்துமாரியம்மா
—எங்கள் முத்துமாரி

தோல்வெளுக்கச் சாம்பர் உண்டு
எங்கள் முத்துமாரியம்மா
—எங்கள் முத்துமாரி

மணிவெளுக்கச் சாணையுண்டு
எங்கள் முத்துமாரியம்மா
—எங்கள் முத்துமாரி

மனம்வெளுக்க வழியில்லையே
எங்கள் முத்துமாரியம்மா
—எங்கள் முத்துமாரி"

என்ருன் அப்புலிங்கம்.

"மனம் வெளுக்கத்தானே ?" என்று கேட்ட கந்தப்பனுக்குக் கண் சிவந்தது. இதுவரை பொறுமையும் அமைதியுமாக இருந்த அந்த மலைநாட்டு வாலிபனுக்கு இப்பொழுது காட்டு ஆவேசமே வந்து விட்டது போல் தோன்றியது.

"மனம் வெளுக்கத்தானே—அந்த நாகரத்தினத்தின் மனத்தைத்தானே ; அதை வெளு வெளு என்று வெளுத்து விடுவோம். இந்த நிமிஷத்திலிருந்து உஸ்தாதின் சிலம்பப் பள்ளிக்கூடத்துக்கு மலை நாட்டுப் பளிஞர் கூட்டம் அத்தனையுமே பட்டாளம் என்று வைத்துக் கொள்ளுங்கள் ! பார்த்து விடுவோம், ஒரு கை!"—இப்படிச் சொல்லும்போது கந்தப்பனுடைய உடம்பெல்லாம் கோபத்தினுல் நடுங்கியது.

"தம்பி ! சபாஷ் ! மலைநாட்டு வீரத்தை ஸர்வகலா சாலைப் படிப்பினுல் மழுக்கி விட முடியவில்லை. ரொம்ப சரி. ஆனுலும் இப்பொழுது அத்தனை வீரத்துக்கு அவசியம் இல்லை என்று தோன்றுகிறது. நிலைமை அவ்வளவு தூரம் மோசமாகி விடவில்லை. எதற்கும் முன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்றுதான் உஸ்தாத் இந்த லிஸ்ட்டை அனுப்பி யிருக்கிருர். நாலைந்து பளிஞரை மட்டும் அவருக்கு இப்பொழுது ஒத்தாசைக்குக் கொடுத்தால் போதும். பகேரானிடம் அவர் இன்னெரு முறை போய் எல்லா விஷயங்களையும் தீர்மானமாக இரண்டில் ஒன்று என்று பேசப் போகிருராம். அதன் பிறகு என்ன நடக்கிறது என்று பார்க்கலாம். இப்போதே அவசரப்பட

வேண்டாம். ஆனால் எதற்கும் தயாராக இருப்போம்!" என்றார் டாக்டர் சுரேஷ். இத்தனையும் சொல்லி விட்டுச் சிரித்துக் கொண்டே கூறினார்: "நாம் என்ன மலைக் காட்டிலா வாழ்கிறோம். அரசாங்கம் ஒன்று நம்மை யெல்லாம் காவல் செய்ய இருக்கிறது. போலீஸ்காரர்கள், போலீஸ் ஸ்டேஷன், கோர்ட் என்று எத்தனை இருக் கின்றன! அப்படி யெல்லாம் பெண்களை இரவுகளில் தூக்கிப் போய் விடலாம் என்று திருச்சி போன்ற ஊரிலே எண்ணி விட முடியுமா! பார்ப்போம்!" என்றார் டாக்டர்.

* * *

அன்றிரவு மலைநாட்டுப் பூஜைக்குப் பிறகு டாக்டர் சுரேஷும் அப்புலிங்கமும் மலையில் நடந்து வந்த களைப்பினால் சீக்கிரமாகவே படுத்துக் கொள்ளப் போய் விட்டார்கள்.

பாலும் பழமும் மட்டும் சாப்பிட்டு விட்டு, காட்டில் சொக்கி குடிக்கு மத்தியில் தலைவனுடைய குடிசைக்கு எதிரே ஒரு பரண் கட்டி அதில் டாக்டரும், அப்புலிங்கமும் படுத்துக் கொண்டார்கள். எதிரே தலைவனுடைய குடிசைக்கு முன்னால் தீ வளர்த்திருந்தது. மலைநாட்டு அம்மாள் ஒருத்தி அருகில் உட்கார்ந்து அந்தத் தீ அணையாதவாறு அவ்வப்பொழுது சுள்ளிகளை நெருப்பிலே போட்டுக் காவல் காத்துக் கொண்டிருந்தாள். டாக்டர் பரணில் படுத்தவாறு அதைக் கவனித்தார். ஏற்கனவே அவர் வந்த போதும் அந்தத் தீ எரிந்து கொண்டிருந்தது. ஏதோ மலைநாட்டுப் பூஜை சம்பிரதாயமாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டார். ஆனால் இப்பொழுது தொடர்ந்து அது எரிவதும் அந்த அம்மாள் அங்கேயே உட்கார்ந்திருப்பதும் ஆச்சரியமாக இருந்தன. வன விலங்குகள் வராதபடி அப்படிக் காவல் செய்கிறார்கள் என்று டாக்டர் யூகித்த போதிலும், அந்த அம்மாளே ஏன் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும் என்று அவருக்குப் புரியவில்லை. அவளைப் பார்த்தாலோ வேலைக் காரி மாதிரித் தெரியவில்லை,

காலையில் டாக்டர் எழுந்தபோது ஆச்சரியம் இன்னும் அதிகமாயிற்று. அந்தத் தீக்குழி இன்னும் அப்படியே இருந்தது. ஆனால் இரவில் இருந்த அம்மாளை இப்பொழுது காணோம். அந்த அம்மாள் இருந்த இடத்தில் இப்பொழுது இன்னொரு அம்மாள்—தோற்றத்தில் முந்திய பெண் மணியைப் போலவே இருந்தாள். ஆனால் அவளை விடச் சற்று வயது குறைந்தவள்—அவள், உட்கார்ந்து தீயைக் கிளறி விட்டுக் கொண்டிருந்தாள்.

டாக்டர் எழுந்ததைப் பார்த்ததும், குடிசைக்குள்ளே யிருந்த கந்தப்பன் அவரை நோக்கி விரைந்து வந்தான்.

"நீங்கள் சீக்கிரம் எழுந்திருக்க வேண்டுமே என்று நினைத்தேன் டாக்டர், எழுந்து விட்டீர்கள். ஏனென்றால் இங்கே நம்முடைய தலைவருக்கு வேண்டிய சாமியார்கள் சில பேர் வந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் இலஞ்சிச் சாமி. ரொம்ப நல்லமாதிரி. அவர் உங்களைப் பார்க்க வேண்டும் என்று சொன்னாராம். ஒருவேளை அவர்கள் எல்லாரும் வெய்யில் ஏறுவதற்கு முன்பு இந்த மலையை விட்டுக் கிளம்பி விடக் கூடும்!" என்றான் கந்தப்பன்.

"அந்தச் சாமியாருக்கு என்னைப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன உண்டு?" என்று கேட்டார் டாக்டர், கண்களைச் சிமிட்டிக் கொண்டே!

"இலஞ்சிச் சாமி சித்த வைத்தியத்தில் பெரிய நிபுணர் என்று சொல்லுகிறார்கள். இங்கே என் மாமனுக்கு அவரிடம் ரொம்ப மரியாதை. அவரிடம் நீங்கள் மூலிகைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யலாம். சரியான மனிதர்!" என்றான் கந்தப்பன்.

"அப்படியா!" என்று கேட்டுக் கொண்டே டாக்டர் பரணிலிருந்து ஒரு குதி குதித்தார். அப்புலிங்கமும் கீழே இறங்கினான்.

ஐந்து நிமிஷத்தில் சிற்றோடையிலே சென்று பல் துலக்கினார் டாக்டர் சுரேஷ். பையிலே கொண்டு வந்திருந்த ரொட்டித் துண்டுகளை அப்புலிங்கமும்

சுரேஷும் சாப்பிட்டார்கள். இதற்குள் குடிசையிலிருந்து ஆட்டுப் பால் வந்தது. அப்புலிங்கம் அதைப் பார்த்து ஒரு மாதிரி விழித்தான்.

"அது வேண்டாம் என்ருல் பசும்பால் கொண்டு வருகிறேனே!" என்று கந்தப்பன் கேட்பதற்குள், அப்புலிங்கமும் டாக்டரோடு ஆட்டுப் பால் கோஷ்டியில் சேர்ந்து கொண்டான்!

"மலையிலே நடப்பதற்கு இந்தப் பால் எத்தனை வலுத் தெரியுமா? புறப்படுங்கள் மிஸ்டர் அப்பு!" என்ருர் டாக்டர்.

சுரேஷ் தமது காமிராவைத் தோளிலே தொங்கப் போட்டுக் கொண்டு புறப்பட்டார். அப்புவும், கந்தப்பனும் உடன் புறப்பட்டார்கள். சாமியார்கள் தங்கியிருந்த ஆலமரத்தடிக்குச் செல்லும்போதே எதிரே வாழைப்பழச் சாமி வந்தது.

"என்ன சாமி!" என்ருன் கந்தப்பன்.

"கட்டைகள் எல்லாம் புறப்படுது, இலஞ்சிச் சாமி மட்டும் இங்கே கொஞ்ச நாள் இருந்துவரப் போகுதாம். அதனுலே ஆல மரத்தடியிலே இலஞ்சிக்கு ஒரு பிரிவு உபசார மகாநாடு நடக்கப் போகுது! உங்களைக் கூப்பிட்டுப் போகலாம்னு வந்தது இந்தக் கட்டை!" என்று சொல்லிற்று வாழைப் பழச் சாமி.

"கந்தப்பா! இலஞ்சிச் சாமியினுடைய யோசனை சரி யான யோசனை. நானும் சில விஷயங்கள் அவரிடம் பேச வேண்டும்!" என்று சொல்லிய டாக்டர் சுரேஷ் தம்முடைய திட்டம் சரியான முறையில் உருவாகிக் கொண்டிருப்பது போல எண்ணி மனத்துக்குள்ளே சந் தோஷப்பட்டார். அந்தச் சந்தோஷத்தின் அறிகுறி அவருடைய முகத்தில் புன்முறுவலாக மொட்டு விட்டது.

"என்ன டாக்டர்! ஒருவேளை நாங்கள் உறங்கிய பிறகு நீங்கள்தான் இலஞ்சிச் சாமியைப் பார்த்து இங்கே தங்கும்படி சொன்னீர்களோ? உங்களுடைய புன்சிரிப்பின் காரணம் புரியவில்லையே!" என்று கேட்டான் அப்புலிங்கம்.

இதற்குள் ஆலமரத்துக்கு அருகே வந்து விட்டார்கள். இலஞ்சிச் சாமி ஆல மரத்தின் திரணையிலே உட்கார்ந்து கொண்டு ஏதோ உபதேச முறையிலே ஒரு பாட்டைச் சொல்லிக் கொண்டிருந்தது. மற்றப் பண்டா ரங்களெல்லாம் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.

டாக்டர் சுரேஷ், அந்தக் காட்சியைத் தமது காமிராவில் படம் எடுத்துக் கொண்டார்.

ஆலமரத்தடியிலே இலஞ்சிச் சாமியின் கணீரென்ற பேச்சுக் குரல் கேட்டது :—

"ஏதோ நகரங்களில் எல்லாம் சேவை என்றும் சேவா சங்கங்கள் என்றும் சொல்கிறார்கள். அவற்றை' யெல்லாம் விட முக்கியம் இந்தமாதிரி மலை ஜாதியினரின் குடியிருப்புகளிலே நாம் செய்ய வேண்டிய சேவைதான். இங்கேயுள்ள மனிதர்களிடம் 'நகர நாகரிகம்' இல்லை; ஆனால் அன்பு இருக்கிறது. ஆடம்பரம் இல்லை; ஆனால் பண்பு இருக்கிறது. படிப்பு இல்லை; ' ஆனால் இங்கிதம் இருக் கிறது. அநேகவிஷயங்களில் பிற்போக்காக இருக்கிறார்கள் என்பது உண்மை. என்றாலும் இவர்களை முன்னேற்றுவது கஷ்டமில்லை. அது நம்முடைய கடமையுங் கூட. உண்மை யான கிராம சேவை என்பது இதுதான். அதோடு நம் முடைய தமிழ் நாட்டு வைத்திய முறைக்கான மூலிகைகள் இங்கேதான் இருக்கின்றன. உதாரணமாக காலரா என்று நாம் நகரங்களிலே சொல்கிற பயங்கர நோய்க்கு இங்கே அற்புதமான மருந்து இருக்கிறது. இது எத்தனை பேருக்குத் தெரியும் என்று கேட்கிறேன். நம்முடைய சித்தர் சொன்னார் :

"ஆனைக் கன்றின் ஒருபிடியும்
அரச விரோதி இளம்பிஞ்சும்
கானக் குதிரை இளந்தோலும்
கையில் கனிந்த கனிப்பருப்பும்
தாயைக் கொன்ற பூச்சாற்றில்
தானே கலக்கிக் குடுத்திடினே."

“ எப்படி ? ஆனையும் குதிரையும் கலக்கிக் குடிப்பதா ! சாமிகளே அப்படிக் குடித்தால் என்ன ஆகும் ?” என்று கேட்டுக் கொண்டே அங்கே வந்து நின்றார் டாக்டர் சுரேஷ் ! உடனே சாமியார்களின் கூட்டத்தில் கலகலப்பு உண்டாயிற்று.

“ வரணும் வரணும். இப்படி வரணும் !” என்று திரணையிலே வந்து உட்காரும்படி டாக்டர் சுரேஷை வர வேற்றார் இலஞ்சிச் சாமியார். உண்மையில் டாக்டர் சுரேஷ் அங்கு வந்தது அவர்கள் எல்லாருக்குமே ஒரே ஆனந்தமாக இருந்தது.

ஆனால் அதே சமயம் திருச்சி ஆண்டார் தெருவில் புதிதாகக் குடி வந்திருந்த வீட்டில் இருந்து கொண்டு, டாக்டர் சுரேஷ் ஊரில் இல்லாமல் போய் விட்டாரே என்று ஏங்கி ஏங்கிக் கண்ணீர் வடிக்கும்படியான நிலை ஒரு அபலைக்கு ஏற்பட்டது. அப்படிப்பட்ட துன்பச் சுழலுக் குள்ளே சிக்கித் தவித்தாள் சந்திரிகா !

## 25. அன்னை காவேரி

சின்னஞ் சிறு குழந்தைகள் வேடிக்கையாகப் பாடிய ஒரு நாடோடிப் பாடல்தான் அது. ஆனால் அந்தப் பாடல் இரண்டு பெண் உள்ளங்களிலே எத்தகைய பெரும் புயலை எழுப்பி விட்டது !

**தாராபுரம் சம்பந்தம்—அத்தானை**
**தாசில்தார் என்று சொன்னாங்க**
**தாராபுரம் போய்ப் பார்த்தேன்—அத்தான்**
**தமுக்கடிக்கக் கண்டேனே !**

**இலந்தக்குளம் சம்பந்தம்—அத்தானை**
**இஞ்சினீர்னு சொன்னாங்க**
**இலந்தக்குளம் போய்ப் பார்த்தேன்—அத்தான்**
**இட்டிலி விற்கக் கண்டேனே !**

என்று பெண் குழந்தைகள், முற்றத்திலேயிருந்து உரத்த குரலில் பாடிக்கொண்டிருந்தது கேட்டு, ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள் கல்யாணி.

அப்புலிங்கத்தின் பங்களா முகப்பிலே யிருந்த திண்ணையில், பெண் குழந்தைகளும் சிறுவர்களுமாக வழக்கம் போல் 'மரப்பாச்சிக் கல்யாணம்' நடத்திக் கொண்டிருந்தார்கள். பெண் குழந்தைகள் மாறி மாறிப் பாடிக் கொண்டிருந்தன :—

திருச்சினுப்பள்ளி சம்பந்தம்—அத்தானை
திவான் என்று சொன்னுங்க
திருச்சினுப்பள்ளி போய்ப் பார்த்தேன்—அத்தான்
தீவட்டி பிடிக்கக் கண்டேனே !

இந்த விதமாக இனிமையான குரலில், கவர்ச்சி மிகுந்த எளிய மெட்டில் ஒரு பெண் குழந்தை பாடிற்று. உடனே அடுத்த சிறுமி பாட்டைத் தொடர்ந்தாள் :

கழுகுமலைச் சம்பந்தம்—அத்தானை
கலெக்டர் என்று சொன்னுங்க
கழுகுமலை போய்ப் பார்த்தேன்—அத்தான்
கழுதை மேய்க்கக் கண்டேனே !

உடனே இன்னொரு சிறுமி பாட்டைக் கீழ்க்கண்டவாறு முடித்தாள் :—

வண்ணூர்பேட்டை சம்பந்தம்—அத்தானை
வக்கீல் என்றும் சொன்னுங்க
வண்ணூர்பேட்டை போய்ப் பார்த்தேன்—அத்தான்
வறட்டி தட்டக் கண்டேனே !

சிறு பிள்ளைகள் இந்த மாதிரிக் கல்யாணப் பாட்டுக்களைப் பாடிக் கொண்டே கும்மாளம் அடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்ததும், கல்யாணிக்கு ஏதேதோ பழைய நினைவுகள் மனத்தில் எழுந்தன.

சிறு குழந்தைகளுக்குப் பிறருடைய மன எண்ணங்களைப் பற்றி என்ன கவலே? இந்த உலகத்தையே மறந்து ஆண்டார் தெருப் பிள்ளைகள் தங்களுடைய வழக்கமான மரப்பாச்சி விளையாட்டை, அப்புலிங்கத்தின் பங்களாத் திண்ணையிலே ஆனந்தமாக நடத்திக் கொண்டிருந்தார்கள்!

ரவீந்திரன் அப்பொழுது எங்கோ வெளியே போயிருந்தான். கல்யாணியின் மனம் லால்குடி நோக்கிச் சென்றது.

பத்து ஆண்டுகளுக்கு முன்பு தனக்குக் கல்யாணப் பேச்சுப் பேசி நிச்சயித்ததும், கல்யாணத்தன்று ரவீந்திரனேடு மணப்பந்தலிலே உட்கார்ந்து நலங்குத் தேங்காய் உருட்டியதும் நினைவு வந்தன. எத்தனை இன்பமான அனுபவங்கள் அவை! இனி அவை இன்னெருமுறை வருமா?—இப்படி நினைத்ததும், என்ன பைத்தியக்கார நினைப்பு என்று எண்ணியவளாக ஒரு விநாடி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள் கல்யாணி. மறு விநாடி அவளுடைய உள்ளத்தில் சிரிப்பையெல்லாம் மீறிக் கொண்டு துக்கம் படர்ந்தது.

ஆமாம்; அந்த நலங்கின்போதும் தன்னுடைய தங்கை கமலமும் அவளுடைய சிநேகிதிகளும் இப்படித் தான் ஏதோ விளையாட்டாகப் பாடினர்கள்.

'திருச்சினுப்பள்ளி சம்பந்தம்—அத்தானை'

என்று இப்பொழுது குழந்தைகள் பாடியதும், உடனே அதுதான் நினைவுக்கு வந்தது கல்யாணிக்கு.

ரவீந்திரனைத் திவான் என்று யாரும் சொல்லவில்லை. ஆனல் பரம உத்தமமான மாப்பிள்ளை யென்றும், சங்கீதத்தில் மகாபுத்திசாலி யென்றும் சொன்னர்கள். புல்லாங்குழல் வாசிப்பில் முன்பெல்லாம் சரப சாஸ்திரிகள் என்ற பெயரைப்பற்றி மிக மிக சிலாக்கியமாகப் பேசுவதுண்டு. அப்படிப்பட்ட ஒரு பெரிய வித்வானைத் தன்னுடைய கணவன் புகழோடு பிரகாசிப்பான் என்றும், அவனுடைய மனைவியென்று சொல்லிக் கொள்வதில் தனக்கு எத்தனையோ பெருமை உண்டாகும் என்றும் எல்லாம், எண்ணினள் கல்யாணி. இப்பொழுதும் என்ன? ரவீந்

திரன் ஊருக்கெல்லாம் நல்லவனாகத்தான் இருக்கிறான். தனக்கு மட்டுந்தானே இப்படிக் கசப்பாகப் போய் விட்டான் அவன்!

கல்யாணி நினைத்தாள்: 'இன்றைக்கும் என்ன? இந்தச் சந்திரிகா ஒருத்தி மட்டும் குறுக்கே வந்து சேர்ந்திருக்காவிட்டால் இதற்குள் எத்தனையோ பெரிய வித்வானாகத்தான் அவர் விளங்கியிருக்க வேண்டும். இந்தச் சிங்காரி ஒருத்தி வந்தல்லவா அவருடைய வாழ்க்கையையே இப்படிச் சீர்குலைத்துவிட்டாள்!'

கல்யாணிக்குக் கண்ணீர் பெருகிற்று. சிஷ்யையென்றும், குருநாதன் என்றும் பேசிக் கொள்கிறார்கள். இந்த டாக்டர்கூட அப்படித்தான் இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிறார் போலிருக்கிறது. இந்தக் கூத்துக்கு என்ன செய்வது! யாராவது தன்னுடைய சிஷ்யப் பெண்ணை இப்படி வீட்டிலேயே கொண்டு வந்து வைத்து இந்தக் கோலம் செய்வார்களா? யாராவது இப்படி ஒரு சிங்காரிக்காகத் தன்னுடைய புல்லாங்குழல் வாத்தியத்தையே கொண்டு தயங்காமல் அடகு வைப்பார்களா?

இப்படி நினைத்ததும் கல்யாணிக்குத் துயரம் அடக்க முடியாமல் உள்ளத்தில் கொந்தளித்தது. 'புல்லாங்குழலையா அடகு கொடுத்திருக்கிறேன்! மாலையிட்ட கணவரையே அடகு கொடுத்தாயிற்றே!' என்று ஒரு நினைப்பு. அடுத்த நிமிஷம் கண்ணீர் பொலபொல என்று பொங்கி வழிந்தது.

இதே சமயம் மாடியிலே இருந்த சந்திரிகாவும் கண்ணீர் வடித்துக் கொண்டுதான் இருந்தாள். மாடியின் ஜன்னல் வழியாக அவளும் குழந்தைகளின் விளையாட்டைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள். அவளுக்கு இதுவரை திருமணம் என்ற அனுபவம் ஏற்பட்டிராவிட்டாலும், அவளும் ஒரு பெண்தானே? திருமணத்தைப் பற்றிய கற்பனைகள் அவளுடைய உள்ளத்திலும் பொங்கிப் பொங்கி அலை வீசின.

எங்கோ அனாதையாகப் பிச்சை வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்த தன்னை ஆட்கொண்டு, இத்தனை தூரம் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறார் ரவீந்திரன். அவருக்கு என்ன கைமாறு செய்வது? தன்னுடைய இதயத்தைத் தவிர வேறு என்ன கைம்மாறு உண்டு, அவருக்கு வழங்க? ஆனால் அவருடைய இதயமோ ஏற்கனவே கல்யாயணிக்கு விலையாகி விட்ட ஒரு விலை மதிக்க முடியாத பொக்கிஷம். அந்தப் பொக்கிஷத்தை இனித் தான் அபகரித்து வைத்துக் கொள்ள நினைப்பது எத்தனை பெரிய தவறு!

சந்திரிகா ஒரு குழந்தை இல்லை. தன்னைச் சுற்றி மனித மனங்கள் எத்தனை விதமாகச் சுழல்கின்றன என்பது அவளுக்குத் தெரியும். அன்றொரு நாள் தாயுமானவர் தெருவீட்டின் மாடியிலே, பௌர்ணமி இரவில் ரவீந்திரன் தன்னுடைய கரங்களைப் பற்றினாரே? பின்பொருநாள் அவளும் தன்னை மறந்த நிலையிலே அவருடைய கைகளைத் தொட்டு நின்றாளே? அதெல்லாம் ஒரு கனவு போல இப்பொழுது சந்திரிகாவின் நினைவுத் திரையிலே நிழல் போல ஓடின.

எத்தனை ஆச்சரியமான நிகழ்ச்சிகள் இவை! ஏதோ மனசாட்சி என்று ஒன்று தனக்கும் ரவீந்திரனுக்கும் இருப்பதால்தானே, இத்தனை நெருங்கிய தொடர்புக் குள்ளும் இதுவரை தங்கள் ஜீவகானத்தில் அபஸ்வரம் விழாமல் காத்துவர முடிந்திருக்கிறது! இனியும் அந்த மனசாட்சி தங்களைக் காப்பாற்றிக் கொண்டு வருமா?

சந்திரிகா நினைத்தாள்: கல்யாணி அம்மாள் உண்மையிலேயே நல்லவள். தன்னிடம் இப்பொழுது கொஞ்ச நாளாகத்தானே கடுகடுப்பாக இருக்கிறாள். தன்னுடைய சிறு வயதில் தான் ஒரு அனாதையாக அந்த வீட்டிலே அடியெடுத்து வைத்ததிலிருந்து, எத்தனை பாசத்தோடு தன்னைக் காப்பாற்றி வந்தாள். ஒரு தாயின் அன்போடு அல்லவா தன்னைப் பேணி வளர்த்தாள். இப்பொழுது தன்னுடைய பருவம்—சந்திரிகா பூரணமாக உணர்ந்தாள் அதை—தன்னுடைய பருவம், கல்யாணி தன்னைப் பற்றி

வித்தியாசமாக நினைக்கும்படி செய்கிறது. இதிலென்ன தவறு? போதாத குறைக்கு அந்தப் பாழாய்ப் போகிற நாகரத்தினம் வேறு வந்து விஷப்புகை போட்டுக் கொண்டிருக்கிறான்!

சந்திரிகாவுக்கு மனம் குமைந்தது. எத்தனை நாள் இந்தச் சூழ்நிலையில் தான் இப்படியே வாழ்க்கை நடத்துவது. இதையெல்லாம் நினைத்தால் இந்த நடனமும் வேண்டாம், 'நடனமணி' என்ற பேரும் வேண்டாம். கலையாவது களிமண்ணாவது. அந்தப் பழைய பிச்சைக்கார வாழ்க்கை எத்தனையோ மேல் என்று தோன்றுகிறது.

இப்படி எண்ணியதும் சந்திரிகாவுக்கு இதயம் விம்மியது. 'அந்தப் பிச்சைக்கார வாழ்க்கை. ஆமாம் எண்ணிப் பார்த்தால் அதுவே மேல்! சிரமம் எல்லாம் தனக்குத்தான். பிறர் யாருக்கும் தன்னால் எள்ளத்தனை இடையூறும் கிடையாது!'

மனக் கொதிப்பினால் இப்படி ஒரு எண்ணம் உண்டாகவே, இந்த நினைப்பின் பயங்கரத்திலே சந்திரிகாவுக்குக் கண்ணீர் பெருகி வடிந்தது.

'நானும் அவரும் எல்லைக் கோட்டுக்குள்ளே தான் இதுவரை இயங்கி வந்திருக்கிறோம். ஆனால் உலகம் இதைக் கண்டதா? உலகத்தார் இதை நம்புவார்களா? உலகத்தாரைப் பற்றிச் சொல்வானேன்! இதே வீட்டில் சதா வாழ்கிற இந்த வீட்டின் தலைவி, நாயகி, யஜமானி, கல்யாணியம்மாளே இதை நம்பமாட்டாளே!'

இப்படி எண்ணியதும் சந்திரிகாவுக்குக் கண்ணீரை அடக்க முடியவில்லை. விம்மி விம்மி அழுதாள் அவள்.

"சந்திரிகா!" என்று குரல் கேட்டது. அது ரவீந்திரன் தான். மாடி ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள், சந்திரிகா, கீழே! ரவீந்திரனும் ராமநாதனும் நின்று கொண்டிருந்தார்கள். கல்யாணி அம்மாள் கதவைத் திறந்த சப்தம் கேட்டது.

'இவருக்கும் நுட்பம் தெரிவதில்லை. வரும்போதே "சந்திரிகா" என்று ஏன் தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிறார்? கல்யாணி யம்மாளைக் கூப்பிட்டால் என்ன! ஐயோ! இவருடைய அளவற்ற, உண்மையான, பரிசுத்த மான இந்த அன்பு எங்கே கொண்டு விடுமோ தெரிய வில்லையே!' என்று நினைத்து மீண்டும் கண்ணீர் வடித் தாள் சந்திரிகா.

"சந்திரிகா! இங்கே வா! நம்ப ராமநாதன் வந்திருக் கிறார்!" என்று கூப்பிட்டான் ரவீந்திரன்.

"கல்யாணி! ராமநாதனுக்குக் காப்பி கொண்டு வா! அத்தோடு நம்ப புதுவீட்டு ஸ்பெஷல் முறுக்கும், தட்டை யும் கொண்டுவா!" என்று கல்யாணிக்குச் சொன்னான்.

ரவீந்திரனும் ராமநாதனும் நாற்காலியில் உட் கார்ந்து கொண்டார்கள். சந்திரிகா மாடியிலிருந்து கீழே வந்தாள்.

"ராமநாதனுக்குத் தில்லியில் உத்தியோகம் ஆகி யிருக்கிறது. புறப்படுகிறார்!" என்றான் ரவீந்திரன்.

"தில்லிக்கா? பெரிய ஊர்தான்!" என்றாள் சந்திரிகா.

"பெரிய ஊர். பெரிய ஸ்தாபனத்தில் பெரிய உத்தி யோகத்தில் போகிறார்!"

"அப்படி யென்றால்?" என்று கேட்டாள் கல்யாணி, கையில் ஒரு தட்டோடு வந்து கொண்டே.

"சந்திரிகா, நீ மாடியிலே அப்புலிங்கம் கொண்டு வந்து போட்டிருக்கிறாரே ஒரு மேஜை, அதற்குள் ஒரு சிறு டைரி இருக்கிறது. அதைக் கொஞ்சம் எடுத்துக் கொண்டு வா. இவருடைய தில்லி விலாசத்தைக் குறித்துக் கொள்ளுவோம்!" என்றான் ரவீந்திரன்.

சந்திரிகா மாடிப்படியிலே ஏறினாள். ஏறும்போதே ரவீந்திரனையும் ராமநாதனையும் பார்த்தாள். 'எத்தனை பிரியத்தோடு இந்த ராமநாதனுடன் பேசுகிறார்! ஆனால் அன்று இரவு ஐந்து நிமிஷத்துக்குள் எத்தனை சந்தேகப் பட்டுவிட்டார்! ஆனால் அன்று இரவு அந்த மாதிரி

ராமநாதன் உதவிக்கு வந்திரா விட்டால் என்ன விபரீதம் ஆகியிருக்கும்! அந்தத் திருடன் என்ன நோக்கத்தோ டெல்லாம் குதித்தானே!'—இந்த மாதிரி எண்ணிக் கொண்டே மாடிப்படிகளில் ஏறி நடந்தாள் சந்திரிகா!

"தில்லியில் என்ன உத்தியோகம்?" என்று கேட்டாள் கல்யாணி.

"செய்தி ஸ்தாபனத்தில் முக்கியமான உதவி ஆசிரியர்" என்றான் ரவி.

"இப்பொழுதும் அப்படித்தானே ஒரு உத்தியோகம் அவருக்கு?"

"இப்பொழுது ஒரு பிரபல தினப் பத்திரிகைக்குத் திருச்சியின் நிருபராக இருக்கிறார். இனிமேல் தினப் பத்திரிகைகளுக்கு எல்லாம் செய்திகள் அனுப்புகிற பெரிய அகில உலக செய்தி ஸ்தாபனத்தின் தில்லிக் காரியாலயத்தில் செய்திகளை வழங்குகிற இலாகாவில் உதவி ஆசிரியர்!"

இதற்குள் சந்திரிகா டைரியோடு மாடியிலிருந்து கீழே இறங்கினாள்.

"என்ன சந்திரிகா! ராமநாதன் இனிமேல் வட இந்தியராகவே ஆகிவிட்டார்! ஆகையினால் இனிமேல் அவரோடு ஹிந்தியில்தான் பேச வேண்டும்! க்யாஜி! பர்மாயியே!" என்றான் ரவி, அனுக்குத் தெரிந்த இரண்டொரு ஹிந்துஸ்தானிச் சொற்களைத் தமாஷாக கலந்து கொண்டே!

"ஹிந்தியா! நானே இனிமேல்தான் படித்தாக வேண்டும்!" என்று சொன்னான் ராமநாதன்.

"படிப்பதென்ன! தில்லியிலே இருந்தால் தானாக வருகிறது. வடக்கேயெல்லாம் ஒருவரோடு ஒருவர் இங்கிலீஷில் பேச மாட்டார்களாமே! ஹிந்தியிலேதானே பேசுவார்களாம்!" என்று ஒரே வியப்போடு கேட்டாள் சந்திரிகா.

" அப்படியில்லை. வடக்கத்தி மனிதர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கும்போது கூடியவரை ஹிந்தியிலேதான் பேசுவார்கள். இங்கிலீஷை அவ்வளவாகக் கையாளுவ தில்லை. ஆனால் தில்லியிலேதான் தமிழர்கள் ஏராளம் ஆயிற்றே. அவர்கள் இங்கிலீஷிலேதான் பேசுவார்கள் !"

" அப்படி யென்றால் ?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் கல்யாணி.

ராமநாதன் சொன்னான் : " இங்கிலீஷ ஞானத்தில் தென் இந்தியர்களுக்கு ஈடு இணையே கிடையாது, அம்மா ! நம்முடைய தமிழர்களுக்கு எந்த பாஷையும் இலகுவில் வந்து விடும் என்று உலகெங்கும் பெயராயிற்றே !"

" தமிழைத் தவிர !" என்று ஒரு போடு போட்டான் ரவி.

" அப்படியில்லை, மிஸ்டர் ரவி ! உத்தியோக நிமித்த மாக இங்கிலீஷே அதிகமாகப் பழகிப் போய் விட்டதால் அப்படி யிருக்கிறார்கள். மற்றப்படி தமிழில் அவர் களுக்கு எத்தனை மோகம் தெரியுமா ! அதிலும் தமிழ் நாட்டில் உள்ளவர்களைவிட தில்லி, கல்கத்தா, பம்பாய் முதலிய தொலை தூரங்களில் இருப்பவர்களுக்குத்,தான் தமிழில் ஆர்வம் அதிகம். தில்லியில் இப்பொழுது தமிழர்கள் எல்லாம் சேர்ந்து தங்களுக்குள் ஒருவருக் கொருவர் தமிழிலேயே பேச வேண்டும், தமிழ் நாட்டின் கலைகளை வளர்க்க வேண்டும் என்றெல்லாம் எண்ணிச் சங்கங்கள் நடத்துகிறார்கள் !"

" அப்படி யென்றால் நம்முடைய சங்கீதத்தில்கூட அவர்களுக்கு அபார அக்கறை இருக்குமே" என்று சந்திரிகா கேட்பதற்குள், ராமநாதன் சொன்னான் :

" சங்கீதமா ! நம்முடைய சங்கீதத்தை வளர்க்க என்றே தனித் தனியாகச் சங்கங்கள் அமைத்திருக் கிறார்கள். நாட்டியச் சங்கங்களே நாலைந்து இருக்கின்றன!" என்று கூறினான் ராமநாதன்.

"நாலைந்தா ! அப்படியானால்தானே ஒன்றுக்கொன்று சண்டை போட முடியும் ! தமிழர்கள் அல்லவா நாம் !" என்றான் ரவி !

"அப்படியில்லை ரவி. அங்கே அவர்களுக்குள்ள ஒற்றுமையும் அக்கறையும் இங்கே நமக்குள் கிடையாது. நான் வடக்கே போன பிறகு வாருங்களேன். உங்களுக்கும் சந்திரிகாவுக்கும் 'ரிஸெப்ஷன்' ஏற்பாடு செய்கிறேன். நேரிலே பார்த்தால்தான் அங்கே நம் மனிதர்கள் செய்கிற அற்புதமான சேவை உங்களுக்குத் தெரியும்!" என்றான் ராமநாதன்.

சாப்பிட்டுக் கொண்டே வட நாட்டுத் தமிழர்களைப் பற்றி மிக்க பெருமையோடு விமர்சனம் செய்தான் ராமநாதன்.

"நீங்கள் எப்பொழுது புறப்படவேண்டும்?" என்று கேட்டாள் கல்யாணி.

"நாளைக்கே புறப்படும்படி தந்தி வந்திருக்கிறது. டாக்டரும் அப்புவும் ஊரில் இல்லையே யென்றுதான் யோசிக்கிறேன்! தில்லிக்குத் தந்தி கொடுத்துக்கேட்டிருக்கிறேன். பதில் வந்ததும் தெரியும், எப்பொழுது புறப்பட வேண்டும் என்று!" என்றான் ராமநாதன்.

"இங்கிருந்து சென்னைக்குப் போய்த்தானே தில்லிக்கு ரயிலேற வேண்டும்!" என்று கேட்டாள் சந்திரிகா.

"ஆமாம், நாளைக்குத் திருச்சியிலே புறப்பட்டால் நாலாம் நாள் தில்லி போய்ச் சேருவேன்!" என்றான் ராமநாதன்.

"இடையில் ஒரு நாள் சென்னையில் தாமதமோ?" என்று கேட்டான் ரவி.

"ஆமாம், சென்னையில் என்னுடைய தங்கை இருக்கிறாள். அவளைப் பார்த்து விட்டுப் போக வேண்டும்!" என்று சொன்னான் ராமநாதன்.

"உங்களுக்கு எத்தனை சகோதரிகள்?" என்று கேட்டாள் கல்யாணி.

"ஒரு அக்காளும் ஒரு தங்கையும். அக்காள் பம்பாயில் இருக்கிறாள். மாதுங்காவில் அவள் ஒரு சேவா சங்கம் வைத்து நடத்துகிறாள். அவள் கணவருக்கு

ஆபீஸ் நேரம் போகப் பாக்கி நேரமெல்லாம் தேச சேவை தான். இப்பொழுதுகூட ஒழு நாட்டியப் பள்ளிக்கூடம் ஆரம்பித்திருக்கிருர்களாம், நம்முடைய தென்னுட்டுக் குழந்தைகளுக்கு என்று !''

இப்படிச் சொல்லிக் கொண்டே ராமநாதன் எழுந்தான்.

" ஒரு தரம் பம்பாய்க்குப் போய் வர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே, மிஸ்டர் ராமநாதனுடைய அக்காளின் விலாசத்தை வாங்கிக் கொள்ளலாமே !'' என்று சொன்னுள் சந்திரிகா, ரவீந்திரனைப் பார்த்து.

" சபாஷ்! நல்ல வேலை நினைப்பூட்டினுய். அந்த டைரியை எடுத்து வருகிருயா ?'' என்ருன் ரவி.

சந்திரிகா மாடிப் படிகளிலே மீண்டும் ஏறிச் சென்ருள்.

" எந்த வீட்டுக்குப் போனுலும் நமக்கு என்று ஒரு மாடியும் படியும் கிடைத்து விடுகிறது !'' என்று எண்ணினுள் சந்திரிகா, படிகளில் ஏறிக் கொண்டே. அந்த எண்ணத்தினுல் ஏற்பட்ட உணர்ச்சியில் விவரிக்க முடியாத துன்பமும் சொல்லொணுத ஏக்கமுமே கலந்திருந்தன.

* * *

ராமநாதனை அனுப்பி விட்டு ரவீந்திரன் அந்த நாற்காலியில் வந்து உட்கார்ந்தபோது, கல்யாணி அம்மாளுடைய முகத்தில் ஒரு கடுகடுப்பு படர்ந்திருந்ததைக் கவனித்தான்.

" என்ன கல்யாணி ! புது வீடு உனக்குத் திருப்தி தானே ?'' என்று கேட்டான் ரவி.

" ஓ ! திருப்திதான் " என்று சொன்ன கல்யாணி, பளீர் என்று இரண்டு வார்த்தைகளைச் சேர்த்தாள்.

" வீடெல்லாம் திருப்திதான் !'' என்ருள் கல்யாணி.

" அப்படி யென்ருல் ?'' என்று கேட்டான் ரவி.

" வீடு புதியதுதான், மற்றப்படி எல்லாம் பழைய—''

“ கல்யாணி! நீ பழையபடியும் உன்னுடைய சண்டையை ஆரம்பிக்கப் பார்க்கிருய்!” என்ருன் ரவி.

“ இதிலென்ன சண்டை? புதிய வீட்டுக்கு வந்த பிறகாவது நமக்கு நல்ல காலம் பிறக்காதா என்று ஆசைப்படுவது தப்பா?” என்று கேட்டாள் கல்யாணி. அவளுக்குக் கண்ணீர் வந்தது.

“ இப்பொழுது உனக்கு என்ன கெட்ட காலமாம், தெரியவில்லையே!” என்று உரத்த குரலில் கேட்டான் ரவி.

சந்திரிகா மாடிக்குப் போய் ஒரே மௌனமாக உட்கார்ந்து விட்டாள். கீழே குரல் வலுக்க வலுக்க சந்திரிகாவுக்கு இதயம் படபடத்தது.

“ சாமான்களைக்கூட அடகு கொடுக்கலாம். ஆனல் மனிதர்களை அடகு கொடுக்காமல் வாழக் கூடிய காலம் வராதா என்றுதான் பார்க்கிறேன். நீங்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் தலையை ஆட்டிக் கொண்டிருக்க நான் என்ன பெருமாள் மாடா! நான் உங்களை மாலையிட்ட மனைவி என்ற நினைப்பு உங்களுக்கு இருந்தால்தானே. நானும் ஒரு பெண்தான் என்ற உணர்ச்சி உங்களுக்கு இருந்தால்தானே!” இப்படிச் சொல்லிக் கொண்டே இதற்கு மேல் வார்த்தை தடைப்பட்டு, கல்யாணி அழுது கொண்டே கூறினள் :—

“ உங்களைச் சொல்லிக் குற்றம் இல்லை. பெண்ணுகப் பிறந்திருந்தால் அல்லவா என்னுடைய இந்த உணர்ச்சிகள் எல்லாம் உங்களுக்குப் புரியும்!”

“ நானும் ஒரு புடவையைக் கட்டிக் கொள்ளட்டுமா, உன்னுடைய முட்டாள் தனத்தைப் புரிந்து கொள்ள!” என்று கேட்டான் ரவி.

“ புடவையைக் கட்டிக் கொண்டிருக்கிறவர்களுக்கெல்லாம் என்னுடைய உணர்ச்சி புரிந்து விட்டதா?” என்று கேட்டாள் கல்யாணி. அந்தக் கேள்வி மாடிப் படிகளிலே ஏறிச் சென்று, சந்திரிகாவின் இதயத்திலே நாகாஸ்திரத்தைப் போன்று ‘விண்’ என்று தைத்தது.

“ என்ன சொன்னுய் கல்யாணி?” என்று எழுந்தான் ரவீந்திரன்.

கல்யாணிக்கும் உணர்ச்சி அதிகமாயிற்று. மரப் பாச்சிக் கல்யாணம் அத்தனை தூரம் அவளுடைய உள்ளத்தைக் கிளறி விட்டிருந்தது. இப்பொழுது கணவன் தன்னிடம் கொஞ்சமும் அநுதாபமே இல்லாமல் பேசுவது அவளுடையஉள்ளத்தின் வேகத்தைப் பன்மடங்காக்கிற்று.

"என்ன சொன்னேன்! நான் சொன்னதில் என்ன தவறு? புல்லாங்குழலை அடகு வைத்தாயிற்று நீங்கள். நானே அந்தப் புல்லாங்குழலுக்கு உரிய மனிதரையே அடகு கொடுத்திருக்கிறேன். எத்தனை பேர் இந்த வீட்டுக்கு வந்து காப்பியும் டிபனும் சாப்பிட்டுக் கொண்டே கதை அளக்கிறார்கள். ஒருவருக்காவது கண் இருக் கிறதா? ஒருவருக்காவது இதயம் இருக்கிறதா? ஒரு வருக்காவது......"

"நிறுத்து, கல்யாணி. ஏற்கனவே ஆஸ்பத்திரியில் இருந்து உன்னுடைய உடம்பு பலவீனமாக இருக்கிறது. இப்பொழுது என்னைக் கோபப்படுத்துகிறாய். விபரீதம் ஆகப் போகிறது. சொல்லி விட்டேன்!" என்றான் ரவி.

"விபரீதந்தானே! அது ஆகி எத்தனையோ நாள், எத்தனையோ வருஷம் ஆயிற்றே. அதைவிடப் பெரிய விபரீதம் என்ன ஆக வேண்டும் இனி......"

"கல்யாணி!" என்று ஒரு கதறல் கேட்டது! அப்படியே பதறியடித்துக் கொண்டு கீழே ஓடி வந்தாள் சந்திரிகா! இதற்குள் நாற்காலியை வேகமாகத் தூக்கிக் கொண்டு நின்றான் ரவி.

"ஐயோ! இதென்ன இது! சத்தியமாகச் சொல் கிறேன். அதைக் கீழே வையுங்கள்!" என்று கூப்பாடு போட்டாள் சந்திரிகா.

"போடுங்கள். அந்த நாற்காலியை என் தலைமேலே போடுங்கள். நான் ஒழிந்து போகிறேன். நான் ஒருத்தி எதற்காகக் குறுக்கே நிற்க வேண்டும்!" என்று கதறினாள் கல்யாணி.

"அம்மா! நீங்களும் சத்தம் போடாதீர்கள். பங்களாவில் பெரிய மிராசுதார் இருக்கிறார். அவர் காதில் விழப் போகிறது!" என்றாள் சந்திரிகா.

மிராசுதார் இருக்கிறார் என்ற வார்த்தை வந்ததும் தான் ரவீந்திரன் சுய நினைவுக்கு வந்தான். புதிய வீடு என்பதும், இது ஆண்டார் தெரு என்பதும், தாயுமானவர் சந்நிதி இல்லை என்பதும், ஒரு விநாடி அவனுடைய நினைவிலே சுழன்றன.

அடுத்த கணம் கல்யாணி அம்மாள் முந்தானையில் முகத்தைப் புதைத்துக் கொண்டே பூஜை அறைக்குள்ளே போய், குத்து விளக்குக்கு முன்னால் தரையிலே தடால் என்று விழுந்து விம்ம ஆரம்பித்து விட்டாள். ரவீந்திரன் நாற்காலியைத் 'தொப்' என்று கீழே வைத்து விட்டு, அருகிலே இருந்த சோபாவில் உட்கார்ந்தவாறு ஒரே மௌனத்தில் ஆழ்ந்தான்.

மாடிக்குச் சென்ற சந்திரிகா ஆற்றொணாத ஏக்கத்தில் மூழ்கினாள்.

'நான் ஒருத்தி இந்த வீட்டிலே நுழைந்து எத்தனை விபரீதங்களுக்குக் காரணம் ஆகிறேன். ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள், நிச்சயம் இந்த நாற்காலிதான் கல்யாணி அம்மாளுக்கு யமனாக நிற்கப்போகிறது. ஐயோ! அவருக்கு என்னிடம் உள்ள பாசம் கல்யாணி அம்மாளுக்கு எம பாசமாக அல்லவா போய்விடும் போலிருக்கிறது. சந்தேகம் இல்லை!' என்று நினைத்தாள் சந்திரிகா.

'தொட்டால் சுருங்கி என்று ஒரு செடி இருக்கிறதே, அப்படி அல்லவா இருக்கிறது இந்த வீட்டின் உறவு நிலை. லேசாகக் காற்று அடித்தால் போதும் போலிருக்கிறதே!' என்று எண்ணியதும் சந்திரிகாவுக்கு ஒன்றுமே ஓட வில்லை.

'நான் ஏன் இப்படி இந்தக் குடும்பத்துக்கு யமனாக வந்து வாய்க்க வேண்டும்? இந்த யமனுக்கு யமன் வந்து விட்டால், இந்தத் துன்பத்துக்கும் விடிவு உண்டாகி விடுமே! எனக்கு யமன் வருவதுதானா ஒரு பெரிய காரியம்! கஷ்டமான காரியம்? காவேரி பெருகி ஓடுகிறது. இந்தத் திருச்சியில் மரணம் ஒரு சிரமமான காரியமா! சிறு பிள்ளைகள் மண்டபத்திலேயிருந்து குதிக்கிறார்கள். நீந்தத் தெரியும், அதனால் கரைக்கு வருகிறார்கள். நாம் அந்த

மாதிரிக் குதித்து விட்டால்...? என்னைப்போன்ற தாயற்ற அனாதைகளுக்குத் தாயும் தந்தையும் அந்தக் காவேரி அன்னை தானே !'

இப்படி எண்ணினாள் சந்திரிகா. அவளுடைய உள்ளத்தில் இந்தத் துன்பங்களுக்கெல்லாம் வேறு விதமான முடிவு இருப்பதாகத் தோன்றவில்லை. அவளுடைய மனக் கண்ணில் காவேரி நதியும், அதனுடைய வெள்ளப் பெருக்குமேதான் பொங்கி நின்றன. அப்படியே அறைக்குள்ளே எழுந்து போனாள். மேஜைமேல் இருந்த காகிதக் கொத்திலிருந்து ஒருதாளைக் கிழித்தாள். அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு விறு விறு என்று வேகமாக எழுத ஆரம்பித்தாள் சந்திரிகா. அவளுடைய உள்ளத்தின் கொந்தளிப்பு அதிகமாக அதிகமாகக் கண்ணீர்த் துளிகள் அந்தக் கடிதத்திலே சொட்டுச் சொட்டாக உதிர்ந்தன.

சந்திரிகா இப்படித் துயரத்தோடு கடிதம் எழுதிக் கொண்டிருந்த போதுதான், மலைக்காட்டிலே ஆலமரத் தடியில் பிரிவு உபசார மகாநாடு கோலாகலமாக நடந்து கொண்டிருந்தது.

## 26. ரவீந்திரன் சிரித்தான் !

சிலம்பப் பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதற்கு வேண்டிய சாமான்களை மலைக்காட்டிலிருந்து கொண்டு வரும்படி, கந்தப்பனிடம் ஒரு பட்டியல் எழுதிக் கொடுத்தார் அல்லவா உஸ்தாத் மீரான்? அதன் பிறகு அவருடைய மனம் ஒரு நிலையில் இல்லை. பகேரானைப் பற்றியும், மஜீதைப் பற்றியும், நாகரத்தினத்தைப் பற்றியும், தமது எதிர்காலத் திட்டங்களில் தீவிரமாக ஈடுபட்டார்.

சந்திரிகாவுக்கும் ரவீந்திரனுக்கும் எந்த நிமிஷமும் ஆபத்து காத்திருக்கிறது என்று உஸ்தாத் நினைத்தார். தம்மைப்பற்றி அவர் கவலைப்படவில்லை. இந்தத் திருச்சி நகரம் முழுதுமே ஒன்று கூடி எதிர்த்து வந்தாலும்கூட அல்லாஹ்வின் திருநாமத்தைச் சொல்லி ஒரு கை

பார்த்து விடுவார் அவர். சந்தேகமே இல்லை. இப்பொழுது அவர் கவலைப்பட்டதெல்லாம் இரண்டே இரண்டு பெண்களைப் பற்றித்தான்.

நாகரத்தினத்தின் சூழ்ச்சியிலே சிக்கி, மஜீதும் பகேரானுடன் ஒன்று சேர்ந்து விட்டால் தம்முடைய மகளின் எதிர்காலம் என்ன ஆவது? அதிலும் ஓட் அவுஸின் மகன் சொன்ன விவரத்தைப் பார்த்தால் நாகரத்தினத்துக்கும் பகேரானுக்கும் ஏதோ இரகசியத் தொடர்பு இருப்பதாக அல்லவா தெரிகிறது! உஸ்தாதுக்கு அது விஷயமாகக் கவலை அதிகமாக ஏற்பட்டது. மெஸ்மெரிஸம் என்றும் ஜின் வேலை என்றும் தமது சிஷ்யர்கள் இறங்கி விட்டால், இது வரை உஸ்தாத் என்றும் சிலம்பக் கூடம் என்றும் தாம் பாடுபட்டதில் என்ன அர்த்தம்? இந்த மஜீதும் இப்படிப்பட்ட ஜால விநோதங்களிலே சிக்கிச் சீரழிந்து போய் விட்டால்? ஒருவேளை தம்மை மறுபடியும் ஏமாற்றி மகளை அப்புறப்படுத்திக் கொண்டு போய் விடுவதற்கான சூழ்ச்சிகளை அவன் செய்ய முனைந்தால்?

உஸ்தாத் இந்தமாதிரி எண்ணிக்கொண்டே மனத்துக்குள்ளே சிரித்தார்! மகள் மகள் என்று இப்படி ஒரு அசட்டுப் பாசம் எதற்காக இருக்க வேண்டும்? அல்லாஹ் அவளுடைய தலையில் என்னென்ன எழுதி வைத்திருக்கிறானே அப்படி யெல்லாம் நடக்கும். அதற்குத் தான் ஏன் இப்படிக் கவலைப்பட வேண்டும்? ஆனால் தான் நிச்சயம் கவலைப்பட வேண்டிய காரியம் வேறு ஒன்று உண்டு. அதுதான் சந்திரிகாவின் விஷயம்.

மிராசுதாரிடம் தான் வாக்குக் கொடுத்தாயிற்று. இந்த அகில உலகமே எதிர்த்து வந்தாலும் ரவீந்திரனையும் சந்திரிகாவையும் காவல் செய்ய வேண்டிய பொறுப்பு தன்னுடையதே.

ஆமாம்; பகேரானிடம் சென்று கண்டிப்பாக இரண்டில் ஒன்று தெரிந்து வந்து விட வேண்டும். அயோக்கியன் நாகரத்தினத்தை அறவே மறந்து விட்டுத் தன்னுடன் விசுவாசத்தோடு நிற்கிறானா அல்லது அந்த நாகரத்தினத்தோடு சேர்ந்து தனக்கு எதிராக நிற்கப்

போகிருன ?—இந்த விஷயத்தைத் தெளிவாகத் தெரிந்து வந்துவிட வேண்டும். அப்படி அவன் நாகரத்தினத் தோடு உறவு கொள்வதா யிருந்தால் இனி இந்த உஸ்தா துக்குச் சாகும் வரை பகோரான் ஜவாப் சொல்லியாக வேண்டும். அவனை விடப் போவதில்லை—இவ்வாறு தீர்மா னித்தார் உஸ்தாத். ஆனல் ஒன்று. குப்புசாமி ஒருவன் இவர்களோடு சேர்ந்திருக்கிருன். அவன் வெறும் முயல் குட்டி. பயந்தாங்கொள்ளி. அந்த முயல் குட்டி இவர்க ளோடு சேர்ந்திருப்பதால் எல்லாமே முயல்குட்டி வியவ காரமாகத்தான் முடியும்! தைரியமாக இவர்கள் ஒரு காரியம் செய்வது என்று இராது.

மஜீத் ஒருவன்தான் வீரன். மஜீத் விஷயத்திலும் இனிக் கண்டிப்புத்தான். ஒன்று ஆமினுவோடு ஒழுங்காக வாழ்க்கை ஒப்பந்தம் செய்துகொண்டு, நல்ல பிள்ளையாகத் தனது சிலம்பப் பள்ளிக்கூடத்தை நடத்த வேண்டியது. இல்லையென்ருல் உஸ்தாத் மீரானுக்கு ஜன்மப் பகைவனுக மாறியாக வேண்டியது. இரண்டில் ஒன்று. அதையும் இன்றே முடிவாகத் தெரிந்து வந்துவிட வேண்டும்.

உஸ்தாத் மீரானுக்கு மனசில் அமைதி இல்லை. இந்த விஷயங்களை யெல்லாம் ஒரு வகையாகத் தீர்த்துக் கட்டினல்தான் அவருக்கு நிம்மதி உண்டாகும். எனவே லுங்கியை வரிந்து கட்டிக் கொண்டு மஸ்லின் ஜிப்பாவை எடுத்து விரைவாக மேலே போட்டுக் கொண்டு, வீட்டி லிருந்து பகோரானைத் தேடிப் புறப்படத் தயாரானுர் உஸ்தாத் மீரான்.

அப்பொழுது காலை ஏழரை மணியிருக்கும். உஸ்தாத் மீரானுக்கு இம்மாதிரி எப்பொழுதாவது மனக் கிலேசம் ஏற்பட்டது என்ருல் உடனே மஸ்தான் சாகிபு பாடலைத் தான் தமக்குள்ளேயே பாடிக் கொள்ளுவார். குணங்குடி மஸ்தானே தனக்கு உறுதுணைவனுக வந்து இம்மாதிரி யான சந்தர்ப்பங்களில் எத்தனையோ முறை உதவி யிருப்பதாக அவருடைய அனுபவம். மனத்துக்குள்ளே பாடலை முணு முணுத்துக் கொண்டே வெளியே வந்தார்.

வேதம்நீ வேதவே தாந்தம்நீ எனையாளும்
வித்தகன் தானும் நீயே
மெய்ஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ
விரிகதிர்ச் சுடரும் நீயே
நாதன்நீ நவநாதர்சித்தன்நீ முத்தன் நீ
நாதாந்த மூர்த்தி நீயே
நற்குணம் குடிகொண்ட பாதுஷா வானகுரு
நாதன் முகயத் தீனே !

என்று பாடியவாறு வீட்டு வாசலைத் திறந்து கொண்டு வந்தவர், அப்படியே திடுக்கிட்டுப் போய் நின்றார்.

வாசலில் கார் வந்து நின்றது. அதிலிருந்து மூதூர் பெரிய மிராசுதார்—அப்புலிங்கத்தின் தகப்பனார் இறங்கி வந்தார். உஸ்தாதுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அந்த மாதிரி முன்னதாகச் சொல்லாமல் கொள்ளாமல் பெரிய மிராசுதார் வருவது வழக்கம் இல்லை.

"மீராசுதார்வாளா ?" என்று சலாம் செய்து கொண்டே ஆச்சரியத்தோடு வரவேற்றார் உஸ்தாத்.

மிராசுதார் படியில் ஏறும்போதே அவருக்குக் கையும் காலும் பதறின.

"உஸ்தாத் ! நடக்கக் கூடாதது நடந்து விட்டது ! என்ன செய்வேன் !" என்றார் மிராசுதார். அவருடைய குரல் நடுங்கியது. கண்களுங் கூடக் கலங்கின.

"என்ன மிராசுதார்வாள் ! இப்படி உங்களுடைய உடம்பெல்லாம் ஆடுகிறதே. உட்காருங்கள் திண்ணையில் !" என்றார் உஸ்தாத் மீரான்.

"உட்காருவதற்கெல்லாம் நேரமில்லை. சந்திரிகா காணமற் போய் விட்டாள் ! ரவீந்திரனுடைய வீட்டில் ஒரே அமளியாக இருக்கிறது !"

"என்ன ! சந்திரிகாவைக் காணவில்லையா !"

உஸ்தாதுக்கு அப்படியே உதடு துடித்தது.

“உஸ்தாத்! டாக்டர் சுரேஷ் சொன்னுரென்று அந்த விசித்திரமான குடும்பத்தை முற்றத்து வீட்டிலே குடி வைத்தோம். குடி வைக்கும்போதே எனக்கு முழு மனசு இல்லை. அரை மனசுதான். ஆனாலும் அப்பு ரொம்பப் பிடிவாதமாக இருந்தான். சரி என்று சொன்னேன். வந்த அன்றைக்கே அந்த வீட்டில் சண்டையும் சச்சரவுமாக இருந்தது. இப்பொழுது அந்தக் கூத்தாடியைக் காணோம் என்று—”

“அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் நீங்கள். ரவீந்திரனும் அவனுடைய குடும்பத்தார்களும் ரொம்ப நல்லவர்கள் என்றுதான் தெரிகிறது. அந்தப் பாழாய்ப் போகிற நாகரத்தினம் வந்து புகுந்துதான் இத்தனை ரகளை செய்து விட்டான்.”

“நாகரத்தினமா ?”

“ஆமாம்! தாயுமானவர் சந்தில் இருக்கும்போதே திருட்டு வேலை செய்தான். உங்கள் வீட்டு வளைவுக்குள் வந்த பிறகாவது பயப்படுவான் என்று நினைத்தேன். இப்பொழுது சந்திரிகாவையே அபகரித்துப் போயிருக்கிருன்கள். இது நீண்ட நாள் திட்டம் மிராசுதார்வாள்!”

“உஸ்தாத்! என்னுடைய வீட்டுக் காம்பவுண்டுக்குள் இப்படி ஒரு காரியம் நடந்து விட்டது என்ருல் இனி நான் எல்லாம் மனிதன் என்று வளைய வருவதில் அர்த்தம் என்ன இருக்கிறது ?—”

“மிராசுதார்வாள், உங்களைப் போலேதான் என்னுடைய நிலைமையும். உங்கள்பையன் அப்புலிங்கத்திடம் இனிமேல் அந்தக் குடும்பத்தைக் காவல் செய்ய வேண்டிய பொறுப்பு என்னுடையது என்று வாக்குக் கொடுத்தேன். இனிமேல் அந்த வாக்குக்கு விலை இல்லை. இந்த உஸ்தாத் இனிமேல் வெறும் பிணந்தான். இந்த உடம்பில் உயிர் இருந்திருந்தால், இந்த நாக்கிலே ரத்தம் ஓடினுல் அந்த வாக்கைக் காப்பாற்றி யிருப்பேனே—”

மிராசுதார் உஸ்தாத் மீரானின் முகத்தையே பார்த்தார். அதில் வேதனை ஓடிக் கொண்டிருந்தது.

"உஸ்தாத்! நீங்கள்கூட மனம் கலங்குவதை இன்று தான் பார்க்கிறேன். இனி என்ன செய்வது? உங்களைத் தவிர இதற்கு ஒரு வழி எனக்குத் தோன்றவில்லையே—"

மிராசுதார் திண்ணையில் உட்கார்ந்தார். உஸ்தாதும் எதிரே உட்கார்ந்து கொண்டு கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தார். பிறகு சொன்னார்:

"மிராசுதார்வாள்! நீங்கள் கவலைப்படாமல் வீட்டிற்குப் போங்கள். நான் நேரே பகோரான் வீட்டுக்குப் போகிறேன். சந்திரிகாவைப் பற்றித் துப்புத் தெரிகிற வரையில் இந்த உஸ்தாதுக்கு இருப்பு இல்லை. இது உறுதி!" என்று சொன்னார் மீரான். அவருடைய குரலில் கண்டிப்பு இருந்தது.

"உஸ்தாத்! காலையில் எழுந்து பார்த்ததும் சந்திரிகாவை மாடியிலே காணோம். அந்த விநாடியிலிருந்து ரவீந்திரனுடைய நிலை எப்படியோ பயங்கரமாக இருக்கிறது. இந்நேரம் கல்யாணி அம்மாளோடு என்ன ரகளை நடந்து கொண்டிருக்கிறதோ தெரியவில்லை! எங்கேயோ போகிற தொல்லையை வீட்டிலே இழுத்துப் போட்டுக் கொண்டு நான் அவஸ்தைப்படுகிறேன். அந்தப் பயலோ இந்தச் சமயம் பார்த்து மலை நாட்டுக்கு உல்லாச யாத்திரை போயிருக்கிறான். டாக்டருக்கு என்ன வந்தது? காமிராவும் கையுமாக அவர் மலைகளிலே சுற்றிக் கொண்டிருப்பார். வேதனைப் படுவது இந்த முருகானந்தம்! எல்லாம் நம்முடைய தலைவிதி, உஸ்தாத்! தலைவிதி!"

"மிராசுதார்வாள்! நீங்கள் சலித்துக் கொள்ளாதீர்கள். இத்தனை பெரிய ஊரில் இந்த உஸ்தாதுக்கு வேண்டிய குடும்பத்தில் இப்படி ஒரு காரியம் நடந்தது என்றால் நான் உயிரோடு இருந்துதான் என்ன பிரயோஜனம்? நீங்கள் கவலைப்படாதீர்கள். வீட்டுக்குப் போய் அந்த ரவீந்திரனை மட்டும் கொஞ்சம் பார்த்துக் கொள்ளுங்கள். நான் இன்னும் ஒரு மணி நேரத்தில் அங்கே வருகிறேன். இப்பொழுது நேரே பகோரானைப் பார்த்து அந்த நாகரத்தினம் யமனோடு வலுச் சண்டைக்கு வருகிறான் என்பதை மட்டும் தெரியப்படுத்தி விட்டு வருகிறேன்!"

இவ்வாறு சொல்லி மிராசுதாரை அவருடைய வீட்டுக்கு அனுப்பி விட்டு, ஒரே கவலையும் கோபமுமாக உஸ்தாத் மீரான் பாலக்கரையில் பகேரான் வீட்டை நோக்கி விரைவாக நடந்தார். அவருடைய நடையில் இருந்த வேகமும் மனத்தில் இருந்த வேகமும் ஒன்ருே டொன்று மோதிக் கொண்டிருந்தன. அந்த வேகத்தில் எதிரே நாகரத்தினம் மட்டும் அகப்பட்டிருந்தால் அப்படியே அவளைத் துகைத்து மெழுகித் துடைத் திருப்பார் போலத் தோன்றியது.

* * *

மூதூர் மிராசுதார் நேரே வீட்டுக்குப் போகவில்லை. உஸ்தாத் மீரானிடம் தகவல் சொல்லியிருந்தாலுங் கூட, எதற்கும் பின்னொரு சந்தர்ப்பத்தில் உதவியாக இருக்கும் என்று கருதி நேரே மலைக்கோட்டைப் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்ருர். அங்கே அவருக்குத் தெரிந்தவர் ஒருவர் ஸப்-இன்ஸ்பெக்டராக இருந்தார்.

மிராசுதார் போலீஸ் ஸ்ஷேனுக்குச் செல்வது அதிசய மான ஒரு சம்பவமானதால், இவருடைய வரவிலே ஆச்சரியப் பட்டுப் போனர் ஸப்-இன்ஸ்பெக்டர். அவரிடம் மிராசுதார் விவரங்களைச் சொன்னதும் ஸப்-இன்ஸ் பெக்டருக்கு ஆச்சரியம் இன்னும் அதிகரித்து. காணமற் போன சந்திரிகா சிறுமி இல்லை, வயது வந்த பெண்மணி தான் என்ற விவரம் தெரிந்ததும் ஸப்-இன்ஸ்பெக்ட ருடைய குழப்பம் மேலும் அதிகம் ஆயிற்று. ரவீந்திர னுக்கும் சந்திரிகாவுக்குமுள்ள தொடர்பை அவர் அலசிக் கேட்டபோதோ மிராசுதாருக்குக் குழப்பம் அதிகமாயிற்று. யார் யாரைச் சந்தேகப் படுகிருர்கள், அந்த வீட்டுக்கு வேறு யாரெல்லாம் அடிக்கடி வந்து போகிருர்கள், இரவு படுக்கப் போகுமுன் சந்திரிகாவைக் கடைசியாகப் பார்த்தது யார் என்றெல்லாம் ஸப்-இன்ஸ்பெக்டர் சர மாரியாகக் கேள்விகள் கேட்க ஆரம்பிக்கவே, மிராசு தாருக்குத் தலை சுற்றியது. எவ்வளவு தெரிந்தவராக இருந்துங்கூட ஸப்-இன்ஸ்பெக்டர் இந்தமாதிரி அவரைக்

கேள்வி கேட்க ஆரம்பிப்பார் என்று முருகானந்தம் எதிர் பார்க்கவில்லை.

"மிஸ்டர் ஸப்-இன்ஸ்பெக்டர் ஸார்! ஏதோ தெரியாமல் முன் யோசனை இல்லாமல் இங்கே வந்து விட்டேன். எனக்கு ஏற்கனவே புத்தி குழம்பியிருக்கிறது. தயவு செய்து ஒரு நாள் பொறுத்துக் கொள்ளுங்கள். நாளைக் காலையில் நம்முடைய புத்திரபாக்கியம் வந்து விடுவான். அவன் இழுத்து வைத்த வம்புதான் இந்தக் காரியம். தயவு செய்து நாளை அவனுடைய புத்தியைக் குழப்புங்கள். என்னை விட்டு விடுங்கள்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டார் முருகானந்தம். அவருக்குப் புத்தி சரியில்லை. வயது காலத்தில் இம்மாதிரிக் குழப்பங்களை யெல்லாம் தாங்குவதற்கு வேண்டிய பொறுமையும் மன உறுதியும் இல்லாமல், அவருடைய உள்ளம் கலங்கித் தத்தளித்தது.

மிராசுதார் முருகானந்தம் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்த ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் ஸப்-இன்ஸ் பெக்டருக்கு முன்னால் வந்து நின்றார் ஒரு போலீஸ் ஜவான். புகழ் பெற்ற பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இராணுவ முறைப்படி சித்தகத்திக் கம்பாக நின்று 'டக்' என்று ஒரு 'ஸல்யூட்' அடித்து விட்டு, மறுபடியும் அதே கம்பாக நின்றார் அவர்!

"என்ன நாற்பத்தேழு? என்ன விசேஷம்?" என்றார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

"நேற்று ராத்திரி ரோந்து போன ஜவான்கள் ஒரு தகவல் சொன்னாங்க யஜமான்!" என்று இழுத்தார் ஜவான்.

"என்ன சொன்னாங்க?" என்று கேட்டுக் கொண்டே ஸிகரெட்டைப் பற்ற வைத்தார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

"ராத்திரி மூணு மணிக்கு ஆண்டார் தெருவில் தன்னந் தனியாக ஒரு பெண்மணி நடந்து போனாளாம் யஜமான். எங்கே போகிறாள் என்று பின்னாலேயே பதுங்கிப் போய்ப் பார்த்தார்களாம் நம்முடைய ஆட்கள்.

அவள் காவேரிப் பக்கமாக நடந்துபோய் விட்டாளாம். துலாக் காவேரி ஸ்நானத்துக்காகச் சில பெண்கள் சீக்கிரமே போகிறார்கள் அல்லவா, அப்படி இவளும் போகிறாளாக்கும் என்று நினைத்து விட்டார்களாம் ஊரைந்து போனவர்கள். இப்பொழுது மிராசுதார் வந்து சொல்வதைப் பார்த்தால்......''

''இந்தா நாற்பத்தேழு! ராத்திரி ஊரைந்து போனவர்கள் அத்தனை பேரையும் இன்று சாயந்திரத்துக்குள் என்னை வந்து பார்க்கச் சொல்லு. ஏண்டா, துலாக் காவேரி ஸ்நானத்துக்குப் போகிறது என்றால் பதினெட்டு வயதுக் கன்னிதான் போவாளோ? சரி அப்படியேதான் போனாள் என்று வைத்துக் கொள்ளுவோம். துலாக் காவேரி இந்தச் சித்திரை மாசத்துக் கோடையிலேதான் ஓடுமோ? ஏண்டா, உங்களுக்கெல்லாம் வர வர மூளை காவேரியோடு போய் விட்டதா? அப்படித்தானா?''

''இல்லீங்க யஜமான்!''

''என்னடா, இல்லை. மூளைதானே?'' என்று ஒரு அதட்டு அதட்டி விட்டு ஸப்-இன்ஸ்பெக்டர் கண்டிப்போடு சொன்னார் :—

''சரி சரி; ஊரைந்து போனவர்கள் அத்தனை பேரையும் இன்று சாயந்திரத்துக்குள் இங்கே வந்து என்னைப் பார்க்கும்படி சொல்லு!''

மிராசுதாருடைய குழப்பம் போலீஸ் ஸ்டேஷனோடு நீங்குவதாக இல்லை. உண்மையில் இத்தனை குழப்பங்களையும் விட மிக மிக அதிர்ச்சி தரக்கூடிய ஒரு குழப்பம் வீட்டிலே அவருடைய வரவுக்காகக் காத்திருந்தது!

காரிலிருந்து கீழே இறங்கித் தமது பங்களாவுக்குள் முருகானந்தம் அடியெடுத்து வைக்கும் போதே பதறியடித்துக் கொண்டு ஓடி வந்தான் பங்களாக் காவல்காரன்.

''ரவீந்திரனுக்கு, ரவீந்திரனுக்கு, அவருக்கு—''

இதற்கு மேல் வேலைக்காரனுக்கு யஜமானிடம் சொல்ல வார்த்தைகள் வெளி வரவில்லை.

"என்னடா விஷயம்? ரவீந்திரனுக்கு என்ன?" என்று கேட்டுக் கொண்டே படிகளில் ஏறினார் முருகானந்தம். என்ன ஆச்சரியம்! முற்றத்து வீட்டிலிருந்து கூக்குரல் கேட்டது. ரவீந்திரனுடைய குரல் தான் அது.

"கொண்டா அவளை! அடே நாகரத்தினம்! கொண்டாடா அவளை! கல்யாணி! நீயும் உடந்தையா! எங்கே அவளை? சொல்லு! சொல்லி விடு!"

இப்படி ஒரே கூக்குரலாக இருந்தது. அந்தக் கூக்குரலுக்கு மத்தியில் கல்யாணி அம்மாளின் அழு குரலும் கேட்டது.

கையும் காலும் பதறியவராக முருகானந்தம் நேரே முற்றத்து வீட்டுக்குள் நுழைந்தார்.

ரவீந்திரனைக் கையும் காலும் கயிற்றினால் கட்டிப் போட்டிருந்தார்கள். பக்கத்தில் நாலைந்து பேர் இருந்து அவன் எழுந்து ஓடிவிடாதவாறு பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஏதேதோ கூப்பாடு போட்டுக் கொண்டு தன்னைப் பிடித்திருந்தவர்களை யெல்லாம் திமிறி, ஓடுவதற்கு முயன்றான் ரவீந்திரன்.

மிராசுதார் உள்ளே நுழைந்தார். இவரைக் கண்டதும் "பெரியப்பா!" என்று ஒரேயடியாகக் கதறிக் கொண்டே கல்யாணி அம்மாள் ஓடோடி வந்து அவர் காலிலே விழுந்தாள்.

"பெரியப்பா! நீங்கள்தான் எனக்கு அப்பா! எனக்கு வேறு அப்பா இல்லை. எனக்கு அண்ணன் இல்லை. தம்பி இல்லை. எல்லாரும் லால்குடியிலே செத்துப் பிணமாகப் போய்விட்டார்கள். இனிமேல் நீங்கள்தான் எனக்கு எல்லாம். ஐயோ! நான் என்ன செய்யப் போகிறேன். இனிமேல் நான் என்ன செய்வேன்? அவரைப் பாருங்களேன்! அப்பா! அப்பா!" என்று மிராசுதாரின் கால்களிலே விழுந்து கதறினாள் கல்யாணி. உலகில் உள்ள மனித இதயங்களின் சோகம் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஓர் அபலையின் குரலிலே கதறுவதுபோல் இருந்தது அது. மிராசுதாருக்குக் கண்ணீர் பொங்கியது.

"எழுந்திரு அம்மா கல்யாணி! என்ன செய்யலாம். ஏதோ கஷ்ட காலம்! கவலைப்படாதே அம்மா!" என்று சொல்லிக் கொண்டே ரவீந்திரனுக்கு அருகிலே வந்து அவனைக் கூர்ந்து பார்த்தார். அவன் இவரை அடையாளம் தெரிந்து கொண்டதாகவே காணவில்லை. அவனுடைய விழிகள் அங்குமிங்கும் 'திருதிரு' என்று ஓடி விழித்தன. நினைவு என்ற ஒளி அந்த விழிகளிலே அணைந்து போய் இருந்தது. புத்திசாலித்தனமும், மேதா விலாசமும் சுடர்விட்ட அந்தக் கண்களில் இப்பொழுது ஒரு சூனியம் படர்ந்திருந்தது. ஜீவகளை மின்னிக் கொண்டிருந்த அந்த முகம் இருண்டு போய் வெறிச்சோடியிருந்தது. மிராசுதாருக்கு அந்த முகத்தையே பார்க்க முடியவில்லை.

"கொண்டா அவளை! எங்கே அந்த நாற்காலி. எடு அதை! தூக்கிப் போடு. நான் சாகிறேன் முதலில். அதன் பிறகுதான் மற்றப்பேர் சாகவேண்டும். ஆமாம், நான்தான் முதலில் சாகவேண்டும்—" இப்படிச் சொல்லிக் கொண்டு பயங்கரமாக ஒரு சிரிப்புச் சிரித்தான் ரவீந்திரன். அந்தச் சிரிப்பிலே மூளையின் துண்டுகளே சிதறி விழுவதுபோல் இருந்தது. எண்ணங்களும், கற்பனைகளும் ஏதோ ஒரு நுட்பமான கயிற்றினுல் கட்டப்பட்டு மனம் என்ற மையத்திலே சுழல்கின்றன அல்லவா, அந்தக் கயிற்றை அறுத்துக்கொண்டு சிதறியது ரவீந்திரனுடைய சிரிப்பு. அந்தக் கோரமான பயங்கரச் சிரிப்பின் சிதறலில் கல்யாணி அம்மாளுடைய இதயம் அப்படியே சுக்கு நூருகச் சிதறி விழுந்து ரத்தக் கண்ணீர் கொட்டியது.

இந்த அலங்கோலக் காட்சிகளுக்கெல்லாம் களமாக அமைந்த அந்த முற்றத்து வீடு ரவீந்திரனுடைய பயங்கரச் சிரிப்பையும், கல்யாணி அம்மாளின் துன்பமயமான அழு குரலையும் இதயத்துக்குள்ளே வைத்துப் பொருமுவது போல விம்மி விம்மி நான்கு சுவருக்குள்ளும் எதிரொலித்துக் குமைந்தது.

# 27. சித்தர் ஆசிரமம்

பொதிகை மலைக் காட்டிலே பளிஞர் குடியிருப்பில், இலஞ்சிச் சாமியாருக்கு நடந்த பிரிவு உபசாரக் கூட்டம், டாக்டர் சுரேஷின் பிரவேசத்தினுல் கலகலப்பு அடைந்தது. இலஞ்சிச் சாமியாருக்கு டாக்டர் சுரேஷ் காட்டிய மரியாதை மற்றச் சாமியார்களுக்கு மகிழ்ச்சி யையும் வியப்பையும் அளித்தன. மகிழ்ச்சி எதனுல் என்ருல், தங்களைப் போன்ற ஒருவருக்கு இத்தனை மதிப்பு கால்-குழாய் மாட்டிய ஒருவர் கொடுக்கிருரே என்பதனுல்! வியப்பு எதனுல் என்ருல், இத்தனை மதிப்புக்கு வேண்டிய விசேஷம் இலஞ்சிச் சாமியாரிடம் உண்மையிலேயே இருந்ததா என்பது. இந்த வியப்பு அதிகமாவதற்குள் டாக்டர் சுரேஷ் பேச ஆரம்பித்தார்.

" என்ன சாமிகளே! உங்களோடு ஒருவராக நடமாடும் இந்தச் சாமியாரை நான் இத்தனை தூரம் பிரியத்தோடு நடத்துவது உங்களுக்கு ஆச்சரியமாகப் பட்டால் நான் ஆச்சரியப் படுவதற்கில்லை. நீங்கள் ஆச்சரியப்படாமல் இருந்தால்தான் நான் ஆச்சரியப் படவேண்டும். ஏனென்ருல் பொதுவாக என்னைப் போன்ற ஆங்கிலம் படித்த மக்களிடையே நம்முடைய சித்த வைத்தியத்தைப் பற்றிப் பல தவருன கருத்துக்கள் நிலவுகின்றன. இதற்குப் பல காரணங்கள் உண்டு.

" முக்கியமாக, இந்தச் சித்த வைத்திய முறைகள் எல்லாம் ஒரே சங்கேதப் பதங்களாக, இரகசிய பாஷையாக எழுதப்பட்டிருக்கின்றன. 'அத்திப் பிஞ்சு' என்று சொல்வ தற்குப் பதில் 'ஆனைக் கன்று' என்றும், 'முசு முசுக்கை' என்று சொல்வதற்குப் பதில் 'இரு குரங்கின் கை' என்றும் பாட்டாக எழுதப்பட்டிருக்கிறது, இந்தச் சித்த வைத்திய முறையில். இதனுல் இந்தப் பாடல்களைப் புரிந்து கொள்வது கஷ்டமாக இருக்கிறது. அது மட்டு மில்லை. தவருகப் புரிந்து கொண்டு விபரீதமான மருந்து களைச் செய்து 'ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்' என்று வெளிவருபவர்களும் பலர். ஆகவே

இத்தனை குழப்பங்கள் நிரம்பிய வைத்தியத்தைப் பற்றிச் சாதாரணமாகத் தப்பபிப்பிராயம் பரவுவது இயல்பு. ஆனால் அதிர்ஷ்டவசமாக நான் சென்னை மருத்துவக் கலாசாலையில் படிக்கும்போது எங்கள் ஆசிரியர்களில் ஒருவர் சித்த வைத்தியமும் நன்றாகப் படித்தவராக இருந்தார். அவருடைய தொடர்பினால் இரண்டொரு நுட்பங்களைத் தெரிந்து கொள்ளும் பாக்கியம் எனக்கு ஏற்பட்டது. ஆகையினால்தான் இன்று இந்த இலஞ்சிச் சாமியாரை நான் மிகவும் மதிக்கிறேன்...''

இப்படி ஒரு நீண்ட சொற்பொழிவே நிகழ்த்தினார் சுரேஷ்.

அந்தச் சொற்பொழிவில் எல்லாரையும் கவர்ந்த விஷயம், இலஞ்சிச் சாமியார் மலைக்காட்டில் அந்தக் குடியிருப்பிலேயே நிரந்தரமாகத் தங்கி விட வேண்டும் என்று டாக்டர் சொன்ன யோசனைதான்.

பிரிவு உபசாரம் முடிந்த பிறகு, டாக்டர் சுரேஷ், இலஞ்சிச் சாமியார், அப்புலிங்கம், கந்தப்பன்—நான்கு பேரும் நீண்ட நேரம் மரத்தடியிலே பேசிக் கொண்டிருந்தார்கள். டாக்டர் சுரேஷ் பல மூலிகைகளின் பெயர்களையும் அவற்றில் ஆராய வேண்டிய விஷயங்களையும் பற்றிச் சாமியாரிடம் சொன்னதைக் கேட்டு அப்புலிங்கம் அசந்துபோய் விட்டான். கந்தப்பனோ, தான் பிறந்த அந்த மலைக் காட்டில் இத்தனை விசேஷமான மருந்துச் செடிகள் இருக்கின்றனவா என்று திகைத்தவண்ணம் இருந்தான்.

திருச்சியில் எத்தனையோ பெரிய விபரீதக் குழப்பங்கள் நடந்து கொண்டிருந்த அதே நேரத்தில் மலைக்காடுகளிலே டாக்டர் சுரேஷ் காமிராவும் கையுமாகச் சுற்றிக் கொண்டே இருந்தார். மரங்கள், செடி கொடிகள், வானத்தின் பல பல காட்சிகள், நீரோடைகள், அருவிகள், மான்கள், மயில்கள் என்று அவருடைய காமிரா "கிளுக்"கிக் கொண்டே இருந்தது. கந்தப்பன் மலை நாட்டுத் தலைவனின் எதிர்கால மாப்பிள்ளை என்றும், சொக்கி என்ற அந்த வன சுந்தரிதான் கந்தப்பனுடைய எதிர்கால

மனைவி என்றும் டாக்டர் சுரேஷுக்குத் தெரிந்த விநாடியிலிருந்து, அவருடைய காமிரா அந்த மலை நாட்டுக் கன்னியிடம் கண்ணும் கருத்துமாக இருந்தது. அவளுடைய கம்பீரம், அவளுடைய நடையின் ஒயில், அந்த மேனியின் எழில், அவள் நடந்து செல்லும்போது அந்த இயற்கைச் சூழ்நிலையில் ஏற்படுகிற கல கலப்பு—இப்படி எத்தனையோ பல வண்ணக் காட்சிகளைக் காமிராவிலே படம் பிடித்தார் சுரேஷ். நிலவுப் பாறையைப் பற்றிக் கேள்விப்பட்டு மறு நாள் பிற்பகல் அந்த நிலவுக் காட்டுக்குள்ளே சென்று நல்ல சூரிய வெளிச்சத்திலேயே சிற்றோடையையும், சிற்றருவியையும் காமிராவுக்குள்ளே பிடித்துப் போட்டுக்கொண்டார். சொக்கி தனது யானையுடன் பேசிய 'காணு பாஷை' டாக்டர் சுரேஷைக் கவர்ந்தது. அதனால் அவர் மிக்க பிரியத்தோடு சில சமயங்களில் 'கசொ கக் ககி' என்று கூடச் சொக்கியைக் காணு பாஷையில் கூப்பிட ஆரம்பித்தார்!

இப்படியாக இரண்டு நாட்கள் மலைக் காட்டிலே உல்லாசமாகப் பொழுதைக் கழித்து விட்டு, இலஞ்சிச் சாமியாரையும் அந்தச் சொக்கிகுடியிலேயே இருத்திவிட்டு டாக்டர் சுரேஷ் மலையிலிருந்து புறப்பட்டபோது, பளிஞர் தலைவனுக்குக்கூட மனம் கஷ்டப்பட்டது. இந்த மாதிரி ஒரு நல்ல பதவியிலே இருக்கக்கூடிய டாக்டரும், திருச்சியில் உள்ள இளம் மிராசுதாரும் தன்னுடைய மருமகனுக்கு நண்பர்களாகக் கிடைத்ததில் தலைவன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தான். ரவீந்திரன் என்ற ஒரு மனிதனைப்பற்றிக் கந்தப்பன் சொன்னதைக் கேட்டதிலிருந்து, பளிஞர் தலைவனுக்கு ரவியிடம் அபாரமான மதிப்பு உண்டானது மட்டும் இல்லை. ரவீந்திரன் என்றால் அவன் ஏதோ தெய்வப் பிறவி என்றும், அவனுடைய புல்லாங்குழல் வாசிப்பு அந்த மலைப் பிராந்தியத்தில் ஒருதரம் நிகழ்ந்தால் பிறகு கவலையே இல்லை, கூப்பிட்ட நேரத்துக்கு எல்லாம் வனதேவதைகள் வந்து வரம் கொடுத்துச் செல்வார்கள்' என்றும் பட்டது அவனுக்கு. டாக்டர் சுரேஷிடம் முக்கியமாக ஒரு வேண்டுகோள் செய்துகொண்டான். வெகு விரைவில் டாக்டர் சுரேஷ் தம்மோடு

அந்த அபூர்வ ரவீந்திரனையும் அழைத்துக் கொண்டு மலை நாட்டுக்கு வரவேண்டும் என்றும், வந்து ஒரு வாரமாவது தங்களோடு தங்கியிருக்க வேண்டும் என்றும், தங்கள் மலைக் காட்டில் அவர்கள் வரும்போது ஒரு விசேஷ பூஜைத் திருவிழா நடத்த வேண்டும் என்றும், அகவல் மகளைக் கூப்பிட்டு அந்த ரவீந்திரனுக்குப் பெரிய ஆசீர் வாதமாகச் செய்யும்படி சொல்ல வேண்டும் என்றும் எல்லாம் மிக்க உற்சாகத்தோடு சொன்னான் பளிஞர் தலைவன்.

"என்ன, கசொ கக் ககி! நாங்கள் போய்விட்டு வருகிறோம். கச கரி கதா கஞ?" என்று சொக்கியிடம் விடைபெற்றார் டாக்டர் சுரேஷ். அவள் டாக்டருக்குக் கை கூப்பி வணக்கம் செய்து கொண்டே சிரித்தவண்ணம் குடிசைக்குள்ளே சென்று விட்டாள். அப்படியே அதை ஒரு 'ஸ்நாப்' எடுத்துக் கொண்டார் டாக்டர் சுரேஷ்.

அப்புலிங்கமும் கந்தப்பனும் எல்லாருக்கும் வணக்கம் செலுத்திவிட்டு டாக்டர் சுரேஷோடு புறப்பட்டார்கள். அவர்களோடு கூடவே உஸ்தாதுக்காக ஐந்து மலைப் பளிஞர்களும் உடன் புறப்பட்டார்கள்.

இவர்கள் அனைவரும் சொக்கி குடிக் காட்டிலிருந்து புறப்பட்டுச் சென்ற பிறகு, இலஞ்சிச் சாமியார் மலை நாட்டுப் பளிஞர் தலைவனைத் தனியாக அழைத்துக் கொண்டு ஆலமரத்தடிக்குச் சென்றார். அவருடைய மனத்தில் ஏதேதோ யோசனைகள் ஓடிக் கொண்டிருந்தன.

"சொக்கப்பா! நான் சொல்வதைக் கொஞ்சம் கவனமாகக் கேட்கவேண்டும், தெரிந்ததா?" என்று சொல்லிக் கொண்டே பேச்சை ஆரம்பித்தார் சாமியார்.

"உன்னுடைய குடியிருப்புக்கு வந்து போயிருக்கிற டாக்டர் சாதாரண மனிதர் இல்லை. நேற்று இரவு என்னைத் தனியாகச் சந்தித்து சில விவரங்கள் பேசிக் கொண்டிருந்தார். அது காரணமாகத்தான் நான் கொஞ்ச நாள் இங்கே தங்கலாம் என்று நினைத்தேன். இன்றைக்கோ அவர் என்னை இங்கே நிரந்தரமாகவே இருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்!" என்று

கூறியவாறு சிரித்தார் சாமியார். பளிஞர் தலைவன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு சொல்லுவான்: "சாமி இங்கே இருக்குதூன்னு நெனைச்சா, அது பெரிய நல்ல காலமாக்கும் இந்தச் சொக்கி குடிக்கு! கட்டாயம் இருக்கணும்!"

சொக்கப்பன் இப்படிச் சொன்னபோது, அந்த வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட களிப்பும் வாஞ்சையும் அவனுடைய முகத்திலே பிரகாசித்தன.

"சொக்கப்பா! உங்களுடைய மலைக்காட்டில் சர்ப்ப கந்தி என்ற மூலிகை இருக்கிறதல்லவா? அந்த மூலிகை தான் இனிமேல் என்னுடைய ஆராய்ச்சிக்கு முக்கியமான மருந்து. டாக்டர் சுரேஷ் இந்த மூலிகை எத்தனையோ பெரிய பெரிய நோய்களுக்கெல்லாம் கைகண்ட மருந்து என்று சொல்கிறார். இரத்தக் கொதிப்பு என்ற நோயைப் பற்றி நகரங்களில் எல்லாம் பெரிது பெரிதாக இங்கிலீஷ் வார்த்தைகளைப் போட்டு வர்ணிப்பார்கள். இந்த நோய்க்குச் சர்ப்பகந்தியினால் அதிசயமான பலன் உண்டு என்று மேனாடுகளில் கண்டு பிடித்திருக்கிறார்களாம். நம்முடைய சித்த வைத்தியத்திலும் இந்த மாதிரி ஒரு பச்சிலையைப் பற்றிச் சொல்லி யிருக்கிறது. டாக்டர் சுரேஷ் இந்த மருந்துச் செடியை நன்றாக ஆராயும்படி சொல்லியிருக்கிறார். ஆகையினால்......"

"ஆகையினால் என்ன சாமி? தாராளமாகச் சொல்லணுமாக்கும்!" என்றான் பளிஞர் தலைவன் சொக்கப்பன்.

"ஆகையினால் நான் இந்த ஆல மரத்தடியில் தனியாக ஒரு சிறு குடிசை கட்டிக் கொண்டு என்னுடைய மருந்து ஆராய்ச்சிகளை நிம்மதியாக நடத்தலாம் என்று நினைக்கிறேன். கடவுள் புண்ணியத்திலே தேனும் பழங்களும் நீரோடையும் தட்டு இல்லாமல் உண்டு இந்தக் காட்டிலே! ஒரு சாமியாருக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?" என்றார் இலஞ்சிச் சாமியார் சிரித்துக் கொண்டே.

"என்ன சாமி! இப்படிச் சொல்லணுமாக்கும்! வேண்டிய அளவு செடி செடியாக நம்ப காட்டிலே......"

"ஓ! கமன ஓடியைச் சொல்லுகிருயா? பலே பலே! அதுதான் ஏராளமாகக் கிடைக்குமே! ஆனுலும் அதை அளவுக்கு மீறி உபயோகிக்க ஆரம்பித்து விட்டால் நம்முடைய ஆராய்ச்சி நடக்காது! அதுவும் உறங்க ஆரம்பித்து விடும்! ஏதோ முருகன் கிருபையிலே கமன ஓடியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துவிட வேண்டும் என்று எண்ணி யிருக்கிறேன். டாக்டர் சுரேஷ் இனிமேல் எனக்கு எத்தனையோ முக்கியமான அலுவல்கள் கொடுத்து விட்டார். ஆகையினுல் கமன ஓடியை எச்சரிக்கையோடு தான் இனிமேல் உபயோகிக்க வேண்டும். கெட்ட பழக்கம் அது!" என்ருர் சாமியார். சொக்கப்பனுக்கு இந்த வார்த்தைகள் ஆச்சரியமாக இருந்தன.

"சாமிக்கு எது எது எப்படி எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படியே செய்யணுமாக்கும்! இந்தச் சொக்கி குடியிலே நல்ல காலம் பிறந்திருக்குதாக்கும்! அதுனுலே தான் எங்க குல தெய்வமே உங்களை யெல்லாம் இங்கே அனுப்பி யிருக்கிறதாக்கும்!" என்று ஆனந்தத்தோடு சொன்னுன் பளிஞர் தலைவன் சொக்கப்பன்.

"அதெல்லாம் சரி, சொக்கப்பா! இந்தக் காட்டுக்குள்ளே என்னுடன் சுற்றுகிறதற்கும், நான் சொன்ன இடத்தில் சொன்ன மூலிகைகளைப் பறிப்பதற்கும் மட்டும் இரண்டு ஆள் கொடு. போதும். மற்றதெல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்!" என்று ஒரே பேச்சில் விஷயத்தை முடித்து விட்டு எழுந்தார் சாமியார்.

அவர் வார்த்தைக்குச் சரி சொல்லி விட்டுச் சொக்கப்பனும் ஆலமரத்தடியிலிருந்து புறப்பட்டான். புறப்படும் போது தன்னுடைய ஒரே விருப்பத்தை மீண்டும் சாமியாரிடம் சொன்னுன் :—

"நம்ப குல தெய்வத்துக்குச் சொக்கி குழல் வாசிச்சா ரொம்ப ரொம்பப் பிடிக்குமாக்கும்! அந்த ரவீந்திரன்

மட்டும் இங்கே ஒரு தடவை வந்து பூசையிலே வாசிச்சாருன்னு, எப்படி யிருக்குமாக்கும் !"

இப்படி அவன் சொன்னபோது அந்த ஆலமரம் காற்றிலே அசைந்து அதன் இலைகள் அத்தனையும் சல சலத்தன. ஏதோ வருங்காலத்தை அறிந்து அந்த ஆல மரம் 'கல கல' என்று சிரிப்பது போல இருந்தது, இலைகளின் அந்தச் சல சலப்பு !

ஆமாம் ; மலைக் காட்டிலே இப்படி ஏதேதோ எதிர் காலத் திட்டங்கள் உருவாகிக் கொண்டிருந்த அந்தச் சமயத்திலேதான் திருச்சியில் ரவீந்திரனுடைய நிலைமை மணிக்கு மணி மோசமாகிக் கொண்டு வந்தது. எத்தனை பேர் இழுத்து அமுக்கிப் பிடித்தாலும், அத்தனை பேரையும் கீழே தள்ளிக் கொண்டு பாய்ந்து விடுகிற அளவிற்கு ரவியினுடைய ஆவேசம் அதிகரித்தது. அந்த உடம்பில் இத்தனை பலமும், இவ்வளவு வேகமும் இத்தனை நாள் எங்கே மறைந்து கிடந்தன? சாதாரணமாக வெறுங் கோபம் வந்தாலே 'பட பட' என்று ஆடக்கூடிய அந்த உடம்பிற்குள் இத்தனை ஆற்றல் இதுவரை எங்கே குடி கொண்டிருந்தது ? இது கண்டு மிராசுதார் முருகானனந் தத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. காலையில் உஸ்தாதை யும் போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டரையும் பார்த்து வந்த பிறகும்கூட மனத்தில் நிம்மதி இல்லாத முறையில் சம்ப வங்கள் குமைந்து கொண்டிருந்தன. உடனே வந்து விடுவதாகச் சொன்ன உஸ்தாத் வருவதற்குத் தாமதம் ஆக ஆக, அவருடைய ஆத்திரம் அளவுகடந்து போயிற்று. 'சரி ; மறுபடியும், ஒருமுறை உஸ்தாதைப் போய்ப் பார்த்து விட்டு வர வேண்டியதுதான் போலிருக் கிறது !' என்று நினைத்துப் புறப்படத் தயாராகும் சமயத்தில், பங்களாவுக்குள்ளே மீரான் நுழைந்தார். ஆனால் அமைதியோடும், நிதானத்தோடும் வழக்கமாக நுழைகிற உஸ்தாத் மீரான் பரப்பரப்போடு வந்தார்.

"மிராசுதார்வாள் ! கொஞ்சம் தனியாக வருகிறீர் களா ? ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும். அதன் பிறகு ரவீந்திரனுடைய விஷயத்தைக் கவனிக்கலாம்" என்று சொன்னார்.

மிராசுதார் அப்படியே பதறி எழுந்து வந்தார். உஸ்தாத் மீரானும் அவருமாக வெளி முற்றத்துக்கு வந்து ஏதோ இரகசியமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

## 28. நட்சத்திர நங்கை

உஸ்தாத் மீரான் அப்புலிங்கத்தின் தகப்பனுரைத் தனியாக அழைத்துப் போய்ப் பேச ஆரம்பித்தார் அல்லவா? அந்தப் பேச்சின் விவரங்கள் மிகவும் இரகசியமாக இருக்க வேண்டும் என்று உஸ்தாத் மீண்டும் மிராசுதாரிடம் சொன்னுர். அதன்பேரில் மிராசுதாரும் அதை இரகசியமாகவே வைத்துக்கொள்வதாகச் சொல்லி விட்டு முடிவாக உஸ்தாதிடம் ஒன்று கேட்டார்: "இப்பொழுது சந்திரிகாவைப் பற்றித் துப்புத் துலக்குவதற்கு முன்பு மிக மிக அவசரமாகக் கவனிக்க வேண்டியது ரவீந்திரன் காரியமல்லவா?"

உஸ்தாத் சிரித்தார். சொன்னுர்: "மிராசுதார்வாள்! ரவியின் மூளை சரியாக வேண்டுமென்ருல் அது நம்முடைய கையில் இல்லை. டாக்டர் சுரேஷ் வந்து கவனிக்க வேண்டிய காரியம் அது. சந்திரிகாவைப் பற்றிய காரியம் நம் கையில் இருக்கிறது. அவளைச் சல்லடை போட்டு இந்த அகில உலகத்தில் எங்கே இருந்தாலும் கண்டு பிடித்து விட இந்த உஸ்தாதினுல் முடியும்! அந்தப் பொறுப்பு என்னுடையது. பின்னர் ஏன் கவலைப்பட வேண்டும் நீங்கள்?"

மிராசுதார் சொன்னுர்: "அது சரி, உஸ்தாத்! சந்திரிகா இங்கே திரும்பி வந்தால்தான் ரவீந்திரனுடைய புத்தி சரிப்பட்டு வரும் என்று எனக்குப் படுகிறது. டாக்டர் சுரேஷும் அப்படித்தான் சொல்லுவார் என்று நினைக்கிறேன்!"

"டாக்டர் சுரேஷ் என்ன சொல்லுவார் என்பதை இப்பொழுது யூகிக்க முயல்வானேன்? நாளைக்குத்தான்

அவர் வந்துவிடுவாரே. அதன் பிறகு அதைக் கவனித்துக் கொள்ளுவோம் !"

மிராசுதார் நெற்றியைப் பிசைந்து கொண்டே சொன்னார் : "வாஸ்தவமான வார்த்தை. ஆனால் டாக்டர் வந்து சேரும்வரை ரவீந்திரனை என்ன செய்வது? அதற்கு வழி தெரியவில்லையே !"

"அதற்கு வழி ஒன்றே ஒன்றுதான். ரவீந்திரனை இப்படியே அந்த அறையில் பூட்டி வைத்து விடுங்கள். மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனாலும் வேறு மார்க்கம் இல்லை. புத்தி சுவாதீனம் இல்லாதவரை வேறு என்ன செய்ய ?"

இப்படிச் சொல்லி விட்டு உஸ்தாத் சலாம் செய்தார். மிராசுதாருக்கு அவரை வழியனுப்ப மனம் இல்லை. காலைத் தேய்த்தார்.

"தயங்காதீர்கள் மிராசுதார்வாள் ! நாளை விடியும் மட்டும் ரவீந்திரனை இப்படித்தான் பாதுகாக்க வேண்டும். வேறு வழி இல்லை.. தயங்காதீர்கள் ! தைரியமாக இருங்கள் !"

இவ்வாறு சொல்லி விட்டு உறுதியான மனத்தோடு விடைபெற்றார் உஸ்தாத்.

* * *

மறுநாட் காலை டாக்டர் சுரேஷ், அப்புலிங்கம், கந்தப்பன் மூவரும் மலைக்காட்டிலிருந்து திருச்சிக்குத் திரும்பினார்கள். திரும்பியதும் அவர்களுக்கு அந்தப் பேரதிர்ச்சி காத்திருந்தது !

ஆமாம் ; அப்புலிங்கம் அப்படியே இடி விழுந்தது போல் ஆகி விட்டான். கந்தப்பனே ரவீந்திரனுடைய வீட்டுச் சுவரோடு சுவராக உட்கார்ந்து கண்ணீர் வடித்தான். டாக்டர் சுரேஷ் தமது வழக்கமான புன்முறுவலை இழந்தவராய், முற்றத்து வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் அப்படியும் இப்படியும் நடந்து கொண்டே பலத்த யோசனையில் ஆழ்ந்தார்.

'விதி செய்கின்ற கூத்துக்களைப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது! சந்திரிகா எங்கே மறைந்திருக்கக் கூடும்? ரவீந்திரனுடைய மூளைக்கோளாறு இனி எப்படிச் சரியாகக் கூடும்? தான் நினைத்தபடி எதிர்காலச் சம்பவங்கள் உருவாகாத வண்ணம், இப்பொழுது இந்தப் பேரிடி விழுந்து விட்டதே! இனி இதிலிருந்து எப்படி இந்தக் குடும்பத்தை மீட்பது?'

இவ்வாறு பலமான யோசனையில் ஆழ்ந்தவராக டாக்டர் தாழ்வாரத்திலேயே மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தபோது, பெரிய மிராசுதார் அங்கே வந்தார்.

"என்ன டாக்டர் ஸார்! எங்களுக்கெல்லாம் யோசனை சொல்ல வேண்டிய நீங்களே இப்படிக் கவலைப் பட ஆரம்பித்தால் இனி நாங்கள் என்ன செய்வது?" என்று கேட்டார்.

"கவலைப்படவில்லை மிராசுதார்வாள். ஒரு வைத்தியனுடைய வாழ்க்கையில் கவலைக்கு இடமே கிடையாது. நோயாளியோடு சேர்ந்து டாக்டரும் கூடி அழுதால், தொலைந்தது காரியம். உண்மையில் நான் இப்பொழுது கவலைக்கு இடம் கொடுக்கவில்லை. நோயைத்தான் ஆராய்ந்து கொண்டிருக்கிறேன்!" என்றார் சுரேஷ்.

"அப்படியென்றால், இது வெறும் அதிர்ச்சியில்லையா? ஒரு நோய்தானா?"

"மிராசுதார்வாள்! அப்படியெல்லாம் ஒரே வரியில் பதில் சொல்லி விடுகிற விஷயமில்லை இது. ஏற்கனவே ரவீந்திரனுடைய மனக் கதவை அன்றொரு நாள் திறந்து பார்த்தேன். அவனுடைய இதய வீணையில் சில நரம்புகள் பிசகியிருந்தன என்பதை அன்றைக்கே முடிவு செய்து விட்டேன். நிறைவேறாத சங்கற்பங்கள், ஈடேறாத கனவுகள், துயரம் தருகிற சிந்தனைகள், கற்பனையின் கொதிப்பினால் ஏற்படுகிற இரத்த வேகம்—இத்தனையும் சேர்ந்து அந்த உத்தமனுடைய உடம்பின் நரம்புகளை ஏற்கனவே நன்றாகப் பாதித்திருந்தன. இது காரணமாக அவனுடைய நடத்தையிலும், பேச்சிலும், கோப தாபங்களிலும் ஒரு விசித்திரமான போக்கு ஏற்பட்டிருந்தது என்பதைக்

கண்டு கொண்டேன். இந்த விசித்திரப் போக்கை ஒரு வகையான நரம்பு வியாதி என்று அன்றைக்கே அனுமானம் செய்தேன். அது காரணமாகவே சர்ப்பகந்தி என்ற மூலிகையைப் பற்றிச் சில ஆராய்ச்சிகள் நடத்தும்படி இலஞ்சிச் சாமியாரை மலைக்காட்டிலே இருத்திவிட்டு வந்தேன்.' ஆனால்—"

"ஆனால் என்ன டாக்டர். இனிமேல் பயன் இல்லையா?" என்று மிக்க கவலையோடு கேட்டார் மிராசுதார்.

"அப்படிச் சொல்லாதீர்கள். ஒரு வைத்தியனுக்கு அப்படியெல்லாம் விரக்தி அடைந்துவிட உரிமை கிடையாது. புதிது புதிதாக ஏற்படும் குழப்பங்களை வென்று தீர்ப்பதிலேதான் ஒரு டாக்டரின் சாமர்த்தியம் இருக்கிறது. நான் யோசிப்பதெல்லாம் ரவீந்திரனுடைய சூழ்நிலையைப் பற்றித்தான்!"

"அப்படி யென்றால்?"

"கல்யாணியைக் கண்டதும் ரவீந்திரனுடைய இரத்த வேகம் அதிகரிக்கிறது. சந்திரிகா காணமற்போனதற்குக் கல்யாணிதான் காரணம் என்று நினைத்து, ரவீந்திரனுடைய உள் மனம் பயங்கரமாக வேலை செய்து கொண்டிருக்கிறது. அவளைக் காணும் போதெல்லாம், அவனையும் அறியாமல் அவனுடைய உள் மனத்தில் இந்த நினைவின் கொதிப்பு தீவிரமாகி, மூளையிலே வந்து கொந்தளிக்கிறது. முதலில் இந்தக் கொந்தளிப்பைத் தடுக்க வேண்டும். அதன் பிறகுதான் மூளையின் அதிர்ச்சிக்கு வைத்தியம் செய்ய முடியும்!"

"அப்படி யென்றால்?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் முருகானந்தம்.

"ரவீந்திரனைக் கல்யாணியிட மிருந்து பிரிக்க வேண்டும்!"

"ஐயய்யோ! அப்படியானால் அந்தப் பெண்ணுக்கும் பைத்தியம் பிடித்து விடும் டாக்டர். பாவம் அந்தக் குழந்தை தன் புருஷனிடம் எத்தனை பாசம் வைத்

திருக்கிறது, தெரியுமா?" என்று சொல்லிக் கண் கலங்கி நின்ருர் முருகானந்தம்.

"மிராசுதார்வாள்! நீங்கள் சொல்கிறது மெய்யான வார்த்தை. கல்யாணி அம்மாளுக்கு ரவீந்திரனிடம் உள்ள அன்பு கரையில்லாத ஒரு கடல். அந்த எல்லை யற்ற அன்புதான் இத்தனை சிக்கல்களுக்கும் காரண மாயிற்று. தன்னுடைய பாசத்தின் பிடியிலிருந்து தன் கணவன் நழுவி விடுவானே என்ற பயத்தினலேதான், பாவம், அந்த அம்மாள் தன்னையும் துன்பப்படுத்திக் கொண்டு, இத்தனை துன்பத்தையும் வரவழைத்துக் கொண்டு விட்டாள். உண்மையில் அது அவளுடைய தவறு இல்லை. ஒரு நல்ல மனைவிக்கு இயல்பாக உள்ள அச்சம் அது. ஆனல் ரவீந்திரனைப் போன்ற ஒரு அபூர்வப் பிறவியின் போக்கு அவளுக்குப் பிடிபடவில்லை. நம்மைப் போன்ற மனிதர்களையே குழப்புகிற அவனுடைய மனநிலை, பாவம், அந்த அபலைக்கு எப்படிப் புரியும்? இதை யெல்லாம் நினைக்கும்போதுதான், விதியின் எழுத்து என்றும், கடவுளின் செயல் என்றும் சொல்ல வேண்டி யிருக்கிறது. விஞ்ஞானம் உடம்பைத்தான் ஆராய முடியும். உடம்புக்குள்ளே உள்ள மனம் என்ற ஒரு நுட்பம் இருக் கிறதே, அதை யார் கண்டு சொல்ல வல்லார்கள்? மூளையைத்தான் கண்ணினல் கண்டு ஆராய முடியும். ஆனல், மனம் என்ற சூக்ஷ்ம தேகத்தை யாரால் ஆராய முடியும்? சிந்தனை, எண்ணம், ஆசாபாசங்கள் என்றெல் லாம் சொல்லுகிருேமே இவற்றின் வித்து இந்த உடம்புக் குள்ளே எந்த இடத்தில் இருக்கிறது? மின்சாரத்தைப் போன்ற கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தி கூட, ஒரு பாட்டரியிலிருந்தோ அல்லது மின்சாரமையத்திலிருந்தோ தான் உண்டாகிறது. அதுபோல நம்முடைய ஆசா பாசங்களும் ஏதோ ஒரு மின்சாரக் குப்பிக்குள்ளிருந்துதான் புறப்படுகின்றன. அந்த மின்சாரக் குப்பி இந்த சரீரத்துக் குள்ளே எங்கே இருக்கிறது என்பதை யார் கண்டார்கள்? மூளை என்பது வெறும் ஜடப் பொருள். இதற்கும் மனம் என்ற சூக்ஷ்மத்துக்கும் என்ன வித்தியாசம்? இதெல்லாம் தற்கால ஸையன்ஸுக்கு அப்பாற்பட்ட விஷயங்கள்.

தமிழ் நாட்டு சித்தர்களுக்கு மட்டுமே தெரிந்த இரகசியம் அது!" என்ருர் டாக்டர் சுரேஷ்.

இவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டே தாழ் வாரத்துக்கு வந்தார்கள் அப்புவும் கந்தப்பனும்.

"என்ன கந்தப்பா! ரவீந்திரனை மலைக்காட்டிலே வந்து தங்க வேண்டும் என்று உங்கள் தலைவர் சொன்ன ரல்லவா? அது இப்பொழுது விபரீதமான முறையிலே நிறைவேற வேண்டியதிருக்கிறது!" என்ருர் டாக்டர் சுரேஷ்.

இந்த வாக்கியத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திகைத்து நின்ருன் கந்தப்பன். அப்புவோ டாக்டரையே பார்த்துக் கொண்டு நின்ருன்.

"சில வைத்திய முறைகளை இலஞ்சிச் சாமியாரோடு ஏற்கனவே பேசி யிருக்கிறேன். இப்பொழுது அந்த முறைகளை ஆராய்வதோடு, சர்ப்பகந்தியின் பிரயோகத்தை ஆரம்பிப்பதற்கும் அவசியம் ஏற்பட்டு விட்டது!" என்ருர் சுரேஷ்.

அப்புலிங்கம் கேட்டான்: "அப்படியானல் நம் முடைய ரவீந்திரனை மலைக்காட்டிலே கொஞ்ச நாள் வைத் திருக்க வேண்டும் என்று சொல்லுகிறீர்களா, டாக்டர்?"

"ஆமாம் அப்பு. கல்யாணி அம்மாள் கொஞ்ச நாள் ரவீந்திரனைப் பிரிந்திருக்க வேண்டியதுதான். வேறு வழி யில்லை!" என்ருர் டாக்டர்.

"இதைக் கேட்டாலே அந்த அம்மாளுக்கு இரத்தக் கொதிப்பு உண்டாகி விடுமே டாக்டர்!" என்ருன் அப்பு.

"அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். இந்த விஷயத்தைக் கல்யாணி அம்மாளிடம் பக்குவமாகச் சொல்ல வேண்டிய பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளு கிறேன். நீங்கள் செய்ய வேண்டிய ஏற்பாடு ஒன்றே ஒன்று தான். ரவீந்திரனையும் அவனுடைய புல்லாங்குழலையும் மலைக்காட்டுக்கு அனுப்புவதைப் பற்றி உடனே யோசி யுங்கள்!"

"அப்படியானல் ரவீந்திரன் அங்கே தனியாக இருப்பதா ?"

"அதைப் பற்றிப் பிறகு யோசித்துச் சொல்கிறேன். முதல் ஒரு வாரத்துக்கு நானும் என்னுடைய மருந்துப் பெட்டியும் ரவீந்திரனேடு சித்தர் ஆசிரமத்திலே இருக்க வேண்டும் என்பது என்னுடைய யோசனை! பிறகு மற்ற விஷயங்களை முடிவு செய்து கொள்ளலாம்!" என்ருர் சுரேஷ்.

மௌனமாக இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே யிருந்த முருகானந்தம் சொல்லுவார்:

"டாக்டர்! எப்படியும் ரவீந்திரனுடைய நோய் குண மாகி விட்டால் போதும். அந்தப் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்டு விட்டால், அது ஒன்றே பெரிய புண்ணியம். சந்திரிகா எங்கு இருக்கிருள் என்று கண்டு பிடித்துக்கொண்டு வருவது எங்கள்பொறுப்பு. ஏற்கனவே உஸ்தாத் மீரான் அது விஷயமாக உறுதி சொல்லி விட்டார்!"

இவ்வாறு மிராசுதார் முருகானந்தம் சொன்னதும் டாக்டர் புன்முறுவல் செய்து கொண்டே கூறினர்:

"சந்திரிகா காணமற் போன விஷயம் எனக்கு ஒரு பெரிய புதிராகவே படவில்லை. ஆகையினல் அதுபற்றி அதிகமாகக் கவலைப் படவில்லை நான். அந்தப் பெண் எங்கிருக்கிருள், அவளை எப்படித் திரும்ப இங்கே கொண்டு வருவது, என்பதெல்லாம் பெரிய பிரச்னைகளே அல்ல. ரவீந்திரனுடைய உடம்பு சரியாவதும், சந்திரிகா திரும்ப வந்து சேர்வதும் ஒன்றை யொன்று சார்ந்து நிற்கும் விஷயங்கள். ஆனலும் முதலில் ரவீந்திரனை சித்தர் ஆசிர மத்திலே கொண்டு சேர்ப்பதுதான் முக்கியம். பைத்தியக் கார ஆஸ்பத்திரியிலே கொண்டு விட்டு, அந்தச் சூழ் நிலையிலே ரவீந்திரனை வைப்பது அவசியமில்லாத ஒரு சிக்கலாக முடியும். ஏனென்ருல், யோசித்துப் பார்த்தால் ரவீந்திரனுக்கு வந்துள்ள நோய் சாதாரணமாகப் பைத்தியம் என்று சொல்லக்கூடிய கோளாறு அல்ல. மனத்தத்துவமும், மருந்தும் ஒன்று சேர்ந்து வேலைசெய்ய

வேண்டிய ஒரு தனியான சிகிச்சை முறைதான் இப்பொழுது தேவை. எங்கள் வைத்தியக் கல்லூரியில் ஆராய்ச்சிப் பேராசிரியராக இருந்த ஒரு பெரியார் கையாண்டு பார்த்த அரிய சிகிச்சை முறை இருக்கிறது. அதைத்தான் இப்பொழுது நாம் கையாள வேண்டும்!" என்ருர் டாக்டர் சுரேஷ்.

மிராசுதார் சொன்னுர்: "அது எப்படி எப்படிச் செய்ய வேண்டுமோ அதெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும் டாக்டர். நீங்கள்தான் கண் பார்க்க வேண்டும். ஏதோ நம்முடைய வீட்டு வளேவுக்குள் அவர்கள் கால் எடுத்து வைத்ததற்கு, ஒரு தீங்கும் அந்தக் குடும்பத்துக்கு ஏற்படக் கூடாது. அதுதான் என்னுடைய கவலே!"

இப்படிச் சொல்லும் போது மிராசுதாருக்கு உணர்ச்சியினுல் குரல் கம்மிற்று.

"கவலேப்படாதீர்கள். நான் வீட்டுக்குப்போய் இன்னும் விவரமாக யோசனே செய்து விட்டு நாளே வருகிறேன். இப்பொழுது ஆஸ்பத்திரிக்குப் போய் ஒரு மாத்திரைப் புட்டி அனுப்புகிறேன். அதில் இரண்டு மாத்திரைகளேத் தண்ணீரிலே பொடி செய்து போட்டு, ரவீந்திரனுக்குக் கொடுங்கள். அநேகமாக இன்று இரவு அமைதியாக உறங்கி விடக் கூடும்!" என்ருர் டாக்டர்.

"அதை அவன் சாப்பிட வேண்டுமே!" என்கிற பாவனேயில் குழப்பத்தோடு டாக்டரைப் பார்த்தான் அப்பு.

"கல்யாணி அம்மாளே அடுக்களேயில் இருக்கச் சொல்லி விட்டு, நீங்களே எடுத்துக் கொண்டு போய்க் கொடுங்கள் அப்பு. சாப்பிட்டு விடுவான். திமிறினுல் மல்லுக்கட்டி வாயிலே ஊற்றிப் புகட்டி விடுங்கள். அதிலும் சிரமம் இருந்தால், எனக்குச் சொல்லி யனுப்புங்கள். ஒரு ஊசி மருந்தை ஏற்றி விடலாம்!" என்று சொல்லி விட்டு "மாத்திரைகளே நானே ஒரு ஆளிடம் கொடுத்தனுப்புகிறேன்" என்று கூறிய வண்ணம் காரிலே ஏறினுர் சுரேஷ்.

திருச்சிக் காரியங்கள் இப்படி நடந்து கொண்டிருக்க, பம்பாய் மாதுங்காவில் மாதர் கலைச் சங்கத்திலே கலை விழா கோலாகலமாக நடந்து கொண்டிருந்தது. அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்த உயரமான மேடையில் அபூர்வ எழிலோடு கூடிய வீணை ஸரஸ்வதி வெள்ளைத் தாமரை யிலே கொலுவிருந்தாள்.

"வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்"

என்ற துதி கீதத்தை "மாதர் தீங்குரல் பாட்டிலே" கலைச் சங்கப் பெண்கள் கோஷ்டியாக நின்று பாடினார்கள். 'கண கண' என்று மணி ஒலித்தது. மத்தளமும் வீணை யும் இயம்பின. புல்லாங்குழலின் நாதம் காற்றிலே இழைந் தது. சலங்கைகள் ஒலித்தன. பின்னணிப் பாட்டாக இனிய குரலோடு கூடிய கலைச் சங்கப் பெண்கள் பாரதி யாரின் ஸரஸ்வதி வணக்கத்தைப் பாடத் தொடங்கியதும், அலங்கார மேடையிலே தோன்றினாள் அந்தப் புதிய நட்சத்திர நங்கை!

ஆம், அவளை "நட்சத்திர நங்கை" என்றுதான் காரியதரிசி சாவித்திரியம்மாள் சபைக்கு அறிமுகப் படுத் தினாள். 'தென்னாட்டுப் பரத நாட்டியத்திலே அபாரமான தேர்ச்சிபெற்ற நட்சத்திர நங்கை' என்று பெருமையோடு அவளை வர்ணித்து விட்டுத்தான் நிகழ்ச்சிகளை ஆரம் பித்தாள் அந்த அம்மாள். இப்பொழுது அந்த 'நட்சத்திர நங்கை' மேடையிலே வந்து நின்றதும், சபையில் பலத்த கரகோஷம் எழுந்தது. மாதுங்காவின் அந்த ரசிகப் பெரு மக்களுக்கு இரண்டு கரங்களையும் கூப்பி அஞ்சலி செய்து விட்டு, அந்த நட்சத்திர நங்கை மின்னலைப் போல் பளிச் சென்று துள்ளிப் பின்னணியிலே மிதந்த பாரதியாரின் பாட்டில் தனது மேனியை ஓட விட்டாள். அந்த அற் புதமான பாடலிலே உள்ள சொல்லும் இசையும் அவளு டைய மின்னல் மேனியிலே அபிநயமாகத் துவண்டன.

"கோதகன்ற தொழிலுடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை உற்றுள்
இன்பமே வடிவாகிடப் பெற்றுள்!"

என்ற வரிகள் ஒலிக்கும் போது, சித்திரமாகவும், சிற்பமாகவும், கோயிலாகவும், கோபுரமாகவுமே அந்த நங்கை அரங்கிலே நின்று, அங்கங்களிலே பாவத்தை உருவகித்த போது, மாதுங்காவின் ரசிக மகாஜனங்கள் மெய்ம் மறந்து கரகோஷம் செய்தார்கள். நடனம் 'விறு விறு' என்று மத்தள நாதத்தோடு கலந்து ஒரே களிப்போடு நடந்து கொண்டிருந்தது. இதோ, பாரதியாரின் மற்றொரு அற்புதப் பாடல்—'தூண்டிற் புழுவினைப் போல்' எழுந்தது. ஆனால் இதென்ன? 'இன்பமே வடிவாகிடப் பெற்றுள்' என்று இன்பத்தை அத்தனை பேரின்பத்தோடு உருவகித்து நின்ற அதே மேனி, இப்பொழுது உண்மையிலேயே தூண்டிற் புழுவாகத் துடித்தது. அது அபிநயமா? அல்லது மெய்யான மெய்யனுபவந்தான் அந்த இளம் மேனியிலே நிகழ்கிறதா?

கூண்டுக் கிளியினைப்போல்—தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்
வேண்டும் பொருளையெல்லாம்—மனது
வெறுத்து விட்டதடி!

என்ற வேதனை மொழிகள், அந்த மேனியை ஊடுருவிக் கொண்டு அபிநயக் கோலங்களாக வெளி வந்தன. ஆயிரக்கணக்கான மக்கள் அந்தக் காவிய தாபத்திலே மனம் உருகி மெய்ம் மறந்து அசையாமல் இருந்தார்கள். ஆனால் இதென்ன?

எண்ணும் பொழுதி லெல்லாம்—அவன்கை
இட்ட இடத்தினிலே
தண்ணென் றிருந்ததடி—புதிதோர்

அவ்வளவுதான்; பாட்டு முடியவில்லை. அரங்கத்திலே ஆடிக் கொண்டிருந்த அந்த நங்கை அப்படியே தடால்

என்று மேடையிலே மயங்கி விழுந்து விட்டாள்! இது வரை மெய்ம் மறந்திருந்த ரசிகர்கள் எதிர்பாராத அந்த நிகழ்ச்சியிலே அதிர்ச்சி யடைந்தவர்களாய், பிரலாபித் தார்கள். சபைக் காரியதரிசி சாவித்திரி அம்மாள் பதறிப் போய், திரைக்குப் பின்னுல் இருந்து வேகமாக ஓடி வந்து அந்த நட்சத்திர நங்கையை அப்படியே உடலோடு சேர்த்துக் தூக்கி எடுத்தாள்.

## 29. பாலக் கரையிலே !

ஆஸ்பத்திரிக்குப் போனதும் டாக்டர் சுரேஷ் ஒரு பையனிடம் உறக்க மாத்திரைகள் கொடுத்து அனுப்பினுர். அவற்றை அப்புலிங்கம் சாமர்த்தியமாக ரவீந்திரனுக்குப் புகட்டியதன் பலனுக அன்றிரவுப் பொழுது விபரீதம் ஏதும் இன்றிக் கழிந்தது.

மறுநாட் காலை ரவீந்திரனுடைய வீட்டுக்கு டாக்டர் வந்தபோது உஸ்தாத் மீரானையும் உடன் அழைத்துக் கொண்டு வந்தார். அவர்கள் இருவரையும் மிக்க ஆவலோடு வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்றுன் அப்புலிங்கம்.

“மிராசுதார்வாள்! ஒரு வகையாக என்னுடைய திட்டம் தயாராக இருக்கிறது. நாளைக்கே ரவீந்திரனை அழைத்துக் கொண்டு நான் பளிஞர் குடியிருப்புக்குக் கிளம்புகிறேன். எனக்கு ஒரு வார லீவுக்கு ஏற்பாடு செய்து விட்டேன். நீங்கள்தான் உங்கள் பையன் அப்பு லிங்கத்துக்கு ஒரு வாரம் லீவு கொடுக்க வேண்டும்!” என்றுர் சுரேஷ்.

“அதெல்லாம் சரி, டாக்டர். முதலில் கல்யாணியின் மனத்தைச் சரிப்படுத்த வேண்டுமே. உள்ளே போய்ப் பாருங்கள். அந்தப் பெண்ணுக்கு என்னுடைய சம்சாரம் எத்தனையோ ஆறுதல் சொல்லிப் பார்க்கிருள். பாவம், அந்தக் குழந்தை அழுது கொண்டே யிருக்கிறது. முன்பெல்லாம் கடவுள் அப்புலிங்கத்துக்கு ஒரு

சகோதரியைக் கொடுத்தான் இல்லையே என்று கவலைப் படுவேன். இப்பொழுது இதையெல்லாம் பார்த்த பிறகு அந்தக் கவலையே போய் விட்டது, டாக்டர்! என்ன வாழ்க்கை! - என்ன பெண்கள் போங்கள்! பாவம், இந்த விசித்திர மனிதனுக்கு வாழ்க்கைப்பட்டு அந்தப் பெண்தான் என்ன சுகம் கண்டது!''

"மிராசுதார்வாள்! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள். அந்தப் பெண்ணுக்குக் கொஞ்சம் நஞ்சம் புருஷனிடம் அன்பு இருக்கிறது என்ருல், அதைக் கூடத் துடைத்து மெழுகி விடும் போலிருக்கிறதே உங்களுடைய பேச்சு!''

"அதற்குச் சொல்லவில்லை டாக்டர்! பொதுவாக—"

"மிராசுதார்வாள்! ஏதோ விரக்தியால் இப்படிப் பேசுகிறீர்கள். உண்மையில் ரவியினிடம் கல்யாணிக்கு இருக்கிற பாசம் அபாரமானது. அவன் எத்தனை உயர்ந்த மனிதன் என்பது அவளுக்கு நன்ருகத் தெரியும். ஆனல் பாவம் சந்திரிகா ஒருத்தி இருந்ததுதான் அவளை இதுவரை துன்பப் படுத்திக் கொண்டிருந்தது. இப் பொழுதோ அந்தக் கவலையும் இல்லை. எனவே இனிமேல் தான் அவளுக்கு ரவியினிடம் உள்ள அன்பு பூரணமாக வளரப் போகிறது. நீங்கள் வேண்டுமானலும் பாருங்கள், நான் செல்லுகிறதன் இரகசியத்தை—''

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே வெளியே வில் வண்டி வந்து நின்ற ஓசை கேட்டது.

என்ன ஆச்சரியம்! வண்டியிலிருந்து கல்யாணியின் தகப்பனரும் தாயாரும், நாகரத்தினமும் இறங்கினர்கள்.

டாக்டர் நாற்காலியிருந்து எழுந்து கூர்ந்து பார்த்தார். மிராசுதார் முருகானந்தமும் எழுந்தார்.

"ஓ! கனகசுந்தரம் வருகிருர். பாவம் கல்யாணியின் அம்மாவும், அவள் தம்பி நாகரத்தினமும் வருகிருர்களே!''

மிராசுதார் இப்படிச் சொல்லிக் கொண்டே அவர்களை வரவேற்பதற்கு முன்பு, " கல்யாணி '' என்று கூப்பிட்டுக் கொண்டே ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே ஓடினள் அந்த அம்மாள் — கல்யாணியின் தாயார்.

" அம்மா " என்று ஒரு கதறல் கதறினுள் கல்யாணி. " அம்மா ! உன்னுடைய மருமகனைப் பாரம்மா ! பாரம்மா !" என்று சொல்லிக் கொண்டே அப்படியே தாயாரின் மேல் விழுந்து பற்றியவாறு துடிதுடித்துக் கொண்டு கூச்ச லிட்டாள் கல்யாணி. பெரியவர் கனகசுந்தரம் மௌன மாகத் தமது மனைவியைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றவர், உணர்ச்சியை அடக்க முடியாமல் மேல் துண்டில் முகத்தைப் புதைத்துக் கொண்டே விம்மி விம்மி அழுதார். அந்த வீடு முழுவதும் சோகத்தின் பிரலாபம் எதிரொலித்தது.

இத்தனை சோகத்துக்கும் காரணமான ரவீந்திரன் உள் கூடத்தில் நன்ருகப் பூட்டப்பட்ட அறைக்குள்ளே இந்த உலக நடப்புக்களைப் பார்த்தும் பார்க்க முடியாத நிலையிலே, மனிதர்களின் குரல் காதில் விழுந்தும் கேட்க முடியாத ஒரு கனவுலகிலே மனம் பின்னிப் போனவனுகத் தானும் தனிமையுமாக இருந்தான் !

நாகரத்தினமோ உஸ்தாத் மீரானை அந்த வீட்டிலே கண்டதும் ஒன்றும் தோன்ருதவனுக அந்தத் திகைப்பைச் சமாளித்துக் கொண்டே கூக்குரல் கேட்கும் அறைக் குள்ளே நழுவிச் சென்ருன். டாக்டர் சுரேஷ் அவனைப் பின் தொடர்ந்து உள்ளே சென்ருர்.

" பெரியம்மா ! உங்களைத்தானே. தயவு செய்து சப்தம் போடாதீர்கள். நோயாளிக்குக் கெடுதல் —" என்ருர். இந்த வார்த்தை அந்தக் கூக்குரலில் எடுபடவே யில்லை. அடுத்த விளுடி கனகசுந்தரத்தைப் பார்த்துச் சொன்னுர்.

" ஐயா ! தயவு செய்து உங்கள் மனைவியைக் கொஞ்சம் நிம்மதியாக இருக்கச் சொல்லுங்கள். பக்கத்து அறையிலே உங்கள் மாப்பிள்ளையைப் பூட்டி வைத்திருக் கிருேம். இந்த மாதிரிக் கூப்பாடு போட்டால் அவருக்கு வேகம் அதிகரிக்கும். அதனுல் விபரீதமே ஏற்படலாம், புரிந்ததா !"

இவ்வாறு டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மிராசுதார் முருகானந்தம் உள்ளே வந்து கனக

சுந்தரத்தை இரண்டு கையாலும் தாங்கியவாறு வெளியே அழைத்து வந்தார்.

“ அம்மா கல்யாணி ! உங்களுக்கு எந்த விஷயமும் லேசாகச் சொன்னால் புரியும். உங்கள் கணவருடைய உடம்பு இப்பொழுது இருக்கும் நிலைக்கு நீங்கள் இந்த மாதிரிக் கூச்சல் போடலாமா ? மனதைத் தளர விடாதீர்கள். என்னுடைய உடம்பில் உயிர் இருக்கும் வரைக்கும் உங்கள் புருஷரை இந்த நோயிலிருந்து காப்பாற்றுவதைவிட எனக்கு முக்கிய காரியம் வேறில்லை. என்னை நம்புங்கள். கடவுள் அருளால் எல்லாக் கஷ்டமும் சரியாகி விடும். எல்லாம் என்று மறுபடியும் சொல்கிறேன் !”

டாக்டர் சுரேஷின் வார்த்தைக்கு எப்பொழுதுமே அந்தக் குடும்பத்தில் ஒரு மதிப்பு இருந்தது என்பது இப்பொழுதும் நன்றாகத் தெரிந்தது. ஏனென்றால் அவருடைய வார்த்தைக்குப் பிறகு அங்கே கூச்சல் அடங்கியது.

டாக்டர் சுரேஷ் நாகரத்தினத்தையும் அழைத்துக் கொண்டு மற்றவர்கள் உட்கார்ந்திருந்த தாழ்வாரத்துக்கு வந்தார்.

“ லால்குடி ஐயா !” என்று கல்யாணி அம்மாளின் தகப்பனாரை அழைத்தவாறு பேச ஆரம்பித்தார் டாக்டர் சுரேஷ்.

“ லால்குடி ஐயா ! உங்கள் மாப்பிள்ளைக்கு ஏற்பட்டுள்ள நோயைப் பற்றி உங்கள் மகள் அளவுக்கு மீறிக் கவலைப்படுகிறாள். அது இயல்புதான். ஆனால் இந்த வியாதி நாள்பட்ட வியாதி என்பது என்னுடைய சித்தாந்தம். ஏற்கனவே அந்த நோய் உள்ளடங்கியிருந்தது. முன் கோபமாகவும், ஆத்திரமாகவும், விசித்திரச் செயல்களாகவும் அந்த நோய் இதுவரை அவ்வப்போது, தன்னைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது. இப்பொழுது எதிர்பாராத சூழ்நிலையினால் அது பலமாகத் தலை விரித்தாடுகிறது. அவ்வளவுதான். இந்த நோயைச் சில நாளாகவே நான் ஆராய்ந்து வருகிறேன்.

தெய்வத்தில் அதிக நம்பிக்கை உள்ளவன் நான். எனவே' எப்படியும் இதைக் குணப்படுத்தி விடலாம் என்று நினைக்கிறேன். அதுவரை உங்கள் மகளை ஆறுதல் செய்து கவனமாகப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு உங்களுக்குத் தான். உங்களைப் பார்த்தால் சாந்தமே உருவெடுத்தது போல் இருக்கிறீர்கள்—"

"டாக்டர்"—கனகசுந்தரம் பேச ஆரம்பித்தார்.

"டாக்டர், என்னுடைய மகளைப் பற்றி நானே சொல்லிக் கொள்வது நன்றாக இராது. ஆனாலும் உண்மையைச் சொல்லித்தான் ஆக வேண்டும். உங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. மாப்பிள்ளையின் கோபமும் தாபமும் நீங்கள் அறிந்த விஷயங்கள்தான். இத்தனைக்கும் மத்தியில் அவரே கதியென்று அவள் நடந்துவருவதைப் பார்த்தால், தெய்வம் இன்றைக்கும் இருக்கிறது, தமிழ் நாட்டுப் பண்பாடு இன்னும் சாகவில்லை என்றுதான் நான் நினைக்கிறேன். என்னுடைய இளையமகளின் கல்யாணத்துக்கு வந்தவள் அத்தனை அவசரமாகத் திருச்சிக்குப் புறப்பட்டு வந்து கார் விபத்திலே சிக்கிக் கொண்டாளே. நினைத்துப் பாருங்கள். அத்தனை தடுத்தும் அவள் ஏன் புறப்பட்டு வந்தாள்? புருஷனிடத்தில் அவளுக்கு அத்தனை பாசம் இருக்கிறது டாக்டர்!

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள"

என்ற வள்ளுவரின் குறளைக் கேட்டிருப்பீர்கள். 'பெண் பிறப்பைப்போல் மேம்பட்ட பிறப்பு எது' என்று மணக்குடவர் இதற்கு உரை எழுதுகிறார். கணவனே எல்லாமும் என்கிற கற்பு மட்டும் இருந்து விட்டால்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள ; கற்பெனும்
திண்மை உண் டாகப் பெறின்!"

என்கிறார் திருவள்ளுவர்"—கல்யாணியைப் பற்றி இப்படிச் சொல்லும் போது கனகசுந்தரத்துக்குக் குரல் அடைத்தது.

"என்ன அப்பா! உங்களுடைய திருக்குறள் ஆராய்ச்சியை ஆரம்பித்து விட்டீர்களா? சரி, இனிமேல்..." என்று ஆரம்பித்தான் நாகரத்தினம். இதுவரை சுவரோடு சுவராக ஒரே மௌனத்தில் உட்கார்ந்திருந்த உஸ்தாத் மீரான், நாகரத்தினத்தை அப்படி ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தார், இந்தச் சந்தர்ப்பத்தில்.

"நாகரத்தினம்! நீங்கள் கொஞ்சம் பொறுமையாக இருங்கள். உங்கள் தகப்பனார் தமிழ் நாகரிகம் என்ற பண்புகளின் உருவம் என்று நான் வியந்த வண்ணம் இருக்கிறேன். நீங்களானால்......"

"டாக்டர்! நாகரத்தினத்துக்கும் எனக்கும் வெகு தூரம். என்னுடைய பிள்ளைதான். ஆனாலும் என் போக்கு அவனுக்குப் பிடிப்பதில்லை. நான் அந்தக் காலத்து மனிதன். அவனோ......"

"அவன் விநாசகாலத்து ஆசாமி!" என்று வார்த்தையைச் செருகினார் உஸ்தாத் மீரான். அவருக்குக் கண் சிவந்திருந்தது.

டாக்டர் சுரேஷ் பேச்சை மாற்றினார்.

"என்ன மிராசுதார்வாள்! நீங்கள் என்னவோ பெண் குழந்தைகளைப் பற்றி அலுத்துக் கொண்டீர்களே, ஒரு பெண் குழந்தைகூட இல்லாத தகப்பனாராக இருந்து கொண்டு! லால்குடி ஐயா சொல்வதைக் கேட்டீர்களா?" என்றார் டாக்டர், அப்புலிங்கத்தின் தகப்பனாரிடம்.

"ஏது டாக்டர்! அப்பாவை இத்தனை தூரம் குழை அடிக்க ஆரம்பித்து விட்டீர்கள்? எனக்குப் பயமாக இருக்கிறதே!" என்றான் நாகரத்தினம், கடுகடுப்பாக முகத்தை வைத்துக் கொண்டே! உஸ்தாத் இந்த இடத்தில் ஒரு தரம் இருமிக் கொண்டார். உள்ளத்தில் பொங்குகிற கோபத்தை இருமலாகக் கழித்து விடுகிறார் என்பது அவருடைய முகக் குறிப்பிலே தெரிந்தது.

"தம்பீ! எல்லாரிடமும் பேசுவதுபோல நம்முடைய டாக்டரிடமும் தூக்கி எறிந்து பேசாதே. அவர் ஒருவர் தான் உன்னுடைய அத்தானுக்கு ஊன்றுகோல்.

தெரிந்ததா ?" என்றார் மிராசுதார், சாவதானமாக வார்த்தைகளை அடுக்கிய வண்ணம்.

"டாக்டர் ஸாரை எனக்கு நன்றாகத் தெரியும்! அவர் வந்து சேர்ந்த பிறகுதானே மற்ற ஊன்று கோல்கள் அத்தானுக்குத் தேவைப் படுகிறதில்லை. போதாத குறைக்கு ஒரு புல்லாங்குழல் வேறு பரிசு கொடுத்தாராமே. அதை விடச் சிறந்த ஊன்றுகோல் வேறு என்ன உண்டு?" என்றான் நாகரத்தினம் ஏகத் தாளமாக. உஸ்தாதுக்கு மீசை துடித்தது. கோபத்தை அடக்க முடியாமல் வார்த்தைகள் வெளிவந்தன. "இந்தா நாகரத்தினம்! உன்னுடைய அத்தானுக்கு வேறு ஊன்றுகோல்களும் இருக்கின்றன, தெரியுமா! இந்த உஸ்தாதின் சிலம்பப் பள்ளிக்கூடத்திலே இருக்கிற ஒவ்வொரு சிலம்பக் கம்பும் ஒரு ஊன்றுகோல். ஞாபகம் இருக்கட்டும்!" என்றார் மீரான்.

"ஓ! தெரியுமே! புதிதாக மலைக்காட்டிலேயிருந்து கூடப் பல ஊன்றுகோல்கள் வந்திருக்கின்றன என்று எனக்குத் தெரியும்!" என்றான் நாகரத்தினம்.

மகனுடைய பேச்சை எப்படி அடக்குவது என்று தெரியாமல் தகப்பனார் தவிக்கிறார் என்பது கனக சுந்தரத்தின் முகத்திலே தெரிந்தது. டாக்டர் இதைப் புரிந்து கொண்டார். சிரித்துக் கொண்டே பேச ஆரம் பித்தார்.

"மிஸ்டர் நாகரத்தினம்! தயவு செய்து என்னிடம் சண்டைக்கு வாருங்கள். எனக்குத் தர்மாமீட்டரைத் தவிர வேறு ஊன்றுகோலே தெரியாது! திராணி இல்லாத மனுஷன் நான்! என்னை விட்டு விட்டு உஸ்தா திடம் ஏன் பேசுகிறீர்கள்? அதிலும் இந்தச் சந்தர்ப் பத்தில்......" என்று சிரித்தார் டாக்டர் சுரேஷ். நாக ரத்தினம் சிரிக்கவில்லை.

"கம்பு பிடிக்கத் தெரியாதவனோடு நான் சண்டைக்குப் போவதில்லை டாக்டர். உண்மையில் இந்த வீட்டில் இத்தனை அலட்சியமும், நாங்கள் எல்லாம் பெரிதில்லை என்ற அகம்பாவமும் யாருடைய தைரியத்

திஞல் ஏற்பட்டது என்று எனக்குத் தெரியும். அந்த அகம்பாவத்துக்கு இப்பொழுது இப்படிச் சோதிக்கிருன் கடவுள்!" என்ருன் நாகரத்தினம்.

"ஏண்டா! கடவுளை ஏண்டா இழுக்கிருய்? உனக்குக் கூடக் கடவுள் இருக்கிருரா? அன்றைக்கு ராத்திரி குப்புசாமியைச் சுவரேறிக் குதிக்கச் சொன்னபோது கடவுள் எங்கேடா இருந்தார்? ஒரு நல்ல மனைவியின் மனசை நன்ருகக் கலைப்பதற்கு முனைந்தாயே, அன்றைக்கு எங்கேடா போயிருந்தார் உன்னுடைய கடவுள்? குருத் துரோகம் செய்வதற்குப் பகோராவைத் தயார் பண்ணி ஞயே, அப்பொழுது உன்னுடைய கடவுள் எங்கே போயிருந்தார்?" என்று கேட்டார் உஸ்தாத்.

"உஸ்தாத்—" என்ருர் டாக்டர் சுரேஷ், அந்த ஒரு வார்த்தையிலே எத்தனையோ விஷயங்களை அடக்கி அவரை அமர்த்த விரும்புகிறவரைப் போல.

"டாக்டர்! நீங்கள் ஏன் உஸ்தாதை அமர்த்து கிறீர்கள்? அனுவசியம். கிழட்டுப் புலிக்குத்தான் எப் பொழுதுமே கோபம் அதிகம். ஆனல் காரியம் நடவாது. ஸர்க்கஸில் பார்த்ததில்லையா? வித்தைக்காரனிடம் பார்த்ததில்லையா? பல் போன சிங்கம், திராணி இல்லாத குதிரை, கிழட்டுக் கரடி, வயதான குரங்கு இவைகளை வைத்துக் கொண்டுதான் வித்தை காண்பிப்பார்கள். அவற்றைக் கோபப்படுத்தி ஜனங்களைப் பயமுறுத்தலாம். ஆனல் அவற்றினல் ஆபத்து ஒன்றும் இல்லை என்பது வித்தைக்காரனுக்கு மட்டும் நன்ருகத் தெரியும்!"

"நாகரத்தினம்! இப்படிச் சண்டை பிடிப்பதற்காகத் தான் நீ இங்கே எங்களோடு வந்தாயா?" என்று கேட்டார் கனகசுந்தரம். மகனை வேறுவிதமாக அடக்க முடிய வில்லை அவரால்!

"அப்பா! உங்களுக்குப் பிடிக்கவில்லை யென்ருல், நீங்களும் உங்கள் மகளும், அந்தப் பைத்தியக்கார மாப்பிள்ளையும் எக்கேடு கெட்டுப் போங்கள். நான் வருகிறேன். ஆனல் ஒன்று மட்டும் சொல்கிறேன். இந்த டாக்டரும், இந்த உஸ்தாதும்—"

இதற்குள் உஸ்தாத் மீரானுக்குக் கோபம் கரை புரண்டு விட்டது.

“இந்தா! நாகப்பாம்பு! என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் பேசு! குச்சி பதில் சொல்லும். டாக்டரைப் பற்றி ஏதாவது பேசினாயானால்—!”

“உஸ்தாத்! இந்த வரட்டுப் பேச்செல்லாம் இனி மேல் நம்மிடம் வேண்டாம். குச்சி என்று சொன்னீர்களே, அதோடு வைத்துக் கொள்ளுங்கள். அதிகமாகப் பேச வேண்டாம். ஏதோ அந்தக் காலத்தில் உங்களிடம் தேங்காய் தட்டின மரியாதைக்கு இதுவரை பார்த்தேன். நீங்கள் என்னடா என்றால், வரவர இந்தக் குடும்பத்தையே எனக்குப் பகையாக்கிவிட நிற்கிறீர்கள். பார்க்கலாம்” என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் நாகு.

“என்ன சொன்னாய்! பார்க்கலாமா? தம்பி! யாரிடம் பேசுகிறாய் தெரியுமா?”

“உஸ்தாத்” என்று அவரைக் கையமர்த்தினார் டாக்டர். மிராசுதாரும், அப்புலிங்கமும், மீரானுக்கு அருகிலே வந்தார்கள். கனகசுந்தரம் தம்முடைய மகனுக்கு அருகிலே போய் நின்றுகொண்டு சொன்னார்:

“நாகரத்தினம்! நீ போடா பேசாமல்! நீ போடா! இங்கே நின்று என் பிராணனை வாங்காதே!”

“உங்கள் பிராணனையா! அது என்ன செய்தது பாவம்! வாங்குவதற்கு வேறு பிராணனா இல்லை!”

உஸ்தாத் சீறி எழுந்தார்.

“இந்தா! நாகரத்தினம்! வலுச் சண்டைக்குப் போக மாட்டான் இந்த உஸ்தாத்! ஆனால் வந்த சண்டையை விடமாட்டான். நீ இன்றைக்கு இந்தமாதிரிப் பேசினதற்காக அல்லாஹ் முன்னால் நீ கண்ணீர் வடிக்கவில்லையென்றால், உஸ்தாத் இந்த மீசையை எடுத்து விடுவான்! அவன் ஔரத்! அல்லாஹ் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன்!”

"உஸ்தாத்! இது வீடு! நான் வருகிறேன். இனிமேல் உங்களைச் சந்திக்க வேண்டிய விதத்தில் சந்தித்துக் கொள்ளுகிறேன். சலாம் ஆலே கும்!"

உஸ்தாத் மீரானை நன்றாகப் பிடித்துக் கொண்டார் டாக்டர். கைப்பிடியைவிட அவருடைய அன்பின் பிணைப்பு பலமாக இருந்தது. துடிக்கும் மீசையோடு உட்கார்ந்து விட்டார் உஸ்தாத்.

"பூஜை வேளையில் கரடி என்பார்கள், இங்கே இருக்கிற நிலைமை என்ன! இந்தப் பயல் பேசுவது என்ன! இப்படி ஒரு புத்திரன் நமக்கு வந்து வாய்த் தான்! எல்லாம் நம்முடைய பூர்வ புண்ணிய பலன் டாக்டர்!" என்று தலையில் அடித்துக் கொண்டே மேலும் சொன்னார் கனகசுந்தரம்:

"உஸ்தாத்! டாக்டர்! நீங்கள் இரண்டு பேரும் தயவு செய்து கோபப் படாதீர்கள்! அவனுக்காக நான் மன்னிப்புக் கேட்கிறேன்—" கனசுந்தரம் இப்படிச் சொல்லும்போது குரல் தழதழத்தது.

"நீங்கள் பெரியவர். அப்படி யெல்லாம் சொல்லக் கூடாது. உங்கள் பையனுக்குப் புத்தி வரவழைக்கத்தான் அல்லாஹ் இந்த மாதிரி என்னோடு அவன் பேசும்படிக்குச் செய்திருக்கிறான். இனிமேல் அவனுக்குப் புத்தி வந்து விடும். அதற்கு வழி பிறந்து விட்டது!" இவ்வாறு உஸ்தாத் சொன்னபோது யாரும் பதில் பேசவில்லை.

அப்புவைப் பார்த்து டாக்டர் ஏதோ கண்ஜாடை காட்டினார். உடனே அப்புலிங்கம் எழுந்து உஸ்தாதிடம் ஏதோ சொல்லித் தன்னுடைய அறைக்கு அழைத்துப் போனான்.

டாக்டர் சுரேஷ் கனகசுந்தரத்தோடு பக்குவமாகப் பேச ஆரம்பித்தார். ரவீந்திரனுடைய மூளை நோய்க்கு அருவியும், காடும், நிம்மதியான ஆசிரம வாழ்க்கையும் அவசியம் என்று கூறினார். கல்யாணி கொஞ்ச நாள் கணவனை பிரிந்திருக்க வேண்டும் என்பதையும் குறிப் பிட்டார். நாகரத்தினத்தின் தொடர்பு இல்லாமல் இருக்குமானால் அவள் லால்குடியிலேயே இருப்பதில் தவறில்லை என்றும் சொன்னார் டாக்டர் சுரேஷ்.

"இதையெல்லாம் உத்தேசிக்கும்போது நீங்கள் இப்பொழுது இங்கே வந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று பார்த்தீர்களா!" என்றார் டாக்டர் சுரேஷ்.

"உங்கள் தந்தி கிடைத்ததும் எங்களுக்கு இருப்புக் கொள்ளவில்லை டாக்டர். உடனே வந்து விட்டோம்!" என்றார் கனகசுந்தரம்.

"ஓகோ! நீங்கள தந்தி கொடுத்தீர்களா, டாக்டர்!" என்று கேட்டார் மிராசுதார்.

"ஆமாம், நேற்று இரவு ஆஸ்பத்திரிக்குப் போனதும், இவர்களுக்கு ஒரு தந்தி கொடுத்தேன்!" என்றார் சுரேஷ்.

இவர்கள் இங்கே இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போது, அப்புலிங்கத்தின் அறையில் உஸ்தாதும் அப்புவும் பலமாகச் சர்ச்சை செய்து கொண்டிருந்தார்கள்.

"விஷயம் பலமாக முருகி விட்டது. இனிமேல் என்னுடைய மகளுக்கு நிக்காஹ் செய்துவிட வேண்டியது மிக மிக அவசியம். அப்படியானால்தான் நான் பந்தம் இல்லாத மனிதன் ஆவேன். அப்படியானால்தான் இந்த விஷப் பாம்பின் பல்லை என்னால் எடுக்க முடியும்!" என்றார் உஸதாத்.

"இத்தனை துணிச்சல் இவனுக்கு எப்படி வந்தது உஸ்தாத்! எங்கு போனாலும் கால் பந்து மாதிரி அங்கும் இங்கும் இவனை எல்லாரும் பந்தாடினார்களே! யாரும் உதவி செய்யவில்லையே குப்புசாமியைத் தவிர? அப்படி வருந்தும் இவனுக்கு எப்படி இத்தனை துணிச்சல் யிந்தது?" என்றான் அப்பு.

"அந்த பகோரான் பயல் இப்பொழுது புதிதாகச் சேர்ந்திருக்கிறான். இது தெரியாமல் நானே அந்த பகோரான் பையலோடு போய்ப் பேசினேன், ஆமினா விஷயமாக! என் புத்தியை ஜோட்டால் அடிக்க வேண்டும்!" என்றார் உஸ்தாத்.

"அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள், உஸ்தாத்! பகோரான் அத்தனை மோசமானவன் என்று எனக்குத் தோன்றவில்லை. உங்களிடம் அவனுக்கு மிகுந்த பக்தி உண்டு உஸ்தாத்!"

"அதெல்லாம் அந்தக் காலம் அப்பு! இப்பொழுதெல்லாம் குரு என்கிற மரியாதையே தெரியாத காலம். குருவுக்குக் கபர்க் குழி தோண்டுகிறனே, அவன்தான் நல்ல சிஷ்யன்!"

"இல்லை, உஸ்தாத்! பகோரான் விஷயத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது. இந்த நாகரத்தினம் பகோரானிடம் ஏதாவது பொய் பித்தலாட்டம் பேசி ஏமாற்றியிருப்பான். அதைப் பற்றித் தெளிவாக விசாரித்து விடவேண்டும்!"

"விசாரிக்கிறது என்ன விசாரிக்கிறது. நான் அந்தப் பயலை நேருக்கு நேராக—"

"உஸ்தாத்! என்னை மன்னியுங்கள். தயவு செய்து நீங்கள் போக வேண்டாம். அதிலும் இப்பொழுது உள்ள மன நிலையில் நீங்கள் போகவே கூடாது. நான் போய் பகோரானிடம் எல்லா விவரங்களும் தெரிந்து வருகிறேன். நீங்கள் அதுவரை பொறுத்திருங்கள்" என்றான் அப்புலிங்கம்.

"அது சரி. ஆமினுவின் நிக்காஹைப் பற்றி என்ன சொல்லுகிறய் தம்பி?"

"சொல்லுவது என்ன? எப்பொழுது மஜீதுக்கும் அவளுக்கும் மனம் ஒன்று பட்டாய் விட்டதோ, இனிமேல் அதற்குக் குறுக்கே நிற்பதில் அர்த்தம் இல்லை. முறைப்படி நிக்காஹை முடித்துவிட வேண்டியதுதான்!"

"அதற்கு ஒரு வழி பண்ண வேண்டும் முதலில். நான் ஒரு தனி மனிதனாக வேண்டும். இனிமேல் நமக்கு எந்தவிதமான பந்தமும் இருக்கக் கூடாது!" என்றார் மீரான்.

"உஸ்தாத்! உங்களுக்கு உங்களுடைய மகளிடத்தில் எத்தனை பிரியம் என்பது எனக்குத் தெரியும். கவலைப் படாதீர்கள், மஜீத் ரொம்ப நல்ல பையன். விசுவாசம்

உள்ளவன். ஏதோ வாலிப வேகத்தில் இப்படி ஒரு காரியம் செய்து விட்டான். மற்றப்படி—"

"கிழவன் மாதிரிப் பேசுகிருயே தம்பி! நீயும் வாலிபன்தான். நீயும் நிக்காஹ் ஆகாத பிள்ளைதான். சாமியார் இல்லையே நீ!" இப்படிச் சொல்லும்போது உஸ்தாத் சிரித்து விட்டார்—மனத்தில் நிம்மதி அரும்புகிறது என்பதற்கு அடையாளமாக!

"சரி, வாருங்கள்! புறப்படுவோம். நானும் பகேராணைப் பார்த்து விட்டு வருகிறேன்!" என்று சொல்லி, அப்புலிங்கம் எழுந்தான்.

"நாங்கள் கொஞ்சம் வெளியே போய்விட்டு வருகிருேம் டாக்டர். நீங்கள் அதற்குள் ஒரு நிகழ்ச்சித் திட்டம் தயாரித்து வையுங்கள்!"

இவ்வாறு சொல்லிக்கொண்டு அப்புலிங்கம் வெளியே வந்தான். உஸ்தாதும் எல்லாருக்கும் சலாம் செய்து விட்டுப் புறப்பட்டார்.

காரிலே உஸ்தாதை ஏற்றிக் கொண்டு பாலக்கரையில் அவருடைய வீட்டிலே அவரை விட்டுவிட்டு அப்பு லிங்கம் பீமநாயகன் பாளையத்தை நோக்கிச் சென்ருன். பாலக்கரை ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகே அந்தப் புகழ் பெற்ற கேட் பூட்டிக் கிடந்தது. கேட்டுக்கு எதிரே காரை நிறுத்தியதும் அப்புலிங்கம் அதைக் கவனித்தான்—வேகமாக நாகரத்தினம் கேட்டைத் தாண்டி நடந்து கொண்டிருந்தான்.

"சரி; இவனும் பகேரான் வீட்டுக்குத்தான் போகிருன் போலிருக்கிறது!" என்று நினைத்துக் கொண்டான் அப்பு.

"சரி; இந்த கேட் திறப்பதற்கு எப்படியும் இன்னும் அரை மணி நேரம் ஆகும். அதற்குள் நாகரத்தினம் பகேரான் வீட்டிலிருந்து கிளம்பி விடுவான்!" என்று யோசித்தவனுகக் கையிலே கொண்டுவந் திருந்த ஓர்

ஆங்கிலப் புத்தகத்தைக் காரின் ஸ்டியரிங் வீலுக்கு மேலே வைத்துப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான் அப்பு.

'வாழ்க்கை' என்ற புதிரைப் பற்றி உலகப் பெரியார்களின் கருத்துக்களைத் திரட்டித் தரும் ஒரு நூல் அது.

"வாழ்க்கை என்பது ஒரு குஸ்தி மைதானம்!" என்றார் ஒருவர்.

"வாழ்க்கை என்பது ஒரு கால் பந்தாட்டம்!" என்றார் இன்னொருவர்.

"வாழ்க்கை என்பது ஒரு ஸர்க்கஸ் கூடாரம். ஒவ்வொரு மனிதனும் விதி என்ற ஸர்க்கஸ் மாஸ்டர் ஆட்டுகிற ஆட்டத்துக்கெல்லாம் ஆடவேண்டிய இரண்டு கால் மிருகம்!"—இப்படிச் சொல்லியிருந்தார் மற்றொருவர்.

"வாழ்க்கையில் இன்னும் என்ன என்ன எல்லாம் இருக்கிறதோ! பார்க்கலாம்!" என்று எண்ணிக் கொண்டே கேட்டைத் திறந்ததும் காரை ஓட்டிக் கொண்டு பகோரான் வீட்டை நோக்கிச் சென்றான் அப்பு.

வாழ்வின் விந்தையை என்ன சொல்வது! "அப்பு ஸாரா! வாருங்கள் ஸார்!" என்று சொல்லி நாற்காலியைக் காண்பித்தான் பகோரான். நாற்காலியில் உட்காரும் போதே இடது புறம் நாகரத்தினம் உட்கார்ந்து விஷமத்தனமாக விழித்தான்.

"ஓ! நாகரத்தினமா!" என்று முகமன் கூறினான் அப்பு.

"ஆமாம், எங்கள் அப்பாவின் புத்திர பாக்கியம்!" என்று சொல்லிக் கொண்டே தன்னம்பிக்கையோடு நாகரத்தினம் தொண்டையை இருமிக் கொண்ட விதத்தில் விஷமத்தின் வெற்றி தொனித்தது.

அப்பு பகோரானைக் கூர்ந்து பார்த்தான். அந்த முகத்தில் ஏதோ ஒரு பரிதாபம் இருந்தது. 'எக்கச் சக்கமாக' ஒரு பெரிய சங்கடத்தில் மாட்டிக் கொண்டு விட்டது போன்ற நெருக்கடி பகோரான் முகக் குறிப்பில் தெரிந்தது.

உண்மை; பாலக்கரைப் புகை வண்டி நிலையத்தின் ஆசார வாசலிலே அரை மணி நேரம் அப்புலிங்கம் காத்துக் கொண்டிருந்தான் அல்லவா, அதற்குள் பகோரான் வீட்டில் அத்தனை பெரிய சிக்கலான விஷயம் நேர்ந்துபோய் இருந்தது!

## 30. சகோதரி சாவித்திரி

'அன்னை காவேரிதான் எனக்குப் புகல். என்னைப் போன்ற தாயற்ற அனாதைகளுக்குத் தாயும் தந்தையும் அந்தக் காவேரி அன்னை தானே!' என்று எண்ணி அந்தத் துயரமான முடிவுக்கு வந்த சந்திரிகா, கண்ணீர் வடித்துக் கொண்டே கடிதம் எழுதினாள் அல்லவா? அப்படி எழுதி வைத்து விட்டு அவள் மறைந்ததால்தானே இத்தனை குழப்பங்களும் நேர்ந்தன? ஆனால் உண்மையில் சந்திரிகா என்ன ஆனாள்? ரவீந்திரனுடைய வீட்டிலிருந்து அவள் இரவு அத்தனை நேரத்துக்குப் பிறகு யாருக்கும் தெரியாமல் வெளியே கிளம்பியபின் என்னதான் நடந்தது?

ஆண்டார் தெருவில் இரவு சுமார் மூன்று மணிக்கு யாரோ ஒரு பெண் நடந்து போனதைக் கண்டதாக ரோந்துப் போலீஸ்காரர்கள் சொன்னது உண்மைதான். அந்த நேரத்தில் அப்படி ஆண்டார் தெரு வீதியிலே நடந்து சென்றவள் சந்திரிகாவேதான். அவள் காவேரிக் கரையை நோக்கித்தான் நடந்தாள். அதுவும் உண்மை தான். ஆனால் அப்படி அவள் காவேரியை நோக்கி நடந்து சென்றபோதுதான் அந்த மனப் போராட்டமும் நடந்தது!

திருச்சிராப்பள்ளியில் சிந்தாமணிப் படித்துறையைத் தாண்டினால் ஆழமான ஒரு கசம் இருக்கிறது என்று சந்திரிகாவுக்குத் தெரியும். கேள்விப்பட்டிருக்கிறாள். அந்த இடத்தை நோக்கித்தான் அவள் நெடுஞ்சாலை வழியாக நடந்து கொண்டிருந்தாள். அப்பொழுது அந்தச் சாலை வழியாக உறங்கிக்கொண்டே நடந்து செல்கிற மாடுகள், பாரமான வண்டியையும் உறங்கி விழும் வண்டிக்

காரரையும் சேர்த்து இழுத்துக் கொண்டு, தங்களைத் தாங்களே ஓட்டிக் கொண்டே வழி நடந்தன. வரிசை வரிசையான அந்தப் பார வண்டிகளுக்குப் பின்னால் கடைசியிலே வந்த ஒரு பார வண்டியில் மட்டும், வாலிபன் ஒருவன் உறங்காமல் கண் விழித்தவாறு பாடிக்கொண்டேயிருந்தான். தன்னுடைய காதலியை நினைத்து உறக்கம் வராத விழிகளை நன்றாகத் திறந்து வைத்துக் கொண்டு இருந்தாலும், அவனுடைய பார்வையெல்லாம் பாதையிலே இல்லை. அந்தப் பார்வை மனத்துக்கு உள்ளே சென்று, அங்கே மனப் பீடத்தில் அமர்ந்திருக்கும் அவனுடைய காதலியைத்தான் கற்பனையிலே பார்த்துச் சொக்கிக் கொண்டிருந்தது. வாயோ அந்தப் பாட்டை ஆனந்தமாகப் பாடிய வண்ணம் அப்படியே அசை போட்டுக் கொண்டு இருந்தது.

பருப்பு பிடிக்கும் வண்டி—இது
    பட்டணந்தான் போகும் வண்டி
பருப்புவிலை ஆகட்டுண்டி—தங்கரத்தினமே
    பதக்கம் பண்ணிப் போடுறேண்டி—பொன்னுரத்தினமே

அரிசி பிடிக்கும் வண்டி—இது
    அவினாசி போகும் வண்டி
அரிசிவிலை ஏறட்டுண்டி—தங்கரத்தினமே
    அட்டி பண்ணிப் போடுறேண்டி—பொன்னுரத்தினமே

கொள்ளு பிடிக்கும் வண்டி—இது
    கோட்டைதாண்டிப் போகும் வண்டி
கொள்ளுவிலை ஏறட்டுண்டி—தங்கரத்தினமே
    கொலுசு பண்ணிப் போடுறேண்டி—பொன்னுரத்தினமே

வாழப் பிறந்த வண்டி—இது
    வாழவகை செய்யும் வண்டி
மாளாப் பிறவியல்லோ—தங்கரத்தினமே
    மனுசப் பிறவியடி!—பொன்னுரத்தினமே

சாலை யோரமாக நடந்து சென்ற சந்திரிகா இந்தப் பாடல் காதில் விழுந்ததும் திகைத்துப் போய் நின்றாள். எத்தனையோ வர்ண மெட்டுக்களையும், தென்னாட்டுச் சங்கீதத்தின் வகை தொகைகளையும் கேட்டுப் பண்பட்டிருந்த அவளுடைய செவிகளில் இந்தப் பாட்டின் எளிமையான மெட்டும், அந்த வண்டிக்காரனின் இயற்கையான குரலும் அதில் இழைந்து வந்த பாடலின் உணர்ச்சியும், அதில் ஊடுருவி நின்ற தன்னம்பிக்கையும் புகுந்து மனத்தை என்னவோ செய்தன.

எத்தனையோ வறுமையிலும் துன்பத்திலும் சிக்கியுள்ள ஏழைக் குடியானவனுடைய பாட்டுத்தான் அது. ஆனால் அதில் எத்தனை தன்னம்பிக்கை. தன்னுடைய காதலியினிடத்திலே உள்ள பாசத்தினால் என்னென்ன இலட்சியக் கனவுகள் எல்லாம் அவனுடைய உள்ளத்தில் உண்டாகின்றன. எத்தனை துன்பத்துக்கு மத்தியிலும் அவனுக்கு விரக்தியோ அவநம்பிக்கையோ ஏற்படக் காணோமே. அதிலும் அவன் பாடிய அந்தக் கடைசி வரிகள் தான் எத்தனை உண்மை!

"மாளாப் பிறவியல்லோ—
மனுசப் பிறவியடி!"

பார வண்டி சாலையோரமாக நகர்ந்து இப்பொழுது தொலை தூரம் சென்று விட்டது. ஆனாலும் அந்த வண்டிக்காரனுடைய குரல் தொலைவில் எங்கோ ஒரு தெய்வ உலகிலிருந்து வரும் நாதமாக மெதுவாகக் கேட்டது.

"மாளாப் பிறவியல்லோ—
மனுசப் பிறவியடி"

சந்திரிகா நினைத்தாள். இந்த வண்டிக்காரனுடைய வார்த்தைகளில் எத்தனை பெரிய தத்துவம் அடங்கியிருக்கிறது. 'புல்லில் இருந்து பரிணமித்து மனிதன் வந்திருக்கிறான்' என்றெல்லாம் விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். இந்த ஒரு ஜன்மத்தோடு முடிகிற காரியமில்லை மனிதப் பிறவி, என்று மகான்கள் சொல்கிறார்கள். உண்மை தானே.

சந்திரிகா எண்ணினாள் : 'தான் இப்படியே காவேரி நதியிலே போய் விழுந்து விடலாம். உயிரை முடித்துக் கொண்டு விடலாம். இந்த வாழ்க்கையின் இன்னல்களைத் தாங்க முடியாமல் இப்படி ஒரு முடிவு செய்துகொள்ளலாம். ஆனால் இறந்த பிறகு நமக்காகக் காத்திருக்கும் வாழ்க்கை இதைவிட இன்பமாக இருக்கும் என்று யார் கண்டார்கள்? அதிலும் இப்படி ஒரு துர் மரணத்தினால் சாவு கிட்டியது என்றால் பிறகு அதன் விளைவு எப்படியிருக்குமோ? அல்லது மறு ஜன்மம் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளலாம். அந்த மறு ஜன்மம் மட்டும் சிக்கலின்றி ஒரே சீராக அமைந்து விடும் என்பது என்ன நிச்சயம்?'

இப்படி நினைத்துப் பார்த்ததும் சந்திரிகா ஒரு கணம் சாலையோரத்திலே நின்ற மருதமரத்தின் அடியில் நின்றாள். மீண்டும் யோசித்தாள் :

'தற்கொலை ஒன்றுதான் வாழ்வின் சிக்கல்களுக்கு ஒரே விடை என்றால், மரணத்தைப் போன்ற சஞ்சீவி உலகில் வேறு எது உண்டு? பின் ஏன் அறிவாளிகள் எல்லாம் தற்கொலையை வெறுத்துப் பேசியிருக்கிறார்கள்?'

சந்திரிகா மனம் கலங்கினாள்.

'நான் தற்கொலை செய்ய நினைப்பது எனக்காக மட்டும் இல்லையே. என்னை அன்போடு வளர்த்து, பாடப் படிக்க வைத்துக் கைதூக்கி விட்ட அந்தப் புண்ணியவாளனுடைய வாழ்க்கையில் அமைதியை நிலை நாட்டத் தானே. அப்படி அமைதியை நிலை நாட்ட, ஒரு பாபம் செய்துதான் ஆக வேண்டும் என்றால் ஏன் அதையும் செய்யக் கூடாது?'

இப்படி எண்ணியபோதே மறுவிநாடி இன்னொரு நினைப்பும் பளிச்சிட்டது.

'உண்மையில் நான் தற்கொலை செய்து விடுவதால் ரவீந்திரனுடைய மனத்தில் அமைதி உண்டாகி விடுமா? அவருடைய ஒரே இலட்சியம், புகழ் பெற்ற கங்கமுத்து நட்டுவனாரின் பரம்பரைச் சொத்தான இசைச் செல்வம் வழிவழியாகத் துலங்கிக்கொண்டு இருக்கவேண்டும் என்ப

தல்லவா! தான் இப்படியே மடிந்து விட்டால் இனி என்ன ஆகும்! அவருடைய ஒரே பரம்பரைச் சொத்தான அந்த இசைச் செல்வத்தை ரவீந்திரன் எத்தனை ஆசையோடு தனக்கு வழங்கினர். தன்னுடைய உடம்பைக் காவேரியிலே ஆழ்த்தி விட்டால் அந்த இசைச் செல்வமும் அல்லவா ஆற்ரேடு போய்விடும்! கங்கமுத்து நட்டுவ ஞரின் பரம்பரையே காவேரியோடு போய் விட்டது என்றல்லவா ஆகிவிடும்? என்ன பைத்தியக்கார நினைப்பு இது!'

இப்படி எண்ணியதும் சந்திரிகா அந்த மரத்தடியில் நன்ருகக் கால்களைப் பாவிக் கொண்டு நிதானமாக நின்ருள்.

'சரி; தற்கொலை செய்து கொள்வது அறியாமை. ஆனல் மீண்டும் வீட்டுக்குத் திரும்புவதா? அது அதை விடப் பெரிய அறியாமை. இனி ஒரு கணம் அந்த வீட்டில் இருந்தாலும் அது குருத் துரோகம். அவருடைய வாழ்க் கையைப் பாழ்படுத்துவதாகும். அப்படியானல்......'

'இப்படியே யாருடைய கண்ணிலும் படாமல் எங்காவது ஓடி மறைந்து விட்டால் என்ன?' என்று எண்ணினள் சந்திரிகா.

இப்படி நினைத்ததும் சந்திரிகாவுக்கு ராமநாதன் சொன்ன விவரம் பளிச்சென்று ஞாபகம் வந்தது.

'ராமநாதனுடைய சகோதரிகளில் ஒருத்தி பம்பாயில் இருக்கிருள் என்ருரே. அங்கே மாதுங்காவில் கூட இப்பொழுது புதிதாக ஒரு நாட்டியப் பள்ளிக்கூடம் ஆரம் பித்திருப்பதாகச் சொன்ஞரே. இப்படியே நாம் பம்பாய் போய்ச் சேர்ந்து விட்டால் என்ன? கங்கமுத்து நட்டுவ ஞரின் பரம்பரை திருச்சியிலே தழைப்பதற்குத்தானே மார்க்கம் இல்லை. யாருக்கும் தெரியாமல் அந்தத் தூரப் பிரதேசத்தில் நம்முடைய குரு காணிக்கையாக இந்தச் சேவையைச் செய்து கொண்டிருந்தால் என்ன? இத்தனை பாடுபட்டு நம்மை முன்னுக்குக் கொண்டு வந்தவரிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போகிற இந்தப்

பாபத்துக்கு, அதை விடச் சரியான பிராயச் சித்தம் வேறு என்ன இருக்க முடியும் ?'

இப்படி நினைத்ததும் சந்திரிகா அந்த மரத்தடியில், மறைவிலேயிருந்த ஒரு சிறு கல்லின் மேல் உட்கார்ந்தாள். பத்து நிமிஷம் அப்படியே மௌனமாக இருந்து யோசனை செய்தாள்.

'ஆமாம் ; அதுதான் சரியான முடிவு. அதைச் செய்து பார்ப்போம். மீண்டும் அது சரிப்படவில்லையென்றால், மரணம் என்ற மருந்து எங்கே போய்விட்டது ? அந்தக் கைகண்ட மருந்து காவேரித் தண்ணீரில் மட்டுந்தான் கரையுமா ? பம்பாயில் ஆறோ, குளமோ, கிணறோ இல்லாமலா போகிறது, ஏன் அங்கே பெரிய கடலே இருப்பதாகச் சொல்கிறார்களே !''

இப்படி நினைத்துக் கொண்டே சிரித்தாள் சந்திரிகா. அந்தச் சிரிப்பில் வேதனை தெறித்த போதிலும் அந்த வேதனையிலுங்கூட ஒரு தெளிவு துலங்கியது. துன்பச் சிரிப்புத்தான். ஆனால் அந்தத் துன்பச் சிரிப்பிலே குழப்பம் இல்லை. உறுதிப்பாடு இருந்தது.

உயிரை விடுவது என்ற தீர்மானத்தில் இருந்தபோது அந்த ஏகாந்தமான சாலையும், மரம் செடிகளும் அவளுக்குப் பயமாக இல்லை. இப்பொழுது கங்கமுத்து நட்டுவனாரின் இசைப் பரம்பரையைப் பாதுகாக்க வேண்டும் என்ற கடமை உணர்ச்சி மேலிட்டதோ இல்லையோ, மறு கணம் அந்தச் சாலை ஒரே பயங்கரமாக இருந்தது. மருத மரமும், புளிய மரமும் தலை விரித்தாடும் பூத பைசாசங்களாகக் காட்சி தந்தன. சாலையின் நிசப்தத்தூடே மரங்களிலே காற்று ஊளையிட்டுச் செல்வது, சந்திரிகாவின் காதில் விவரிக்க முடியாத அச்சத்தை உண்டாக்கியது. அந்த இடத்திலிருந்து எழுந்து வேகமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தாள் அவள்.

* * *

**ப**ம்பாய் மாதுங்காவில் மாதர் கலைச் சங்கத்திலே கலை விழாவுக்கான ஏற்பாடுகள் இரண்டு வாரங்களுக்கு

முன்பிருந்தே ஏக அமர்க்களமாக நடந்துகொண்டிருந்தன. புதிதாக ஆரம்பித்திருந்த சங்கம் ஆனதால், காரியதரிசி சாவித்திரி அம்மாள் இரவும் பகலும் ஊண், உறக்கம் இல்லாமல் நிகழ்ச்சி நிரல் தயாரிப்பதும், நன்கொடை வசூலிக்க அங்கத்தினர்களை நாலு திசைக்கும் அனுப்புவதுமாக ஒரே சுரு சுருப்பாக இருந்தாள், சங்கக் காரியாலயத்தில் தன்னுடைய அறையிலே. அப்பொழுதுதான் சங்கத்தைச் சேர்ந்த ஒரு சிறுமி வந்து வெளியே யாரோ திருச்சியிலிருந்து ஒரு பெண்மணி காரியதரிசியைப் பார்க்க வந்திருப்பதாக அறிவித்தாள். வேறு யாருமாக இருந்தால் அத்தனை வேலைகளுக்கு மத்தியில் 'பார்க்க முடியாது' என்று சொல்லியனுப்பி யிருப்பாள் சாவித்திரி அம்மாள். ஆனால் திருச்சியிலிருந்து என்று சொன்னதும், பிறந்த ஊர்ப்பாசம் சாவித்திரியம்மாளை ஆட்கொண்டது. 'உள்ளே வரச்சொல்' என்றாள்.

'திருச்சிப் பெண்மணி' காரியதரிசியின் அறைக்குள்ளே நுழைந்ததும் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டாள்.

"என்னம்மா இப்படித் திகைத்து நிற்கிறாய்? இதற்கு முன்பு என்னை எங்காவது சந்தித்திருக்கிறாயா?" என்று கேட்டாள் சாவித்திரியம்மாள்.

"அப்படி எண்ணித்தான் திகைத்து விட்டேன். உங்களைப் பார்த்தால் உங்களுடைய தம்பியின் முகஜாடை அப்படியே இருக்கிறது!" என்றாள் சந்திரிகா.

"ராமநாதனைத் தெரியுமா உனக்கு? உட்காரம்மா. நிற்கிறாயே! ராமநாதனுக்குப் புடவை கட்டினால் என்னைப் போலவே இருக்கும் என்று அவனே அடிக்கடி சொல்லுவான். வேடிக்கையில்லை. அவன் காலேஜில் படிக்கும்போது ஒரு நாடகத்தில் அவனுக்குப் பெண் வேஷம் போட்டார்களாம். என்ன ஆயிற்று தெரியுமோ? அவனோடு படித்த பிள்ளைகள் எல்லாம் அவனைச் சாவித்திரி சாவித்திரி என்று கூப்பிட ஆரம்பித்து விட்டார்களாம்!"

இப்படிச் சொன்னபோது சாவித்திரியம்மாளுடைய குரலிலும் முகத்திலும் தம்பியென்ற வாஞ்சை அப்படியே பிரதிபலித்தது. சந்திரிகா அதைக் கவனித்தாள்.

"உனக்குத் திருச்சியா அம்மா?" என்று கேட்டாள் சாவித்திரி அம்மாள்.

"ஆமாம்" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டு, அதற்குமேல் என்ன சொல்வது என்று தெரியாமல் விழித்தாள் சந்திரிகா.

"திருச்சியில் எந்தத் தெரு?" என்று கேட்டாள் சாவித்திரி.

"தாயுமானவர் தெரு" என்று சொல்லும்போதே திகைத்து நின்று விட்டாள் சந்திரிகா. பழைய ஞாபகம் அது. புதிய இடமான ஆண்டார் தெரு மனத்திலே இன்னும் பதிந்து வார்த்தையிலே வருவதற்கு உரிய காலம் ஏற்படுவதற்கு முன்புதான், இத்தனை குழப்பம் எல்லாம் ஆய் விட்டதே.

இவ்வாறு எண்ணியவளாக, சந்திரிகா தன்னையும் மறந்து பெருமூச்சு விட்டாள்.

"தாயுமானவர் தெருவா! அதற்கு ஏனம்மா இத்தனை பெருமூச்சு விடுகிறாய். இந்தப் பம்பாய் வீதிகளைப் போல இல்லைதான் அது. ஆனால் எத்தனை அடக்கமான இடம் அது. அதிலும் தம்பி இருந்தானே அந்த வீடு எத்தனை நிம்மதியான வீடு. எனக்கு என்னவோ இந்தப் பம்பாய் இரைச்சலில் இருந்து இருந்து அலுத்து விட்டது. பேசாமல் தாயுமானவர் தெருவிலே போய் இரண்டு மாதம் இருந்து விட்டு-வந்தால் என்ன என்று தோன்றுகிறது. மனசுக்கு எத்தனை குளுமையான இடம் அது!" என்றாள் சாவித்திரி.

தாயுமானவர் தெரு, அடக்கம், நிம்மதி, குளுமை— இந்த வார்த்தைகள் எல்லாம் அனலும் புகையுமாகக் குமைந்தன சந்திரிகாவுக்கு. அப்படியே கண் கலங்கியது.

இந்த இடத்தில் சாவித்திரி அம்மாள் பேச ஆரம்பித்தாள்: "என்ன செய்ய! ஊரை நினைத்தால் மனசு நெகிழத்தான் செய்கிறது. அதிலும் ஊரை விட்டு எத்தனைக்கு எத்தனை தொலை தூரம் வருகிறோமோ, அத்தனைக்கு அத்தனை ஊர்ப் பாசம் அதிகரிக்கிறது!

கண்கலங்கத்தான் செய்யும்" என்றாள் சாவித்திரி. இப்பொழுது சந்திரிகாவுக்கு அழுகையே வந்து விட்டது. கஷ்டப்பட்டு அதை அடக்க முயன்றாள்.

"நான் ஏதோ ஊர்க்கதை பேச ஆரம்பித்து விட்டேன். நீ எப்பொழுது அம்மா பம்பாய்க்கு வந்தாய்? என்னுடைய விலாசம் தம்பி சொன்னானா? அவன் தில்லிக்குப் போய்ச் சேர்ந்து நேற்றுத்தான் கடிதம் வந்தது. உனக்கு அவனைத் தெரியுமா?"—இப்படிச் சரமாரியாகக் கேள்விகளைப் போட்டுக் கொண்டே வந்த சாவித்திரி அம்மாள், சந்திரிகாவின் முகத்தில் ஏற்பட்ட குழப்பத்தைக் கண்டு 'ப்ரேக்' போட்டுக் கொண்டாள்.

"பார்த்தாயா! நான் பாட்டுக்குக் கேள்விமேல் கேள்வியாகப் போடுகிறேன். நீ எதற்கு என்றுதான் பதில் சொல்வாய்—இப்பொழுது சொல். முதலில் நீ எப்பொழுது பம்பாய்க்கு வந்தாய்? எங்கே தங்கி யிருக்கிறாய்? உனக்கு இங்கே யார் உறவு?"

சந்திரிகா ஒரு தரம் இருமிக் குரலைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

"பார்த்தாயா? அதற்குள் சேர்ந்தாற்போல் மூன்று கேள்வி கேட்டு விட்டேனே! மன்னித்துக் கொள் அம்மா. எனக்கு இந்தக் கலைவிழாச் சந்தடியில் நிதானமே தவறிப் போய் விட்டது. சொல்லம்மா. நீ பம்பாய்க்கு வந்து எத்தனை நாள் ஆகிறது?"

"இன்றுதான்!" என்றாள் சந்திரிகா.

"இன்றைக்கா? காலையிலா?"

"இப்பொழுதுதான்!" என்றாள் சந்திரிகா.

"அப்படியானால் எங்கே தங்கி யிருக்கிறாய்?"

"இன்னும் எங்கும் தங்கவில்லை!"

"ஓ! ஸ்டேஷனிலிருந்து நேரே வருகிறாயா? அப்படியானால் உன்னுடைய சாமான்கள்?"

"ஒன்றுமில்லை."

"என்ன?" என்று கேட்டுக் கொண்டே நாற்காலியி லிருந்து எழுந்தாள் சாவித்திரி அம்மாள். சந்திரிகா மிகக் கஷ்டப்பட்டு நிதானத்தை வரவழைத்துக் கொண்டாள்.

"அம்மா! உங்களுடைய தம்பி எங்கள் குடும்பத் துக்கு மிகவும் வேண்டியவர். அவர் சொன்ன தகவலை வைத்துத்தான் இங்கே வந்திருக்கிறேன்!"

"பெட்டி படுக்கை யெல்லாம் என்ன ஆயிற்று. ரயிலில் களவு கொடுத்து விட்டாயா? ஐயய்யோ!" என்று அங்கலாய்த்தாள் சாவித்திரி.

"அம்மா, நான் இங்கு வந்து சேர்ந்தது ஒரு கதை. அதை சாவகாசமாய்த்தான் சொல்ல வேண்டும். உண்மையைக் கூறுவதா யிருந்தால் நான் பிறந்ததே ஒரு கதை. நான் வளர்ந்தது ஒரு கதை. நான் ஆடியது, பாடியது எல்லாம் ஒரு கதை. இங்கே வந்து சேர்ந்ததும் ஒரு கதைதான். அதை யெல்லாம் சொல்லுவதாயிருந் தால் இந்த ஒரு நாள் போதாது!"

சாவித்திரி அம்மாள் மௌனமாகி விட்டாள். தனக்கு எதிரே ஒரே சோகமாக உட்கார்ந்திருந்த அந்தத் திருச்சி நங்கையை ஆராய்ந்து பார்த்தாள். அந்த முகத்தின் அசாதாரண எழிலும், கண்களின் தீட்சண்யமும், உடம்பிலே ஊடாடிய ஒயிலும் அவளைக் கவர்ந்தன.

"சரி! அதெல்லாம் சாவகாசமாகப் பேசுவோம். ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட்கிறேன். நீ ஆடியதும் பாடியதும் என்று சொன்னாயே. அப்படியானால் உனக்கு நடனமும் பாட்டும் தெரியுமோ?"

"தெரியும். அதுதான் இத்தனைக்கும் கரணமாக—" என்று சந்திரிகா வாக்கியத்தை முடிப்பதற்குள் சாவித்திரி அம்மாள் குறுக்கிட்டாள்.

"ஏனம்மா, நீதான் அந்தச் சந்திரிகாவோ?"

அடுத்த விநாடி சந்திரிகாவுக்கு மூச்சே நின்று விடும் போல் இருந்தது. 'தலை மறைவாக யாருக்கும் தெரி யாமல் வாழலாம் என்று வந்த இடத்திலே கூடவா தன்னுடைய பெயர் துலங்குகிறது! அட துரதிருஷ்டமே!'

என்று நினைத்துக் கொண்டே பதில் சொன்னாள் சந்திரிகா.

"ஆமாம் அம்மா, நான்தான் அந்தத் துர்ப் பாக்கியவதி."

"உங்கள் வீட்டிலேதானே இரவு திருடன் குதித் தான்?' என்று மறுபடியும் கேட்டாள் சாவித்திரி.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாதபடி சந்திரிகா அப்படியே திகைப்பிலே மூழ்கிப் போனாள். காவேரி நதியிலேயே மூழ்கி விட்டது போல இருந்தது அவளுக்கு. தலை சுற்றியது. மயக்கமே வரும் போல இருந்தது. ஆனாலும் மயங்கி விழுந்து விடவில்லை. அப்படி மயங்கி விழும்படியான சம்பவம் சந்திரிகாவுக்காகக் கலை விழாவில் அல்லவா காத்திருந்தது!

# 31. மாப்பிள்ளை அழைப்பு

அப்புலிங்கம் பகோரான் வீட்டுக்குச் சென்றபோது அங்கே நாகரத்தினம் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துத் திகைத்துப் போனான் அல்லவா? அந்தத் திகைப்பு அதிகமாகும் வகையில் இருந்தது பகோரானுடைய முகக் குறிப்பு.

'ஏதோ விஷமம் நடந்திருக்கிறது' என்று தீர்மானித் தான் அப்புலிங்கம்.

"பகோரான், உன்னோடு நான் தனியாகச் சில விஷயங்கள் பேச வேண்டும்" என்று ஒரே போடாகப் போட்டான் அப்பு.

நாகரத்தினம் 'டக்' என்று நாற்காலியிலிருந்து எழுந்தான்.

"மிஸ்டர் அப்புலிங்கம்! நான் இங்கே இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்று நேராக ஒரே வாக்கியத்தில் சொல்லி விடுங்களேன்! ஏன் இப்படிச்

சுற்றி வளைக்கிறீர்கள்—நானும் வந்த காரியம் முடிந்து புறப்படுவதற்குத் தயாராகி விட்டேன் !"

இப்படிச் சொல்லிக் கொண்டே அப்புலிங்கத்தின் பதிலுக்குக் காத்திராமல், "பகேரான் ! நான் புறப்படுகிறேன். உன்னை மறுபடியும் இரண்டு நாட்களில் வந்து பார்க்கிறேன் !" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான் நாகரத்தினம்.

அப்புலிங்கத்தின் மனத்தில் கோபமும் வேதனையும் கூத்தாடின. மனத்தைச் சிதற விடாமல் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டான்.

கொஞ்ச நேரம் மௌனம் நிலவியது. பிறகு பகேரானே பேச ஆரம்பித்தான் :

"அப்பு ! நீங்கள் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக் கூடாது. நான் எக்கச் சக்கமாக ஒரு விபரீதத்தில் மாட்டிக் கொண்டு விட்டேன் !"

"என்ன சமாசாரம் ?" என்று ஆவலோடு கேட்டான் அப்பு.

"கொஞ்ச நேரத்துக்கு முன்பு நாகரத்தினம் ஒரே கலவரமாக இங்கே வந்தான். வந்து என்னிடம் ஒரு ஆணை வாங்கிக் கொண்டு விட்டான் !" என்றான் பகேரான். இப்படிச் சொல்லும்போது தன்னைப் பற்றியே தான் வெட்கப்படுவதாக அவனுடைய முகக் குறிப்பில் தெரிந்தது.

"அப்படி என்ன ஆணை வாங்கிக் கொண்டு விட்டான் அந்தச் சத்தியசீலன் ?" என்று கேட்டான் அப்பு.

பகேரான் சொன்ன விவரம் ஆச்சரியமாக இருந்தது. அது வருமாறு :

அன்று மாலையில் நாகரத்தினம் ஒரே கலவரத்தோடு பகேரான் வீட்டுக்கு வந்தான். அவனுடைய முகத்தின் கலவரத்தைப் பார்த்து விட்டுத் திகைத்துப் போனவனாகப் பகேரான் கேட்டான் : "என்ன, நாகு ! என்ன விஷயம் ?"

" ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டு விட்டேன். இனி இதிலிருந்து மீள வேண்டுமானல் நீதான் உதவி செய்ய வேண்டும்!"

" சரி! கவலைப்படாதே. விஷயத்தைச் சொல்லு!" என்ருன் பகோரான்.

" இப்படி யெல்லாம் சொன்னல் போதாது. நிச்சயம் உதவி செய்கிறேன் என்று சொல்லு!" என்ருன் நாகு.

" நிச்சயம் உதவுகிறேன். என் குருநாதர் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன் " என்ருன் பகோரான்.

" அப்படிச் சொன்னலும் போதாது. அல்லாஹ் பேரில் ஆணையாகச் சொல்லு " என்று கேட்டான் நாகரத்தினம்.

அப்படியே ஆணையிட்டுச் சொன்னன் பகோரான்.

இந்த ஆணையை வாங்கிக் கொண்ட பிறகு, நாக ரத்தினம் விஷயங்களைச் சொன்னன். பகோரானுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

" நாகு ! இப்படிச் சொல்லுகிறேன் என்று வருத்தப் படாதே. நீ ஒரு சிநேகிதனை இந்த மாதிரி ஏமாற்றக் கூடாது " என்ருன் பகோரான்.

" நான் என்ன ஏமாற்றினேன் உன்னை ?" என்ருன் நாகு.

" என்னுடைய குருவுக்கே விரோதமாக நிற்கும்படி சொல்லுகிருயே !" என்று கேட்டான் பகோரான்.

" குரு தவருன மனிதர்களுக்கு உதவி செய்ய நிற்கிருர். அதனல்தான் உன்னை—"

" தம்பி நாகு! உனக்கு எல்லாமே தவறுதலாகத் தான் படும். அந்த முறையில்—"

" அப்படியில்லை பகோரான். நீ இந்த மாதிரிச் சாக்குப் போக்குச் சொல்லக் கூடாது என்றுதான் முதலிலேயே உன்னிடம் ஆணையிட்டுக் கேட்டேன்—"

" நாகு! ஆணையின்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் அந்த அல்லாஹ்கூட குருவுக்கு விரோதமாக ஒரு ஆணையை நிறைவேற்ற வேண்டும் என்று எதிர் பார்க்க மாட்டான்! தெரிந்ததா?" என்றான் பகேரான்.

நாகரத்தினத்துக்குக் கண் சிவந்தது, ஆனாலும் கோபப்பட்டுப் பயன் இல்லை என்றும் அவனுக்கு நன்றாகத் தெரியும். கேட்டான் :

" பகேரான்! இப்படியெல்லாம் சுற்றி வளைக்காதே! ஒரே பேச்சில் சொல்லி விடு. நீ எனக்கு உதவி செய்யத் தயாராக இல்லையா? ஆணையோ ஆணையில்லையோ அதைப் பற்றி உனக்கே நம்பிக்கை இல்லாதிருக்கும்போது நான் ஏன் அந்த ஆணைக்கு முக்கியம் கொடுக்க வேண்டும்—"

" நாகு! அல்லாஹ் ஆணையை மீறுவது என்பது இந்த ஜன்மத்தில் இல்லை. ஆனால் அல்லாஹ் தன்னையும் விட ஒரு சீடன் குருவை மதிக்கிறான் என்று கண்டால், அந்தச் சீடனை ஆசீர்வதிப்பானே தவிர, தண்டிக்க மாட்டான். அதுதான் எங்கள் வேதம். தெரியுமா உனக்கு?"

இப்படிச் சொல்லும் போது பகேரானுக்கு உடம்பு துடித்தது. நாகரத்தினம் என்ன பேசுவது என்று திகைத்தான்.

" நாகு! உன்னிடம் போய்த் திருக் குர்ஆனையும் வேதத்தையும் பேசுவதில் அர்த்தம் இல்லை. எப்படியோ எக்கச் சக்கமாக அகப்பட்டுக் கொண்டு விட்டேன், உன்னுடைய வார்த்தையில். அதனால் ஒரு உதவி உனக்கு நான் செய்ய முடியும். என்னுடைய ஆணையை நிறைவேற்றியதாகவும் இருக்கும். குருவுக்குத் துரோகம் செய்யாததாகவும் இருக்கும்!" என்றான் பகேரான்.

" அது என்ன? அதையாவது சொல்லேன்!" என்றான் நாகரத்தினம்.

" இனிமேல் இந்த ரவீந்திரன்—சந்திரிகா விஷயமாக நான் எந்தக் கட்சியிலும் தலையிடாமல் இருந்து விடுகிறேன். அதுவே உனக்கு நான் செய்கிற பெரிய உதவியாக இருக்கும்!" என்றான் பகேரான்.

" அப்படி யென்றால் ?"

" இது சம்பந்தமாக நான் தலையிடுவதற்கில்லை என்று உஸ்தாதிடமும் சொல்லி விடுகிறேன். வேறு யார் வந்து உனக்கு எதிராக என்னைச் சண்டையிடும்படி சொன்னாலும் நான் உதவி செய்யாமல் இருந்து விடுகிறேன். ஆனால் ஒன்று : காரணத்தை யாராவது விவரமாகக் கேட்டால் உண்மையைச் சொல்லி விடுவேன் !" என்றான் பகோரான்.

நாகரத்தினம் பதில் பேசவில்லை. மனத்துக்குள் யோசித்துப் பார்த்தான். திருச்சிராப்பள்ளியில் உஸ்தாதுக்கு அடுத்தபடி பகோரான்தான் பெரிய சண்டியன். இவன் யாருடைய கட்சியிலும் சேராமல் விலகி இருந்து விட்டால், அதுவே பெரிய உதவி என்று அவனுக்குப் பட்டது. உஸ்தாதின் வலது கையை ஒடித்தது போல மனத்துக்குள்ளே ஒரு திருப்தி. இடது கை என்று சொல்லக்கூடியவன் மஜீத் ஒருவன்தான். இனி அவனைப் போய்ச் சரிக்கட்டி விட்டால் போதும். இப்படி நினைத்துக் கொண்டவனாக நாகரத்தினம் சொன்னான் :

" பகோரான் ! அப்படியானால் இது ஒன்றுவது உறுதிதானா ?"

" நாகு ! மீண்டும் என்னைச் சங்கடப் படுத்தாதே. அவசரப்பட்டு உன்னிடம் ஏமாந்து போய் விட்டேன். அதற்கு இந்த ஒரு தண்டனையை நான் அனுபவித்துத் தான் ஆகவேண்டும். ஆனால் ஒன்று. உன்னுடைய மனத்தின் அந்தரங்கத்தில் இதுவே ஒரு பெரிய உதவி என்பது உனக்கும் நன்றாகத் தெரியும். இனி மஜீதைப் போய்ப் பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். அந்த இடத்திலேதான் உனக்குப் படுதோல்வி கிடைக்கப் போகிறது ! உஸ்தாதின் வலது கையை ஒடித்தாயிற்று. இடது கை இருக்கிறது என்று நினைக்கிறாய். அந்த இடது கை இருக்கிறானே மஜீத், அவன் இனிமேல் உஸ்தாதின இடது கை, வலது கை, இரண்டோடு மட்டும் இல்லை. உஸ்தாதின் உயிரே அவன்தான் !"

இப்படிப் பகோரன் சொல்லிக் கொண்டிருந்தபோது தான் அப்பு அங்கே வந்து சேர்ந்தான். நாகரத்தினம்

அந்த இடத்தை விட்டுக் கிளம்பியதும், பகேரான் இந்த விவரங்கள் அனைத்தையும் அப்புவிடம் சொன்னான். நரகரத்தினம் புறப்படுவதற்கு எழுந்த போதே அவனுடைய மனம் உள்ளுக்குள்ளே யோசிக்க ஆரம்பித்தது; விஷம வலை விரிக்க ஆரம்பித்தது. இரண்டு தினங்களில் மீண்டும் வந்து சந்திப்பதாகச் சொன்ன போது, பகேரானை மறுபடியும் ஏதோ சூழ்ச்சிக்குள் வளைத்து விடப் போவதாகத் தீர்மானித்து விட்டான் நாகு. உண்மையில் பின்னால் நடந்த சம்பவங்கள் இதை நன்கு நிரூபித்தன.

பகேரானுடைய உதவியை இனி எதிர்பார்ப்பதற்கு இடமில்லை என்று தெரிந்ததும் அப்புலிங்கத்துக்கு ஏமாற்றமாக இருந்தது. ஆனாலும் உறுதியை விடாத வனாக ஒன்று கேட்டான்.

"அது சரி, மஜீத் மனம் மாறமாட்டான் என்று எப்படிச் சொல்ல முடியும்?"

"அதுதான் தீர்ந்து போன விஷயமாயிற்றே! ஆமினாவின் நிக்காஹுக்கு அவன் காத்துக் கொண்டிருக் கிறான். உஸ்தாத் சரி என்று சொன்னால் போதும். உடனே முடித்து விடலாம்! நான் நேற்று அவனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன்!" என்றான் பகேரன்.

அப்புலிங்கத்துக்கு ஆனந்தம் உண்டாயிற்று. 'இந்த பகேரான் எத்தனை நல்லவனாக இருக்கிறான்! இவனைக்கூட உஸ்தாத் கொஞ்சம் சந்தேகப் பட்டாரே!' என்று எண்ணிக் கொண்டான். சொன்னான்:

"அப்படியானால் அந்த நிக்காஹைக் கூடிய சீக்கிரம் முடித்து விட்டால் நல்லது, பகேரான்!"

"நான் பேசியாயிற்று. இனிமேல் நீங்களே கூட மஜீதைக் கண்டு பேசி உஸ்தாதிடம் அழைத்துச் செல்லலாம். எந்த விஷயமும் மிராசுதார் முன்னிலையில் தானே அவர் ஒப்புக் கொள்வது வழக்கம்!"

இதன்பிறகு சம்பவங்கள் துரிதமாக நடக்க ஆரம்பித்தன. அப்புலிங்கம் மஜீத் வீட்டுக்குப் போனான். அவனையும் அவனுடைய 'சாச்சா'வையும் சந்தித்துப் பேசினான். பிறகு இருவரையும் அழைத்துக் கொண்டு உஸ்தாத் வீட்டுக்கு வந்தான். உஸ்தாதோடு முதலில் தனியாகப் பேசினான். பிறகு அவர்களையும் உஸ்தாதையும் நேருக்கு நேராகப் பேசச் செய்து தான் எல்லா முடிவுகளையும் துரிதப்படுத்திக் கொண்டு வந்தான். உடனே மசூதிக்குச் சென்று அங்கிருந்து காஸியை அழைத்து வந்தான். அவருடைய சந்நிதியிலே மீண்டும் உஸ்தாதும், மஜீதும், அவனுடைய சகாக்களுமாகப் பேசினார்கள். 'நிக்காஹ்' நிச்சயம் ஆயிற்று.

அப்புலிங்கம் அன்று பாலக்கரையில் ஐந்தாறு தடவை தன்னுடைய காரை அப்படியும் இப்படியுமாக ஓட்டிக் கொண்டு சுற்றினான். ஒவ்வொரு தடவையும் எங்காவது ஒரு மூலையில் நாகரத்தினம் கண்ணில் பட்டுக் கொண்டேயிருந்தான். அதிலிருந்து அவன் மஜீதைத் தேடித் தேடித் திணறுகிறான் என்று தெரிந்தது. இப்படித் தெரிந்ததன் விளைவாக நிக்காஹைத் தள்ளிப் போடாமல் அவசரமாகவே முடித்து விடுவதுதான் புத்தி சாலித்தனம் ஆகும் என்று அவனுக்குப் பட்டது.

இந்த எண்ணத்தை அப்பு டாக்டரிடம் சொன்ன போது டாக்டர் அதை முழு மனத்தோடு ஆமோதித்தார். "மனித மனம் ஒரு நிலையில் இல்லாத விஷயம். எனவே தாமதம் இல்லாமல் இந்த நிக்காஹை முடித்துவிட வேண்டும். நீங்கள் மலைக் காட்டுக்கு வரவேண்டிய அவசியங்கூட இல்லை. நான் ரவீந்திரனை அழைத்துச் செல்கிறேன். நீங்கள் இங்கேயே இருந்து ஆமினா—மஜீத் கல்யாணத்தை முடித்து வையுங்கள். நான் திரும்பி வரும் போது உஸ்தாத் தம்முடைய மருமகனை எனக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டும்! தெரிந்ததா!" என்றார் டாக்டர் சுரேஷ்.

டாக்டரின் யோசனைப்படியே ஏற்பாடுகள் நடை பெற்றன. கல்யாணியை லால்குடிக்கு அழைத்துக்

கொண்டு சென்றார் கனகசுந்தரம். டாக்டர் சுரேஷ் ரவீந்திரனை அழைத்துக் கொண்டு, இரண்டு வேலைக்காரர்களின் துணையோடு மலைக்காட்டுக்குப் புறப்பட்டார்—ஒரு வாரத்தில் திரும்பி விடுவதாகச் சொல்லிக் கொண்டு.

*    *    *

உஸ்தாத் மீரான் தம்முடைய மகளின் நிக்காஹ் விஷயமாக அதிக சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. அப்புலிங்கத்தின் தகப்பனுக்கு எத்தனையோ சந்தர்ப்பங்களில் பக்கபலமாக நின்று உதவியவர் உஸ்தாத். அப்புவுக்கோ உஸ்தாதிடம் தனியான ஒரு மரியாதை. இதெல்லாம் காரணமாக ஆமினாவின் நிக்காஹ் ஏற்பாடுகள் ஒரே தடபுடலாக நடைபெற்றன.

'தூலா' கோலத்தில் மலரினால் முகமூடி தரித்து, வெள்ளைக் குதிரையிலே ஏறினான் மஜீத். திருச்சிராப்பள்ளியிலுள்ள ஹாஜிகள், பக்கீர்கள், மௌல்விகள், ஈமாம்கள்—எல்லாரும் புனிதமான முறையில் "பைத்" சொன்னார்கள். பாலக்கரையில் உள்ள பணக்காரர், முதலாளிகள் எல்லாம் ஊர்வலத்திலே கலந்து கொண்டார்கள். உஸ்தாதின் செல்வாக்கு எத்தனை என்பது அந்த ஊர்வலத்தைப் பார்த்தால் தெரிந்தது. பாண்டு வாத்தியமும், 'ஜே ஜே' என்ற கூட்டமும், காஸ் லைட்டுகளுமாக அந்தப் பட்டணப் பிரவேசம் திருவிழாப் போல இருந்தது. பொய்க்கால் குதிரை ஆட்டம் அமர்க்களமாக முன்னால் நடந்து சென்று கொண்டிருந்தது. மிராசுதார் முருகானந்தத்தின் வற்புறுத்தலின் பேரில், கிராமத் திருவிழாப் போல ஒரு கும்பக் குடமும், பம்பையும் சின்ன மேளமுமாக—இப்படி ஒரு கோஷ்டி வேறு இன்னொரு பக்கம் சென்று கொண்டிருந்தது! உஸ்தாதுக்கு இந்த அன்பையெல்லாம் கண்டு மனம் உருகி ஆனந்தத்தினால் கண்ணீர் வந்து விட்டது!

நிக்காஹ் சடங்குகள் பிரமாதமாக நடந்தன. 'மஜ்லி'ஸில் வைத்து 'முஹர்' கொடுக்கும் சடங்கிலே,

மஜீதின் சார்பாக ஒரு பெரிய பண முடிப்பை எடுத்து வைத்தான் அப்புலிங்கம். அந்த அன்னைக் காஸியார் ஒரே வியப்போடு பாராட்டினர். உண்மையில் அந்தச் சடங் கெல்லாம் நடந்த பிறகு, நிக்காஹுக்கு வந்திருந்த அனைவருக்கும் அப்புலிங்கம் தனது கையாலேயே பன்னீர் தெளிக்க ஆரம்பித்ததும் டௌன் காஸிக்கு உணர்ச்சியை அடக்க முடியவில்லை. அப்படியே ஓடி வந்து அப்பு லிங்கத்தைத் தழுவி அணைத்துக் கொண்டு ஆசீர்வாதம் செய்தார்.

இங்கே திருச்சியில் இத்தனை சம்பவங்களும் மின்னல் வேகத்தில் ஓடிக் கொண்டிருந்த போதுதான் மாதுங்காவில் மாதர் கலைச் சங்கக் காரியதரிசி சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"உங்கள் வீட்டிலேதானே இரவு திருடன் குதித் தான்?" என்று சங்கத்தின் காரியாலயத்திலே யிருந்த சாவித்திரி அம்மாள் சந்திரிகாவிடம் கேட்டாள் அல்லவா? அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் சந்திரிகா திக்குமுக்காடினுள் அல்லவா? இதைக் கவனித்த சாவித்திரி அம்மாள் சொல்லுவாள் :

"ஏனம்மா. கேள்வி மேல் கேள்வியாகப் போட்டு உன்னைத் திணற அடிக்கிறேன் போலிருக்கிறது. வா, வீட்டுக்குப் புறப்படுவோம். நீ ரயிலிலிருந்து ஒரே களைப் போடு வந்திருக்கிறுய். முதலில் குளித்துக் காப்பி சாப்பிடு. அதன் பிறகு சாவகாசமாகப் பேசிக் கொள்ளு வோம்!" என்று சொல்லிய வண்ணம் நாற்காலியை விட்டு எழுந்தாள் சாவித்திரி. சந்திரிகாவும் இருந்த இடத்தை விட்டு எழுந்து கொண்டே கேட்டாள் :

"வீட்டுக்குப் போவோம். ஆனல்—"

"ஆனல் இந்தத் திகைப்பு உன்னைப் பயப்படுத்து கிறது, நம்முடைய வீட்டில் திருடன் குதித்தது இவளுக்கு எப்படித் தெரிந்தது என்று. அப்படித்தானே?" என்று கேட்டாள் சாவித்திரி.

"அதுவுந்தான்!"

"அதெல்லாம் சாவகாசமாகச் சொல்கிறேன். சந்திரிகா என்பது நீதான் என்று தெரிந்த பிறகு, உன்னை இங்கே இப்படித் தாமதிக்க வைப்பது பிசகு! வா, உடனே வீட்டுக்குப் போவோம். எதிர்காலத்தில் ஒரு பெரிய நட்சத்திர நங்கையாக விளங்கப் போகிறவளை, சாதாரண உபசாரம் கூடச் செய்யாமல் ஆபீஸில் உட்கார வைத்துப் பேசினேன் என்று என் தம்பி ஆவலாதி சொல்லுவான். யார் ஆவலாதியையும் சகித்துக் கொள்ள லாம். ராமநாதன் ஆவலாதி சொல்ல ஆரம்பித்தால் அதைத் தாங்க முடியாது. பதில் பேசவும் முடியாது. என்ன பதில் சொன்னாலும் அதற்கும் மேல் ஒரு கேள்வி போட்டு நம்மைத் திணற அடித்து விடுவான். அந்தக் காலத்தில் நார்ட்டன் என்று சொல்லுவார்களே. அப்படிப் பேசுவான் ராமநாதன்!" என்று சொல்லிக் கொண்டே சந்திரிகாவை அழைத்துக் கொண்டு தானே காரை ஓட்டிக் கொண்டு வீடு நோக்கி விரைந்தாள் சாவித்திரி அம்மாள்.

இதற்கு முன்பு பெண்கள் கார் ஓட்டுவதைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாள் சந்திரிகா. ஆனால் பார்த்த தில்லை. இங்கே இந்த அம்மாள், இத்தனை லாகவத் தோடு, எதிரே காரும் வண்டியும் மனிதர்களும் கும்பலாக வருகிற வீதிகளிலெல்லாம் சற்றும் பயமில்லாமல் வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு செல்வதை ஒரே ஆச்சரியத்தோடு கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்தாள் சந்திரிகா.

"எனக்கு ராமநாதன்தான் 'ட்ரைவிங்' சொல்லிக் கொடுத்தான். ஒரு வாரத்தில் வந்து விட்டது. என் னுடைய கெட்டிக்காரத்தனம் இல்லை அது. ராமநாதன் அத்தனை சாமர்த்தியமாக நான்கூட ஒரு வாரத்தில் கார் ஓட்டும்படி சொல்லிக் கொடுத்து விட்டான்."

இந்த விதமாக ராமநாதனைப் பற்றியே வழி நெடுகப் பேசிக் கொண்டு சென்றாள் சாவித்திரி. அந்தப் பேச்சைக் கொண்டு ராமநாதனைப் பற்றி உருவகம் செய்தால், அவன் ஏதோ சாதாரண மனிதப் பிறவி இல்லை என்றே

தோன்றும்! அப்படியிருந்தது அவளுடைய பாசப் பேச்சு.

சாவித்திரி அம்மாவின் வீடு மாதுங்காவில் விசாலமான இன்பப் பூங்காவுக்கு அருகிலே இருந்தது. வீடு விசாலமான வீடு. அந்த வீட்டுக்கு எதிரே ஒரு சிறு தோட்டம். அந்தத் தோட்டத்தில் அங்கங்கே ஸிமெண்ட் பெஞ்சுகள் நின்றன. உள்ளே நுழைந்தால் பங்களாவின் முகப்பு மனசை வசீகரிக்கக்கூடிய விதத்தில் ஒரே சித்திர வேலைப்பாடுகளுடன் விளங்கியது. மானும், மயிலும், மரமும், செடியும், பூவும் கொடியுமாகக் கொத்து வேலையில் பல அலங்காரங்கள் செய்து முகப்பில் ஓட விட்டிருந்தார்கள். சந்திரிகா அந்த வேலைப்பாடுகளைக் கண்டு அதிசயித்துக் கொண்டே வீட்டினுள் நுழைந்தாள், "உங்கள் வீடு எத்தனை அழகாக இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே.

அந்த அழகான வீட்டில் ஒரு வாரம் கழிந்தது. இந்த ஒரு வாரத்திலும் சாவித்திரி அம்மாள், வீட்டில் இருந்த நேரம் மிக மிகக் குறைவு. கலை விழா சம்பந்தமாக அலைந்து கொண்டே இருந்தாள். அதோடு இல்லை. தான் போன இடங்களுக்கெல்லாம் சந்திரிகாவையும் உடன் கூப்பிட்டாள். சந்திரிகாவுக்கு எப்படியோ இருந்தது. இதுவரை அவள் பழகிய முறையும் சூழ்நிலையும் வேறு. இப்பொழுது அந்தப் புதிய சூழ்நிலை அவளுக்குத் திகைப்பாக இருந்தது. ஆனால் சாவித்திரி அம்மாள் காட்டிய பிரியமும், செய்த உபசாரமும் சந்திரிகாவின் மனத்தைக் கொள்ளை கொண்டன. இதுவரை ஒரு பெண்மணி தன்னிடம் இத்தனை பிரியமாக இருந்து, அந்தப் பிரியத்தை அனுபவித்து அறியாள் சந்திரிகா. எனவே, சாவித்திரி அம்மாளின் பிரியமும் பாசமும் அவளுக்குப் புதுமையாக இருந்ததோடு, ஆனந்தக் கண்ணீரே வரும்படியாகவும் இருந்தது, பல சந்தர்ப்பங்களில்.

ஒரு வாரமும் ஓட்ட சாட்டங்களிலும் அன்பு வெள்ளத்திலுமாகக் கழிந்தது. ஆனாலும் இரவு நேரங்

களில்தான் அமைதி இல்லை. கட்டிலில் படுத்திருக்கும் போது, சந்திரிகாவுக்கு முன்னால் ரவிந்திரன் உருவம் வந்து நிற்கும். தான் ஓடி வந்து விட்டதை நினைத்துப் பார்க்கவே அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. ‘சாவித்திரி அம்மாளிடம் இன்னும் முழு விவரங்களையும் சொல்லவில்லையே’ என்று நினைப்பாள். ‘அவள் கலை விழா மும்முரத்திலேயே இருக்கிறாள். இப்பொழுது அவளுடைய மனசைக் குழப்பக் கூடாது!’ என்று ஒரு நினைப்பு எழும். உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளுவாள். அந்த அறையிலே எத்தனை மின்சார விளக்குகள் இருந்த போதிலும் கண்ணுக்கும் உள்ளத்துக்கும் குளுமை தரக் கூடிய ஒரு மெழுகுவத்தி விளக்கும் சாவித்திரி அம்மாள் ஒரு மேஜைமேல் கலை அழகு ஒளி வீசும்படி வைத்திருந்தாள். சந்திரிகாவுக்கு அந்த மெழுகுவத்தி விளக்கை அணைக்கவே மனம் வராது. அந்த மங்கலான குளுமையான வெளிச்சத்தில் ரவீந்திரனே தன்னுடைய கண்ணுக்கு முன்னால் வந்து நிற்பதாக ஒரு பிரமை தோன்றும். அந்த விளக்கின் நிழல், அசைந்து அசைந்து ஆடும்போதெல்லாம் ரவீந்திரனே எழுந்து நின்று தனக்கு நடனம் கற்பிப்பது போல எல்லாம் தோன்றும் சந்திரிகாவுக்கு.

காலை விடியும்வரை படுக்கையில் அப்படியும் இப்படியும் புரண்டுகொண்டே கழிப்பாள் சந்திரிகா. வழக்கம் போல ஆறு மணிக்கெல்லாம் கையில் ஒரு டம்ளர் காப்பியுடன் சாவித்திரி அம்மாள் கட்டிலுக்கு அருகிலே வந்து நிற்பாள்.

“என்ன சந்திரிகா, இரவு நன்றாக உறங்கவில்லை போலிருக்கிறதே. புது இடம் அப்படித்தான் இருக்கும். சரியாக உறக்கம் வராது. ஒரு வாரம் கழிந்தால் சரியாகி விடும்!” என்று அன்பு ததும்பும் புன்சிரிப்போடு கூறி விட்டுக் காப்பியைக் கையிலே கொண்டு கொடுத்துச் செல்லுவாள்.

அந்த அன்பைப் பார்த்ததும் சந்திரிகாவுக்குப் பளிச்சென்று கல்யாணி அம்மாளின் ஞாபகம் வரும்.

"கல்யாணி அம்மாளும் இப்படித்தானே இருந்தாள் ஆரம்பத்தில். பிறகுதானே அவளுடைய மனம் விகல்பம் ஆயிற்று. அது அவளுடைய குற்றமா? இல்லை. அது விதியின் குற்றம்!" என்று நினைத்துக் கொள்ளுவாள் சந்திரிகா.

மறு கணம் சாவித்திரி அம்மாள் சிரித்த முகத்தோடு "என்ன சந்திரிகா, எழுந்து ஸ்நானம் பண்ணு. நேரம் ஆகிறதே!" என்று சொல்லிக் கொண்டே வரும்போது, அந்த அன்பிலே சஞ்சலம் எல்லாம் பறந்தோடி விடும். சந்திரிகா படுக்கையை விட்டு எழுந்து செல்வாள்.

இப்படியாகக் கலை விழா தினம் வரை கழிந்தது. அது வரை சாவித்திரி அம்மாள் சந்திரிகாவிடம் ஒரு விஷயத்தைச் சொல்லவே இல்லை. கலை விழா தினத்தன்று சந்திரிகா குளித்து நெற்றிக்குப் பொட்டு இட்டுக் கொண்டிருக்கும் போதுதான் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் சாவித்திரி, கையில் கலை விழா அழைப்பிதழை வைத்துக் கொண்டு.

"சந்திரிகா, இன்று கலை விழாவில், ஒரு நட்சத்திர நங்கை நடனம் ஆடுகிறாள் தெரியுமோ?" என்று கேட்டாள் சாவித்திரி. சந்திரிகாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

சாவித்திரி அம்மாள் பக்குவமாகப் பேச ஆரம்பித்தாள். அவளுடைய பிரியத்தையும், அவள் பேசிய மாதிரியையும் பார்த்துச் சந்திரிகாவுக்குப் பதில் பேச முடியவில்லை.

சாவித்திரி சொன்னாள்: "உன்னுடைய சந்திரிகா என்ற பெயரை வேண்டுமென்றுல் நான் அறிவிக்கவில்லை. நிகழ்ச்சியில் நட்சத்திர நங்கை என்று ஒரு திடுக்கிடும் தலைப்பு கொடுத்திருக்கிறேன் அல்லவா? அதையே சபையிலும் சொல்லுகிறேன்!"

சந்திரிகாவுக்கும் மறுக்க முடியவில்லை. எப்படியோ மனத்தை யெல்லாம் ஒருமுகப் படுத்திக் கொண்டு சரி சொன்னாள்.

இதன் பிறகுதான் கலை விழாவில் நட்சத்திர நங்கை யாகத் தோன்றினாள் சந்திரிகா. சாவித்திரி அம்மாளுக்கு ஒரே மகிழ்ச்சி. பாவம், அந்த மகிழ்ச்சியில் இப்படி மயங்கி விழுகிற சம்பவம் நடக்கும் என்று அவள் எதிர் பார்த்தாளா? இல்லை.

" —அவன்கை
இட்ட இடத்திலெல்லாம்
தண்ணென் றிருந்ததடி "

என்ற பாட்டு வந்ததும் சந்திரிகா அப்படி மயங்கி விழுவானேன்?

மயங்கி விழுந்த சந்திரிகாவுக்குத் திரைக்குப் பின்னால் முதல் உதவி சிகிச்சை நடந்தது. கலை விழா அத்துடன் முடிந்தது என்ற செய்தியை மேடையின்மேல் ஒரு குரல் அறிவித்தது. போலீஸ் ஜவான்கள் குழப்பமான கூட்டத்தை வகைப் படுத்தி அனுப்புவதில் முனைந் தார்கள். அநேகம் பேர் மேடைக்கே வந்து நட்சத்திர நங்கையின் உடல் நிலையைத் தெரிந்து கொள்ள எண்ணினார்கள்.

சந்திரிகா கண்ணைத் திறந்து பார்த்தாள். இழைந்த மூச்சு மெதுவாக இயங்க ஆரம்பித்தது. இதற்குள் "கார் தயாராக இருக்கிறது!" என்று ஒரு சிறுமி வந்து சாவித்திரியிடம் சொன்னாள். உடனே நாலைந்து பெண் மணிகளாகச் சேர்ந்து சந்திரிகாவைக் கைத் தாங்கலாக எடுத்துக் கொண்டு மேடைமேல் இருந்த உள் வாசல் வழியாகக் காருக்கு அழைத்து வந்தார்கள். சாவித்திரி அம்மாளோடு இன்னொரு பெண்மணியும் காரில் ஏறிக் கொண்டாள். கூட்டம் வந்து காரை மொய்ப்பதற்குள், சாவித்திரி அம்மாள் காரை வேகமாக ஓட்டினாள். ஆனால் ஆஸ்பத்திரியை நோக்கிக் காரை ஓட்டிக் கொண்டிருந் தவள் திடீரென்று ஏதோ நினைத்தவளாகக் காரைச் சட்டென்று வீட்டை நோக்கித் திருப்பினாள்.

## 32. இதயக் கடல்

ஆஸ்பத்திரியை நோக்கிக் காரை வேகமாக ஓட்டிக் கொண்டு சென்ற சாவித்திரி அம்மாள் திடீரென்று அந்தக் காரை வேறு பக்கம் திருப்பியதைக் கண்டு திகைத்தாள், காரில் உடனிருந்த பெண்மணி.

"ஆஸ்பத்திரிக்கு இந்தப் பெண்ணைக் கூட்டிக் கொண்டு போனால், அங்கே பலருடைய முன்னிலையில் இந்தப் பெண் அநேக கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டி நேரிடலாம். நீண்ட நாள் நோயில் அழுந்திய வளாக இருந்தால், கேள்விகள் நோயைப் பற்றியே இருக்கும். ஆனால் இவள் சமாசாரமோ அப்படி யில்லை. ஆடிக் கொண்டிருந்தபோதே, திடீரென்று மயங்கி விழுந்து விட்டாள். இது மனத்தைப் பற்றிய ஒரு காரியம் என்று எனக்கு தோன்றுகிறது. அந்தப் பாட்டு இருக்கிறதே, அதில்......"

இந்த இடத்தில் சந்திரிகா நன்றாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள். "அம்மா! நாம் இப்பொழுது எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?" என்று கேட்டாள்.

"நம்முடைய வீட்டுக்குத்தான் அம்மா!" என்றாள் சாவித்திரி.

"ஆஸ்பத்திரிக்கு இல்லையே?" என்று மறுபடியும் கேட்டாள்.

"அது புரிந்துதானே வீட்டை நோக்கிக் காரைத் திருப்பினேன்" என்றாள் சாவித்திரி அம்மாள்.

வீட்டுக்கு வந்து சேர்ந்ததும், சாவித்திரி அம்மாள் தனக்கு தெரிந்த ஒரு டாக்டருக்கு 'போன்' பேசப் போவதாகக் கூறினாள். சந்திரிகா சொன்னாள்: "அவசியம் இல்லை அம்மா. எனக்கு மயக்கம் தெளிந்து விட்டது. மறுபடி ஏதாவது ஒரு மாதிரியாக இருந்தால் சொல்லு கிறேன். அப்பொழுது டாக்டருக்குத் தகவல் கொடுத்தால் போதும். இப்போது வேண்டாம்!"

இப்படிச் சொன்னபோது அவளுடைய முகக் குறிப்பைப் பார்த்தால் "டாக்டர் வருகிறார்" என்றால் மறுபடி மயக்கம் போட்டு விழுந்து விடுவாள் போல இருந்தது!

அன்றிரவு எவ்விதச் சம்பவமும் இல்லாமல் கழிந்தது. மறு நாள் மாலை சாவித்திரி அம்மாள் சந்திரிகா வைக் கூப்பிட்டு, "சந்திரிகா, இப்படிக் கொஞ்சம் காற்றாட வெளியே போய் விட்டு வரலாம், வருகிறாயா?" என்றாள்.

"கூட்டம் அதிகமாக இல்லாத இடமாக இருந்தால் பரவாயில்லை அம்மா!"

"சரி. இங்கே ஒரு சிறு பார்க் இருக்கிறது. நாம் ஒரு மூலையில் ஸிமென்ட் பெஞ்சிலே போய் உட்கார்ந்து காற்று வாங்கிக் கொண்டே யிருக்கலாம். யாரும் தொந்தரவு செய்ய மாட்டார்கள்!" என்றாள் சாவித்திரி.

சந்திரிகாவும் சாவித்திரியும் காரிலே புறப் பட்டார்கள்.

காரில் சென்று கொண்டிருக்கும்போதே சாவித்திரி அம்மாள் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

"தம்பி என்னிடம் உன்னைப் பற்றிப் பேசியிருக்கிறான் அம்மா. அதனால்தான் உங்கள் வீட்டில் திருடன் வந்த செய்தி எனக்குத் தெரியும்!" என்றாள் சாவித்திரி.

"அதெப்படி? உங்கள் தம்பி எப்பொழுது பம்பாய்க்கு வந்தார், இதைச் சொல்ல!" என்று ஆச்சரியத்தோடு சந்திரிகா கேட்டாள்.

"அவன் இங்கே வரவில்லை. நான்தான் அங்கே வந்திருந்தேன். உங்கள் வீட்டில் திருடன் குதித்த அன்றைக்கு, நான் திருச்சியில் இருந்தேன். பொன் மலையில் ஒரு கல்யாணத்துக்காக வந்திருந்தேன்!"

"அப்படியா? என்னைப் பற்றிப் பேச என்ன சந்தர்ப்பம் வந்தது?"

"அன்று இரவு திடீரென்று எங்கள் வீட்டிலிருந்து தம்பி காணாமற்போய் விட்டான் அல்லவா? அவன் வீடு திரும்புவதற்கு வெகு நேரம் ஆயிற்று அல்லவா? நாங்கள் எல்லாம் பயந்து விட்டோம். சாதாரணமாக அவன் இரவில் எங்குமே வெளியே போக மாட்டான். சிறு பிள்ளையில் அவன் என்ன செய்வான் தெரியுமோ? எங்கள் வீட்டிலேயே இருட்டுக்குள்ளே ஸ்டோர் ரூமுக்குப் போய் ஏதாவது சாமான் எடுத்து வரக் கூடப் பயப் படுவான். யாராவது ஒருத்தர் வெளியே இருந்து 'ராமநாதா! ராமநாதா!' என்று கூப்பிட்டுக் கொண்டே இருக்கவேண்டும். அப்படியானால்தான் ஸ்டோர் ரூமுக் குள்ளே போய் ஒரு சாமானை எடுத்து வருவான். இருட்டில் அத்தனை பயம்! ஆனால் பள்ளிக்கூடத்தில் எப்படி என்று நினைக்கிறாய்? ஸ்போர்ட்ஸில் அவனுக்குச் சாம்பியன் என்று பெயர். ஓட்டப்பந்தயத்தில் அவன் தான் எப்பொழுதும் முதல்! ஆனால் எங்கள் வீட்டில் அவர் பரிகாசம் பண்ணுவார் 'திருடன் வந்தால் உன் தம்பி நன்றாக ஓடுவான்' என்று."

இப்படி சாவித்திரி அம்மாள் சொல்லிக் கொண்டிருக் கும் போதே, சந்திரிகா மனத்துக்குள் எண்ணினாள் :—

'இப்படிப்பட்ட சாது ராமநாதனா அன்று அத்தனை தைரியமாக மாடியிலே குதித்து வந்தார்!' என்று. அப்பொழுது சாவித்திரி அம்மாள் சொன்னாள்: "இதெல்லாம் அந்தக் காலம். இப்பொழுது அவன் தைரியம் யாருக்கு வரும்? உங்கள் வீட்டு மாடியில் இவனும் ஏறிக் குதிக்க வேண்டும் என்றால் எத்தனை துணிச்சல்!—நான் ஒன்று சொல்கிறேன் வித்தியாசமாக நினைத்துக் கொள்ள மாட்டாயே?" என்று கேட்டாள் சாவித்திரி.

"இல்லை" என்றாள் சந்திரிகா.

"இங்கே அவரிடம் அந்தச் சம்பவத்தைச் சொல்லிக் கொண்டிருந்தேன். அவர் என்ன சொன்னார் தெரியுமோ?

"காற்றில் ஏறிஅவ் விண்ணையும் சாடுவோம்—
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே!"

என்று பாட ஆரம்பித்து விட்டார். எங்களவருக்கு ராம நாதனைப் பரிகாசம் பண்ணுவது என்றால் அத்தனை ஆனந்தம். அவனிடம் அத்தனை பிரியம் இவருக்கு!"

சாவித்திரி அம்மாள் இப்படி ஒரு பாரதியார் பாட்டைச் சொன்னது சந்திரிகாவுக்கு எப்படியோ இருந்தது. ஆனாலும் அம்மாளிடம் அவளுக்கு இருந்த அன்பு அதைச் சகித்துக் கொண்டது!

கார் பூங்காவிலே வந்து நின்றது. இருவரும் இறங்கிச் சென்று ஒரு ஸிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டார்கள்.

"சந்திரிகா! உன்னைப்பற்றிக் கேள்விப்பட்டதிலிருந்தே உன்னைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஒரு ஆசை உண்டு. தம்பி அத்தனை தூரம் சொன்னான் உன்னுடைய திறமையைப் பற்றி. ஆனால் இப்படி இங்கே நாம் சந்திக்கப் போகிறோம் என்று நான் நினைத்துப் பார்த்த தில்லை!"

"அம்மா, உங்கள் தம்பி உங்களைப் பற்றித் தில்லிக்குப் போகுமுன் ஒருநாள் எங்கள் வீட்டிலே சொன்னதும், எனக்கு என்னவோ பம்பாய்க்கு வரப் போகிறதாகவும் உங்களோடு தங்கப் போகிறதாகவும் ஒரு எண்ணம் என் மனசில் உதித்தது. அதனால்தான் உங்க ளுடைய விலாசத்தைக்கூடக் குறித்து வைத்துக் கொண்டேன். ஆனால் தனியாக இங்கே வருவேன், இப்படி ஒரு அதிசயச் சந்திப்பு ஏற்படும் என்று நானும் கூட எண்ணிப் பார்க்கவில்லை!" என்றாள் சந்திரிகா.

"தனியாக என்றால்? ரவீந்திரனும் உன்னோடு வருவார் என்று எதிர் பார்த்தாய். அப்படித்தானே?" என்று சாவித்திரி கேட்டாள்.

"ஆமாம். ஆனால்......"

சந்திரிகா பெரு மூச்சு விட்டாள். சாவித்திரி அம்மாள் கேட்டாள்:

"சந்திரிகா! ஏன் இப்படிப் பெருமூச்சு விடுகிறாய்? நீ இங்கே எப்படி வந்து சேர்ந்தாய் என்ற விஷயத்தை

விவரமாகச் சொல்லுவாய் என்று அல்லவா நான் எதிர் பார்த்தேன் !''

"அம்மா, அதைச் சொல்லுவதற்குத்தான் இப்படி ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டேன். ரயில் புறப்படுவதற்கு முன்னால் பெருமூச்சு விடுகிறது அல்லவா? அப்படித்தான் இது !'' என்றாள் சந்திரிகா.

சற்று மௌனம் நிலவியது. பிறகு சந்திரிகா பேச ஆரம்பித்தாள். தான் திருச்சிக்கு வந்து சேர்ந்தது, வளர்ந்தது, வாழ்ந்தது, வாழ நினைத்தது, பிறகு வாழ்வை முடிக்க நினைத்தது, எல்லாவற்றையும் சாவித்திரியிடம் சந்திரிகா மனம் விட்டுக் கூறினாள். ஒரே அனுதாபத்தோடும் சிரத்தையோடும் கேட்டுக் கொண்டே வந்தாள் சாவித்திரி. சந்திரிகா தன்னுடைய பேச்சை முடித்து விட்டுக் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு விம்மியதும் சாவித்திரி அம்மாளுக்கு மிகவும் கஷ்டமாகப் போய் விட்டது.

"சந்திரிகா, உன்னுடைய கஷ்டம் எல்லாம் எனக்குப் புரிகிறது அம்மா. ஆனாலும் சொல்லுகிறேன், வாழ்க்கையில் நம்பிக்கை இழக்கக் கூடாது. உலகத்தில் பிறப்பதற்கு நமக்கு எப்படி உரிமை இல்லையோ, அப்படியே இறப்பதற்கும் உரிமை இல்லை. நம்மை இந்த உலகத்துக்கு அனுப்பிய சக்தியே, நம்மை இந்த உலகத்திலிருந்து அழைத்துக் கொள்ளவும் செய்யும். அதுவரை நாம்—''

"ஏன் அந்தச் சக்தியே நமக்குள்ளே புகுந்து கொண்டு நம்மை நாமே கொன்று முடித்துக் கொள்ளும் படி செய்யக் கூடாதா? மரணம் என்றால் நோயினால் ஏற்படுவது ஒன்றுதானா?''

எல்லையற்ற விரக்தியினால் இப்படி ஒரு கேள்வி போட்டுக் கொண்டே சந்திரிகா மீண்டும் கைக்குட்டைக்குள்ளே முகத்தை மறைத்துக் கொண்டு பொருமினாள்.

"அட பெண்ணே! இப்படி அசடு மாதிரிப் பேசலாமா? ஒன்று சொல்கிறேன், கேள். நமக்குத் தோன்றியதை யெல்லாம் செய்து விட்டு, இது பரம் பொருள் எனக்குள்ளே இருந்து கொண்டு செய்கிற

காரியந்தான் என்று சொல்வது பிசகு. நம்மைப் படைத்த கடவுள் நமக்குள் மனம் என்ற ஒரு சக்தியை வைத்து அனுப்பி யிருக்கிருன். ஆனல் இந்த மனம் இருக்கிறதே இதை இரண்டு சக்திகள் பிடித்து ஆட்டுகின்றன. ஒன்று நல்ல புத்தியைக் கொடுக்கிற சக்தி. மற்ரென்று தவருன காரியங்களைச் செய்யத் தூண்டுகிற பிசாசு. இந்த இரண்டுக்கும் நடக்கிற போராட்டம்தான் வாழ்க்கை. இந்தப் போராட்டத்தை அறிவாளிகள் வேடிக்கையாகக் கருதி, மேலே தாமரை இலைத் தண்ணீரைப்போல் நின்று பார்த்து ரஸிப்பார்கள். நம்மைப் போன்ற பிறவிகளோ இந்தப் போரிலே கலந்து கொண்டு அவதிப்படுகிறோம். கிறிஸ்தவ வேதத்தில் இந்த நன்மை தீமைப் போராட்டத்தைப் பற்றி மிக நன்ருகச் சொல்லி யிருக்கிருர்கள். எங்களவர் சொல்லிக் கேட்க வேண்டும். இவருக்கு பைபிள் என்ருல் உயிர். திருச்சியில் ஜோசப் கல்லூரியில் படித்த போது இவர் எங்கே பாதிரியாகப் போய் விடுவாரோ என்று பயந்துதான் எங்கள் மாமனர் சிறு வயதிலே என்னைப் பிடித்து அவருடைய காலிலே கட்டி விட்டார் என்று எங்களவர் அடிக்கடி சொல்லுவார்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே சாவித்திரி அம்மாள் சிரித்தாள். சந்திரிகாவுக்கும் சிரிப்பு வந்து விட்டது.

"அம்மாடி! ஒரு மட்டும் சிரித்தாயே! இப்பொழுது தான் அழகாக இருக்கிறது. இந்தா பார், சந்திரிகா உன்னுடைய முகத்துக்கு அந்தச் சிரிப்பு எத்தனை அழகாக இருக்கிறது தெரியுமா? அப்படியே சந்திரன் உதித்து வந்த மாதிரி இருக்கிறது. எந்த அதிர்ஷ்டசாலி இந்த முகத்துக்குத் தவம் செய்திருக்கிருனே!''

இப்படிச் சொல்லிக் கொண்டே சாவித்திரி அம்மாள் சந்திரிகாவின் முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்திலே சற்று நேரத்துக்கு முன்பு உதித்து வந்த சந்திரன் இப்பொழுது இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பூரணமாக அஸ்தமித்து விட்டிருந்ததைக் கண்டாள். ஆனலும் பேச்சை நிறுத்தவில்லை சாவித்திரி.

"சந்திரிகா, உன்னை எனக்கு உண்மையாகவே பிடித்துப் போய் விட்டது! ஆகையினல் உன்னிடம் என்ன

வேண்டுமானாலும் கேட்பேன். பேசுவேன். நீ கோபப்பட மாட்டாயே!"

"அம்மா! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். உங்களிடம் நான் கோபப்பட்டால் அதைப் போலப் பாபம் வேறில்லை. என்ன பாபத்தைச் செய்தேனே, இப்படி ஆயிற்று என் வாழ்க்கை. இனியும்—"

"இப்பொழுது என்ன ஆயிற்றும் உன் வாழ்க்கை? சந்திரிகா, நாளைக்கு உன்னை எங்கள் சேவா சங்கத்துக்கு அழைத்துச் செல்கிறேன். அங்கே பார் எத்தனை திக்கற்ற பெண்கள், வாழ்க்கையில் புதிய நம்பிக்கை பெற்றவர்களாய் வாழ்கிறார்கள் என்று. உலகம் தெரியாத பெண்ணாக இருக்கிறாயே நீ!"

ஸிமென்ட் பெஞ்சில் சற்று நேரம் மீண்டும் மௌனம் நிலவியது. பிறகு சாவித்திரி அம்மாளே பேச ஆரம்பித்தாள்.

"சந்திரிகா, உன்னைப் பற்றி எல்லா விவரங்களும் சொன்னாய். ஆனாலும் ஒரு சிறு சந்தேகத்தை உன்னிடம் கேட்டுத் தெளிவு படுத்திக் கொள்ளலாமா?"

"அம்மா! உங்களுக்குச் சந்தேகம் ஏற்படும்படி நான் என்ன சொன்னேன் என்று தெரியவில்லை. ஆனாலும், கேளுங்கள். அதற்குப் பதில் சொல்ல வேண்டியது என்னுடைய கடமை!"

இப்படிச் சந்திரிகா சொன்னதும், சாவித்திரி அம்மாள் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தாள். தான் கேட்க நினைத்த கேள்வியை எப்படிக் கேட்பது என்று மனத்துக்குள்ளே பல முறை ஒத்திகை பார்த்துக் கொண்டாள். பிறகு கேட்டாள்:

"ரவீந்திரன் ரொம்ப நல்ல மனிதர் என்று தம்பி அடிக்கடி சொல்லுவான். நீயும் ரொம்ப நல்ல மாதிரி என்பான். என்னுடைய அபிப்பிராயமும் அதுதான். ஆனல் அதே சமயம் கல்யாணியும் நல்லவள்தான். அப்படியிருக்கும்போது காரணம் இல்லாமல் ஏன் இத்தனை குழப்பங்கள் ஏற்பட்டன?"

வார்த்தைகளைத் தன்னுடைய வழக்கத்துக்கு மாருக மிகவும் நிதானத்தோடு ஒவ்வொன்ருகச் சேர்த்து மெதுவாகக் கேட்டாள் சாவித்திரி அம்மாள். ஆனல் சந்திரிகா பளிச்சென்று பதில் சொன்னுள்.

"ஏன் இத்தனை தூரம் நீட்டி வளைக்கிறீர்கள்? அவருக்கும் எனக்கும் உள்ள தொடர்பு என்ன என்று நேராகவே கேட்கலாமே! ஏன் தயங்குகிறீர்கள், உங்கள் வழக்கத்துக்கு மாருக!"

இப்படிச் சொல்லி விட்டுச் சந்திரிகா ஊக்கத்தோடு பேச ஆரம்பித்தாள்.

"அம்மா! நீங்கள் என்னைவிட வயதானவர். அநுபவ சாலி. எதையும் கிரகிக்கும் தன்மை உங்களுக்கு உண்டு. அதனுல் நான் சொல்வதை அநுதாபத்தோடு புரிந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். நான் சொல்லப் போவது அப்பட்டமாக இருக்கலாம். நீங்கள் மன்னித்து விடவேண்டும், எனக்கு அதிகப் படிப்பு இல்லை. என்னுடைய படிப்பு எல்லாம் ஆட்டமும் பாட்டும்தான்!"

"நன்ருயிருக்கிறது நீ சொல்வது! சங்கீதத்தை விட மேலான படிப்பு வேறு என்ன இருக்கிறது உலகத்தில். ஒன்று சொல்லுகிறேன் கேள். எங்களவர் அடிக்கடி சொல்லுவார். எந்த சங்கீத வித்வானுவது உண்மையிலேயே சங்கீத அநுபவம் உள்ளவனு என்று பார்க்க வேண்டும் என்ருல் என்ன செய்ய வேண்டுமாம் தெரியுமோ? அந்த வித்வானேடு நாலு வார்த்தை பேசிப் பார்க்க வேண்டுமாம். அந்த நாலு வார்த்தையில் பண்பாடு இருந்தது என்ருல், அவன் உண்மையிலேயே பெரிய வித்வான்தானும். அந்த நாலு வார்த்தையும் கேவலமாக இருந்ததோ, அநுபவ சங்கீதமோ சங்கீத அநுபவமோ அவனிடம் கிடையாது. அவனுடைய வாய்ப்பாட்டெல்லாம் வாய்ப்பாட்டு இல்லை, வெறும் வாய்பாடு அரிச்சுவடிதானும்! ஏதோ படித்ததை ஒப்பிக்கிற காரியந்தானும். சங்கீதம் அவனுடைய இதயத்துக்குள்ளே போய் வேலை செய்ய வில்லை என்று அர்த்தம்! அதுதான் சொன்னேனே வாய்ப்பாட்டு வாய்பாடாகிறது! நடுவிலே அந்த "ப்" இல்லை!"

" அப்படி யென்றால்?" என்று திகைப்போடு கேட்டாள் சந்திரிகா.

" பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் சொல்லுகிற அரிச்சுவடிக் கணக்கு இருக்கிறதல்லவா. அதை வாய்பாடு என்றுதான் சொல்ல வேண்டும் என்று ஒரு தமிழாசிரியர் அந்தக் காலத்தில் சொல்லுவார். இந்தக் காலத்தில் யார் இலக்கணம் படிக்கிறார்கள். ஆசிரியர்களே படிப்பதில்லை! எல்லாரும் வாய்ப்பாடு என்று ஒரு " ப் " போட்டுப் பேசுகிறார்கள்! அது தவறு. பார்த்தாயா, என்னுடைய வழக்கப்படி எங்கேயோ ஆரம்பித்த பேச்சை எங்கெங்கோ கொண்டு போய் விட்டேன்? ஓ! ஆமாம். ஞாபகம் வந்து விட்டது. சங்கீதத்தை விடப் பெரிய படிப்பு என்ன இருக்கிறது. படிப்பில் எல்லாம் பண்பட்ட படிப்பு சங்கீதந்தான். அந்தப் படிப்பு உன் உள்ளத்திலும் உடம்பு முழுவதிலும், உன்னுடைய அங்கத்தின் ஒவ்வொரு அசைவிலும் நடனம் ஆடிப் பொங்கிக் கொண்டிருக்கிறது. உனக்கு இருக்கிற பண்பு வேறு யாருக்கு உண்டு. ஆகையினால் தைரியமாகச் சொல்லம்மா—"

" இல்லை. உண்மையில் எனக்கு இருக்கிற படிப்பைக் கொண்டு அந்த விஷயத்தைச் சொல்லத் தெரியவில்லை. வார்த்தைகளிலே அதை வர்ணிக்க வரவில்லை. என்ன செய்வேன். எங்கள் இருவருக்குள்ளும் உள்ள தொடர்பு அப்படிப்பட்டது. ஏதோ நாங்கள் இருவருமே ஒரு சமயம் எல்லையைக் கடந்து விடுவோமோ என்று அஞ்சியதுண்டு. எங்களுக்குள் அப்படி எல்லையைக் கடந்து சென்றது என்பது, கையைத் தொட்டு உதறியதோடு சரி. எங்கள் இருவருக்கும் மனசாட்சி ஒன்று இருக்கிறது அம்மா. அது எங்களைக் காப்பாற்றிற்று. கல்யாணி அம்மாளின் உள்ளத்தில் ஏற்பட்டுள்ள சந்தேகம் தவறு என்றாலும் அந்தச் சந்தேகத்துக்கும் ஒரு அர்த்தம், ஒரு நியாயம் இருக்கிறது அம்மா! உண்மையில் என் இதயத்துக்குள்ளுமே அப்படி ஒரு சந்தேகம் உண்டு, விபரீதம் இதுவரை நேராவிட்டாலும், என்றைக்காவது நேர்ந்து விடுமோ என்று! ஆனால் ஒன்று சொல்கிறேன் கேளுங்கள். அவர் என்னை எடுத்து வளர்த்த தகப்பன்.

எனக்குக் கலை புகட்டிய குருநாதன். என்னைப் பேணிப் பாதுகாக்கும் தலைவன். சரீர இச்சை என்று ஒன்று இல்லாத நிலையிலே, காதல் என்று ஒன்று இருக்குமானால் அவரை என் உள்ளத்திலே என்றும் நிரந்தரமாக நிற்கும் காதலன் என்று கூடச் சொல்லுவேன். ஆனால் நிச்சயம், நிச்சயம், நிச்சயம், அவர் என்னுடைய கணவன் இல்லை. இருக்கவும் முடியாது. அது தவறு. அவர், அவர், அவர், கல்யாணியின் கணவன். கல்யாணியின் நாயகன். கல்யாணியின் புருஷன். எனக்கோ? அவர் தகப்பன், குரு, தலைவன், காதலன், என்னுடைய தெய்வம்! என்னுடைய கடவுள். என்னுடைய வழிபாட்டு மூர்த்தி!"

இப்படிச் சொல்லி விட்டு இதுவரை ஊக்கத்தோடு அடக்கி வைத்திருந்த கண்ணீரை இனிமேல் அடக்க முடியாதவளாக, அணையை உடைத்துக் கொண்டு வரும் வெள்ளத்தைப் போல் அப்படியே கொட்டினாள் சந்திரிகா. சாவித்திரி அம்மாள் அவளுக்கு அருகிலே நகர்ந்து உட்கார்ந்து கொண்டு ஒரு தாயின் அன்போடு, அவளுடைய கண்ணீரைத் துடைத்தாள்.

நீண்ட நேரம் மௌனம் நிலவியது. மாலைப் பொழுது கழிந்து இரவின் அரவணைப்பிலே பூங்காவின் மின்சாரக் குமிழ்கள் எல்லாம் பளிச்சிட்டன. மனிதர்கள் பிறரைக் கவனிக்காத முறையில் தங்கள் தங்கள் காரியத்திலே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள், அந்தப் பூங்காவிலே. வானத்தில் சந்திரன் எழுந்து வந்து கொண்டிருந்தான்.

" சந்திரிகா, உன்னுடைய மேனி பரிசுத்தமான மேனி, உன்னுடைய உள்ளம் பத்தரை மாற்றுத் தங்கம். அதில் சந்தேகமே இல்லை!" என்றாள் சாவித்திரி.

" தயவு செய்து எனக்குச் சொல்லாதீர்கள் அந்தப் பெருமையை. அவருக்குச் சேர வேண்டிய பெருமை அது. என்னை வளர்த்த தகப்பன் என்றேனே, அந்தத் தகப்பனுக்குச் சேரவேண்டியது."

இப்படிச் சொல்லி விட்டுச் சந்திரிகா கேட்டாள்: "ஏனம்மா, நீங்கள் நாலும் தெரிந்த அநுபவசாலி. எத்தனையோ பெண்களைக் கைதூக்கி விட்ட புண்ணியவதி.

உங்கள் சேவா சங்கத்திலும் எத்தனையோ பெண்களுடன் நிதமும் பழகிய அநுபவசாலி நீங்கள். உண்மையிலேயே சொல்லுங்கள், எனக்கும் அவருக்கும் உள்ள பாசத்தை எந்த வார்த்தையிலே சொல்வது? அது வெறும் அன்பா? இல்லை! தகப்பனுருக்கும் மகளுக்கும் உள்ள பாசமா? இல்லை! குரு—சிஷ்ய பக்தியா? அப்படியும் சொல்லி நிறுத்தத் தோன்றவில்லை. பின் என்னதான் அது?"

"சந்திரிகா, இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது எளிதில்லை. நீ சொன்ன இத்தனை அன்பு வகைகளிலும் எதிலும் சேராத ஓர் அன்பு என்றுதான் இதைச் சொல்ல வேண்டும். யோசித்துப் பார்த்தால் நீ சொன்ன இத்தனை அன்பு வகைகளில் ஒவ்வொன்றிலும் கொஞ்சம் எடுத்துக் கலந்து சேர்த்த ஒரு, அதை எப்படிச் சொல்ல, ஒரு பஞ்சாம்ருதம் போன்ற கலவை என்று வைத்துக் கொள்ளலாமா? ஆனாலும் ஒன்று கேட்கிறேன். மனசை விட்டுப் பதில் சொல்வாயா?"

"அம்மா, பொதுவாகவே ஒரு பெண் இன்னொரு பெண்மணியோடு பேசும்போது தாராளமாகப் பேசுகிறது வழக்கம். உங்கள் சம்பந்தப்பட்டவரையோ, எனக்கு ஒரு அன்னியரிடம் பேசுவதாகவே தோன்றவில்லை. இத்தனை சொன்னேனே, கூச்சமே எனக்கு ஏற்படவில்லை. இனியும் என்ன கேட்டாலும் சொல்லுவேன். அப்படிச் சொன்னால் தான், பெருமூச்சு விட்டதும் மனத்திலே ஒரு நிம்மதி ஏற்படுகிறதே அப்படி யிருக்கிறது எனக்கு!"

"வா! நேரமாகிறது. காரில் போய்க் கொண்டே பேசலாம்!' என்று சொல்லியவாறு அழைத்தாள் சாவித்திரி.

இருவரும் பூங்காவில் காரை நோக்கி நடந்தார்கள். நடக்கும் போதே, இருவரும் ஆழ்ந்த யோசனையில் இருந்தார்கள். சாவித்திரி யோசித்தாள், தான் கேட்க நினைக்கும் கேள்வியை எப்படிக் கேட்பது என்று! சந்திரிகா யோசித்தாள்: "இந்த அம்மாளை வெறும் படபடப்பு உள்ளவள் என்று மட்டும் நினைத்தேனே. எத்தனை நிதானம் மனசுக்குள்ளே இருக்கிறது. அப்படி

யென்றால் படபடப்பு என்பது ஒருகுணம் போலும். அதைக் கொண்டு அறிவின் நிதானத்தைக் கணிக்கக் கூடாது போலும்! அவரும் படபடப்பு உள்ளவர்தான். அவருக்கு உள்ள அறிவு வேறு யாருக்கு உண்டு இந்த உலகில்!"

இருவரும் காரிலே ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். ஸ்டியரிங்கைப் பிடித்தவாறு யோசனையில் ஆழ்ந்தாள் சாவித்திரி.

"என்னம்மா! மறுபடியும் அடுத்த கேள்வியை யோசிக்கிறீர்களா? உங்களிடம் இத்தனை நிதானம் இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை! தக்களி நூற்பது போல் நிதானமாக வட்டத்தைச் சுழல விட்டுக் கொண்டே பஞ்சிலிருந்து நூலை இழுத்து முறுக்குவார்களே, அப்படியல்லவா என்னிடம் கேள்வி போட்டு லாகவமாக இழுத்து முறுக்குகிறீர்கள்!"

"அப்படியில்லையம்மா. உன்னுடைய இதயம் பஞ்சு போன்று மென்மையானது. பஞ்சுபோல் பரிசுத்தமானது. அதைப் புரிந்து கொண்டு விட்டேன். என்றால் உனக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமா என்ற யோசனையினால் தான் இத்தனையும் கேட்கிறேன். வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதே. உண்மையில் நீ சொன்னதுபோல் நான் தக்களி நூற்கிறதாகவே வைத்துக் கொண்டாலும், மென்மையான பஞ்சை நூலாகத் திரித்து அதற்கு வலிமையும் உறுதியும் ஏற்றிவிட என்னால் முடிந்தால் அதுவே எனக்குத் திருப்தி!"

இப்படிச் சாவித்திரி அம்மாள் சொன்னது சந்திரிகாவின் இதயத்துக்கு மிகவும் உகப்பாக இருந்தது. சொன்னாள்:—

"தக்களி என்ன! ராட்டினத்திலே போட்டு வேண்டுமானாலும் சுற்றுங்கள்!". சாவித்திரி கேட்டாள்:

"சந்திரிகா, ஒன்று கேட்கிறேன். நிதானித்துப் பதில் சொல்லு. ரவீந்திரனோடு இத்தனை ஆண்டுகள் இவ்வளவு பாசத்துடன் நெருங்கிப் பழகி விட்டாயே, இன்னமும் உன் உள்ளத்தில் கண்ணுக்குத் தெரியாத

இனந் தெரியாத ஏதோ ஒரு பொருளை நாடுகிற ஒரு நாட்டம், ஓர் ஏக்கம் இருக்கிறதா? உன்னுடைய இதய மாளிகையில் ஏதோ ஓர் அறை வெறிச்சென்று, காலியாக இருக்கிறதா? மூன்று சக்கர சைக்கிள் வண்டியில் பின் இரண்டு சக்கரங்களைத் தவிர முன்னால் ஒரு சக்கரம் இருக்குமே, அந்த முன்—சக்கரம் இல்லையென்றால் அந்த சைகிள் எப்படி இருக்கும்? அப்படியிருக்கிறதா உன்னுடைய மனம்?''

"அம்மா, நீங்கள் மறுபடியும் சுற்றி வளைக்கிறீர்களே!''

"சந்திரிகா! நன்றாக ஆராய்ந்து பார்த்துச் சொல். வாழ்க்கையில் இதுவரை நீ வாழ்ந்து வந்துள்ள விதமே உனக்குப் பூரண திருப்தி தருகிறதா? ரவீந்திரனிடம் நீ கொண்டுள்ள பாசத்தினாலேயே உன் இதயம் பூரணம் அடைந்து விட்டதா? அல்லது உன்னை அன்போடு அரவணைக்க, உன் கரு நீலக் கேசத்தை வருட, உன் கன்னத்தைக் கிள்ளிவிட, உன் கூந்தலைப் பிடித்து இழுக்க, ஒரு கையை நாடுகிறதா உன் மனம்? உன்னோடு கொஞ்சும் மொழிகள் பேசுவதற்கும், உன்னைக் 'கண்ணே' என்று அழைத்து நேசம் புரிவதற்கும் ஓர் இன்பக் குரலுக்காக உன் செவி என்றுமே ஏங்கியதில்லையா? மனத்தை மறைக்காமல் என்னிடம் சொல்லம்மா!'' என்று கேட்டாள் சாவித்திரி.

## 33. கோமாளிக் கூத்து

இலஞ்சிச் சாமியாரைப் பளிஞர்கள் மத்தியில் சொக்கி குடியிலே குடியேற்றி விட்டு டாக்டர் சுரேஷ் திருச்சிக்குத் திரும்பியபோது, இலஞ்சிச் சாமியாரோ அல்லது பளிஞர் தலைவனோ மீண்டும் அத்தனை சீக்கிரம் டாக்டர் திரும்பவும் மலைக் காட்டுக்கு வருவார் என்று எதிர்பார்க்கவில்லை. ரவீந்திரன் வருவான் என்றோ அவர்கள் கனவில்கூட எண்ணவில்லை. அதிலும் அந்த நிலையில் அவன் வருவான் என்று எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

அன்று அமாவாசை தினம். சாமியார் காட்டில் கொஞ்ச தூரம் நடந்து சென்று, மலையருவியிலே குளித்து விட்டு நிலவுப் பாறையை யடுத்த காட்டு வழியே நடந்து வந்து கொண்டிருந்தார். அப்பொழுது மனத்தைக் குளுமைப் படுத்துகிற ஒரு ரம்யமான வாசனை அந்தக் காட்டுக்குள்ளே யிருந்து வந்தது. சாமியார் திகைத்தார். நாகலிங்கப் பூவின் வாசனை அது!

நாகலிங்க மரம் என்றால் இலஞ்சிச் சாமியாருக்கு ஒரு பக்தி அதில்! பல ஆண்டுகளுக்கு முன்பு தானும் மற்ற மனிதர்களைப் போல வீடும் வாசலுமாக இருந்த காலத்தில், தாம் தர்மகர்த்தாவாக இருந்து மேற் பார்த்து வந்த சிவன் கோவிலிலே வைத்து வளர்ப்பதற்காக எங்கெங்கோ சென்று தேடி ஒரு நாகலிங்கக் கிளையைக்கொண்டு வந்து நட்டார். ஆனால் கவனிப்புக் குறைவினாலோ அல்லது வேறு என்ன காரணத்தாலோ நாகலிங்கக் கிளை அந்த பூமியிலே பிடித்து வளரவில்லை. 'அச்சாணியம்' என்று ஒன்று சொல்வார்களே, அப்படி அவருடைய மனத்தில் அந்தச் சிறு சம்பவம் ஒரு பெருங் கறையை உண்டாக்கியிருந்தது. சிவபெருமானுக்கு மிகவும் பிரீதியானதும், சிவ பூஜைக்கு மிகவும் புனிதமானதுமாக விளங்குகிற அந்த நாகலிங்கம், தம்முடைய கையினால் நட்டது, வளராமல் போகவே அது ஒரு பெரும் துர்ப்பாக்கியம் என்று அவருக்குப் பட்டது. பிறகு வாழ்க்கையிலே நடந்த அதிர்ச்சி நிரம்பிய சம்பவம் எல்லாம், அந்த மரம் பட்டுப் போனதன் விளைவு என்றும் அதுவே பின்னால் ஏற்பட்ட துர்ப்பாக்கியத்துக்கு முன் அறிகுறியென்றும் பலமுறை அவர் எண்ணிப் பார்த்திருக்கிறார். இதெல்லாம் காரணமாக அவருக்கு நாகலிங்க மரத்தினிடத்தில் ஒரு பய பக்தியே இருந்தது.

எனவே இப்பொழுது அந்த மரத்தைப் பார்த்ததும், தம்முடைய பிராயச்சித்தத்துக்கு உரிய காலம் வந்து விட்டது போல ஒரு நினைப்பு எழுந்தது. 'விறுவிறு' என்று தலைவனுடைய குடிசைக்கு நடந்தார். அவனிடம் விஷயத்தைச் சொன்னார்.

மறு நாளே இலஞ்சிச் சாமியாருடைய ஆசிரமத்துக்கு அருகிலே ஒரு நாகலிங்கக் கிளை நடப்பட்டது. மரத்தோடு பழகிப் போன பளிஞர்களின் கவனமான பாதுகாப்பிலே பேணப்பட்டு, அந்தக் கிளை 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும்' என்ற நைந்து போன பழைய சொல்லுக்கு ஏற்பத் தளிர்க்க ஆரம்பித்தது. இலஞ்சிச் சாமியார் அங்கே ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்ததோடு, அருகில் ஒரு சூலாயுதத்தையும் வேலையும் நட்டுத் தமக்குத் தெரிந்த விதத்தில் நித்திய பூஜை தவறாமல் நடத்தத் தொடங்கினர்.

கோவில் ஸ்தாபிதம் ஆகிறது என்ருல், பளிஞர்களுக்கு ஏதேதோ பழம்பெரு நம்பிக்கைகள் உண்டு. அந்த நம்பிக்கைகளுக்கு ஏற்ப அவர்களும் அந்தக் கோவிலுக்கு வெளியே மரத்திலிருந்து சில அடி தூரத்தில் ஒரு கோமாளி பொம்மையை நிறுத்தி வைத்து விட்டார்கள்! கம்பீரமான மண் ஆனை ஒன்று; அதன்மேல் கோமாளி உட்கார்ந்து அந்த வட்டத்துக்குள்ளே விலங்குகளோ துஷ்டப் பூச்சிகளோ அல்லது பேய் பிசாசுகளோ அண்டி விடாதபடி காவல் காப்பான் என்பது அந்தச் சொக்கி குடிப் பளிஞர்களுக்கே உரிய பரம்பரை நம்பிக்கை. சொக்கப்பன் சொன்னான்: "சாமி, கோமாளியையும் இங்ஙனே வச்சாச்சாக்கும். இனி, நிலா அன்னிக்கு, கோமாளித் திருநாளும் கொண்டாடணுமாக்கும்!"

இலஞ்சிச் சாமியார் கோமாளித் திருவிழாவைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிருர். அவருடைய சிறு பிராயத்தில், மழை பெய்வதற்காகவும், நிலம் விளைந்து, அறுவடை சரியாக நடப்பதற்காகவும் சில கிராமங்களில் கோமாளித் திருவிழாக் கொண்டாடுவதை அவர் பார்த்திருக்கிருர். பளிஞருடைய குடியிருப்பிலும் கூட இப்படி ஒரு திருவிழா—சில மாறுதல்களுடன்—நடக்கும் என்றும், அது ஒரே வேடிக்கைக் கூத்தாக இருக்கும் என்றும் கேள்விப்பட்டதுண்டு. ஆகவே இப்பொழுது தலைவன் அதைப் பற்றிச் சொன்னதும் "பலே! அப்படியே நடத்தி விடுவோம்!" என்று உரத்த குரலிலே உற்சாகத்தோடு ஆமோதித்தார் அவர்!

ஆசிரமத்துக்கு வெளியே ஆலமரத்தின் அடியிலே, புதிதாக நடப்பட்ட நாகலிங்கத்துக்கு அருகிலே நின்று இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருந்தபோதுதான் நாலைந்து பேர் குடியிருப்பை நோக்கி நடந்து வருவது தொலைவிலே தெரிந்தது. தலைவன் கூர்ந்து பார்த்தான். அவனுக்கு எப்பொழுதுமே நல்ல தீர்க்கமான பார்வை.

"சாமி! நம்ம டாக்டரு சாமி!" என்று ஒரு துள்ளுத் துள்ளினான் சொக்கப்பன். சாமியார் கண்ணை இமைக்காமல் பார்த்தார். இதற்குள் அருகிலே வந்து விட்டார்கள் அவர்கள்.

"சாமி! சேவிக்கிறேன்!" என்றார் டாக்டர் சுரேஷ். அடுத்த நிமிஷம் தலைவனுக்கு அருகிலே வந்து நின்று அவனுடைய கையைத் தமது கையிலே பிடித்துச் சேர்த்த வண்ணம் சுரேஷ் வணக்கம் செய்தார். இரண்டு கைகளும் ஒரு துண்டினால் வரிய வரியக் கட்டப்பட்டு, பக்கத்திலே இரண்டு மனிதர்களின் கண்டிப்பான கண்காணிப்பிலே நடத்திக் கொண்டு வரப்பட்ட அந்த விசித்திர மனிதனை டாக்டர் சுரேஷ் அறிமுகம் செய்வித்தார்: "இதோ ரவீந்திரன்!"

"என்ன? என்ன?" என்று ஏக காலத்தில் அதிசயத்தோடு குரல் வந்தது! இலஞ்சிச் சாமியாரும் சொக்கப்பனும் அப்படித் திகைத்துப் போய்க் கேட்டார்கள்!

"ஆமாம், எந்த அதிசயக் கலைஞனுடைய வரவை நீங்கள் ஆவலோடு எதிர்பார்த்தீர்களோ, எந்த அதிசயக் கலைஞனுடைய புல்லாங் குழல் வாசிப்பு இந்த மலைக் காட்டைப் புனிதப் படுத்த வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்களோ, அந்த அதிசயக் கலைஞனை அழைத்து வந்திருக்கிறேன். ஆனால்—சரி, அதெல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொள்வோம். முதலில் சாமியாருடைய ஆசிரமத்துக் குள்ளே இவர்கள் போகட்டும்!" என்று டாக்டர் சொல்லி, ரவீந்திரனையும் அவனோடு வந்த இரண்டு மனிதர்களையும் ஆசிரமத்தினுள் அழைத்துக் கொண்டு சென்றார்.

இதன் பிறகு டாக்டர் சுரேஷ் தமது திட்டத்தின் படி ஒரு வாரம் அங்கே தங்கவில்லை. இலஞ்சிச் சாமியாரும் சொக்கப்பனும் பௌர்ணமியன்று 'கோமாளிக் கூத்து விழா' நடத்தப் போவதைப் பற்றிச் சொன்னதும் அவர் மறு நாளே திருச்சிக்குப் புறப்படுவதாகச் சொன்னார். இலஞ்சிச் சாமியாருக்குத் திகைப்பாக இருந்தது. டாக்டர் சொன்னார் :

" சாமிகளே ! என்னையும் உங்களுடைய திருக் கூட்டத்திலே சேர்ந்து விடாதீர்கள். அடியேன் ஒரு சம்சாரி. குடும்பஸ்தன். அத்தோடு எத்தனையோ குடும்பங்களின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க வேண்டியவன் ! ஒரு வாரம் இப்பொழுது தங்கிவிட்டு, பிறகு பௌர்ணமியன்றும் இங்கே வரவேண்டும் என்றால் அது எப்படி முடியும் ? சர்க்காரிலே தான் அந்த மாதிரி லீவு கொடுப்பானா ?"

" என்ன ! அப்படியானால் பௌர்ணமிக்கு நீங்கள் வருகிறீர்களா ?" என்று கேட்டார் சாமியார்.

" கோமாளித் திருநாளுக்கு நீங்களும் வர்றீங்களாக்கும் ! அட வேலப்பா !" என்றான் சொக்கப்பன். எல்லையற்ற ஆனந்த உணர்ச்சியை 'வேலப்பா' என்ற சொல்லினால் வெளிப்படுத்துவது பளிஞர் தலைவனின் பழக்கம்.

" அதனால் தான் இப்பொழுது எடுத்துள்ள ஒரு வார லீவில் ஐந்து நாளை மிச்சம் பண்ணலாம் என்று பார்க்கிறேன். ஆனால் புறப்படுவதற்கு முன்பு ரவீந்திரனைப் பாதுகாப்பதற்கு வேண்டிய சில விஷயங்களைச் சாமியோடு கலந்து கொள்கிறேன் " என்றார் சுரேஷ்.

சொக்கப்பனுக்கு டாக்டர் சுரேஷ் வந்தது, வேலப்பனே எழுந்தருளி வந்ததுபோல இருந்தது. ஆனால் ரவீந்திரனை அந்த நிலையிலே கண்டது அவனுடைய மனத்தில் ஆற்ற முடியாத துயரத்தைக் கொடுத்தது. 'நாகரிகம்' என்ற பெயரில் இதயத்தில் பாசத்தையும் அன்பையும் வற்றச் செய்து, வெறும் சம்பிரதாய நமஸ்

காரங்களும், வணக்கங்களும், பொருளற்ற வரவேற்புச் சொற்களும், அர்த்தம் இல்லாத நன்றி வார்த்தைகளுமாக வளைய வருகிற நகர மனிதர்களோடு பழகிப் பழகிச் சலித்துப் போன டாக்டர் சுரேஷுக்குச் சொக்கப்பனுடைய உள்ளத்தின் ஆசாபாசம் தெய்வ தரிசனமாக இருந்தது.

“முன்பின் தெரியாத எங்களிடம் இத்தனை அன்பு உங்களுக்கு எப்படி ஏற்படுகிறது? எங்களால் இதைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை!” என்றார் டாக்டர் சுரேஷ். இதற்குப் பதில் சொல்லத் தெரியாமல் சொக்கப்பன் அன்பின் வசமாகிக் கண்கலங்கி நின்றான். அவனுடைய சார்பிலே இலஞ்சிச் சாமியார் பேசினார்:

“டாக்டர், இவர்களுடைய அன்பு தெய்விகமாக இருக்கிறது. நான் இங்கு குடியேறிய விநாடியிலிருந்து ஒவ்வொரு கணமும் அதை அனுபவிக்கிறேன். ஒன்று தோன்றுகிறது. நமது நாட்டில் முன் காலத்தில் எல்லாருமே இப்படித்தான் அன்பாக இருந்திருக்கிறார்கள். இந்த இங்கிலீஷ்காரன் வந்துதான் மயில் சிம்மாசனத்தையும் கோஹினூர் வைரத்தையும் நம்முடைய மக்களுடைய இதயப் பண்பையும்—மூன்றையும் கொள்ளையடித்துக் கொண்டு போய் விட்டான்!”

டாக்டர் சுரேஷ் சிரித்தார். சொன்னார்: “சாமி, உங்களுக்கு இத்தனை பாலிடிக்ஸ் தெரியும் என்று எனக்குத் தெரியாதே! சபாஷ்! ஆனால் ஒன்று சொல்லுகிறேன். மயில் சிம்மாசனத்தையும், கோஹினூர் வைரத்தையும் திரும்ப வாங்கிக் கொண்டு விடலாம். இதயப் பண்பு என்றீர்களே அதை எப்படி வாங்குவது? அதற்கு வழி நம்மிடந்தான் இருக்கிறது!”

இப்படி டாக்டர் சொன்னதும் சாமியார் கூறினார்: “இதயப் பண்புதானே? ஆமாம். அதற்கு வழி நம்மிடந்தான் இருக்கிறது. என்னைக் கேட்டால் டையும், புல் சூட்டும் போட்ட ஒவ்வொரு கறுப்புத் துரை மகனும் ஒரு மாசம் நம்முடைய நாட்டு மலைக் குகைகளிலே வாசம் செய்ய வேண்டும் என்பேன். நமது நாட்டுப் பூர்வ குடி

மக்களோடு பழக வேண்டும் என்று சொல்வேன். அவர்களை நாம் நாகரிகப் படுத்த வேண்டும் என்று அன்று நான் பேசினேனல்லவா? அது தவறு. இவர்களோடு பழகினால் நம்மை நாமே நாகரிகப் படுத்திக் கொள்ளலாம்! உண்மையில் இந்தச் சில நாட்களில் என்னுடைய அநுபவம் அதுதான். என்னை இவர்கள் ஏதோ தெய்வ சக்தி உள்ளவன் என்று என்ன மாதிரிக் கொண்டாடுகிறார்கள் தெரியுமா! அந்த உண்மையான நம்பிக்கையைப் பார்த்தால், எனக்கு மெய்யாகவே தெய்வ சக்தி—இதுவரை இல்லாதது இனிமேல்—உண்டாகி விடும் என்று தோன்றுகிறது. இந்த வெறும் வேஷத்துக்கே இத்தனை மதிப்புக் கொடுக்கிறார்களே என்று நினைக்க நினைக்க, இந்த வேஷத்துக்கு ஏற்ற காரியங்களை உண்மையாகவே செய்து அவர்களுடைய நம்பிக்கைக்கு அருகதையாக வேண்டும் என்று மனப் பூர்வமாக நினைக்கிறேன் டாக்டர். என் வார்த்தையை நம்புங்கள்!''

இலஞ்சிச் சாமியார் மிக்க உணர்ச்சியோடு பேசினார். டாக்டர் சுரேஷ் இதை யெல்லாம் கேட்டு விட்டுப் பிறகு அவரைத் தனியாக அழைத்துப் போய் ரவீந்திரனுடைய சிகிச்சை . விஷயமாக ஆலோசனைகள் சொன்னார். சர்ப்பகந்தியில் எத்தனை விதங்கள் இருக்கின்றனவோ, அத்தனை விதங்களைப் பற்றியும் ஜெர்மனி தேசத்து நிபுணர்களும் மற்ற மேனாட்டு வைத்தியர்களும் என்னென்ன கண்டிருக்கிறார்களோ அவற்றை யெல்லாம் எடுத்துச் சொன்னார்.

"இதெல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்கட்டுமே என்று சொன்னேன். எதற்கும் மேனாட்டானை மேற்கோள் காண்பித்தால்தான் நம்முடைய ஜனங்கள் நம்புகிறார்கள். அந்தப் பழக்கத்தில் சொன்னேன். மற்றப்படி சர்ப்ப கந்தியைப் பக்குவப் படுத்துகிற முறை சித்தர்களுடைய முறையாகவே இருக்கட்டும். நம்முடைய சித்த வைத்தியத்தை ஆராய்ந்து மேனாட்டான் அதிசயப்படுவதற்கு இன்னும் அரை நூற்றாண்டு ஆகும். அவனுடைய சாஸ்திர ஞானம் அவ்வளவுக்கு இன்னும் விருத்தியாக வில்லை! உங்களிடமானதால் துணிந்து இப்படிப்

பேசினேன். வெளியே நாலு பேர் கேட்டால் என்னையும் சாமிகளுடைய திருக்கூட்டத்திலே சேர்த்து விடுவார்கள். சுரேஷ் சாமியார் என்று பட்டம் வேறு கொடுத்து விடுவார்கள் !"

இவ்வாறு சொல்லி விட்டு டாக்டர் சுரேஷ் தாம் வைத்தியக் கல்லூரியில் படித்த காலத்தில் தமக்கு ஆசிரியராக இருந்த பேராசிரியர் திருப்பதி நாதன் என்ற அறிஞரின் ஆராய்ச்சிக் குறிப்புகளை—தமிழிலே எழுதி யிருந்ததை—இலஞ்சிச் சாமியாரிடம் கொடுத்தார்.

"இந்தக் குறிப்புகள் எல்லாம் சர்ப்பகந்தியைப் பற்றியவை. சென்னை வைத்தியக் கல்லூரியில் பல வருஷங்கள் ஆராய்ச்சி செய்து தன்னைப் பற்றி உலகத் துக்கு விளம்பரம் செய்து கொள்ளத் தெரியாமல் உயிர் விட்ட ஒரு ஞானியினுடைய குறிப்புக்கள் இவை. சித்த வைத்தியத்திலும், ஆயுர் வேதத்திலும், யூனானி முறை யிலும் மேனாட்டு வைத்தியச் சோதனைகளிலும் ஒரு மிக்க அனுபவம் வாய்ந்த லக்ஷத்தில் ஒரு மனிதர் இந்தத் திருப்பதி நாதன். இதைப் படித்து விட்டு ஏதாவது சந்தேகங்கள் இருந்தால் கேளுங்கள். இன்று இரவில் இருந்தே சிகிச்சையை ஆரம்பியுங்கள்" என்றார் சுரேஷ்.

இதன் பிறகு டாக்டரும் சாமியாரும் சுமார் இரண்டு மணி நேரம் வைத்தியப் பேச்சுக்கள் பேசிக் கொண்டிருந் தார்கள். அந்தக் குறிப்புக்களிலே கண்ட முறையில் மருந்துகளைச் செய்வதற்கு வசதியான இடம் அந்த மலைக் காடுதான் என்பதிலே சாமியாருக்கு அளவில்லாத சந்தோஷம். மூளைக் கோளாறு குணமாவதற்கு அந்த மருந்து எத்தனை முக்கியமோ அத்தனை முக்கியம் அந்த அருவிச் சூழ்நிலையும், ரம்யமான அந்தக் காடும். மூளை பிசகிய ஒருவனைச் சுற்றி மனிதர்கள் எத்தனைக்கு எத்தனை குறைவாக இருக்கிறார்களோ, அத்தனைக்கு அத்தனை நல்லது என்று குறிப்பிலே எழுதியிருந்ததைப் பார்த் ததும் சாமியார் அப்படியே ஸ்தம்பித்து விட்டார்.

"டாக்டர்! நீங்கள் கவலையே பட வேண்டாம். நரம்பு சம்பந்தமான வியாதிகளிலே எனக்கும் ஓரளவு

பயிற்சி உண்டு. நீங்கள் கொடுத்திருக்கிற குறிப்புக்களோ மிக மிக அருமையான ரத்தினங்கள். நீங்களும் பௌர்ண மிக்கு வருகிறீர்கள். பௌர்ணமி தினங்களிலே தான் மூளைக் கொதிப்பு பொதுவாக அதிகரிக்கும் என்று சொல்வ துண்டு. நான் அதற்குள்ளாகவே வியாதியின் நாடியைக் கண்டு தேர்ந்து வாசிப்படுத்த முயல்கிறேன். உதவிக்கோ இந்தச் சொக்கிகுடிப் பளிஞர்கள் இத்தனை பேரும் இருக் கிறார்கள். நீங்கள் நிம்மதியாகப் போய் வரலாம்!"

"ரொம்ப சரி சாமிகளே! எதற்கும் என்னோடு வந்துள்ள ஒரு மனிதனை இங்கே விட்டுச் செல்கிறேன். கம்பௌண்டராக இருந்து நல்ல அநுபவம் பெற்றவன் இவன். உங்களை விட அதிகம் தெரிந்தவன் என்றில்லை. உங்களுக்கு உதவி செய்வதற்கு வேண்டிய அநுபவம் உள்ளவன் என்று சொல்கிறேன்! அத்தோடு ரவீந்திரன் மனம் விட்டுச் சிரிப்பதற்கு வேண்டிய சூழ்நிலையை அடிக்கடி உண்டாக்குங்கள்!"

இவ்வாறு சொல்லி டாக்டர் சுரேஷ் தம்மோடு வந்த ஒரு மனிதரை இலஞ்சிச் சாமியாருடைய ஆசிரமத்திலே விட்டு விட்டு மற்றவர்களோடு திருச்சிக்குப் புறப்பட்டார்.

*　　　　*　　　　*

பம்பாயில் சந்திரிகா சாவித்திரி அம்மாளின் அன்பிலும் பராமரிப்பிலும் பாதுகாக்கப்பட்டு வந்த அதே சமயம், சொக்கி குடியில் இலஞ்சிச் சாமியாருடைய சிகிச்சையில் பளிஞருடைய அன்பான கவனிப்பில் மலைக் காடுகளிலே பாதுகாக்கப்பட்டு வந்தான் ரவீந்திரன். கல்யாணி அம்மாளோ, தானும் அந்தக் குத்து விளக்கும், தனிமையுமாக லால்குடியில் தகப்பனார் வீட்டில் தன் தாயாருடைய ஆறுதல் மொழியிலே திருநீறும் குங்குமமும் தியானமுமாகப் புனிதச் சூழ்நிலையில் பாதுகாக்கப்பட்டு வந்தாள்.

மூன்று வெவ்வேறு இடங்களில், மூன்று விதக் காவல்களில் இந்த மூவரும் இருந்த போதிலும்

அவருடைய மன நிலை மட்டும் ஒரே மாதிரியாகத்தான் இருந்தது! ரவீந்திரனுக்கோ கோளாறு காரணமாகப் புத்தி நிலையில் இல்லை! அது என்ன ஆகும் என்று யாரால் எப்படிச் சொல்ல முடியும்? சந்திரிகாவோ சாவித்திரி அம்மாளோடு எத்தனை சுற்றினாலும், எவ்வளவு அலைந்தாலும் இரவு நேரங்களிலே மெழுகுவத்தி விளக்கின் வெளிச்சத்திலே நிலையற்ற மனத்தோடு போராடிக்கொண்டிருந்தாள். கல்யாணியோ — அவளுடைய நிலையைக் காணவே மனம் தாங்கவில்லை கனகசுந்தரத்துக்கு! பொழுது விடியும், பொழுது அஸ்தமிக்கும். ஆனால் அவளுடைய கண்ணீருக்கு அஸ்தமனமோ, விடிவு காலமோ இல்லை. தப்பித் தவறி உடம்பின் களைப்பினால் இமை சோர்ந்து போய் மூடினால் பயங்கரமான கனவுகள் தன் கணவன் கூச்சலிடுவது போலவும், நாலைந்து பேர் அவனைக் கயிற்றினால் கட்டி இழுத்து வந்து சாட்டையினால் 'பளீர் பளீர்' என்று அடிப்பது போலவும் சொப்பனம் கண்டு "ஐயோ! ஐயோ!" என்று கதறிக்கொண்டே கண் விழிப்பாள் கல்யாணி! குத்து விளக்குக்கு முன் போய் நின்று கண்ணீர் விடுவாள். தன்னுடைய மாங்கல்யத்தைத் தொட்டுக் கண்களிலே ஒற்றிக் கொள்வாள். அதற்குக் குங்குமம் இடுவாள். "அம்மா தாயே! ஜோதியே! என் குல விளக்கை அணைத்து விடாதே, அம்மா!" என்று கதறி அழுவாள். இப்படி அவள் பிரார்த்தனை செய்யும் போது தற்செயலாகக் கனக சுந்தரம் அந்தப் பக்கம் வர நேரிட்டு, அவருடைய காதிலே இந்த வார்த்தைகள் விழுந்தால், பெரியவருக்கு அப்படியே இதயம் வெடித்து விடும்போல் இருக்கும்.

இந்த நிலையிலேதான் பௌர்ணமி வந்தது. அந்தப் பௌர்ணமி தினத்தில் மூன்று இடங்களிலும் மூன்று வித விசேஷங்கள் நடைபெற்றன. லால்குடியில் கல்யாணி அம்மாள் விளக்குக்குப் பூஜை செய்து பிரார்த்தனைகளும் நேர்த்திக் கடன்களும் செய்துகொண்டாள். பம்பாயில் பௌர்ணமி அன்றுதான் 'நட்சத்திர நங்கை' மேடையிலே ஆடி மயங்கி விழுந்தாள். சொக்கிகுடியிலோ அன்று தான் கோமாளிக் கூத்து கோலாகலமாக நடைபெற்றது.

ஆமாம்; "ரவீந்திரன் மனம் விட்டுச் சிரிக்க வேண்டும்" என்று டாக்டர் சுரேஷ் சொன்னார் அல்லவா? அந்த வார்த்தைகளின் பொருளை இலஞ்சிச் சாமியார் நன்கு ஆராய்ந்தார். 'மூளைக் கோளாறு உள்ளவர்கள் அடிக்கடிசிரிக்கிறார்கள். ஆனால் அது மனம் விட்டுச் சிரிக்கிற சிரிப்பு இல்லை. மனத்துக்குள்ளேயே, தன்னுடைய மனத்துக்குள்ளேயே தானாகச் சிரிக்கிற சிரிப்பு அது. பின் மற்றவர்களுடைய சிரிப்பு எப்படி? தானே தன்னுடைய மனத்தின் போக்கில் சிரிக்கிறான் ஒரு பைத்தியம். ஆனால் நாமோ சிரிப்பு மூட்டுகிற புற விஷயங்களைப் பார்த்து, அல்லது சிரிப்பு மூட்டுகிற புற விஷயங்களைக் கேட்டுச் சிரிக்கிறோம். நமக்குள்ளேயே நாம் சிரிக்கும்போது கூட நம்முடைய மனத்தில் சிரிப்பு மூட்டுகிற ஏதோ ஒரு விஷயம் அல்லது சிந்தனை ஞாபகத்துக்கு வந்து அது காரணமாகச் சிரிக்கிறோம். எனவே மனம் விட்டுச் சிரிப்பது என்பது இதுதான்! உண்மையில் கோமாளிகளின் கூத்தைப் பார்த்து அந்த விஷயங்களின் வேடிக்கைகள் மனத்திலே தாக்கி ரவீந்திரன் சிரிக்க முடிந்தால் எப்படியிருக்கும்?"

இவ்வாறு யோசித்தார் இலஞ்சிச் சாமியார். எனவே சொக்கப்பனிடம் சொல்லி, சொக்கி குடியில் மட்டுமல்லாமல், சுற்று வட்டாரங்களில் உள்ள மலைக் குடியிருப்புக்களிலிருந்தும், மலையடிவாரக் கிராமங்களிலிருந்தும் விதம் விதமான கோமாளிகளை வரவழைத்தார் சாமியார். ஆசிரம வாசலில் ஆனைக் கோமாளிப் பொம்மையை நிறுத்தியிருக்கும் இடத்துக்குப் பக்கத்தில், ஒரு பெரிய மண் மேடை அமைத்து அதில் கோமாளிக் கூத்து நடைபெறுவதற்கு ஏக தடபுடலாக ஏற்பாடுகள் நடைபெற்றன. மேலகரம் என்ற கிராமத்திலிருந்து புகழ் பெற்ற கோமாளி வேஷக்காரன் ஒருவன் இந்தத் திருவிழாவுக்கு என்றே விசேஷமாக அழைத்துவரப் பட்டான். திரிகூடராசப்ப கவிராயர் என்ற உன்னதக் கவிஞரின் மரபிலே வந்த பல பாடல்களையும் கேட்டுப் பழகியவன் என்றும், தானே நூதனமாகக் கவி பாடக்கூடிய வல்லவன் என்றும் அவனுக்கு அந்த வட்டாரத்தில் நல்ல பெயர். அவன்

தான் கோமாளிகளின் தலைவனாக வேடம் தாங்கி அந்தத் திருவிழாவிலே ஆனை மேலே அம்பாரி வைத்து அதில் ஒய்யாரமாக வந்து இறங்கினான்.

ஏராளமான கூட்டம். இடது கையிலே தூபக் காலைத் தாங்கிக் கொண்டு வலக்கையில் மயில் தோகை பிடித்து இலஞ்சிச் சாமியார் நிகழ்ச்சியை வகைப்படுத்தினார். ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் ரவீந்திரனைக் கூட்டத்துக்குள்ளே அழைத்து வந்து ஆலமரத் திரணையிலே உட்கார்த்துவது என்று ஏற்பாடு.

கோமாளி பாட ஆரம்பித்தான் :—

கோமாளி வேஷக்காரன் ராமராமா—நான்
ஏமாளி யல்லவடா ராமராமா !
ஆனையைப் பிடித்திழுப்பேன் ராமராமா—அந்தப்
பூனையைக் கண்டோடுவேண்டா ராமராமா !
புலியைப் பிடித்திழுப்பேன் ராமராமா !—அந்த
எலியைக் கண்டோடுவேண்டா ராமராமா !
சிங்கத்தைப் பிடித்திழுப்பேன் ராமராமா—பெண்டாட்டித்
தங்கத்தைக் கண்டோடுவேண்டா ராமராமா !

இப்படி மேலகரம் கோமாளி பாடி முடித்ததும் இன்னொரு கோமாளி அவனுக்கு எதிரே வந்து நின்று, "அப்படியானால், ஏ கோமாளி ! உன்னுடைய பெண்டாட்டியைத் தான் பூனை என்றும், எலி என்றும், தங்கம் என்றும் சொன்னாயோ !" என்று வசன நடையிலே கேட்டு விட்டுக் கீழ்க் கண்டவாறு பாட ஆரம்பித்தான் :—

கோடாலிக் கொண்டை போட்டு—ஏ தங்கமே தங்கம்
கோயிலுக்கு வாற பெண்ணே—ஏ தங்கமே தங்கம்
கோடாலிக் கொண்டையிலே—அடியே தங்கமே தங்கம்
கொழுந்திருந்து வாடுதடி—தங்கமே தங்கம்

இப்படிக் கோமாளிகளின் சம்பாஷணை நடந்து கொண்டிருக்கும் போதே ஒரு பெண்கள் கோஷ்டி புறப்பட்டு வந்தது.

தன்னுனே என்றுதான் சொல்லுங்களேன்—உங்க
நாவுக்குச் சர்க்கரை நான்தாரேன்
தில்லாலே என்றுதான் சொல்லுங்களேன்—நீங்க
தின்னச் சர்க்கரை நான்தாரேன்

ஆனை வாரதைப் பாருங்களேன்—ஆனை
அசைஞ்சு வாரதைப் பாருங்களேன்
ஆனைப்படலம் போலே நம்ப தேவதை
அட்டிகை மின்னலைப் பாருங்களேன் !

குதிரை வாரதைப் பாருங்களேன்—குதிரை
குதிச்சு வாரதைப் பாருங்களேன்
குதிரைப் படலம் போல நம்ப தேவதை
கொலுசு மின்னலைப் பாருங்களேன் !

*இதைத் தொடர்ந்து கோமாளி பாட ஆரம்பித்தான் :*

தங்கத்தாலே தாம்பாளமாம்—பெண்டுகளா

*இப்படிக் கோமாளி ஆரம்பித்ததும் அடுத்த அடியைப் பெண்கள் பாடினார்கள்.*

சரம் சரமாப் பூச்சரமாம்—ஏ கோமாளி !

*கோமாளி ஒரு அடி பாடவும், பெண்டுகள் அடுத்த அடி பாடவுமாக இந்தப் பாடல் மாறி மாறி நடந்தது.*

தங்கத்தாலே தாம்பாளமாம்—பெண்டுகளா
சரஞ்சரமாப் பூச்சரமாம்—ஏ கோமாளி !

பூச்சரத்தைக் கைப்பிடிச்சு—பெண்டுகளா
புறப்பட்டாளே மாரியம்மா—ஏ கோமாளி

வெள்ளியாலே தாம்பாளமாம்—பெண்டுகளா
விதம் விதமாப் பூச்சரமாம்—ஏ கோமாளி

பூச்சரத்தைக் கைப்பிடிச்சார்—பெண்டுகளா
புறப்பட்டாரே அய்யனாரு—ஏ கோமாளி

அருவிக்கரை அரசமரம்—பெண்டுகளா
ஆனைகட்டும் பூவரசாம்—ஏ கோமாளி

ஆனைமேலே அம்பாரியாம்—பெண்டுகளா
அம்பாரியில் கோமாளியாம்—ஏ கோமாளி

பாட்டு இப்படி நடந்து கொண்டிருக்கும் போது, கூட்டத்தில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று. சேவற் கோழி கூவுவது போல ஏதோ ஒரு சப்தம் கேட்டுப் பளிஞர்கள் திகைத்தார்கள். இலஞ்சிச் சாமியார் தூபக் காலைப் பக்கத்திலே நின்ற ஒரு பளிஞனிடம் கொடுத்து விட்டுக் கையிலே பிடித்திருந்த மயில் பீலியோடு சப்தம் வந்த திசையை நோக்கி ஓடினார்!

## 34. ஒலியும் ஓசையும்

கோமாளிக் கூத்து நடைபெற்று வரும் போதே, நிகழ்ச்சிகளை வகைப்படுத்திக் கொண்டிருந்த இலஞ்சிச் சாமியார் அடிக்கடி கூட்டத்தை அப்படியும் இப்படியும் சுற்றிப் பார்த்து யாரையோ தேடிக் கொண்டிருந்தார். கோமாளிக் கூத்து நடப்பதைக் காண வருகிறேன் என்று சொல்லிப் போன டாக்டர் சுரேஷ் அதுவரை வந்து சேராதது சாமியாருக்குக் கவலை உண்டாக்கி யிருந்தது. எனவே கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டதும் ஒரு வேளை டாக்டர்தான் வந்து விட்டாரோ என்று அவர் முதலில் நினைத்தார். ஆனால் கோழி கூவுவதுபோல ஒசை வந்ததும் அவருக்குத் திகைப்பு உண்டாகி விட்டது.

தூபக் காலைப் பளிஞன் ஒருவனிடம் கொடுத்து விட்டுச் சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினார். என்ன வியப்பு! ரவீந்திரன் தான் வந்து கொண்டிருந்தான்! ஆனால் அவனோடு வந்தது யார்? சாக்ஷாத் டாக்டர் சுரேஷ்தான்.

“என்ன சாமிகளே! திகைக்கிறீர்கள்! ஏதோ ஒரு ரஸமான கட்டத்திலேதான் ரவீந்திரனைக் கூட்டத்துக் குள்ளே அழைத்துப் போய்த் திரணையில் உட்கார்த்த

வேண்டும் என்று நீங்கள் திட்டம் போட்டிருந்தீர்கள் போலிருக்கிறது. நான் அதைக் கெடுத்து விட்டேனே!"

இவ்வாறு குறும்பாகச் சொல்லிக் கொண்டே சாமியாருக்கு அருகிலே வந்து நின்று கொண்டு டாக்டர் பேசினர்: "இப்பொழுது கோழி மாதிரிக் கூவியது யாரென்று நினைக்கிறீர்கள்? ரவீந்திரன் என்றுதானே? அதுதானில்லை. நான்தான் அந்தமாதிரிக் கூப்பிட்டேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் ரவீந்திரனும் அப்படி ஒரு ஓசையை உண்டாக்கினல் அவனுடைய வியாதி குணமாகி விட்டது என்று அர்த்தம்! கோழி கூவினல் விடியும் அல்லவா? அவனுடைய வியாதிக்கும் விடிவு காலம் வந்துவிடும், அவனும் கோழியைப்போல் கத்தினல்!"

இப்படி டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ரவீந்திரன், தூரத்தில் கோமாளிகள் கூத்தாடுவதை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த விதத்தை இருவரும் கவனித்தார்கள். அவனுடைய விழிகளைக் கவனித்தால், கோமாளியின் கூத்தும் பாட்டுமே அந்தக் கண்களின் வழியாக உள்ளே சென்று மனத்தைப் போய்த் தாக்கி நின்றனவோ என்று தோன்றியது. கொஞ்ச நேரத்தில் அந்தப் பாட்டும் ஆட்டமும் உச்ச நிலையை அடைந்தபோது ரவீந்திரனுடைய கால் விரல்கள் ஆடின. அந்த ஆட்டத்தைக் கூர்ந்து பார்த்தார் டாக்டர் சுரேஷ்.

"சாமிகளே! நான் ரவீந்திரனை இங்கே கொண்டு வந்து விட்டுப் போன பிறகு, இப்பொழுதுதான் பார்க்கிறேன். இந்த இடை நாட்களில் அதிசயமான மாறுதல் தெரிகிறது. உங்களுடைய சர்ப்பகந்தி அவனுடைய உடம்பின் ரத்தவேகத்தை எவ்வளவோ அடக்கியிருக்கிறது. அதே சமயம் இந்த மலைக்காட்டுச் செடி கொடிகளின் குளுமையும், சம்பவச் சிக்கல்கள் இல்லாத இந்தச் சொக்கி குடியின் நிம்மதியான சூழ்நிலையும் ஒரு பெரும் அளவுக்கு அவனுடைய மன நிலையையும் அபிவிருத்தி செய்திருக்கின்றன. ஆனல் முழுதும் குணமாக வேண்டும் என்ருல் அவனுடைய மனத்திலிருந்து எழுச்சி புறப்பட்டு அது ஓசையாக வெளிவர வேண்டும். ரவீந்திரன் ஒரு

சங்கீதக் கலைஞன். அவனுடைய உள்ளத்தைத் தொடக் கூடிய ஒரே சக்தி, வேறு எந்த மருந்தையும் விட ஆற்றல் வாய்ந்த சக்தி, ஒலிதான். வெளியில் கேட்கிற ஒலியும் அவனுடைய உள்ளத்தின் ஒலியும் சுருதி சேர்ந்து ஒலிக்க ஆரம்பித்து விட்டால், ரவீந்திரன் பழைய ரவீந்திரன் ஆகி விடுவான். இதுதான் அவனுடைய மனத்தின் தத்துவம். நீங்கள் என்னோடு கொஞ்சம் தனியாக வாருங்கள். கல்யாணி அம்மாளின் துயர நிலையைப் பற்றிச் சில விவரங்கள் கேள்விப்பட்டேன். அதன் விளைவாக இரண்டொரு விஷயங்கள் முடிவு செய்திருக்கிறேன். நாம் இருவரும் அதைப்பற்றிப் பேசலாம். ரவீந்திரனைக் கொஞ்சம் தனியாக இந்தக் கூட்டத்தில் விட்டு விட்டு அப்பால் செல்லுவோம். பளிஞர்கள் அவனைக் கவனித்துக் கொள்ளுவார்கள். அவன் இந்த வேடிக்கைக் கூத்துக் களைக் கொஞ்சம் பார்த்துக் கொண்டிருக்கட்டும்!''

இவ்வாறு சொல்லி டாக்டர் சுரேஷ் இலஞ்சிச் சாமியாரை அழைத்துக் கொண்டு நகர்ந்தார். கூத்து தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

* * *

ரவீந்திரனுடைய மனத்தைச் செம்மைப் படுத்துவதற்கான காரியங்கள் மலைக்காட்டில் சொக்கி குடியிலே இத்தனை கவனத்தோடு நடைபெற்றது போலவே, பம்பாயிலும் நட்சத்திர நங்கை மயங்கி விழுந்த பிறகு அவளுடைய உள்ளத்தின் தன்மையை ஆராயும் முயற்சியும் அதைச் செம்மைப் படுத்துவதற்கான பிரயத்தனமும் தொடர்ந்து நடைபெற்றன.

சாவித்திரி அம்மாள் ஒவ்வொரு காரியத்திலும், பேசுகிற ஒவ்வொரு வார்த்தையிலும் இந்த நோக்கத்தை உள்ளடக்கி நடந்து கொண்டாள். உண்மையில் அவளுடைய மனத்தின் அந்தரங்கத்தில் வேறொரு புதிய ஆசையும் அரும்பி யிருந்தது.

"சந்திரிகா நன்றாக ஆராய்ந்து பார்த்துச் சொல். இதுவரை நீ வாழ்ந்து வந்துள்ள விதமே உனக்குப் பூரண

திருப்தி தருகிறதா? ரவீந்திரனிடம் நீ கொண்டுள்ள பாசத்தினுலேயே உன் இதயம் பூரணம் அடைந்து விட்டதா? அல்லது உன்னை அன்போடு அரவணைக்க, உன் கருநீலக் கேசத்தை வருட, உன் கன்னத்தைக் கிள்ளிவிட, உன் கூந்தலைப் பிடித்து இழுக்க, ஒரு கையை நாடுகிறதா உன் மனம்? உன்னேடு கொஞ்சும் மொழிகள் பேசுவதற்கும், உன்னைக் 'கண்ணே' என்று அழைத்து நேசம் புரிவதற்கும் ஓர் இன்பக் குரலுக்காக உன் செவி என்றுமே ஏங்கியதில்லையா? மனத்தை மறைக்காமல் என்னிடம் சொல்லம்மா!"

இவ்வாறு கேட்டாள் அல்லவா சாவித்திரி அம்மாள். இந்தக் கேள்விக்கு உடனே பதில் வந்து விடும் என்ருே அப்படி வரவேண்டும் என்ருே அவள் எதிர்பார்க்கவில்லை. பின் எதற்காகக் கேட்டாள் என்ருல், சந்திரிகாவுக்கே அவளுடைய மனம் புரிந்திருக்கிறதா, இல்லையென்ருல் அதை அவளே புரிந்து கொள்ள முயற்சிக்கட்டும், தன் உணர்ச்சிகளைத் தானே ஆராய்ந்து பார்க்கட்டும் என்று கருதியே, சந்திரிகாவிடம் சாவித்திரி அம்மாள் அந்த மாதிரி ஒரு கேள்வியைப் போட்டாள். மெய்யாகப் பார்த்தால் சந்திரிகாவுக்கும், தானே தன்னுடைய இதயத்தைக் கேட்டுக் கொள்வது போல இருந்தது அந்தக் கேள்வி. மௌனமாக இருந்தாள்.

"சந்திரிகா! என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்ல வெட்கமாக இருக்கிறதா? அப்படியானுல் அந்த வெட்கத்தை விட்டு விடம்மா! அல்லது, இந்தக் கேள்விக்கு யோசித்துப் பதில் சொல்ல வேண்டும் போல் தோன்றினுல், பேஷாக யோசித்துச் சொல்!" என்ருள் சாவித்திரி.

"அம்மா! எனக்கே இதுவரை புரியாத ஒரு விஷயத்தை நீங்கள் இப்பொழுது கேட்கிறீர்கள். யோசித்துத்தான் பதில் சொல்ல வேண்டும். ஆனுல் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்ல முடியும். நீங்கள் குறிப்பிட்டது போன்ற முறையில் என்னேடு இது வரை யாரும் பேசியதில்லை. யாரும் நீங்கள் சொன்னீர்களே அப்படிக் கொஞ்சியதில்லை. அவர் சம்பந்தப்பட்டவரை அவர் ஒரு

மணமாகாத வாலிபராக இருந்து, நாங்கள் முதன் முதலாக அப்படிச் சந்தித்திருந்தால் ஒருவேளை அவர் அப்படி யெல்லாம் என்னோடு பழகியிருக்கக் கூடும். நானும் அதையே எதிர்பார்த்து ஏங்கியிருப்பேன். ஆனால் இப் பொழுதோ—அம்மா, எனக்கு ஒன்றும் சொல்லத் தெரிய வில்லை. என் இதயத்தின் அந்தரங்கத்திலுள்ள ஏதோ ஆதாரத் தந்தியைச் சுண்டி விட்டீர்கள் நீங்கள். இப் பொழுது என்னால் எதுவும் பேச முடியவில்லை. எனக்கு இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை.''

கார் பங்களா வாசலை அடைந்தது. இருவரும் இறங்கினார்கள்.

"சந்திரிகா! உன்னுடைய மூளையை அளவுக்கு மீறிக் குழப்பி விட்டேன் போலிருக்கிறது. நீ போய் நிம்மதியாகப் படுத்துக்கொள் அம்மா. நன்றாக யோசனை செய்து பார்த்து எனக்குப் பதில் சொல்லு. அவசரம் இல்லை!''

இவ்வாறு சொல்லிய சாவித்திரி அம்மாள் சந்திரி காவை அவளுடைய அறைக்கு அனுப்பி விட்டு, தான் தன்னுடைய அறையிலே தனியாக இருந்து நீண்ட நேரம் யோசனை செய்தாள். அவளுடைய மனசில் முதன் முதல் சந்திரிகாவைப் பற்றிக் கேள்விப்பட்டதும் உதித்த எண்ணம், பிறகு ரவீந்திரனைப் பற்றியும் அவர்கள் வீட்டிலே ஏற்பட்ட குழப்பங்களைப் பற்றியும் கேட்டதும் உண்டான சந்தேகங்கள், பிறகு சந்திரிகா தனது உள்ளத்தின் அந்தரங்கத்தைச் சொல்ல ஆரம்பித்ததும் ஏற்பட்ட நிம்மதி, ரவீந்திரனுக்கும் சந்திரிகாவுக்கும் மத்தியில் இருந்த அந்த அதிசயமான பாசத்தைப் பற்றிய தெளிவு, இப்பொழுது அந்தத் தெளிவு காரணமாகத் தான் மேற்கொண்டும் சந்திரிகாவிடம் கேட்ட கேள்வி, அதற்கு அவள் என்ன பதில் சொல்லக்கூடும் என்ற சிந்தனை—இப்படியாகச் சாவித்திரி அம்மாள் ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தவாறு பலமாக யோசனை செய்து கொண்டிருந்தாள்.

சந்திரிகா யோசித்தாள்: 'சாவித்திரி அம்மாள் கேட்ட கேள்வி முக்கியமான ஒரு கேள்வி. தன்னுடைய

எதிர்காலத்தை நிர்ணயிக்கப் போகும் ஒரு கேள்வி அது. திருச்சியில் காவேரி நதியிலே விழப் போவது என்று தீர்மானித்துக் கொண்டு வீட்டை விட்டு நடந்து சென்ற வள், ரவீந்திரனுடைய இசைப் பரம்பரை வழி வழியாகத் துலங்க வேண்டும் என்றும், அவனுடைய இலக்ஷியங்களும் கனவுகளும் ஈடேற வேண்டும் என்று கருதித்தானே, அந்த உயிரை இத்தனை பிரியத்தோடு காப்பாற்றி இந்தப் பம்பாய் நகரத்துக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிருள். இனி மேல் அந்தத் திட்டம் நிறைவேறுவதற்கு வேண்டிய காரியங்களை நன்ருக யோசிக்க வேண்டியது மிகவும் அவசியம் அல்லவா. அப்படித் தன்னுடைய எதிர் காலத்தை நிர்ணயிக்க வேண்டுமானுல், சாவித்திரி அம்மாள் கேட்ட அந்தக் கேள்விக்குத் தன்னுடைய மனச் சாட்சி என்ன விடை தருகிறது என்பதைத் தெளிவாக ஆராய்ந்துவிட வேண்டியதுதான். உண்மையில் இந்தக் கேள்விக்குத் தான் காணுகிற விடையைப் பொறுத்துத் தான் தன்னுடைய எதிர்காலம் அமையப் போகிறது.'

இவ்வாறு எண்ணிஞள் சந்திரிகா. உண்மையில் இதுவரை அவள் யோசித்துப் பார்த்திராத ஒரு புதிய விஷயத்தை இப்பொழுது அவள் யோசித்தாள். இதுவரை அவள் புகுந்து பார்த்திராத ஒரு புதிய சிந்தனை உலகிற்கு அவளை அழைத்துச் சென்றது சாவித்திரி அம்மாளின் கேள்வி.

வாழ்வில் தான் தன்னந் தனியாக ஒரு கன்னியர்கவே வாழ்ந்து விட்டால் என்ன ?—இப்படி ஓர் எண்ணம் சந்திரிகாவின் மனத்தில் உண்டாயிற்று.

'எத்தனை பெண்மணிகள் மரணம்வரை பரிசுத்த மான நிலையிலே கன்னிகையராகவே வாழ்ந்து கடைத் தேறி யிருக்கிருர்கள். தானும் அப்படி இருந்து விட்டால் என்ன ?'

சந்திரிகா நினைத்தாள் : 'ஆனல் அப்படிப்பட்ட ஒரு பரிசுத்தமான வாழ்வு வாழ்வதற்கு வேண்டிய மன உறுதி தனக்கு உண்டா ? நிச்சயம் இதுவரை அந்த உறுதி இருந்து வந்திருக்கிறது. ஆனல் இனி ?'

பாரமான கனத்த சிந்தனைகளைத் தாங்கிக் கொண்டு அவளுடைய மனம் ஒரு ரதத்தைப்போல் சிந்தனைப் பாதையிலே நகர்ந்தது. அங்கங்கே சாவித்திரி அம்மாளின் கேள்வி மீண்டும் மீண்டும் நினைவுக்கு வரும். 'கொஞ்சும் மொழிகள் பேச ஒரு குரல்', 'அன்போடு அரவணைக்கக் கூடிய இரண்டு நேசக் கரங்கள்'—இந்த நினைப்பானது நகரும் ரதத்துக்குச் சருக்குப் போடுவார்களே, அதைப் போல அவளுடைய சிந்தனையைத் திடீர் திடீர் என்று நிறுத்தி வேறு பக்கமாகத் திருப்பும்.

'பெண்களுடைய வாழ்க்கை மேடு பள்ளங்கள் நிறைந்த இடைஞ்சலான பாதை. இந்த உலகில் கற்பு என்ற பாதை கரடு முரடான கடின மார்க்கம். ஆனால் அதில் நடந்து சென்று கடைத்தேறி விட்டாலோ?'

தனக்குத் தெரிந்த, தான் கேள்விப்பட்ட பெண்களின் வாழ்க்கையை யெல்லாம் ஒருதரம் எண்ணிப் பார்த்தாள் சந்திரிகா. 'ஒழுக்கத்தோடு வாழ்வது, வாழ விரும்புவது வாழ முற்படுவது, இதெல்லாம் அவரவர்களுடைய மனத்தின் திண்மையைப் பொறுத்த விஷயம். ஏதோ உலகில் பெண்கள் செய்கிற பாபம் என்று அழைக்கப்படுகிற காரியங்கள் எல்லாம், சந்தர்ப்பப் பிசகினாலும் வறுமையினாலும் ஏற்படுகின்றன என்று சொல்வது அறியாமை. எந்த வறுமையிலும், எத்தனை சந்தர்ப்பச் சிக்கலிலும் தங்களைக் காப்பாற்றிக் கொண்டு அறவாழ்க்கை நடத்துகிற பெண்கள் உலகில் இல்லையா? நிச்சயம் இருக்கிறார்கள். அதே சமயம் எத்தனை சௌகரியங்கள் இருந்தாலும், எத்தனை சந்தர்ப்ப வசதிகள் இருந்தாலும், கெட்டுப் போகிற பெண்களும் இருக்கவே இருக்கிறார்கள். அதிலும் சந்தேகம் இல்லை. அப்படியானால் ஒழுக்கம் என்பது என்ன? அது பிறவியிலேயே அமைகிற குணமா? அல்லது விதி என்று சொல்கிறார்களே, பெண்களின் வாழ்க்கை என்பதும் அதைச் சேர்ந்த ஒரு தத்துவந்தானா?'

சந்திரிகாவின் இளம் மனத்தில் இப்படி ஏதேதோ பெரிய பெரிய கேள்விகள் எழுந்தன. தேர்த் திருவிழாக் காலங்களில் அதிர்வேட்டுப் போடுவதற்காக ஒரு சிறு

மர வண்டி யிருக்குமல்லவா? அதில் வெடிமருந்தைப் போடுவதற்குச் சில குழாய்கள் இருக்குமல்லவா? அப்படி அவளுடைய இதயத் தேரின் ஓட்டத்திற்கு மத்தியிலே புத்தியானது, பல குழாய்களில் வெடித்துப் புகைகிற பெரிய பெரிய கேள்விகளை வெடி மருந்தாகப் போட்டு உள்ளத்தை அதிரச் செய்தது. உலகின் மகா ஞானிகள் எல்லாம் பதில் தெரியாமல் புகைகிற அடிப்படையான பெருங் கேள்விகள் மனத்தில் எழுந்து, அந்தச் சிந்தனை வெடியின் ஓசையிலே அந்த இளம் மனம் சிதறுவதும் மறுபடி ஒன்று சேர்வதும், மீண்டும் சிதறுவதுமாக இரவுப் பொழுதெல்லாம் உறக்கமே இல்லாமல் நகர்ந்தது.

மறுநாள் சாவித்திரி அம்மாள் சந்திரிகாவோடு அதிக நேரம் தாமதிக்கவில்லை. அவளுடைய கணவர் இரண்டு வாரங்களாகக் காரியாலய வேலை நிமித்தம் எங்கேயோ சுற்றுப் பிரயாணம் சென்றிருந்தவர், அன்று காலை திரும் பினார். அவர் வந்து சேர்ந்த நிமிஷத்திலிருந்து அவரிடம் கலைத் திருவிழா நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசுவதும், ஸேவா ஸதனத்தில் தான் இந்த இரண்டு வாரங்களில் செய்த ஏதேதோ காரியங்களைப் பற்றிச் சொல்வதுமாகச் சாவித்திரி அம்மாள் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தாள். அந்த வரைக்கும் சந்திரிகாவுக்குச் சௌகரியமாக இருந் தது. ஏனென்றால் அவளுக்கு இருந்த மன நிலையில் யாரும், சாவித்திரி அம்மாள் கூட, சந்திரிகாவின் ஏகாந்த சிந்தனையைக் கலைப்பதை அவள் விரும்பி யிருக்க மாட்டாள்.

இதன் பிறகு இரண்டு மூன்று நாட்கள் அதிகப் பேச்சு ஒன்றும் இல்லாமல் கழிந்தன.

நான்காம் நாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. சாவித்திரி அம்மாளின் கணவர் மீண்டும் எங்கோ வெளியூருக்குப் புறப்பட்டார். அவரை அனுப்புகிற வரையில் சாவித்திரி அம்மாள் அவருக்கு வேண்டிய துணி மணிகளை எடுத்து வைப்பதும், 'ஹோல்ட் ஆலை'க் கட்டுவதுமாக இருந்தாள். உண்மையில் அவருக்குச் சாதம்கூடப் பிசைந்து கொடுத்தாள் சாவித்திரி அம்மாள்.

இதையெல்லாம் சந்திரிகா கவனித்தாள். புறப்படும் போது அவருக்குச் சாவித்திரி அம்மாளே 'டை' கட்டி விடுவதைக்கூட அசைப்பிலே பார்த்தாள் சந்திரிகா. காரில் ஏறும்போது சாவித்திரி அம்மாள் அவருக்கு அருகிலே போய் நின்று கொண்டு "உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். தெரிந்ததா? பச்சைத் தண்ணீரில் குளிக்காதீர்கள். பிடிக்காது. குடிப்பதுகூட வெந்நீரே குடியுங்கள். நீங்கள் பாட்டுக்கு உங்களுடைய அசட்டுத் தைரியத்தில் கண்ட இடங்களிலே போய் எதையாவது சாப்பிட்டு வைக்காதீர்கள். உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. புரிகிறதா?" என்ருள்.

இப்படிச் சாவித்திரி அம்மாள் கணவனைக் கண்டிப் போடு எச்சரிக்கும் போது, அவர் சிரித்தார். அந்தச் சிரிப்பைப் பார்த்ததும் சாவித்திரி அம்மாளுக்குக் கோபம் வந்தது.

"இந்தச் சிரிப்புத்தானே வேண்டாம் என்கிறேன். இது என்ன சிரிப்பு. 'அட அசடே' என்று என்னைக் கேலி பண்ணுகிற சிரிப்பல்லவா இது. 'நீபாட்டுக்கு உனக்குத்தோன்றியதையெல்லாம் பைத்தியம் மாதிரிச் சொல்லிக் கொண்டிரு. நான் பாட்டுக்கு என்னுடைய காரியத்தை நடத்துகிறேன்' என்று சொல்லுகிறது அந்தத் திருட்டுச் சிரிப்பு. தெரிகிறதே, நான் ஒருத்தி இங்கே கரடியாகக் கத்துகிறேன். என்ன பிரயோஜனம் பாருங்கள். பாருங்கள். இன்னும் சிரிக்கிறீர்களே!"

வராந்தாவில் நின்று கொண்டு சந்திரிகா இதைக், கவனித்துக் கொண்டேயிருந்தாள். 'இல்லறம்' என்றும், 'குடும்ப வாழ்க்கை' என்றும் சொல்லுகிருர்களே, நிம்மதியான ஒரு குடும்பத்தில் அது இத்தனை ரஸமாகத் தான் இருக்கும் போலும். சாவித்திரி அம்மாள் புருஷனைக் கோபிக்கிருளே, அந்தக் கோபத்திலேதான் எத்தனை வாஞ்சை தொனிக்கிறது! அவர்தான் சிரிக்கிருரே, 'திருட்டுச் சிரிப்பு' என்ருளே சாவித்திரி அம்மாள், அந்தத் திருட்டுச் சிரிப்பிலேதான் எத்தனை பிரியம், எத்தனை சொந்தம் ஊடாடுகிறது! 'கொஞ்சும் மொழி பேசும் ஒரு

குரல், 'அரவணைக்கும் கைகள்' என்றெல்லாம் சாவித்திரி அம்மாள் தன்னிடம் சொன்னாளே, இவைகள் தானோ அவை?

"கவலைப்படாதே சாவித்திரி. இந்த உடம்பு எனக்குச் சொந்தமில்லை என்று எனக்கு நன்றாய்த் தெரியும். இந்த உடம்பின் சொந்தக்காரி நீ. இதை எப்படிப் பாதுகாக்க வேண்டும் என்று சொல்வதற்கு நீதானே அதிகாரி. அதைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டியதுதானே என்னுடைய கடமை! தெரியாதா எனக்கு! அப்போ நான் வரட்டுமா? டாட்டா...டாட்டா...டா ஆ ஆட்டா!'.

காருக்கு வெளியே கையை நீட்டி 'டாட்டா' என்றார் அவர். சாவித்திரி அம்மாளும் "டாட்டா" என்று கையை நீட்டினாள். கார் அங்கிருந்து புறப்பட்டுக் கண் பார்வையிலிருந்து மறையும் வரை இரண்டு பேரும் "டாட்டா" சொல்லியவாறு கைகளை ஆட்டிக் கொண்டேயிருந்தார்கள்.

சந்திரிகாவுக்குப் புரியவில்லை. இது என்ன வார்த்தை "டாட்டா" என்று? திருச்சியில் எல்லாம் அவளுக்குத் தெரிந்தவரை, புருஷனும் கணவனும் இந்த மாதிரி விடை பெற்றுக் கொள்ளுவதை அவள் பார்த்ததேயில்லை. அதிலும் "டாட்டா" என்று குரலை ஏற்றியும் தாழ்த்தியும் சொல்லுகிற அந்த பாஷை, அவளுக்கு முற்றிலும் புதுமையாக இருந்தது!

'டாட்டா மில் புடவை' என்றும் 'டாட்டா நகர்' என்றும் சொல்லக் கேட்டிருக்கிறாள். மற்றப்படி 'தாத்தா' என்ற தமிழ் வார்த்தை அவளுக்குத் தெரியும். ஆனால் இது என்ன 'டாட்டா' வார்த்தை? ஒரு வேளை ஹிந்தியாக இருக்குமோ என்று நினைத்தாள். 'இராது. இவர்கள் எல்லாம் இங்கிலீஷ் முறையிலே நடப்பவர்கள் ஆயிற்றே. ஒரு வேளை இங்கிலீஷ்காரர்களின் பாஷையில் 'டாட்டா' என்றால் நமஸ்காரம் என்று இருக்கும். எதற்கும் சௌகரியமாக ஒருநாள் சாவித்திரி அம்மாளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்' என்று தீர்மானித்தாள் சந்திரிகா.

உள்ளே வரும்போதே சாவித்திரி அம்மாள் கேட்டாள் : " என்ன சந்திரிகா! நான் அவரை இத்தனை கோபித்தேனே என்று பார்க்கிறாயா? ஆமாம் அம்மா. இந்தப் புருஷர்களே எப்பொழுதும் இப்படித்தான். வீட்டை விட்டு நகர்ந்ததும் எல்லாம் மறந்து போய் விடும் அவர்களுக்கு. பச்சைத் தண்ணீரில் குளிப்பது, சனி புதனில் எண்ணெய் முழுகுவது இல்லை, கண்டகண்ட சமயத்தில் எல்லாம் காப்பியைக் குடிப்பது—உடம்பைக் கெடுத்துக் கொண்டு வந்து நிற்பது. நம்முடைய பிராணனை எடுப்பது! நீதான் பாரேன், எப்படிச் சிரிக் கிறார் அவர் என்று! பைத்தியம் உளறுகிறது என்று என்னைப் பற்றி நினைப்பு!"

இப்படிச் சொல்லும் போது சாவித்திரி அம்மாளின் வார்த்தைகளிலேதான் எத்தனை கொஞ்சல்!

" சந்திரிகா! என் தம்பி இருக்கிறானே அவனும் இப்படியேதான்! அதிலும் வேலை என்று உட்கார்ந்து விட்டானோ, ஒன்றுமே தெரியாது. பசி எடுக்காது, தாகம் இராது. விடிய விடியக் கண் முழித்து எழுதிக் கொண்டே யிருப்பான். சில நாட்களில் எனக்கே பொறுக்காமல் நான் போய் ஒரு 'டோஸ்' விட்டால் தான் எழுந்து சாப்பிட வருவான்! பாவம் டெல்லியில் எப்படி யிருக்கிறானோ? எந்த ஹோட்டலில் என்ன சாப்பிடுகிறானோ? என்னவோ அம்மா, அவனுக்கு ஒரு கால்கட்டுப் போடுகிற வரையில் நமக்கு இந்தக் கவலை. பிறகு நமக்கு என்ன! அவன்பாடு அவன் பெண்டாட்டி பாடு என்று விட்டுவிட வேண்டியதுதான். அதன் பிறகு நாம் தலையிட்டாலும் 'நீ யார் என் புருஷனைக் கேட்க?' என்று அந்த அம்மாள் சண்டைக்கு வந்தாலும் வந்து விடுவாள். அதுவும் நியாயந்தான் என்று வையேன்! கல்யாணம் ஆகிறவரை அக்காளுக்குத் தம்பி. கல்யாணம் ஆகிவிட்டதோ,பெண்டாட்டிக்குப் புருஷன்! நம் யாருக்கும் இல்லாத உரிமை அந்த அம்மணி அம்மாளுக்கு வந்து விடும்! தம்பியோடு பேசககூடாது என்று அவள் நம்மைச் சொன்னாலுங் கூடக் கேட்க வேண்டியதுதான்! என்ன, சந்திரிகா, நான் சொல்வது சரிதானே?"

சாவித்திரி அம்மாள் பொரிந்து தள்ளினுள். சந்திரிகா மௌனமாகக் கேட்டுக் கொண்டே அறைக்குள்ளே வந்து உட்கார்ந்தாள். "கொஞ்சும் மொழிகள்" "அரவணைக்கும் கைகள்" என்ற வார்த்தைகளுக்கு விளக்கம் செய்வது போல் இருந்தது அது. அன்றிரவும் அவளுக்கு உறக்கம் இல்லை!

மறுநாட் காலை சந்திரிகா படுக்கையிலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னுல் சாவித்திரி அம்மாள் அவசரமாக உள்ளே வந்தாள், "சந்திரிகா! நான் கொஞ்சம் ஸ்டேஷன் வரை போய்விட்டு வருகிறேன். ஒரு முக்கியமான விருந்து வருகிறது!" என்று சொல்லிக் கொண்டே.

சந்திரிகா எழுந்து ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு தலையைப்பின்னி நெற்றிக்குப் பொட்டு வைத்துக் கொண்டிருக்கும்போதே வெளியே கார் வந்து நின்ற ஓசை கேட்டது.

சந்திரிகா எட்டிப் பார்த்தாள். காரிலிருந்து சாவித்திரி அம்மாளோடு மேனுட்டுப் பாணியில் உடை அணிந்திருந்த ஓர் இளைஞர் இறங்கினுர். சந்திரிகா கூர்ந்து பார்த்தாள். அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது! சாவித்திரி அம்மாளோடு வந்தது வேறு யாருமில்லை. அவளுடைய தம்பி ராமநாதன்தான்!

## 35. அந்தக் கடிதம்!

ராமநாதன் வந்து சேர்ந்த நிமிஷத்திலிருந்து சாவித்திரி அம்மாளுக்கு இந்தப் பூமியிலே கால் பாவ வில்லை.

"ராமநாதா, நீ பல் தேய்ப்பது பேஸ்டா அல்லது பௌடரா?"

"ராமநாதா, நீ குளிப்பது நல்ல சூடான வெந்நீரா அல்லது வெதுவெதுப்பான வெந்நீரா?"

"ராமநாதா, உனக்குக் காப்பி பிடிக்குமா, டீ பிடிக்குமா?"

"ராமநாதா, உனக்குத் தோசை வேண்டுமா, சப்பாத்தி வேண்டுமா ?

ஐயோ! ஐயோ! அந்த ராமநாதனுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது, எது வேண்டும், எது வேண்டாம் என்று அடிக்கொரு தடவை பிய்த்து எடுத்து விட்டாள் சாவித்திரி அம்மாள் !

இதையெல்லாம் பார்த்துச் சந்திரிகாவுக்கு ஒரு பக்கம் சிரிப்பு வந்தது. என்ருலும் இந்த அம்மாளுக்குத் தன் தம்பியிடம் எத்தனை வாஞ்சை என்று மனத்துக்குள் அதிசயப்பட்டுக் கொண்டாள்.

" சந்திரிகா ! உன்னிடம் ராமநாதனை 'பார்மலா'க 'இன்ட்ரட்யூஸ்' பண்ணவில்லை என்று நினைத்துக்கொண்டு பேசாமல் இருக்காதே. நீங்கள் இருவரும் ஏற்கெனவே தெரிந்தவர்கள் ஆயிற்றே என்றுதான் பேசாமல் இருக்கிறேன். நீங்களானல் அதுதான் சாக்கு என்று ஒருவரோடு ஒருவர் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் இருக்கிறீர்களே !" என்று தனக்கு ஒரு 'டோஸ்' கொடுத்த போதுதான் சந்திரிகாவுக்கு எப்படியோ இருந்தது !

உண்மையில் சந்திரிகா அங்கே வந்ததைப் பார்த்ததும ராமநாதன் ஆச்சரியப்பட்டு அல்லவா போயிருக்க வேண்டும்! ஆனல் அவன் முதலில் இவளைப் பார்த்ததும் சற்றும் ஆச்சரியப் பட்டதாகவே தெரியவில்லை. சிரித்துக் கொண்டே நமஸ்காரம் செய்துவிட்டு உள்ளே போய் விட்டான் ! சந்திரிகாவுக்கு இது எப்படியோ இருந்தது.

" சந்திரிகா ! நீ இங்கே வந்திருப்பது தம்பிக்கு ஏற்கனவே தெரியும். ஒரு கடிதத்தில் குறிப்பாக எழுதியிருந்தேன்" என்று, அன்று சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே சாவித்திரி அம்மாள் மெதுவாகச் சொன்னாள். அப்பொழுதுதான் சந்திரிகாவுக்குக் கொஞ்சம் வியப்பு நீங்கிற்று. ஆனாலும் ஒரு புதிய வியப்பு மனத்தில் ஏற்பட்டது.

'நாம் இங்கே வந்திருப்பதைப்பற்றிச் சாவித்திரி அம்மாள் ஏன் தன் தம்பிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிடவேண்டும் ? அதற்கு என்ன அவசியம் வந்தது?'

இப்படி எண்ணிப் பார்த்தாள் சந்திரிகா. அவளுக்குப் பதில் தெரியவில்லை.

ராமநாதனே அடிக்கடி அக்காளிடம் ஏதோ பேசுவதும், அக்காள் ஏதோ பதில் சொல்வதுமாக இருவருக்கும் ஒரு பெரிய சர்ச்சை நடப்பது தெரிந்தது. சந்திரிகா மனத்துக்குள் இதைப்பற்றிப் பலவிதமாக எண்ண ஆரம்பித்தாள்.

அன்று மாலை ஐந்து மணி இருக்கும். திடீரென்று சாவித்திரி அம்மாள் ராமநாதனையும் சந்திரிகாவையும் கூப்பிட்டாள். "ஆமாம்! நீங்கள் இருவரும் 'மலபார் ஹில்ஸ்' பார்த்ததில்லையே? அப்படியே ஒரு 'ட்ரைவ்' போய்விட்டு வந்தால் என்ன?" என்று கேட்டாள் சாவித்திரி. சந்திரிகா திகைப்போடு பார்த்தாள்.

"நானே உங்கள் இருவரையும் அழைத்துச் சென்று காண்பிக்கிறேன். தம்பி கையில் காரைக் கொடுத்தால், மலபார் மலையில் எங்காவது பள்ளத்திலே கொண்டு இறக்கி விடுவான், இப்பொழுது அவன் இருக்கிற நிலையில்!" என்றாள் சாவித்திரி, சிரித்துக் கொண்டே. ராமநாதனும் சிரிக்க முயன்றான். சந்திரிகாவுக்கோ சிரிப்பு வரவில்லை. திகைப்புத்தான் அதிகரித்தது.

'இப்பொழுது அவன் இருக்கிற நிலையில்' என்றாளே, அது என்ன நிலை?—இவ்வாறு யோசித்தாள் சந்திரிகா.

சாவித்திரி அம்மாள் இதற்குமேல் அவர்களுடைய பதிலுக்குக் காத்திருப்பவளாகத் தோன்றவில்லை. நேரே விறுவிறு என்று போய்க் காரை எடுத்துக் கொண்டு வந்து முற்றத்திலே நிறுத்தி விட்டாள்.

சந்திரிகாவுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. என்றாலும் கடந்த இரண்டு மூன்று நாட்களாக அவளுடைய உள்ளத்தில் ஏற்பட்டிருந்த எண்ணங்கள் புதிய புதிய யோசனைகள் இத்தனையும் சேர்ந்து விவரிக்க முடியாத, இனம் தெரியாத, இதுவரை தோன்றியிராத ஏதேதோ கற்பனைகளையெல்லாம் மேலும் மேலும் எழுப்பின. அதே சமயம் சாவித்திரி அம்மாளுடைய

அன்பு, அவளுக்குத் தன் தம்பியிடமிருந்த அளவு கடந்த பிரியம், அந்தப் பிரியம் எப்படியெல்லாம் வெளிப்படுகிறது என்பது மிகத் தெளிவாகத் தெரியும்படி நடந்த காரியங்கள்—இத்தனையும் சேர்ந்து சந்திரிகாவின் மனத்தில் சாவித்திரி அம்மாளைப் பற்றிய மரியாதை உணர்ச்சியையே ஊர்ஜிதப் படுத்தின. இந்த உணர்ச்சிச் சுழலில் அவள் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த சமயத்தில், "என்ன சந்திரிகா, ரெடிதானே—புறப் படலாமா?" என்றாள் சாவித்திரி அம்மாள்.

மலபார் மலையை நோக்கிக் கார் புறப்பட்டது. முன் ஸீட்டில் சாவித்திரி அம்மாளுக்கு அருகில் சந்திரிகா உட்கார்ந்து கொண்டாள். ராமநாதன் பின் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டான்.

கண்ணுக்குக் குளுமையான கடல். பார்வை எட்டிய தூரம் வரை 'நேத்திரானந்தம்' என்று சொல்லுகிறார்களே, அப்படித் தோன்றுகிற ஜலப் பரப்பு. அங்கங்கே சிறு சிறு மரக்கலங்கள். தள்ளி அங்கங்கே பெரிய கப்பல்கள்—புகை விட்டுக் கொண்டே! மலபார் மலையை நோக்கி ஏறும் சரிவான பாதை. இரு மருங்கிலும் விதம் விதமான மரங்கள், செடிகள், கொடிகள் — இவற்றை யெல்லாம் கடந்து "தொங்கும் தோட்ட"த்துக்கு வந்தார்கள். அடடா! எத்தனை அருமையான தோட்டம் அது! இயற்கையைக் கூடச் செயற்கையாகச் சிருஷ்டிக்க முடியுமா!

"சந்திரிகா! இறந்த மனிதனுக்கு உயிர் கொடுக்க மட்டும் இன்னும் நாம் படிக்கவில்லை. மற்றப்படி மனிதனால் ஆகாதது ஒன்றும் இல்லை!" என்று தோட்டத்தின் அமைப்பை அதிசயித்துக் கொண்டே ஒரு மரத்தடியில் இருந்த பெஞ்சில் மூவருமாக உட்காருவதற்கு ஆயத்தம் செய்தாள் சாவித்திரி.

அன்று மூவருமாக வெகுநேரம் அங்கே இருந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சந்திரிகாவுக்கு முதலில் எப்படியோ கூச்சமாக இருந்தது. பேச்சில் அதிகமாகக்

கலந்து கொள்ளவில்லை. கொஞ்சநேரம் ஆனதும் அவளும் மெதுவாகப் பேச்சில் தன்னையும் அறியாமல் கலந்து கொண்டாள்.

மறு நாள் மாலை மறுபடியும் மலபார் மலைக்குப் புறப் பட்டார்கள் மூவரும். இன்று ராமநாதன் நேற்றைவிடக் கலகலப்பாக இருந்தான். சாவித்திரி அம்மாளே முழுதும் பேச வேண்டிய அவசியம் இல்லாமல் அங்கங்கே ராம நாதனும் பேச்சில் கலந்து கொண்டான். சந்திரிகாவுக்கு நேற்றளவு கூச்சம் இல்லை. முக்கிய காரணம் என்ன வென்றால் நேற்றும் சரி, இன்றும் சரி, அவர்களுடைய பேச்சில் திருச்சியோ, திருடன் குதித்த சம்பவமோ— அயர்ந்து மறந்துகூட யாரும் குறிப்பிடவில்லை! ஆனால் மூன்றும் நாள்?......

மூன்றும் நாள் மாலை சாவித்திரி அம்மாள் கூப்பிடு வதற்கு முன்பே நான்கு மணிக்கே ராமநாதன் தயாராக இருந்தான். சந்திரிகாவுக்கும் இன்று மறுபடியும் சாவித்திரி அம்மாள் மலபார் மலைக்குக் கூப்பிடுவாளா என்று அப்பட்டமாக ஆசை ஏற்படாவிட்டாலும், கூப்பிட்டால் அதில் தவறு இல்லை, போகலாம் என்று இருந்தது.

சாவித்திரி அம்மாள் வழக்கம் போல் அன்றும் ஐந்து மணிக்கெல்லாம் மலபார் மலைக்கு இருவரையும் அழைத் தாள். அன்றும் மூவரும் அதே மரத்தடியில் அதே பெஞ்சில் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நாலாம் நாள் வந்தது. இன்றும் சாவித்திரி அம்மாள் மலபார் மலைக்குக் கூப்பிடத்தான் செய்தாள். ஆனால் ஒரு சிறு சங்கடம் தனக்கு இருப்பதாகச் சொன்னாள்.

“உங்கள் இருவரையும் தோட்டத்தில் விட்டுவிட்டு, நான் கொஞ்சம் ஷாப்பிங் போக வேண்டும். ஷாப்பிங்கை முடித்துவிட்டு வந்து உங்களோடு கலந்து கொள்கிறேன்!” என்றாள். “சரி” என்றான் ராமநாதன். சந்திரிகாவுக்குப் பதில் சொல்ல வார்த்தை வரவில்லை. அவளுடைய பதிலையும் யாரும் எதிர்பார்த்ததாகத் தெரியவில்லை. இந்த நிலைமையில் தன்னுடைய கௌரவத்தை விட்டுக்

கொடுக்காத முறையில் சரி என்று வாயால் சொல்லாமல். தலையை அசைத்தாள் சந்திரிகா.

அன்றைக்குத்தான் இந்த நான்கு நாட்களிலும் முதன் முறையாகச் சந்திரிகா ராமநாதனைத் தனித்துப் பார்த்திருக்கிறாள். அன்றோர் இரவு திருச்சியில் திருடன் குதித்தோடிப் போனானே, அதன் பிறகு இன்றுதான் ராமநாதனை நேருக்கு நேராகத் தனிமையிலே பார்த்துப் பேசுகிறாள் சந்திரிகா. அது அவளுக்கு வாழ்க்கையிலேயே ஒரு புது அனுபவம். அவள் நினைத்துப் பார்க்காத, அவள் எண்ணியிருக்காத விதத்தில் பேச்சு தொடங்கிற்று. அப்பொழுது ஒரு விநாடி அவளுடைய உள்ளத்தில் ரவீந்திரனுடைய உருவம் வந்து நின்றது. ரவீந்திரனுடைய இலட்சியங்கள், அவன் தன்னைப்பற்றி எண்ணியகனவுகள், அவனுடைய உள்ளத்தின் போராட்டங்கள், அவனுடைய எதிர்காலத்திட்டங்கள் இத்தனையும் சந்திரிகாவின் உள்ளத்தில் ஒரு வினாடி குமைந்தன. "அவர் இப்பொழுது எப்படி இருக்கிறாரோ ?" என்று ஒரு கணம் நினைத்தாள். அதே நேரத்தில் அவளோடு ராமநாதன் பேசிக் கொண்டிருந்தான். தப்பான மனிதன் இல்லை. பெருந்தன்மை நிரம்பியவன். கண்ணியமற்ற மனிதனில்லை. சீலம் நிறைந்தவன். பிறருடைய மன இயல்புகளை அறிய முடியாத பேதை இல்லை. நல்ல புத்திசாலி. அப்படிப்பட்டவனுடைய மனத்தில் என்ன எண்ணம் அரும்பியிருந்தது என்பது சந்திரிகாவுக்கு இப்பொழுது தெளிவாகத் தெரிந்தது.

சந்திரிகாவின் மனம் திருச்சிக்குச் சென்றது. ஆனால் ரவீந்திரன் திருச்சியிலா இருந்தான்! சந்திரிகா திருச்சியை விட்டுக் கிளம்பிய பிறகு எத்தனை சம்பவங்கள் நடந்து விட்டன ! இவற்றையெல்லாம் சந்திரிகா எதிர்பார்த்தாளா? இல்லை. தன்னுடைய பிரிவு ரவீந்திரனுடைய உள்ளத்தில் சொல்லொணாத வேதனையைத் தரும் என்று அவள் அறிந்திருந்தாள் என்றாலும், தான் ரவீந்திரனுக்கு எழுதி வைத்த கடிதத்தை அவன் பார்த்தால், அந்த வேதனை தணிவதோடு உண்மையில் கல்யாணி அம்மாளிடம் இருந்த மனத் தடுமாற்றங் கூட மாறி விடும் என்றல்லவா அவள் எதிர்பார்த்தாள் ! அவள் எதிர்

பார்த்ததில்தான் என்ன பிசகு? பிசகில்லைதான். உண்மையில் அந்தக் கடிதம் ஆரம்பத்தில் அத்தனை பெரிய குழப்பத்தை உண்டாக்கியிருக்கக் கூடும் என்று அவள் எதிர்பார்ப்பதற்கு என்ன இடம் உண்டு? அந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு டாக்டர் சுரேஷுக்குத்தான் எத்தனை திகைப்பு ஏற்பட்டது? அந்தக் கடிதத்துக்கும் ரவீந்திரனுடைய மனக் குழப்பத்துக்கும் என்ன காரணம் என்று டாக்டர்தான் எத்தனை தூரம் மண்டையைக் குழப்பிக் கொண்டார்! பிறகு கல்யாணி அம்மாளிடம் அல்லவா அந்த விஷயத்தைக் கேட்டுத் தெளிவு படுத்திக் கொண்டார் அவர்!

ஆமாம்; கல்யாணி அம்மாளுடைய வேதனையைப் பற்றிச் சில விவரங்கள் கேள்விப்பட்டதாக இலஞ்சிச் சாமியாரிடம் டாக்டர் சுரேஷ் கூறினார் அல்லவா? அது உண்மையான வார்த்தை. இந்த விவரத்தை அவருக்குத் தெரிவித்தவர் வேறு யாருமில்லை. கல்யாணியின் தகப்பனார் கனகசுந்தரந்தான்.

லால்குடிக்குத் தம்முடைய மகள் கல்யாணியை அழைத்துப் போனதிலிருந்து, அவள் படும் வேதனையைக் காணச் சகியாத கனகசுந்தரம் ஒரு நாள் டாக்டர் சுரேஷ் சொக்கி குடிக்குப் போகிறார் என்று தெரிந்து திருச்சிக்கே புறப்பட்டு வந்தார். டாக்டர் சுரேஷைப் பார்த்தார்.

"டாக்டர் ஸார்! என்னுடைய மகள் படும் வேதனையைக் காணுவதை விட நான் இந்த உலகத்தை விட்டே மறைந்து விடலாம். என்ன செய்வது? அன்றைக்கே அவள் இந்த விவரத்தைச் சொல்லி யிருந்தால் நீங்கள் ஏதாவது யோசனை சொல்லி யிருப்பீர்கள். இந்தக் கடிதத்தை நீங்கள் கொஞ்சம் பாருங்கள். இது அந்தப் பெண் சந்திரிகா எழுதிய கடிதமாம். இதை எழுதி வைத்து விட்டுத்தான் அந்தப் பெண் மறைந்திருக்கிறாள். இதைப் பார்த்ததும் அவளுடைய மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை அனாவசியமான சந்தேகச் சிக்கலினால் கல்யாணி குழப்பி யடித்திருக்கிறாள். நீங்கள் இதைக் கொஞ்சம் பாருங்கள்!" என்று கனகசுந்தரம் அந்தக் கடிதத்தை டாக்டர் சுரேஷிடம் கொடுத்தார். அதைப்

படித்ததும் டாக்டருக்கும் குழப்பம் அதிகரிக்கத்தான் செய்தது. "இந்தக் கடிதத்தினால் உண்மையில் ரவீந்திரனுக்கு மனமாற்றம் அல்லவா ஏற்பட்டிருக்க வேண்டும்! ஏன் அதிர்ச்சி உண்டாயிற்று? பெரிய புதிராக இருக்கிறதே இது!" என்று திகைத்தார் டாக்டர்.

"நீங்கள் லால்குடிக்கு ஒரு முறை வந்து போக வேண்டும் என்று நினைக்கிறேன் டாக்டர். என் மகளுடைய மனமும் ஒரே குழப்பத்திலும் வேதனையிலும் இருக்கிறது. நீங்கள் வந்து விசாரித்து இதற்கு ஒரு வழி செய்தால் என் வீட்டிலே விளக்கை ஏற்றி வைத்த புண்ணியம் உங்களுக்கு உண்டு டாக்டர்—"

"பண்ணையார்வாள்! நீங்கள் இந்த மாதிரி எல்லாம் பேசக் கூடாது. உண்மையில் என்னுடைய கடமையை நான் செய்கிறேன். அவ்வளவுதான். இந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு கல்யாணி அம்மாளும் ரவீந்திரனோடு ஒன்றாக இருப்பதால் தவறில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அப்படி ஒன்றும் கல்யாணி அம்மாளைப் பார்த்து அதிர்ச்சி உண்டாகி விடும் என்று எனக்குத் தோன்றவில்லை இப்பொழுது. இது விஷயத்தை இந்தக் கடிதம் மிகத் தெளிவாக விளக்குகிறது. ஆனால் ஏன் இப்படி ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது என்ற விஷயந்தான் இப்பொழுது எனக்குப் புரியவில்லை. நான் ஏற்கனவே செய்து வைத்திருந்த முடிவு சரியில்லை என்று இந்தக் கடிதம் இப்பொழுது நன்றாக நிரூபிக்கிறது!"

டாக்டர் இந்த விதமாகக் குழப்பத்தோடு பேசினார். கனகசுந்தரத்துக்கு மிகவும் கவலையாக இருந்தது.

"பண்ணையார்வாள்! நீங்கள் மனத்திடத்தை இழக்கக் கூடாது. தைரியமாக இருங்கள். எது எப்படியானாலும், அதிர்ச்சிக்கு என்ன காரணம் இருந்தாலும் சர்ப்பகந்தியினால் ரத்த அமுக்கம் குணமாகும். சந்தேகம் இல்லை. ரவீந்திரனுடைய மன நிலை செம்மையாவதற்கு ஒலிச் சிகிச்சை என்று ஒன்று யோசித்திருக்கிறேன். ஆகையினால் கவலைப் படாமல் நீங்கள் லால்குடிக்குப் போங்கள். நான் வேறு காரியமாகச் சொக்கி குடிக்குப்

போகிறேன். எல்லாம் விவரமாகப் பார்த்து இலஞ்சிச் சாமியாரோடு கலந்து பேசி ஒரு முடிவோடு திரும்புவேன். திரும்பியதும் உங்களையும் கல்யாணி அம்மாளையும் சொக்கி குடிக்கே அழைத்துப் போக முயற்சிக்கிறேன். எனக்கு ஒரு வாரம் சாவகாசம் கொடுங்கள் !" என்று சொன்னார் சுரேஷ்.

இதன் பிறகுதான் டாக்டர் சுரேஷ் சொக்கி குடிக்குப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன்பு பதட்டப்படாமல் அப்புலிங்கத்தைப் போய்ச் சந்தித்துப் பேசினார். ரவீந்திரன் இருந்த வீட்டுக்குள்ளே சென்று ஏதேதோ ஆராய்ச்சிகள் நடத்தினார். மாடிப்படிகளை வெகுபலமாக ஆராய்ந்தார். பிறகு ரவீந்திரன் எழுதுவதற்கு உபயோகித்து வந்த மேஜையை யெல்லாம் ஆராய்ந்தார். வேறு கடிதங்கள் ஏதாவது அங்கு இருக்குமா என்று பார்த்தார். இதிலெல்லாம் ஒரு நாள் கழிந்து விட்டது. எனவேதான் சொக்கி குடிக்கு அவர் வந்து சேர்வதிலும் அன்று அத்தனை தாமதம் ஏற்பட்டது.

எத்தனை தாமதம் ஆனாலும், கூத்துக்கு மத்தியில் டாக்டர் வந்து சேர்ந்ததில் இலஞ்சிச் சாமியாருக்கு அளவில்லாத சந்தோஷம். டாக்டர் தம்மைத் தனியாக அழைத்துப்போய் மரத்தடியிலே நிறுத்திப் பேச ஆரம்பித்ததுமே, சாமியாருக்கு ஒரே ஆனந்தம் உண்டாகி விட்டது. கடிதத்தைப் பற்றிய விவரத்தை டாக்டர் சொல்லி, கல்யாணி அம்மாளை அங்கே அழைத்து வந்து ஒரு மாதம் மலைக் காட்டிலே ரவீந்திரனோடு இருப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியதுதான் என்று டாக்டர் கூறி முடித்ததும், இலஞ்சிச் சாமியார் மிக்க உணர்ச்சியோடு ஒரு குழந்தையைப் போலக் கேட்டார்.

" அப்படியானால் அந்தச் சந்திரிகாவையும் கூட இங்கே அழைத்து வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே !"

" சாமிகளே ! கமன ஓடியை விட்டு விட்டதாக அல்லவா நினைத்தேன் ! பழக்கம் போக வில்லையா இன்னும்! சந்திரிகாவை இங்கே அழைத்து வருவதாவது! ஹூம் ! அவள் உயிரோடு இருக்கிறாளோ ? அல்லது

காவேரியில் கரைந்து விட்டாளோ? யார் கண்டார்கள்? அப்படியே உயிரோடுதான் இருந்தாள் என்றாலும் இங்கே வந்தால் இனி என்ன ஆகும்? மீண்டும் குழப்பமா!"

"டாக்டர் ஸார்! இந்தக் கடிதந்தான் நிலைமையைத் தெளிவுபடுத்தி விட்டதே! இனி என்ன உண்டு குழப்பம்?"

"சாமிகளே! எனக்கு இன்னும் அத்தனை தெளிவு உண்டாகிவிடவில்லை. மழையிலே நிற்பவனுக்கு ஒரு குடை—அதிலும் பெண்கள் பிடித்திருப்பார்களே சின்னக் குடை—அது கிடைத்தால் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கிறது இந்தக் கடிதம். அந்த மட்டும் பெரிய உதவி தான். ஆனால் குடை கிடைத்ததே தவிர மழை நின்று விட்டது என்று அர்த்தமா! வாருங்கள். கூட்டத்தில் ரவிந்திரனைத் தனியாக விட்டு வந்திருக்கிறோம். என்ன ஆயிற்று என்று பார்ப்போம்!"

டாக்டர் சுரேஷும் இலஞ்சிச் சாமியாரும் ரவிந்திரனிடம் உள்ள அளவு கடந்த பிரியத்தினால் கூத்து நடக்கும் இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

இதையெல்லாம், பாவம், சந்திரிகா கண்டாளா? தன்னுடைய கடிதம் எல்லா விஷயங்களையும் தெளிவு படுத்தியிருக்கும் என்றுதான் நம்பினாள். ஆனாலும் சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு வந்தது எத்தனை பெரிய தவறு, என்று ஒரு நினைப்பு மனத்தில்! 'சொல்லியிருந்தால்' தான் அந்த வீட்டை விட்டுக் கிளம்பி யிருக்க முடியுமா! என்ன பைத்தியக்கார நினைப்பு!" என்று மறு விநாடி அவளே எண்ணிக் கொண்டாள்.

இத்தனை எண்ணங்களும் ஒரு விநாடிக்குள்ளே! வெளியுலகத்துக்குத்தானே விநாடி என்றும் நிமிஷம் என்றும் மணி என்றும் பாகுபாடு! மன உலகில் எத்தனை வருஷத்துச் சம்பவங்கள் ஒன்று சேர்ந்து ஒரு கணத்துக்குள் ஓடி விடுகின்றன! அப்படித்தான் சந்திரிகாவின் மனத்துக்குள் அத்தனை நிகழ்ச்சிகளும் ஒரு விநாடிக் குள்ளே ஓடின!

" சந்திரிகா! நீ என்ன அப்பொழுதே பிடித்து அந்த வாடாமல்லிகைச் செடியையே பார்த்துக் கொண்டு ஏதேதோ யோசனை செய்கிறாய்?" என்று கேட்டான் ராமநாதன். சந்திரிகா திகைத்துப் போய்ப் பார்த்தாள்.

" நான் அதைப் பார்க்கவே இல்லையே!"

" பார்த்தாயா! எதிரே இருக்கிற அந்தச் செடிகூட உன் கண்ணுக்குத் தெரியாத விதத்தில் அத்தனை பலமாக ஏதோ யோசனை செய்கிறாய். அப்படித்தானே?" என்று கேட்டான் ராமநாதன் மீண்டும்.

" ஒன்றுமில்லை. மன்னிக்க வேண்டும்!" என்றாள் சந்திரிகா.

" இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. எதற்கெடுத்தாலும் "எக்ஸ்க்யூஸ்மீ" "ஐ ஆம் ஸாரி" என்று அர்த்தமில்லாமல் மன்னிக்கச் சொல்வதும், அர்த்தமில்லாமல் வருத்தப்படுவதும் இங்கிலீஷ்காரர்களுடைய வழக்கம் அல்லவா? நீ எங்கே இதைப் படித்தாய்? அக்காளோடு இரண்டு மூன்று வாரம் பழகிக் கொஞ்சம் ஆங்கில வாடை அடிக்கிறது! அவ்வளவுதான். மற்றப்படி நீ முழுக்க முழுக்கத் தமிழ்ப் பண்பாட்டிலே பிறந்து வளர்ந்தவள் ஆயிற்றே. சம்பிரதாயத்துக்குச் செய்கிற ஸாரி, தாங்ஸ் போன்ற வாய்ச் சடங்குகளையெல்லாம் கடந்த நாகரிகம் அல்லவா உன்னுடைய நாகரிகம். எனக்குத்தான் தெரியுமே!" என்றான் ராமநாதன்.

" அப்படியென்றால்?"

" உன்னை அன்று ஒரு நாள் இரவு ஆபத்தான வேளையில் பார்த்ததோடு சரி என்று நினைக்கிறாயா? இல்லை. பின்பொரு நாள் தில்லிக்குப் போவதற்காக நான் உங்களிடம் எல்லாம் சொல்லிக் கொள்ள வந்தபோது நீ வந்து நின்றாயே? அதோடு சரி என்று நினைக்கிறாயா? அதுவும் இல்லை. உண்மையில் உன்னைப் பற்றிப் பரிபூரணமாக எனக்குத் தெரியும். உண்மையில் என்னைப்போல் உன்னைத் தெரிந்து கொண்டவன் வேறு யாரும் இருக்க முடியாது. சொல்லப் போனால் ரவீந்திரனுக்குக் கூட உன்

இதயப் பாங்கு மட்டும்தான் தெரியும். எனக்கோ உன்னுடைய, உனக்கே தெரியாத, வரலாறு கூட ஓரளவு தெரியும் என்று நினைக்கிறேன். டாக்டர் சுரேஷுக்கு அடுத்தபடி அந்த விவரங்கள் அனைத்தும் அறிந்தவன் நான்தான்!"

இப்படி ராமநாதன் சொன்னதும் சந்திரிகாவுக்குத் தலை சுற்றியது. குழப்பத்தோடு பார்த்தாள்.

"சந்திரிகா! உன்னுடைய பெயருக்குச் சாதாரணமாகச் சந்திரன் என்று அர்த்தம். ஆனால் வடநாட்டு வைத்தியர்களின் பாஷையில் சந்திரிகா என்றால் சர்ப்பகந்திக்கு இன்னொரு பெயர். அது தெரியுமா உனக்கு? அந்தப் பெயர் உனக்கு எப்படி வந்தது என்று ஆராய்ந்ததன் பலனாகத்தான் யாருக்குமே தெரியாத விவரங்கள் எல்லாம் டாக்டர் சுரேஷுக்கும் எனக்கும் தெரிய வந்தன" என்றான் ராமநாதன்.

சந்திரிகாவுக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை. மருண்டு மருண்டு ராமநாதனையே பார்த்தாள் அவள்.

## 36. தொங்கும் தோட்டம்

"காளிதாஸ மகாகவி ரகுவம்சம் என்ற அருமையான காவியத்தில் அஜ மகாராஜனை இந்துமதி சந்திக்கும் கட்டத்தில் ஓர் உதாரணம் சொல்கிறான். சுயம்வர மண்டபத்தில் வீற்றிருக்கும் அரசர்களையெல்லாம் ஒவ்வொருவராக இந்துமதிக்கு அறிமுகப் படுத்துகிறாள் தோழி ஸுநந்தை. அஜன் இருக்கும் இடம் வந்ததும் அவளுடைய வர்ணனை பிரமாதம் ஆகி விடுகிறது. 'குடிப் பிறப்பு, அழகு, இளமை, அடக்கம் முதலிய நற்பண்புகள் உடைய உனக்கு, இத்தனை நற்பண்புகளும் கொண்ட இந்த அஜ மகாராஜர் சமமானவர். அவரை நீ வரிப்பாயாக. ரத்தினம் பொன்னோடு சேர்ந்தது போலாகும்!' என்கிறாள். அடடா! அந்த உதாரணம்தான் இப்பொழுது எனக்கு நினைவு வருகிறது" என்றான் ராமநாதன் சந்திரிகாவைப் பார்த்து.

பம்பாய் நகரத்துத் "தொங்கும் தோட்டத்தி"லே ராமநாதனையே மருண்டு மருண்டு பார்த்துக் கொண்டிருந்த சந்திரிகா இப்பொழுது கேட்டாள் : "நீங்கள் ரகுவம்சம் படித்திருக்கிறீர்கள் என்று தெரிந்து சந்தோஷப்படுகிறேன். ஆனால் இந்த உதாரணத்துக்கும் நீங்கள் சற்று முன்பு குறிப்பிட்ட என்னுடைய வாழ்க்கை வரலாற்றுக்கும் என்ன சம்பந்தம்?"

ராமநாதன் சொன்னான் : "சந்திரிகா! உன்னுடைய வாழ்க்கை வரலாறு எனக்குத் தெரிய வந்ததிலிருந்து, உன்னிடம் எனக்குள்ள அநுதாபம் கொஞ்சநஞ்சமல்ல. ஏற்கனவே உன்னிடமிருந்த அன்பு; இந்த வரலாற்றைத் தெரிந்து கொண்டதிலிருந்து இன்னும் பல மடங்கு அதிகரித்திருக்கிறது."

சந்திரிகா சொன்னாள் : "அதற்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் எனக்கும் கூடத் தெரியாத விவரங்கள் என்னைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? என் ஆவலை இப்படித் தூண்டிவிடுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை!"

ராமநாதன் ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தான். பிறகு பேசினான் : "சந்திரிகா. நீ பெரிய குடும்பத்தைச் சேர்ந்த பெண். சிறு குழந்தையாக இருந்தபோது, உன்னை அபகரித்துக் கொண்டுபோன ஒரு துஷ்டப் பெண் உன் வாழ்க்கையை வேறு எப்படியோ மாற்ற வேண்டும் என்று நினைத்தாள். ஆனால் ரயில் வண்டியில்—"

இப்படி ராமநாதன் சொல்ல ஆரம்பிக்கும்போதே சந்திரிகாவின் கண்களிலிருந்து 'பொல பொல' என்று கண்ணீர்த் துளிகள் வழிய ஆரம்பித்தன. இதை ராமநாதன் கவனித்தான்.

"சந்திரிகா! உன்னுடைய இதயத்தின் ஆழமான அந்தரங்க உணர்ச்சிகளைக் கிளறி விடுவதற்கு வருந்துகிறேன். ஆனாலும்—"

"மிஸ்டர் ராமநாதன்! என்னுடைய வாழ்க்கையில் அந்த ரயில் வண்டிச் சந்திப்பை யார் நினைவூட்டினாலும் என் உணர்ச்சிகளை என்னால் அடக்க முடிகிறதில்லை.

கொடும் நரகத்திலிருந்து என் வாழ்க்கையைக் கடைத் தேற்றிய அந்த மகாபுருஷர், அந்தப் புண்ணிய சீலருடைய கருணையை எப்படிச் சொல்லுவேன்! ரயில் வண்டியிலே அவரிடம் பிச்சைக் கேட்டேன். காலணுக் கொடுத்திருந்தால் நகர்ந்திருப்பேன். ஆனால் அவர் என்ன கொடுத்தார்? என் எதிர் காலத்தையே எனக்குக் கொடுத்தார். கலை வாழ்வையே எனக்குப் பிச்சையாக அளித்தார். என்னுடைய பெருமை, என்னுடைய நற்பண்புகள் என்று ஏதேதோ சொன்னீர்களே இப்பொழுது, அத்தனையும் அவர் எனக்குக் கொடுத்த பிச்சை. இப்பொழுதோ துரோகந்தான் செய்து விட்டேன். அந்த உத்தமருடைய—''

சந்திரிகாவுக்கு வார்த்தைகள் தடைபட்டன. ராமநாதன் ஆச்சரியத்தோடு கேட்டான்:

" துரோகமா? சந்திரிகா, நீ என்ன சொல்லுகிறாய்? உன்னுடைய இதய அந்தரங்கத்தை என்னிடம் சொல்லலாம் என்று உனக்கு நம்பிக்கை ஏற்பட்டால், தயவு செய்து சொல்லு. நீ அவருக்கு என்ன துரோகம் செய்கிறாய்? அல்லது செய்திருக்கிறாய்? எனக்குத் தெரிந்த வரை ஒன்றும் இல்லையே—"

" நான் அங்கிருந்து மறைந்ததைவிட வேறு என்ன துரோகம் இருக்க முடியும்?'' என்று கேட்டாள் சந்திரிகா.

" துரோகம் செய்துவிடக் கூடாது என்பதற்காகத் தானே நீ அங்கிருந்து மறைந்தாய்? உண்மையில் ரவீந்திரனுடைய குடும்பத்துக்கு நீ உன்னுடைய நன்றியைத் தானே இந்த முறையில் செய்து காட்டியிருக்கிறாய். இதில் தவறு என்ன இருக்கிறது! அத்தனை குழப்பத்தில் நீ வெளியேறியது ஒன்றே, உன்னுடைய நல்ல குணத்துக்குச் சான்று. அப்படித்தான் நான் நினைக்கிறேன். மற்றப்படி உன் வாழ்க்கையில் ரவீந்திரனுக்கு உரிய ஸ்தானம் வேறு என்ன உண்டு? இல்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும்!''—இப்படிச் சொல்லிவிட்டு ராமநாதன் மௌனமாக இருந்தான்.

" ரவீந்திரனுடைய ஸ்தானம் " என்ற வார்த்தைகள் சந்திரிகாவின் உள்ளத்தில் அப்படியே போய்ப் பதிந்தன. அவருடைய ஸ்தானம் என்ன ? தன் வாழ்வில் அவர் வகிக்கும் ஸ்தானம் என்ன ? தனக்கும் அவருக்கும உள்ள பாசம் எத்தகையது?—சந்திரிகாவுக்கு, சாவித்திரி அம்மா ளோடு தான் பேசிய அத்தனை வார்த்தைகளும் மீண்டும் நினைவுக்கு வந்தன.

"மிஸ்டர் ராமநாதன்! எனக்கே புரியாத என்னுடைய உணர்ச்சிகளைக் கடந்த ஒரு வாரமாக என் மனத்துக் குள்ளேயே நான் விமரிசனம் செய்துகொண்டிருக்கிறேன். உங்கள் சகோதரி ஏதேதோ புதிய சிந்தனைகளையெல்லாம் என் உள்ளத்தில் கிளறினார்கள்—"

" சந்திரிகா, அக்கா கொஞ்சம் அதிகமாகப் பேசுவாள். அதற்காக வருத்தப் படாதே. மொத்தத்தில் அவள் ஒரு நல்ல பெண். அதிகமாகப் பேசுகிற பெண்களே எப்பொழுதும் நல்லவர்கள் என்று வைத்துக் கொள். வார்த்தைகளைப் பேசாமல், ஒவ்வொரு வார்த் தையைச் சொல்லுவதற்கு முன்பும், ஆயிரந்தடவை மனத்துக்குள்ளேயே யோசித்து யோசித்துப் பேசுகிறார் களே, அப்படிப்பட்ட பெண்களை எளிதில் நம்பக் கூடாது. ஆனால் வெகுளித்தனமாக மடமட என்று பேசுகிற பெண் களிடம் கபடம் இராது. அக்காளும் இந்த ரகத்தைச் சேர்ந்தவள். ஆனால் புத்திசாலி. விரைவாகப் பேசினாலும் புத்தியோடு பேசுகிறவள்தான் அவள் !"

" உண்மையான பேச்சு நீங்கள் சொல்வது ! உங்க ளிடந்தான் அவர்களுக்கு எத்தனை அன்பு இருக்கிறது ! நான் இந்தப் பம்பாய்க்கு வந்து சேர்ந்த நாளிலிருந்து இதுவரை ஒவ்வொரு நிமிஷமும் அந்த அன்பை உணரு கிறேன்—"

" அதாவது உணர்த்தப் படுகிறாய் ! அதாவது ஒவ்வொரு நிமிஷமும் உன்னிடம் என்னைப் பற்றி ஏதாவது அவள் சொல்லிக் கொண்டே இருக்கிறாள். அப்படித் தானே ?"

சந்திரிகா சிரித்தாள். வானத்தில் சந்திரன் உதித்து வந்து கொண்டிருந்தான். அந்த நிலவின் ஒளியில் சந்திரிகாவின் சிரித்த முகத்தைக் கூர்ந்து பார்த்தான் ராமநாதன். மேகங்களுக்கு மத்தியில் நிலவு பிரகாசிப் பதைப் போல, எத்தனையோ சஞ்சலங்களுக்கு மத்தியில் அந்த முகத்தில் சிரிப்பு குளுமையோடு ஒளி வீசியது.

" சந்திரிகா, உன்னுடைய பிறப்பைப் பற்றியும், உன் னுடைய குடும்பத்தைப் பற்றியும் டாக்டர் சுரேஷ் பரிபூரணமாக அறிவார். அவர் திருச்சி ஜில்லாவில் வைத்திய அதிகாரியாக வருவதற்கு முன்பு, தெற்கு ஜில்லாக்களில் அதிக நாள் உத்தியோகம் பார்த்தவர். உன்னைப் பற்றி எல்லா விவரங்களும் அவருக்குத் தெரியும். ஆனால் ஏதோ சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். அதுவரை அந்த விவரங்களும் இரகசியமாகவே இருக்கட்டும் என்று நினைக்கிறார்போல் தோன்றுகிறது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம் சொல் வேன். காளிதாஸனுடைய இந்துமதி எப்படித் தனக்குப் பொருத்தமான ஒரு கணவனை வரித்தாளோ, அப்படி நீயும் ஒரு கணவனை வரித்து, உன் வாழ்வும் நிம்மதியாக அமைந்து, வாழையும் கன்றும்போல உன்னுடைய கலை வம்சம் வழி வழியாக வளருமானால் டாக்டர் சந்தோஷப் படுவார். டாக்டர் மட்டும் என்ன? எல்லாருமே சந்தோஷப் படுவார்கள். ரவீந்திரனுமே சந்தோஷப் படுவார். அக்காளைப் பற்றியோ சொல்லவே வேண் டாம்."

காரின் குழலோசை கேட்டது. 'ஷாப்பிங்' சென் றிருந்த சாவித்திரி அம்மாள் திரும்பி வந்து கொண் டிருந்தாள்!

காரிலிருந்து இறங்கி 'ஸிமெண்ட்' பெஞ்சை நோக்கி வரும்போதே, நிலவின் வெளிச்சத்தில் சந்திரிகாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்து விட்டாள்.

" என்ன சந்திரிகா! ஏன் முகம் கலங்கியிருக்கிறது? எத்தனை சிரித்து மழுப்பப் பார்த்தாலும், கண் எல்லாம் சிவந்திருக்கிறதே. கண்ணீர் விட்டிருக்கிறாய் போல்

இருக்கிறதே! பார்த்தாயா, ஆமாம்! என்ன ராமநாதா, என்னுடைய சந்திரிகா கொஞ்சம் நிம்மதியாகப் பேசிக் கொண்டிருக்கட்டும் என்று நினைத்து அவளை இங்கே விட்டுப் போனால், அவள் வருத்தப் படும்படியா பேசுவது! சில விஷயங்களில் நீ வெறும் அசடு!"

இப்படி ஒரு போடு போட்டாள் சாவித்திரி அம்மாள். அவளுக்கு உண்மையிலேயே திகைப்பு ஏற்பட்டிருந்தது. ராமநாதன் என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் குழப்பத்தோடு விழித்தான். சந்திரிகா இதைப் புரிந்து கொண்டு பேசினாள்.

"நான் வருத்தப்படும்படி அவர் எதுவும் சொல்லவில்லை அம்மா. உண்மையில் அவர் எதுவுமே பேசவில்லை. நான்தான் கழிந்த காலத்தை யெல்லாம் நினைத்து......"

"ஓ! அப்படியா! சரி சரி, நீ கழிந்த காலத்தை நினைத்து விட்டாயா! தெரியுமே. அதை நினைக்காமல் இருக்க முடியாதே உன்னால். நினைத்ததும் அழாமல் இருக்க முடியாதே, உன் கண்களால்! ஐயோ! ஐயோ! இப்படியும் ஒரு அசடு உண்டா! தம்பிதான் சில விஷயங்களில் அசடு என்று நினைத்தேன். நீயும் அப்படியேதான் சந்திரிகா! வந்து சேர்ந்தீர்களே இப்படி இரண்டு பேரும்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அன்புக் கோபத்திலே ஒரு கொஞ்சலான கோபப் பார்வை பார்த்துக் கொண்டே 'ஸிமெண்ட்' பெஞ்சில் உட்கார்ந்தாள் சாவித்திரி அம்மாள்.

"சந்திரிகா, உன்னுடைய வாழ்க்கையைப் பற்றி இவனும் திருச்சியில் ஒரு டாக்டர் இருக்கிறாராமே—ஒரு துப்பறியும் புலியாமே—அவரும் சேர்ந்து ஏதேதோ பெரிதாகக் கண்டு பிடித்து விட்டார்களாம்! தில்லியில் இருந்து இவன் வந்து சேர்ந்த அன்றைக்கே என்னிடம் அதைச் சொன்னான். அப்படி என்னதான் கண்டு பிடித்திருக்கிறார்களோ! பெரிய இரகசியம் என்று என்னிடம் பயமுறுத்துகிறான்! இந்த ஆண்களே எப்பொழுதும் இப்படித்தான்! நாம் வாயாடிகள் என்பது இவர்கள்

சித்தாந்தம். ரகசியம், ரகசியம் என்று அர்த்தமில்லாமல் பிரமாதப் படுத்துவார்கள். கடைசியில் நெல்லுக்குள் அரிசி இருக்கிறது, கண்டு பிடித்து விட்டோம்!—என்பார்கள். தாங்கள்தான் பெரிய புத்திசாலிகள் என்று நினைப்பு! இதை யெல்லாம் பொருட்படுத்தாதே சந்திரிகா. என் தம்பியானாலும் சரி, அந்த மாயா வினோத மகா புத்தி சாலி டாக்டர் ஆனாலும் சரி. ஏன்—எங்களவரே ஆனாலும் சரி, அப்படித்தான்! இது ஆண்களுக்கு ஒரு வியாதி. டாக்டர் சுரேஷால்கூட குணப்படுத்த முடியாத ஒரு வியாதி. அவருக்கே உள்ளே ஒரு வியாதி!"

ராமநாதன் சிரித்துக் கொண்டே இந்த வார்த்தைகளைக் கேட்டான். சந்திரிகா இடை மறித்தாள்.

"அப்படிச் சொல்லாதீர்கள் அம்மா! டாக்டர் சுரேஷ் உண்மையிலேயே மகா புத்திசாலி. அவரால் நமக்கு ஏற்பட்டுள்ள நன்மைகளுக்கு ஓர் அளவே இல்லை!"

"அது சரி, சந்திரிகா! அவர் கெட்டவர் என்றோ, அசடு என்றோ சொல்லவில்லையே நான். பொதுவாக ஆண்களுக்கே சில விஷயங்களில் புத்தி போதாது என்று சொல்ல வந்தேன். பாரேன், ராமநாதனுக்கு உன்னுடைய விருத்தாந்தத்தைப் பற்றிப் பேசுவதற்கு என்ன அவசியம் வந்தது இப்பொழுது? அர்த்தமில்லாமல், எதை எதையோ பேசி உன்னைத் துக்கப்படுத்தி விட்டான், பார்!" என்றாள்.

"இல்லவே இல்லை அம்மா! உண்மையில் என்னைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று என் அந்தரங்கத்தில் ஏற்பட்டுள்ள என்னுடைய தாபம் வேறு யாருக்குமே புரியாது. அதை அவர் ஓரளவு புரிந்து கொண்டு பேச ஆரம்பித்தது, எனக்கு அதிசயமாக இருந்தது அம்மா! என்னுடைய ஏக்கமும், பொருள் விளங்காத என்னுடைய உணர்ச்சிகளும், என்னைப் பற்றி நான் அறிந்து கொள்ள வேண்டும் என்று தவிக்கிற அந்தத் தவிப்பிலே இருந்து உண்டான குழப்பங்களும் தான் இத்தனை துக்கத்துக்கும் காரணம். நாலு பேரைப்

போல் என் குடும்பத்தையும், எனது பிறப்பையும் நான் தெரிந்து கொண்டிருந்தால் என் எதிர்காலத்தை எப்படி அமைப்பது என்பதில் எனக்குச் சஞ்சலம் உண்டாக வேண்டிய அவசியமே இல்லை. என்னையும் அறியாமல் என் உள் மனத்தில் ஏன் பெற்றோர்களைப் பற்றிய நாட்டமும், கவலையும் என்னைக் குமைத்துக் கொண்டே இருக்கின்றன. நீங்கள்தான் யோசித்துப் பாருங்களேன். தாயார் தகப்பனாரின் அரவணைப்பில் இருந்திருந்தால் எனக்கு ஏன் இத்தனை குழப்பம் வந்திருக்க வேண்டும்! நீங்கள் கேட்டீர்களே, ஒரு கேள்வி. என்னுடைய எதிர் காலத்தை நான் எப்படி வகுத்துக் கொள்ள வேண்டும் என்ற சிந்தனையை முதன் முதலாகத் கிளறியது உங்களுடைய அந்தக் கேள்விதான். அந்தக் கேள்வி எழுந்த வினாடியிலிருந்து என் மனசில் இந்தப் புதிய ஏக்கம் குடி புகுந்தது. என்னைப் பெற்றவள் யார், என் தகப்பன் யார், இவர்கள் எங்கே இருக்கிறார்கள், இவர்களை நான் என்றைக்காவது பார்ப்பேனா—இப்படியெல்லாம் இது வரை இல்லாத ஏக்கம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது, அம்மா! எனக்குத் தாயும் தந்தையும், எல்லாமுமாக இருந்த அந்த உத்தமரை என்றைக்குப் பிரிந்து வந்தேனோ, அந்த நிமிஷத்திலிருந்து இந்தப் புதிய நினைப்புக்கள் என் உள் மனத்தில் என்னையும் அறியாமல் தோன்ற ஆரம்பித்தன. தாங்கள் கேட்ட கேள்விக்குப் பிறகோ இந்த நினைப்புக்கள் என்னை எப்படியெப்படி யெல்லாமோ குழப்புகின்றன—''

சந்திரிகாவுக்கு மீண்டும் கண் கலங்கியது. இமைகளை மூடி விழிப்பதற்குள், கண்ணீர்த் துளிகள் 'குபு குபு' என்று கொட்டின.

"பார்த்தாயா! பார்த்தாயா! சந்திரிகா பழையபடியும் வருத்தப்பட ஆரம்பித்து விட்டாயே! நான் ஒன்றும் பேசுவதற்குள்ளேயே இப்படி வருத்தப்படுகிறாயே! சரி தான். ராமநாதனிடமும் இப்படித்தான் அழுதிருப்பாய். நான் அவனைப் போய்க் கோபித்தேனே. என்ன ராமநாதா, அடடே! உனக்கும் கண் கலங்குகிறதா! சரியாய்ப்

போச்சு! நானும் அழ வேண்டியதுதான் பாக்கி! சுருதி சேர்ந்து விடும்!"

இதைக் கேட்டதும் ராமநாதன் சிரித்து விட்டான். அடுத்த விஞடி சந்திரிகாவும் சிரித்து விட்டாள்.

"நல்ல பிள்ளைகள்! ஊம்! புறப்படலாமா! நேரம் ஆகிறது!" என்ருள் சாவித்திரி.

மூவரும் காரிலே வந்து ஏறிக் கொண்டார்கள். அவசரத்தில் சந்திரிகா பின் ஸீட்டில் போய் ஏறிஞள். ராமநாதனும் வழக்கம் போல் பின் ஸீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

"சரி; நீங்கள் இருவரும் தனியாகப் பேசிக் கொண்டிருந்த அந்தத் துப்பறியும் கதைகளை இப்பொழுது தொடர்ந்து பேசுங்கள். நான் ஒரு காதால் அதைக் கேட்டுக் கொண்டே காரை ஓட்டுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே 'ஸிடியரிங்'கைப் பிடித்தாள் சாவித்திரி அம்மாள்.

* * *

அன்றிரவு சந்திரிகா ஒரு விநோதமான கனவு கண்டாள் :

இருள் கப்பிப் படர்ந்திருந்த கருவானம். மேகக் கூட்டங்களுக்குள் கையிலே ஒரு பிச்சைத் தட்டு ஏந்திய வண்ணம் சந்திரிகா நடக்கிருள். பின்ஞல் ஒரு பயங்கரமான பெண் குரல் "போ", "நில்", "பாடு" என்று அதிகாரம் செய்கிறது. சந்திரிகா ஏதேதோ நாடோடிப் பாடல்களைப் பாடுகிருள். இதென்ன! திடீரென்று நிலவு உதிக்கிறது. பூரண சந்திரன். சந்திரிகா படுத்திருக்கிருள். எங்கே? அந்தச் சந்திர வட்டத்துக்குள்ளே தான் இதென்ன ஆச்சரியம்! யாரோ வந்து அவளுடைய கையைப் பிடிக்கிருர்கள்! பயங்கரமான பிடியில்லை. அன்புப் பிடி அது! சந்திரிகா பதறி எழுந்திருக்கிருள். தன்னுடைய பிச்சை ஓட்டை நீட்டுகிருள். என்ன ஆச்சரியம்! அந்த ஓட்டுக்குள் எதையோ போட்டான் அந்த மனிதன்! என்ன அதிசயம்! அது காசு இல்லை.

காலணா விழவேண்டிய இடத்தில் ஒரு மனித இதயம் விழுந்தது. காலணா என்றால் எத்தனை ஓசை கேட்கும். இது ஓசையே செய்யாமல் விழுந்தது. மனித இதயம் அல்லவா! மறுவினாடி திகைப்போடு பார்த்தாள் சந்திரிகா. சந்திர வட்டத்தைச் சுற்றி நட்சத்திரங்கள் தெரிந்தன. அந்த நட்சத்திரங்களுக்குள்ளே ஒன்றில் திருச்சி தெரிந்தது. இன்னொன்றில் மாடமாளிகைகளோடு பம்பாய் நகரம் தெரிந்தது. பிறிதொன்றில் மாதுங்காவும் மாதர் சங்கக் கட்டடமும் தெரிந்தன. இன்னொரு நட்சத்திரத்துக்குள்ளே வேறு ஏதோ ஊர் தெரிந்தது. ஆனால் எல்லா நட்சத்திரங்களும் தன்னைப் பார்த்துக் கண் சிமிட்டின!

சந்திரிகா கண்களை மூடிக் கொண்டு புரண்டு படுத்தாள். மீண்டும் அதே வானம்! அதே முழு நிலவு. சந்திரிகா அதே சந்திர வட்டத்துக்குள் அயர்ந்து நித்திரை செய்கிறாள். இதோ ஒரு மனித உருவம்! தன்னை அணுகி வருகிறது. இதோ தன்னைத் தொட்டு விட்டது.

சந்திரிகா பதறி விழித்தாள். எங்கிருந்தோ யாரோ பாடுவதுபோல் ஒரு மெல்லிய குரல் வந்தது.

கனவு கண்டதிலே—ஒருநாள்
கண்ணுக்குத் தோன்றாமல்
இனம் விளங்கவில்லை—எவனோ
என்னகம் தொட்டு விட்டான்!

'ஐயோ! கனவுதானா!' எத்தனை பதறி விட்டாள் சந்திரிகா. பதறிக் கொண்டே கண் விழித்தாள்.

**மா**துங்காவில் விடிந்து கொண்டு வந்தது. விடியற்காலக் கனவுதான் கண்டிருக்கிறாள் சந்திரிகா! விடியற்காலம் கனவு கண்டால், பலிக்கும் என்று சொல்வார்களே, அப்படியானால் இந்தக் கனவின் பொருள் என்ன?

சந்திரிகா பலமாக யோசனை செய்தாள். கட்டிலுக்கு மேல் ' கூரை விசிறி ' சுழன்று கொண்டிருந்தது. அதைப் போல் சுழன்றது அவளுடைய மனமும்.

சாவித்திரி அம்மாளைச் சந்தித்ததும், பிறகு அவள் பேசிய விதமும், ராமநாதன் தில்லியில் இருந்து இங்கே வந்ததும், அவன் நடந்துகொண்ட விதமும், எல்லாமாகச் சேர்ந்து புதிய எண்ணங்களைத் தோற்றுவித்தன அல்லவா? அதன் விளைவாகத்தான் இப்படியெல்லாம் சொப்பனம் உண்டாகிறது போலும் என்று நினைத்தாள் சந்திரிகா.

ராமநாதன் பெருந்தன்மையான மனிதர்! அவருடைய மனத்தில்உள்ள எண்ணத்தை வெளியிடுவதற்கு இத்தனை அவர் தயங்குவதிலிருந்தே அவர் எவ்வளவு நல்லவர் என்று தெரிகிறதல்லவா!—இவ்வாறு நினைத்தாள் சந்திரிகா. மனத்துக்குள் சிரித்துக்கொண்டாள். உடனே ரவீந்திரனுடைய ஞாபகம் வந்தது. அதைத் தொடர்ந்து 'குபீர்' என்று கண்ணீர் வந்தது. அடுத்த கணம் சாவித்திரி அம்மாள் கேட்ட கேள்வி ஞாபகம் வந்தது. அன்போடு பேசவும், தன்னைக் கட்டுப்பாட்டோடு பாது காக்கவும் கூடிய ஒரு மனிதர்—அப்படி ஒருவர் தனக்கு ஏற்பட்டால்தான் தன் எதிர்காலம் சீராக அமையும். ஆனல் அப்படிப்பட்ட ஒருவர் யார்? நிச்சயம் அந்த ஸ்தானத்தை ரவீந்திரன் வகிக்க முடியாது. அவர் கல்யாணியின் கணவர். அப்படியானல்? வேறு யார் அது? சாவித்திரி அம்மாளுடைய எண்ணமும் ராமநாதன் எண்ணமும் இந்த நாலைந்து நாளில் வெட்ட வெளிச்ச மாகத் தெரிகிறது. அப்படியானல் அந்த ஸ்தானத்தை ராமநாதன் வகிப்பதா? தன்னுடைய இதய வாசலில் தன்னையும் அறியாமல் ராமநாதன் நுழைகிறரா? " என்னகம் தொட்டு விட்டது " ராமநாதனு? மனிதமனம் என்பது இத்தனை விசித்திரமான காரியமா?—ஒன்றும் புரியவில்லையே! பம்பாயின் தொங்கும் தோட்டத்தைப் போல் அல்லவா இப்பொழுது அவளுடைய மன நிலையும் தொங்கிக் கொண்டிருந்தது!

தனக்கும் உலகத்தில் மற்றப் பெண்களைப் போலத் தாயும் தகப்பனும் இருந்தால், இந்தக் கவலைகளை எல்லாம் அவர்களே எடுத்துக் கொண்டிருப்பார்களே! ஐயோ! ராமநாதன் சொன்னரே, அது உண்மையாக இருக்குமா! தன்னுடைய பெற்றோர்கள் இன்னும் இந்த உலகில் இருக்கிறார்களா? அப்படியானல் அவர்கள் எங்கே இருக்கிருர்கள்? எந்த நிலையில் இருக்கிருர்கள்? அவர்களுக்கு இப்படி ஒரு மகள் இருக்கிருள் என்று தெரியுமா? அல்லது இந்த விஷயம் அவர்களுக்குமே தெரியாதபடி இரகசியமாகவே இருக்கிறதா? ஒன்றும் புரியவில்லையே! ஐயோ, அவர்களைத் தான் எப்பொழுது பார்க்கப் போகிருள்? டாக்டர் சுரேஷ் அந்த விவரங்களை இரகசியமாக வைத்திருக்கிருர் என்று சொன்னரே ராம நாதன்? அதில் என்ன நோக்கம் இருக்கக் கூடும்? ஏன் இவர்கள் இதை இப்படி இரகசியமாக வைத்திருக்க வேண்டும்? இதில் அப்படி என்ன புதிர் இருக்கக் கூடும்?

சந்திரிகாவினுடைய மனம் சாவி கொடுத்தால் ஓடுமே அந்த ரயில் வண்டியைப் போல ஓடியது. ஆனல் தண்ட வாளத்தின் மேலேயே ஓடியது. தண்டவாளத்தை விட்டு இறங்கி விடவில்லை. மீண்டும் மீண்டும் பொம்மை ரயிலைப் போல் சுற்றிச் சுற்றி நினைவுத் தண்டவாளத்திலேயே ஓடிக் கொண்டிருந்தது அந்த மனம்!

இதோ! ஓடுகிற ரயில்—பொம்மை ரயில் இல்லை, நிஜ ரயில்—அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்ததும் நிற்குமே, அப்படித் திடீரென்று நின்றது சந்திரிகாவின் மன ஓட்டம். காரணம் சாவித்திரி அம்மாள் உள்ளே வந்து ஒரு அணுகுண்டைத் தூக்கிப் போட்டாள்.

“யாரோ திருச்சியிலிருந்து உன்னைப் பார்க்க வந்திருக்கிருரம்மா!”

“என்னைப் பார்க்கவா? திருச்சியிலிருந்தா?” என்று கேட்டாள் சந்திரிகா.

“ஆமாம். அவர் பெயர் உஸ்தாத் மீரானும்!” என்றுள் சாவித்திரி.

## 37. கயிற்று நடனம்

சந்திரிகாவின் குழப்பங்களுக்கும், கற்பனைகளுக்கும் மீரானுடைய பம்பாய் விஜயம் முற்றுப் புள்ளி வைத்தது. அவர் வந்து சேர்ந்த ஒரு மணி நேரத்துக்குள் மாதுங்காவில் சாவித்திரி அம்மாளுடைய வீட்டு நிலவரத்திலேயே பெருங் கலக்கம் உண்டாகி விட்டது.

ரவீந்திரனுக்கு அதிர்ச்சியினால் மூளை பிசகி விட்டது என்று கேட்ட நிமிஷத்திலிருந்து, சந்திரிகாவுக்கு இடி விழுந்தது போல் ஆகி விட்டது. சற்று முன்பு வரை காதல் என்றும், கல்யாணம் என்றும், எதிர்கால வாழ்க்கை என்றும், சுழன்று கொண்டிருந்த அவளுடைய மனம் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டது. சாவித்திரி அம்மாளுக்கோ அவளுடைய படபடப்பெல்லாம் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டது. முகத்தில் எல்லையில்லாத சோகம் படர்ந்து விட்டது. ராமநாதனுடைய உள்ளத்தின் உணர்ச்சிகளை முகத்திலிருந்து புரிந்து கொள்ள முடியவில்லை. மொத்தத்தில் அவனுக்கே அவனுடைய எதிர்காலம் புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தான் ராமநாதன்.

இத்தனை சிக்கல்களுக்கும் மத்தியில் எவ்விதக் குழப்பமும் இல்லாமல் ஓர் ஏகோபித்த முடிவு ஏற்பட்டது என்றால், அது சந்திரிகா திருச்சிக்குப் புறப்பட வேண்டிய விஷயமாகத்தான்!

"டாக்டர் சுரேஷிடம் உன்னைக் கொண்டு ஒப்படைக்க வேண்டியது என்னுடைய பொறுப்பு. அதன் பிறகு அவர் என்ன யோசனை சொல்கிறாரோ தெரியாது, அம்மா!" என்று சந்திரிகாவிடம் சொன்னார் உஸ்தாத், ஒரே கண்டிப்போடு.

சாவித்திரி அம்மாள் தம்பியைப் பார்த்தாள். அவனுடைய முகம் வெறிச்சென்று இருந்தது. சந்திரிகாவோ மறு நிமஷமே திருச்சிக்குப் புறப்படத் தயாராக இருந்தாள்! "ரவீந்திரனுக்கு மூளைக் கோளாறு" என்று கேட்டதும், தானே அதற்குப் பொறுப்பாளி

என்ற உணர்ச்சி, அவளுடைய மனத்தை அத்தனை தூரம் அதிரச் செய்து விட்டது.

உஸ்தாத் மீரானுக்கு அந்த வீடு புதிதுதான். அதன் சூழ்நிலைகளும் புதியவைதான். என்றாலும் அவருடைய பேச்சிலோ நடவடிக்கைகளிலோ எந்தவிதமான மாறுதலும் இல்லை. சகஜமாகப் பேசினார். சகஜமாக நடந்து கொண்டார். வழக்கமான கண்டிப்பும் உறுதியும் அவரிடம் அப்படியே இருந்தன.

சாவித்திரி அம்மாளும் ராமநாதனும் தனியாகப் பேசினார்கள். சந்திரிகாவைப் பற்றி விவரமாகச் சாவித்திரி அம்மாள் தில்லிக்கு, ராமநாதனுக்கு ஒரு கடிதம் எழுதினாள் அல்லவா? அந்தக் கடிதம் கிடைத்த மறுகணமே டாக்டர் சுரேஷுக்குச் சந்திரிகாவைப் பற்றித் தெரிவித்தது தானேதான் என்று ராமநாதன் சொன்னதும் சாவித்திரி அம்மாளுக்குக் கோபம் பிரமாதமாக வந்து விட்டது.

"பத்திரிகைக்காரர்களே இப்படித்தாண்டா தம்பி! இரகசியம் என்று ஒரு விஷயத்தை அவர்களால் வைத்துக் கொண்டிருக்க முடியாது! அதிலும் நீ அகில உலகச் செய்தி ஸ்தாபனத்தில் அல்லவா இருக்கிறாய்! அப்படியே டெலிபிரின்டரில் வைத்து அந்தச் செய்தியை அடித்து விட்டால்தான் திருப்திப் படுவாய்! உன்னுடைய தொழில்டா அது! உன்னைச் சொல்லிக் குற்றம் இல்லை!'

இப்படிப் பேசினாள் சாவித்திரி அம்மாள். ராமநாதன் சிரித்தான்.

"அக்கா! பம்பாய்க்கு வந்து சேர்ந்த பிறகுதானே ஏதேதோ யோசனைகளைச் சொன்னாய் நீ. இதை யெல்லாம் நான் கண்டேனா? தவிரவும் அந்தப் பெண் சொல்லாமல் கொள்ளாமல் இப்படிக் காணாமல் போனது எத்தனை பெரிய தவறு. எத்தனை குழப்பங்களை உண்டாக்கி விட்டது அந்தச் சம்பவம். டாக்டர் சுரேஷ் எனக்கு எழுதிய கடிதத்தைப் பார்த்திருந்தால் புரியும் உனக்கு!"

"சரி, சரி! அந்தத் துப்பறியும் புலியினுடைய கடிதத்தை ஒன்றும் நான் பார்க்க வேண்டாம்! அதிகமாகப் படித்தவர்களுக்கே மூளை கிடையாது!"

இப்படி ஒரு போடு போட்டு விட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள் சாவித்திரி அம்மாள். இதன் பிறகு தனது அக்காளைச் சமாதானப் படுத்துவதற்காக ராமநாதன் எத்தனையோ சிரமப்பட்டான். கடைசியில் சாவித்திரி அம்மாளும் திருச்சிக்குப் போவது என்று முடிவான பின்புதான், கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது!

ஆமாம்; ராமநாதனுக்கு 'லீவு' இல்லை. தில்லி ஆபீஸில் புதிதாகப் போய்ச் சேர்ந்திருப்பதால், லீவு நாட்களை நீடிப்பதற்கு இல்லை. ராமநாதனால் திருச்சிக்குப் போக முடியாது. இந்த நிலையில் என்ன செய்வது?

"உஸ்தாத்! நாளைக் காலையில் எங்கள் அத்தான் 'காம்பி'லிருந்து திரும்புகிறார். நீங்கள் உங்கள் பிரயாணத்தை ஒரு நாள் ஒத்திப் போடுங்கள். ஏனென்றால் அக்காளும் திருச்சிக்கு வரவேண்டும் என்கிறாள். அவளுக்கு அங்கே முக்கியமான ஒரு காரியம் இருக்கிறது. அத்தானிடம் கலந்து பேசி நாளையே புறப்படலாம் என்று நினைக்கிறாள். நீங்கள் இருப்பதால், துணைக்குப் பயமில்லை. அவளைத் தனியாக அனுப்ப வேண்டியதிருக்கிறதே என்ற பயமும் அத்தானுக்கு இராது!"

உஸ்தாத் சிரித்தார். "என்ன ராமநாதன்! யார் யாருக்குத் துணை என்கிறீர்கள்? உங்கள் அக்காளுக்கு நாங்கள் துணையா! இல்லவே இல்லை. உண்மையில் உங்கள் அக்காள்தான் எங்களுக்குத் துணை! அவர்கள் வராவிட்டால் கூட, வரவேண்டும் என்று கட்டாயப்படுத்துவதாக அல்லவா இருக்கிறேன். பெண்கள் வண்டியில் நான் இந்தப் பெண்ணைத் தனியாக ஏற்றி வைத்து, பிறகு போகிற வழியில் எங்காவது காணாமல் போய்விட்டால், யார் ஜவாப்தாரி!"

இந்த வார்த்தைகளைச் சந்திரிகாவினால் கேட்கவே முடியவில்லை. அப்படியே வீறிட்டு அழுது விட்டாள்.

*　　　*　　　*

**ப**ம்பாயிலிருந்து சென்னை நோக்கிச் செல்லும் ரயில் வண்டி அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்தது. பெண்கள்

வண்டியில் கூட்டம் இல்லை. இரண்டாவது வகுப்பு வண்டி யானதால், சந்திரிகாவும் சாவித்திரி அம்மாளும் தவிர வேறு யாருமில்லை. அந்தத் தனிமை இப்பொழுது சந்திரிகாவுக்குப் பயங்கரமாக இருந்தது.

ரயிலுக்கு வெளியே, அது இரவு நேரமானதால், ஒரே இருட் படலமாக இருந்தது. வானத்தில் அங்கங்கே கண் சிமிட்டிய நட்சத்திரங்களைத் தவிர, சந்திர வெளிச்சம் பிரகாசமாக இல்லை. வண்டிக்குள்ளேயோ விளக்கை அணைத்து விட்டதால், சிறிய நீலச் சுடர் ஒன்றைத் தவிர வேறு பிரகாசம் இல்லை. சாவித்திரி உறங்கி விட்டாள். எத்தனை நேரம் உறங்காமல் இருப்பாள் சந்திரிகா ?

பம்பாயிலிருந்து புறப்படுவது என்று தீர்மானித்ததும் மனத்தில் இருந்த குழப்பங்கள் எல்லாம் தீர்ந்து விட்டாற்போல ஒரு நிம்மதி ஏற்பட்டது சந்திரிகாவுக்கு. ஆனால் ரயிலில் ஏறி உட்கார்ந்ததுமோ குழப்பம் மீண்டும் ஆரம்பித்து விட்டது.

'புத்தி சுவாதீனம் இல்லையென்றால், அது எப்படிக் குணமாகும்! எத்தனை பெரிய விபரீதம் நடந்து விட்டது! தான் திரும்பச் சென்றால் நிலைமை எப்படிச் சீர்திருந்தும் ? ஆனாலும் யோசனை இல்லாமல் தன்னை அங்கே வரவழைக்க மாட்டாரே, டாக்டர் சுரேஷ்!'

இப்படி ஒரு சிந்தனை. மறு விநாடி மீண்டும் கவலை.

'நான் திருச்சியிலிருந்து ஓடி வந்தது எத்தனை பெரிய பிசகு! அதனால்தானே இத்தனை குழப்பங்கள்! இத்தனைக்கும் மத்தியில் ஒரு வாரமாக இந்தச் சாவித்திரி அம்மாள் வேறு எத்தனை குழப்பம் குழப்பி விட்டாள்! ஆனால் பாவம், ரொம்ப நல்லவள்! எனக்குத் துணையாகத்தானே இப்பொழுது இத்தனை நெடும் வழி பிரயாணம் செய்து வருகிறாள்!'

ஏதேதோ சிந்தனைகளுக்கு மத்தியில் சந்திரிகா கண்ணை மூடினாள்.

கருமேகங்கள் படர்ந்த வானத்தில் நட்சத்திரங்கள் மின்னுகின்றன. பிறைச் சந்திரன் அந்த இருளிலே கீறி

விடப்பட்ட ஒரு சிறு ஒளிவளைவு போல மேகத்திலே மிதந்தது. இதோ அந்த மேகங்களுக்கு ஊடே கயிறு கட்டியிருக்கிறது. அதில் சந்திரிகா நடக்கிறுள்.

எங்கிருந்தோ புல்லாங்குழலின் ஒலி வருகிறது. அடடா! எத்தனை சுகமான இன்னெலி அது. சந்திரிகாவின் இடது கையிலே ஒரு வர்ணக் குடை. அதை விரித்துப் பிடித்திருக்கிருள். இதோ அந்தக் கயிற்றின் மேல், புல்லாங்குழலிலிருந்து வரும் இன்னெலியின் வளைவு நெளிவுகளுக்குத் தகுந்தாற்போல் கயிற்றில் நடனம் ஆடுகிருள் சந்திரிகா! மேகங்கள் அவளைச் சுற்றி மிதந்து செல்கின்றன. நட்சத்திரங்கள் எல்லாம் ஒளிக் குமிழ்களாக அவளைச் சுற்றிப் பிரகாசிக்கின்றன. வானத்திலே பறக்கும் விமானத்தைப்போல, புல்லாங் குழலின் தெய்விக இசையானது மேகங்களையும், நட்சத் திரக் கூட்டங்களையும், பிறைச் சந்திரனையும் தழுவிக் கொண்டு 'கிர்' என்று எவ்விச் செல்கிறது. கயிற்றில் நடப்பது போலவே தெரியவில்லை சந்திரிகாவுக்கு. தன்னை மறந்த ஒரு நாத உலகிலே சங்கீத மயக்கத்திலே தானும் தனது சரீரமும் ஐக்யமாகித் தவழ்ந்தாள் சந்திரிகா.

இதோ! திடீரென்று எங்கிருந்தோ ஒரு கை அந்தப் புல்லாங்குழலைப் பிடிக்க வருகிறது. என்ன இது! திடீ ரென்று ஒலி முறிந்து விட்டது! ஒலி நின்ற மறு விநாடி சந்திரிகாவின் இடது கையிலே இருந்த குடை அங்கு மிங்கும் திணறுகிறது. கையும் காலும், ஆடுவதற்குப் பதிலாகப் பதறுகின்றன. தாளம் தவறியது. கயிற்றிலே இதுவரை நின்ற சமன் கெட்டது. இதோ! இதோ! தலை குப்புற—

விசில் ஊதிய வண்ணம் ஆடி ஆடிச் சென்று கொண்டிருந்த ரயிலில் இரண்டாவது வகுப்பு வண்டியின் மெத்தையிலிருந்து உருண்டு விழுந்து விட்டாள் சந்திரிகா! நல்ல வேளை! மேல் மெத்தையாக இருந்திருந்தால் பலமாக அடிபட்டிருக்கும். மேல் மெத்தையில் சாவித்திரி அம்மாளுடைய பெட்டியும், கூஜாவும் உட்கார்ந்து கொண் டிருந்தன. பக்கத்து மெத்தையில் அந்த அம்மாள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்!

உஸ்தாத் மீரான் பம்பாய்க்குச் சென்ற காரியம் வெற்றிகரமாக முடிந்தது. என்ருலும், திருச்சி சம்பந்தப் பட்டவரை அவர் அங்கிருந்து அப்பொழுது போனது பெரிய விபரீதத்துக்குக் காரணம் ஆகி விட்டது.

பாலக்கரையிலே பண்டிகைச் சமயம் அது! பெரிய பெரிய பணக்காரர்களும், திருச்சி நகரத்து மௌல்விகளும், பக்கீர்களும் ஒன்று சேர்ந்து முனைந்து கொண்டாடுகிற அல்லாப் பண்டிகை அது! வழக்கமாக ஊர்வலத்தில் சிலம்ப விளையாட்டுக்கள் மும்முரமாக நடக்கக்கூடிய பெரு நாள் அது. வேறு யாரும் சொல்லியிருந்தால் உஸ்தாத் அந்தச் சந்தர்ப்பத்தில் திருச்சியிலிருந்து கிளம்பி யிருக்கமாட்டார். ஆனல் டாக்டர் சுரேஷ் அல்லவா கண்டிப்பாக அவரைப் பம்பாய்க்கு அனுப்புகிருர்! முடியாது என்று சொல்லமுடியாதே! தவிரவும் தனக்குப் பிறகு தன்னுடைய சிலம்ப வாரிசாக விளங்கப்போகும் மஜீத் மருமகனுக வந்த பின்னர், அவர் சிலம்பப் பள்ளிக் கூடத்தைப் படிப்படியாகக் கை கழுவ விரும்புகிருர் அல்லவா! இதெல்லாம் காரணமாகத்தான் பம்பாய் புறப்படும்போது மனம் சஞ்சலப்படாமல் இருந்தார். ஆனல் அவர் திருச்சிக்குத் திரும்புவதற்குள் பெரிய விபரீதம் நேர்ந்து விட்டது.

பண்டிகையின்போது உஸ்தாதின் பள்ளிக்கூடத்துச் சிலம்பப் பிள்ளைகளை மஜீத் அணிவகுத்துச் சென்றபோது, பாலக்கரைத் திருப்பத்தில் எல்லாரும் நின்று கொஞ்சம் "கை வரிசை"களைக் காட்ட முனைந்தார்கள். அப்போது உய்ய கொண்டான் கரையில் எங்கிருந்தோ கல் வந்து விழுந்தது. மஜீத் கொஞ்சம் நிதானித்தான். "ஆட்டம் தொடர்ந்து நடக்கட்டும்!" என்று சமிக்ஞை செய்தான். ஐந்து நிமிஷத்தில் மீண்டும் எங்கோ ஒரு மறைவிடத்தி லிருந்து இரண்டு மூன்று கற்கள் வந்து விழுந்தன. என்ன செய்யலாம் என்று யோசிப்பதற்குள், ஐந்தாறு எருத் துண்டுகளும், இரண்டொரு முட்டைகளும் சிலம்பக் கூட்டத்துக்குள்ளே வந்து சிதறின. மஜீதுக்குக் கண் சிவந்தது. ஆனலும் உஸ்தாத் ஊரில் இல்லையே. பள்ளிக்

கூடத்தை அப்படியே ஆட விட்டு விட்டுத் தான் கல் வந்த திசையை நோக்கி நடந்து சென்று, பிறகு அதன் விளைவாக ஏதாவது குழப்பம் நேர்ந்தால் என்ன செய்வது? நாகரத்தினமும் குப்புசாமியும் சேர்ந்துதான் ஏதோ வம்பு பண்ணுகிருர்கள் என்று தெளிவாகத் தெரிந்தது. சிலம்பப் பிள்ளைகள் எல்லாம் சீறிக் கொண்டு நின்ருர்கள். ஆனலும் தான் இப்பொழுது பொறுமையோடும் பொறுப்பு உணர்ச்சியோடும் நடந்து கொள்வதுதான் புத்திசாலித்தனம் என்று நினைத்தான் மஜீத். "சரி, மேலே செல்லுங்கள்!" என்று சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டு நகரும்படியாகச் சிலம்பப் பள்ளிக்கூடத்துக்குக் கட்டளை இட்டான் மஜீத்.

அன்று சிலம்ப ஆட்டம் உற்சாகம் இல்லாமல் எப்படியோ போயிற்று. பண்டிகையில் எந்தக் குழப்பமும் வரக்கூடாது என்று காஸியாரும் மற்றவர்களுமாக மஜீதையும் சகாக்களையும் அரவணைத்துக் கொண்டு சென்ருர்கள். ஆனல் மஜீதின் மனத்தில் சொல்லொணுத ஆத்திரம் உண்டாயிற்று. தானே தனதாக முதன் முதல் வெளியே கொண்டு செல்லும் சிலம்பக் கோஷ்டிக்கு இப்படி ஒரு அவமானம் நேர்ந்ததை அவனுல் தாங்க முடியவில்லை. ஒரு நாள் முழுதும் சிந்தனை செய்து, தன் சகாக்களோடும் கலந்து யோசித்துப் பார்த்தான். உஸ்தாத் வரும் வரை பொறுமையாக இருக்க வேண்டும் என்று எவ்வளவோ முயன்ருன். முடியவில்லை. காரணம், அந்தச் சிலம்பக் கோஷ்டியில் ஒரு சீடன் மறுநாட் காலை நாகரத்தினத்தைக் கடைவீதியிலே பார்த்தானும். "என்னடா! நேற்றுச் சிலம்ப ஆட்டம் எப்படி?" என்று ஏகத்தாளமாக நாகு கேட்டானும். அதன் பேரில் வார்த்தை தடித்ததாம். நாகரத்தினம் மஜீதைப் பற்றி அந்தச் சீடனிடம் மிகவும் மரியாதைக் குறைவாகப் பேசிவிட்டுப் பகேரான் வீட்டைநோக்கி விரைவாக நடந்து விட்டானும்!

இதைக் கேட்ட மறுவினடி மஜீதுக்கு இரத்தம் கொதித்தது. கையும் காலும் கோபத்தினல் ஆடின. 'விறு.விறு' என்று நேரே பகேரான் வீட்டை நோக்கி நடந்தான்.

பகோரான் வீட்டில் பேச்சு முருகியது. பகோரான் ஒருவன் நடுவில் இருந்திரா விட்டால் நாகரத்தினம் அன்று நொருங்கிப் போய் இருப்பான் என்று பலரும் பேசிக் கொண்டார்கள்.

“நீ என்னோடு கைகொடு! பாலக்கரைச் சவுக்கத்தில் சிலம்பப் போட்டியிலே இறங்குவோம்! எவன் தோற்கிறானோ, அவன் அன்றிலிருந்து ஜெயித்தவனுக்கு அடிமை! என்ன சொல்லுகிறாய்?” என்று சவால் விட்டான் மஜீத்.

“சிலம்பப் போட்டி” என்றதும் நாகரத்தினத்துக்கு மனத்துக்குள் நடுக்கம் கொடுத்தது.

“தம்பி! இந்தச் சிறு காரியத்துக்கு நீயும் நானும் கோதாவில் இறங்க வேண்டியதில்லை. உன் சீடன் ஒருவனை இறக்கு. நானும் என் சீடன் ஒருவனை இறக்குகிறேன். எந்தப் பள்ளிக்கூடத்துப் பையன் தோற்கிறானோ, அந்தப் பள்ளிக்கூடம் ஜெயித்த பள்ளிக்கூடத்துக்கு அடிமை!” என்றான் நாகரத்தினம்.

“உன்னுடைய சீடனா! நாகு, நீ என்றைக்குடா உஸ்தாத் ஆனாய்? அட கல்லடிச் சண்டியனே!” என்று சீறினான் மஜீத். பகோரான் கையமர்த்தினான்!

“பகோரான்! அவனுக்காக நீ சிலம்பம் ஆடுவாய் என்று நினைத்துத்தான் நாகரத்தினம் இந்த மாதிரிப் பேசுகிறான்! தெரிந்ததா?” என்றான் மஜீத். கோபம் இன்னும் தணியவில்லை அவனுக்கு.

பகோரான் மஜீதைத் தனியாக அழைத்துப் போய்ப் பேசினான். தான் எந்தக் கட்சியிலும் சேரப் போவதில்லை என்று அப்புலிங்கத்திடம் கொடுத்திருந்த சபதத்தைக் குறிப்பிட்டுப் பேசினான் பகோரான். இதன் பேரில் ஒரு முடிவு ஏற்பட்டது. அதாவது நாகரத்தினத்தின் பிரதிநிதியாகக் குப்புசாமி கோதாவிலே இறங்குவது என்றும், மஜீத் தான் நிற்கலாம், அல்லது தன் பிரதிநிதியை நிறுத்தலாம் என்றும் முடிவாயிற்று! பாலக்கரையில் புகழ் பெற்ற வியாபாரிகள் மூவர் இந்தப் போட்டிக்கு முடிவு சொல்லும் மத்தியஸ்தர்கள் என்றும் தீர்மானம்

ஆகிற்று. இத்தனையும் ஆன பிறகுதான் அப்புலிங்கத்தின் காதுக்கு விவரம் எட்டிற்று. அவனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. டாக்டர் சுரேஷோ சொக்கிகுடிக்குப்போயிருந்தார். உஸ்தாத் மீரானோ பம்பாயிலே இருந்தார்! எனவே, அப்புலிங்கத்துக்கு ஒரே குழப்பமாக இருந்தது.

திருச்சி வீதியின் சுவரில் எல்லாம் அச்சடித்த விளம்பரத் தாள்களை ஒட்டி விட்டான் நாகரத்தினம். லால்குடி மண்ணிலே பயிராகிய பணம் எல்லாம், பாலக்கரைக் கட்டடச் சுவர்களிலே கொட்டை எழுத்துக்களில் 'போட்டாப்போட்டி' விளம்பரமாகக் கண்ணைக் குத்தியது.

"போட்டாப் போட்டி !
காட்டாச் சிலம்பம் !"

"நடன பலாட்டிய
நரவீர சிங்கங்கள்!"

"பாலக்கரைச் சவுக்கத்தில்
பலமான போட்டி !"

இந்த விளம்பரங்களைப் பார்த்துவிட்டு, மஜீதின் ஆட்களும் எதிர் விளம்பரங்கள் அச்சடித்து ஒட்டினார்கள்.

"உயிருக்கு அஞ்சான்
உஸ்தாத் சீடன் !"

"மீரான் சீடன்
மேலான பயில்வான் !"

"கல்லடி வீரனுக்குக்
காலடி சீடனு ?"

என்றெல்லாம் விளம்பரத் தாள்கள் திருச்சி நகரத்தையே ஒரு கலக்குக் கலக்கிக்கொண்டிருந்தன. மலைக்கோட்டையிலும், மணிக்கூண்டிலும், பாலக்கரை பஸாரிலும், பீமநகர்த்தெரு வீதிகளிலும், புத்தூர், தென்னூர், உறையூர்,

பொன்மலை, —எங்கே பார்த்தாலும் விளம்பரங்களும், எதிர் விளம்பரங்களும், சவால் வீச்சுக்களும், சண்டியர் பேச்சுக்களுமாக ஒரே அமர்க்களமாக இருந்தது. அப்போதுதான், உஸ்தாத் மீரான், திருச்சி ஜங்ஷனிலே வந்து இறங்கினர். சந்திரிகாவையும், சாவித்திரி அம்மாளையும் ஒரு 'டாக்ஸி'யிலே ஏற்றி டாக்டர் சுரேஷின் வீட்டுக்கு அனுப்பிவிட்டு, தான் ஒரு குதிரை வண்டியில் ஏறலாம் என்று வண்டிகள் நின்ற திசைப் பக்கம் திரும்பினர். கடகட என்று ஐந்தாறு குதிரை வண்டிகள் 'போட்டாப் போட்டி' போட்டுக் கொண்டு இவரை நோக்கி வந்தன. உஸ்தாத் மீரான் ஏறிட்டுப் பார்த்தார். ஒவ்வொரு குதிரை வண்டியின் கூண்டுக்கு மேலும் விளம்பரத் தாள் ஒட்டி இருந்தது.

"மீரான் சீடன் மேலான பயில்வான்!"

"உயிருக்கு அஞ்சான் உஸ்தாத் சீடன்!"

இதைப் பார்த்து ஒன்றுமே புரியாமல் மீரான் குதிரை வண்டியின் எதிரே ஒரே திகைப்பிலே நின்றார். அதே சமயம் டாக்ஸியில் டாக்டர் சுரேஷின் பங்களாவுக்கு வந்து சேர்ந்த சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் தீக் கங்கை மிதித்தது போலத் துணுக்குற்று நின்றார்கள். காரணம், டாக்டர் சுரேஷின் பங்களாவில் வெளித் தாழ்வாரத்திலே போட்டிருந்த நாற்காலியில் லால்குடிப் பண்ணையார் கனகசுந்தரம் உட்கார்ந்திருந்தார். அவருக்கு அருகிலே நின்று ஏதோ தீவிரமான ஒரு விஷயத்தைப் பேசிக் கொண்டிருந்தது வேறு யாருமில்லை, பண்ணையார் கனகசுந்தரத்தின் மகளும், ரவீந்திரனுடைய மனைவியுமான கல்யாணிதான்!

# 38. உயிர் விளையாட்டு

“ கொள்ளுப் போட்டா எள்ளு விளையும்—எங்க காட்டிலே
கோழி வந்து குட்டி போடும்—எங்க வீட்டிலே
கடலை போட்டா நெல்லு விளையும்—எங்க காட்டிலே
கடுவம் பூனை குட்டி பூடும்—எங்க வீட்டிலே
அவரை போட்டாத் துவரை விளையும்—எங்க காட்டிலே
ஆனை போடும் பூனைக் குட்டி—எங்க வீட்டிலே ”

மேற்கண்ட பாடலைச் சொக்கி குடியின் மந்திரக் கன்னி, மகேந்திர மோகினியான சொக்கி பாடிக் கொண்டே கோமாளிக் கூத்தை முடித்தாள். அந்தப் பாடல் டாக்டர் சுரேஷின் உள்ளத்தை விட்டு அகலவே இல்லை. உண்மையில் அவர் திருச்சிக்கு வந்த பிறகும் கூட அந்தப் பாடல் ஒலித்துக் கொண்டே யிருந்தது.

ஆமாம் ; சொக்கிகுடியிலிருந்து முந்திய நாள்தான் டாக்டர் சுரேஷ் திருச்சிக்கு வந்திருந்தார். அவருடைய ஏற்பாட்டின் பேரிலேதான் கல்யாணி அம்மாளும் கனக சுந்தரமும் லால்குடியிலிருந்து சுரேஷின் வீட்டுக்கு வந்திருந்தார்கள். ஆனாலும் சந்திரிகாவும் கல்யாணி அம்மாளும் அங்கே சந்திக்கக் கூடும் என்பதை யாரும் எதிர்பார்க்கவில்லை.

“ என்ன சந்திரிகா ! மேலே நடக்கலாமா ?” என்று கேட்டாள் சாவித்திரி அம்மாள், திகைப்பிலிருந்து விடு பட்டவளாக. சந்திரிகா இன்னும் சுவாதீனத்துக்கு வரவில்லை. அப்படியே நின்றாள்.

“ என்ன சந்திரிகா ! நானுந்தான் முதலில் திகைத்தேன். ஆனாலும் சமாளித்துக் கொள்ள வேண்டாமா ? கல்யாணி அம்மாள் என்ன பேயா பூதமா ! ஏன் இப்படி நடு நடுங்குகிறாய் ! வா உள்ளே போகலாம் !”

“ அம்மா ! அவள் பேயாகவோ பூதமாகவோ இருந் திருந்தால் பயப்படாமல் தைரியமாக இருப்பேன். ஆனால் கல்யாணி அம்மாள் உண்மையிலேயே மிகவும் நல்லவள். அதனால்தான் இத்தனை கஷ்டப்படுகிறேன் !”

"சரி சரி! புரியாமல் பேசுவது தம்பி ராமநாதனுக்குத் தான் வழக்கம். உனக்கும் அந்த வாசனை அடித்து விட்டதா! வா வா! உள்ளே போகலாம்! இதோ நம்மைப் பார்க்கிறார்கள் அவர்கள்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே ட்ரைவரைச் சாமான்களை எடுத்துக் கொண்டு உள்ளே வரும்படி கூறினாள் சாவித்திரியம்மாள்.

"இல்லை அம்மா! சாமான்கள் காரிலேயே இருக்கட்டும் டாக்ஸியும் கொஞ்ச நேரம் காத்திருக்கட்டும். நாம் உள்ளே போய் விட்டு வரலாம்!" என்று சொல்லிப் பங்களாவுக் குள்ளே நடந்தாள் சந்திரிகா.

பண்ணையார் கனகசுந்தரம் நாற்காலியை விட்டு எழுந்தார். சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் கை கூப்பினார்கள். கல்யாணி அம்மாள் அப்படியே ஸ்தம் பித்துப் போய் நின்று கொண்டிருந்தாள்.

யாரும் எதிர்பாராத விதமாக விறுவிறு என்று நடந்து சென்ற சந்திரிகா கல்யாணி அம்மாளின் காலிலே போய் விழுந்து நமஸ்காரம் பண்ணினாள். கல்யாணி அம்மாளுக்குக் கண்ணீர் வந்தது.

"அம்மா! என்னை மன்னிக்க வேண்டும். நினைத்து அறியாமல் பெரிய தவறு செய்து விட்டேன். இனிமேல் என்னால் எந்த விபரீதமும் ஏற்படாது! இது சங்கீத சாட்சியாகச் சத்தியம்!"

இப்படிச் சொல்லும் போது சந்திரிகாவினுடைய குரல் எல்லாம் நடுங்கியது. உதடுகள் படபடத்தன.

"சந்திரிகா! எழுந்திரம்மா! என்ன இது? எழுந்திரு!" என்றார் கனகசுந்தரம்.

கல்யாணி அம்மாள் அளவு மீறிய துக்கத்தினால் என்ன சொல்லுவது என்று புரியாமல் அப்படியே கண்ணீரும் விம்மலுமாகச் சுவரிலே சாய்ந்த வண்ணம் நின்றாள்.

"உட்காருங்கள் அம்மா! நிற்கிறீர்களே!" என்றார் கனகசுந்தரம் சாவித்திரி அம்மாளைப் பார்த்து.

இந்தச் சந்தர்ப்பத்தில் பங்களாவுக்கு வெளியே இன்னொரு கார் வந்து நின்றது. டாக்டர் சுரேஷ் இறங்கி வந்தார்.

" அடாடா ! பேஷ் பேஷ் ! பலே !" என்று சொல்லிய வண்ணம் சாவித்திரி அம்மாளையும் சந்திரிகாவையும் டாக்டர் சுரேஷ் உத்சாகமாக வரவேற்றுக் கொண்டே, கனகசுந்தரத்தைப் பார்த்துச் சொன்னார் : " நீங்களும் கல்யாணி அம்மாளும் புறப்படுவதற்கு இன்னும் ஒரு மணி நேரம் சாவகாசம் இருக்கிறது. அதற்குள் சாப்பிடுங்கள். மலை மேலே நடக்க வேண்டிய திருக்கும். கொஞ்சம் பலமான ஆகாரமாகக் கையில் ஒரு பார்ஸலும் எடுத்துக் கொள்ளுங்கள். கந்தப்பனோடு இங்கே வந்திருக்கிற இரண்டு பளிஞர்கள் உங்களுக்குத் துணையாக உங்களோடு வருவார்கள்."

இப்படிச் சொல்லிக் கொண்டே சந்திரிகாவைப் பார்த்துக் கூறுவார் : " சந்திரிகா ! நீ திருச்சியில் தங்கியிருப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டேன். நீங்கள் இருவரும் இங்கே புறப்பட்டு வருகிறீர்கள் என்று பம்பாயிலிருந்து ராமநாதன் கொடுத்த தந்தி ராத்திரிதான் கிடைத்தது. அதன்பேரில் காலையில் மலைக்கோட்டைக்குப் போய் எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டு வருகிறேன். அப்புலிங்கம் வீட்டில் அதே பழைய அவுட் ஹவுஸில் நீயும் சாவித்திரி அம்மாளும் சௌகரியமாக ஒரு வாரமாவது இருக்கலாம். என்ன அம்மா ! சாவித்திரி அம்மாள் ஏன் இப்படித் திகைப்போடு பார்க்கிறீர்கள்! ஒரு வாரத்துக்குமேல் தங்கவேண்டி வந்தாலும் வரலாம். எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன். என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லை. ஏதோ துப்பறியும் புலி என்று என்னை நீங்கள் சந்தேகிக்கலாம். பரவாயில்லை. நான் துப்பறிவதிலே மட்டுமில்லை, வைத்தியத்திலுங்கூட சாதாரண ஆசாமிதான். புலியில்லை !"

சாவித்திரி அம்மாளுக்கு முகம் எல்லாம் வெட்கத்தினால் சிவந்தது. டாக்டர் சுரேஷ் மேலும் பேசினார் :

" உங்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். புதிய மனிதன் என்று என்னிடம் அன்னிய மனிதர்களைப் போல்

நடந்து கொள்ளாதீர்கள். ராமநாதன் உங்களுககுத் தம்பி என்ருல், நான் உங்களுக்கு அண்ணன் என்று நினைத்துக் கொள்ள வேண்டும். தெரிந்ததா? என்ன சந்திரிகா, டாக்ஸி ஏன் வெளியே காத்திருக்கிறது?"

டாக்டர் சுரேஷ் சாமர்த்தியமாகச் சம்பவங்களை இயக்கிக் கொண்டிருந்தார்.

"டாக்ஸியை வேண்டுமானுல் அனுப்பி விடலாம். என்னுடைய காரிலேயே நீங்கள் இருவரும் அப்பு லிங்கத்தின் வீட்டுக்குப் போகலாம். எதற்கும் முதலில் நீங்கள் எல்லாரும் உள்ளே போய் ஸ்நான பானுதிகளை முடித்துக் கொண்டு—"

சந்திரிகாவின் முகத்தில் கலவரம் ஏற்பட்டது. இதற்குள் கல்யாணி அம்மாள் உள்ளே போய் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு விம்மி அழுகிற குரல் நன்ருகக் கேட்டது.

"யார் கல்யாணி அம்மாளா! என்னம்மா! உங்களுக் காகவா அவர்களை இப்பொழுது வெளியே அனுப்பு கிறேன். இல்லவே இல்லை. உங்களுடைய மனமாற்றம் எனக்குத் தெரியாதா என்ன! நன்ருகத் தெரியும். அதற்காக இப்படி ஒரு ஏற்பாட்டைச் சொல்லவில்லை. நான் சொல்வது—"

உள்ளே இருந்த கல்யாணி அம்மாள் விறு விறு என்று நடந்து வந்தாள். யார் தடுத்தும் கேளாமல் அப்படியே டாக்டருடைய பாதங்களிலே வந்து விழுந்தாள்.

"டாக்டர்! நீங்கள் எனக்கு வயதில் மூத்தவர். உங்களை நமஸ்காரம் பண்ணுவது புண்ணியந்தான். என்னைத் தடுக்காதீர்கள். நீங்கள் என்ன ஏற்பாடு செய்தாலும் சரி. என்னுடைய மஞ்சளுக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தால் அதுவே போதும். அவர் உடம்பு குணமாகி விட்டால் சரி. என்னை வையட்டும். என்னை அடிக்க வேண்டுமானுலும் அடிக்கட்டும். அவருடைய உடம்புக்கு ஒன்றுமில்லாமல் சௌகரியமாக இருக்க வேணும் டாக்டர். அது ஒன்றுதான் என்னுடைய ஆசை. எந்தக் காரியத்தை

அவர் எந்தப்படி செய்தாலும் நான் ஒன்றும் பேச மாட்டேன். எனக்குப் புத்தி வந்து விட்டது. அவருடைய உடம்பு சரியானால் போதும் டாக்டர். சத்தியமாகச் சொல்கிறேன் டாக்டர்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே கல்யாணி அம்மாள் 'ஓ' என்று ஒரே கூக்குரலாகக் கதறி அழ ஆரம்பித்து விட்டாள். உண்மையில் அவளுடைய மனத்தின் பரிசுத்த மான அன்பும், நமது நாட்டுத் தமிழ் மக்களின் குடிப் பிறப்பு தர்மமும், கபடம் இல்லாத குணமும் சேர்ந்து அந்தச் சோகத்திலே ஒலித்தன.

* * *

சந்திரிகாவும் சாவித்திரி அம்மாளும் அப்பு லிங்கத்தின் பங்களா வளவில், அந்தப் பழைய வெள்ளி வீட்டிலே தங்கியிருப்பதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து விட்டு, கல்யாணி அம்மாளையும் கனகசுந்தரத் தையும் சொக்கி குடிக்கு அனுப்பி வைத்தார் டாக்டர் சுரேஷ். இந்த ஏற்பாடுகளில் அவர் தீவிரமாக ஈடுபட்டி ருந்த போதுதான் பாலக்கரையில் சிலம்பப் போட்டிக்கான காரியங்கள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன!

நாகரத்தினத்தின் கட்சியில் குப்புசாமியும், மஜீதின் கட்சியில் மஹ்பூல் என்ற ஒரு சண்டியனும் கோதாவில் இறங்குவது என்று தீர்மானம் ஆகியிருந்தது. உஸ்தாத் மீரான் பம்பாயிலிருந்து திரும்பி வந்தவர் ஜட்காவண்டியில் வரும்போதே இந்த விவரங்களைத் தெரிந்து கொண்டு விட்டார். நிலைமை இத்தனை தீவிர கட்டத்தை அடைந்த பிறகு இனி இதைத் தடுத்து நிறுத்த வழி இல்லை என்றும், எல்லாம் அல்லாஹ்வின் ஆணை என்றும் நினைத்தார்.

குப்புசாமி பகோரான் வீட்டுக்கு வந்து அவனுடைய ஒத்தாசையை நாடினன். ஆனல் 'யார் கட்சியிலும் சேருவ தில்லை' என்ற தன் தீர்மானத்தைச் சொல்லிக் குப்பு சாமியை அனுப்பி விட்டான் பகோரான். இதன் பேரில் நாகரத்தினம் வந்தான்.

"நீ எந்தக் கட்சியிலும் சேர்ந்து சிலம்பம் ஆடுவதில்லை என்று ,தானே சபதம் செய்திருக்கிறாய். எங்கள் கட்சி ஆள் சிலம்பம் ஆடும்போது, உன்னுடைய ஜிங்கிட ஜிங்கிட ஜம் உச்சாடணத்தையாவது எங்களுக்காகப் பண்ணி எதிரியை விழத் தட்டி விடேன்!" என்றான் நாகரத்தினம்.

"தம்பீ! சிலம்பம் என்பது நேருக்கு நேர் செய்கிற போர். இதில் மந்திரங்களுக்கும் உச்சாடணங்களுக்கும் இடம் கொடுக்கக் கூடாது. நம்முடைய வித்தை முறைக்கே விரோதம் அது!"

"வித்தையாவது! முறையாவது!" என்றான் நாகரத்தினம். இதன் பேரில் நீண்ட வாக்குவாதம் நடந்தது. கடைசியில் "ஜிங்கிட ஜிங்கிட ஜம்" என்ற உச்சாடணத்தின் "உரு" ஏறிய ஒரு மையை வாங்கிக் கொண்டு பகேரானிடம் விடை பெற்றான் நாகு. ஆனால், ஒரே ஒரு நிபந்தனை. இதே மையை எதிர்க்கட்சிக்குக் கொடுக்க வேண்டி வந்தாலும் கொடுத்து விடுவதாகச் சொன்னான் பகேரான். ஆனால் அதைப் பற்றி நாகரத்தினத்துக்குக் கவலையில்லை. ஏனென்றால், மஜீதின் கட்சியில் யாருக்கும் இந்த மாதிரி மை போடுகிற ஒரு காரியத்தைப் பற்றித் தெரியாது. தெரிந்தாலும் அவர்களுக்கு நம்பிக்கை இராது.

நாகரத்தினம் அங்கிருந்து சென்ற பிறகு, என்ன ஆச்சரியம், மஹ்பூல் வந்தான், பகேரான் வீட்டுக்கு! ஆனால் மை கேட்டு வரவில்லை அவன்! உஸ்தாத் மீராணின் சீடர்களில் முக்கியமானவன் என்று கருதிப் பகேரானைப் போட்டி பார்ப்பதற்காக அழைக்கவே வந்தான் மஹ்பூல். இந்த மரியாதை பகேரானுடைய மனத்தை நெகிழச் செய்து விட்டது!

'மஹ்பூல் இவ்வளவு நல்லவனாக இருக்கும்போது எதிரிக்கு மை கொடுத்து அனுப்பினேனே,' என்ற எண்ணம் பகேரானுடைய மனத்தை அறுத்தது.

'ஏதாவது சொல்லிப் பேசி நம்மை ஏமாற்றி விடுகிறானே இந்த நாகரத்தினம்!' என்று மனத்துக்குள் வருந்திக் கொண்டே பகேரான் சொன்னான்:

“ தம்பி ! இந்தா உனக்கு ஒரு மை தருகிறேன். நீ கோதாவில் இறங்குவதற்கு முன்பு இதைப் புருவத்திலே தடவிக் கொள்ளு. மனசுக்குள்ளே ‘ஜிங்கிட ஜிங்கிட ஜம்’ என்று உச்சாடணம் செய்து கொள் !”

இப்படிச் சொல்லும்போது பகேரானுக்கு நாக்கு தழ தழத்தது. காரணம், வேறு யாருக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ பகேரானுக்கு அந்த உச்சாடணத்தில் அத்தனை நம்பிக்கை இருந்தது !

* * *

‘ போட்டாப் போட்டி’ மிக மிகக் காட்டமாக நடைபெற்றது !

பாலக்கரைச் சவுக்கத்தில் விசாலமான மைதானத்தில் தனியாக அமைக்கப்பட்டிருந்த வட்டத்தில் ஜோடிகள் இறங்கினார்கள். அப்பொழுது மாலை ஐந்து மணி. போட்டி இரவு வரை நீடிக்கலாம் என்று கருதி, முன் ஏற்பாடாகக் காஸ் லைட்டுகளெல்லாம் கொண்டு வந்து அங்கங்கே வரிசையாக வைத்திருந்தார்கள்.

கோதாவைச் சுற்றி ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாக ஒரே கூட்டம்! தீர்ப்புச் சொல்வதற்கான நீதிபதிகள் கோதாவுக்கு வெளியே கயிற்றைச் சுற்றி விளிம்பில் நாற்காலிகள் போட்டு உட்கார்ந்திருந்தார்கள். உஸ்தாத் மீரானும் அவர்கள் வரிசையில் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்திருந்தார். அவருக்கு அருகிலே இன்னும் கொஞ்சம் தள்ளி நாகரத்தினமும், மஜீதும் உட்கார்ந்திருந்தார்கள்.

இவன் மை தடவி யிருப்பது அவனுக்குத் தெரியாது. அவன் மை தடவி யிருப்பது இவனுக்குத் தெரியாது ! இரண்டு பேருமே மை தடவிய புருவத்தோடு ‘ சலாம் வரிசை ’ வாங்கினார்கள் ! வேடிக்கை என்னவென்றால், தங்கள் தங்கள் கட்சித் தலைவர்களான மஜீதினிடமும் நாரத்தினத்திடமும் சலாம் வாங்க வரும்போதே, இருவரும் தங்களையும் மீறி உஸ்தாதுக்கு முதலில் சலாம் செய்து விட்டுத்தான், தங்கள் கட்சித் தலைவர்களிடம் சலாம்

வாங்கினார்கள்! மீரானுடைய முன்னிலைக்கு அத்தனை சக்தி இருந்தது என்பதைக் கண்டு, அங்கே கூடியிருந்த ஜனங்கள் எல்லாரும் அந்தச் சலாம் வரிசையின்போது பலமாகக் கை தட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

போட்டி ஆரம்பம் ஆயிற்று. பாவலா, பம்மல், துள்ளல், பின்னலடி, டாங்வளைவு, எதிர்ப் பாய்ச்சல், வரால்வீச்சு, சுருளி வரிசை, புலிக் கோடு, பஞ்சாப் உறுமல், பிஜ்லியாட்டம் என்று இருவரும் மாறிமாறி ஆடிக் கொண்டே யிருந்தார்கள். இருவரும் களைப்பதாகக் காணோம். போட்டியின் நோக்கமோ, கம்பின் முனையில் பூசியிருக்கும் சாயத்தை எதிரியின் உடம்பிலே கொண்டு அழுத்திவிட வேண்டும் என்பதுதான். இவன் அவன் உடம்பைக் குறி பார்க்கிறான். அவன் இவன் உடம்பைக் குறிபார்க்கிறான். அதே சமயம் இருவருமே அடுத்தவன் கம்பு தன்னுடைய உடம்பில் பட்டுவிடாதவாறு தடுத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்! பெரிய ரஸம் என்னவென்றால், இரண்டு பேருமே வேகமாகப் பாயும் போதெல்லாம் மனசுக்குள் 'ஜிங்கிட ஜிங்கிட ஜம்' என்று சொல்லிக் கொண்டார்கள். தங்களுக்குப் புரியாத, விவரம் தெரியாத, பாஷையற்ற பாஷையான, அர்த்தம் இல்லாத அந்த உச்சாடணத்தில் இருவருமே நம்பிக்கை வைத்து, அந்த நம்பிக்கையிலிருந்து பிறந்த வெறியில் தம்மை மறந்து விளையாடினார்கள்.

இருட்ட ஆரம்பித்து விட்டது. காஸ் விளக்குகளை ஏற்றி வைத்து விட்டார்கள். ஆனாலும் இருவரும் அயரவில்லை. ஜனங்களோ ஒரே உத்சாகமாகக் கைதட்டுவதும், ஆரவாரம் செய்வதுமாகச் சண்டியர்களின் அந்த உத்சாகத்தை மேலே மேலே அதிகப் படுத்திக் கொண்டே யிருந்தார்கள்.

நிலைமை முறுக ஆரம்பித்தது. சாயம் பூசிய குச்சி முனையை எதிரியின் மேலே பதிப்பது என்ற நோக்கம் மாற ஆரம்பித்தது. இருவருக்குமே ரோசம் ஏற்படவே எதிரியை விடத் தான் வல்லவன் என்பதை நிரூபித்துவிட வேண்டும் என்ற ஆத்திரம், வெறியாகத் தலைவிரித்

தாடியது. மனத்துக்குள்ளே விபரீதமான புதிய எண்ணங்கள் இருவரிடமுமே உண்டாயின.

நமது நாட்டுச் சண்டை முறையில் நன்ருகத் தேர்ந்த சண்டியர்கள், 'வர்மஸ்தானம்' என்று, இந்த மனித உடற் கூற்றை ஆராய்ந்து கண்டு பிடித்திருக்கிருர்கள். இந்த மனித சரீரத்தில் சில நுட்பமான நரம்புப் பொட்டுக்கள் இருக்கின்றன. முக்கியமாக விலாவிலும், நெஞ்சுக்குப் பக்கத்திலும், நெற்றியிலுமாக ஏழெட்டு ஸ்தானங்கள் இருக்கின்றன என்று கண்டு பிடித்திருக்கிருர்கள். இந்த இடங்களில் லேசாக ஆள் காட்டி விரலைக் கொண்டு மெதுவாக ஒரு சுண்டுச் சுண்டினுலும் போதும். அப்படியே துடி துடித்துக் கொண்டு சுருண்டு விழுந்துவிட வேண்டியதுதான்! எக்ஸ்ரே முதலிய சாதனங்கள் ஏதும் இன்றியே உடம்புக்குள்ளே ஊடுருவி ஆராய்ந்து கண்டு பிடித்துள்ள இப்படிப் பட்ட 'வர்ம'ங்களை, எத்தனையோ நூற்ருண்டுகளாக நமது தமிழ் நாட்டுக் குரு சிஷ்ய பரம்பரை பாதுகாத்து வருகிறது. இந்த இரகசியத்தைப் "போட்டாப் போட்டி"ப் பயில்வான்கள் இருவரும் இன்று கையாண்டு விடுவது என்று முடிவுகட்டி விட்டார்கள் மனத்துக்குள்ளே!

காஸ் லைட்டின் வெளிச்சத்தில் ஜோடிகள் பாய்ந்தும், துள்ளியும், பம்மியும், சாடியும் ஒரு முறையிலே கிரமப்படி ஆடிக் கொண்டிருந்தவர்கள், இப்பொழுது விபரீத நோக்கத்திலே கம்புகளைச் சுழற்றுகிருர்கள் என்பதை உஸ்தாத் மீரான் கவனித்தார். அவருக்கு ஆச்சரியம் தந்த இன்னெரு விஷயம், இருவருமே வாய்க்குள் எதையோ உச்சாடணம் செய்து கொண்டார்கள் என்பது!

விளையாட்டின் ஆரம்பத்தில் பிடித்திருந்த கம்புகள் போட்டி மும்முரத்தில் நொருங்கி விட்டன. மறுகணம் புதுக் கம்புகள் கொடுக்கப்பட்டன. மறுகணம் ஆட்டமும் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தது. மீண்டும் அந்த ஆட்டத்திலே விபரீத எண்ணமும், விஷ நோக்கமும், வினேத உச்சாடணமும் தொடர்ந்தன!

"என் உயிர்! அல்லது உன் உயிர்!" என்று கதறினான் குப்புசாமி.

"உன் உயிர்! அல்லது என் உயிர்!" என்று பதிலுக்குக் கதறினான் மஹ்பூல்.

இருவருடைய முகங்களிலும் பேய்வெறி தாண்டவமாடியது. 'கம்பைச் சுழற்றி வர்மத்திலே ஒரு குத்துக் குத்திவிட வேண்டும்!' என்பதே இருவருடைய நோக்கமும்!

இதைப் புரிந்து கொண்ட உஸ்தாத் மீரான் நாகரத்தினத்தைப் பார்த்தார். அவனோ முகத்தைத் திருப்பிக் கொண்டான். மஹீதைப் பார்த்தார். அவன் சோகமே உருவமாக இவரைப் பார்த்தான்!

"ஜிங்கிட ஜிங்கிட ஜம்" என்று உரக்கச் சொல்லிக் கொண்டே கம்பை ஓங்கினான் குப்புசாமி. அடுத்த கணம் 'ஜிங்கிட ஜிங்கிட ஜம்' என்று இன்னும் உரக்கச் சொல்லிக் கொண்டே தன்னுடைய கைக் கம்பை ஓங்கினான் மஹ்பூல்! அங்கே கூடியிருந்த ஜனங்கள் இதைப் பார்த்ததும் வானம் அதிரும்படியாகக் கை தட்டினார்கள். கோதாவின் வளைவுக்கு அருகிலே இருந்த நாகரத்தினம் "பலே குப்புசாமி!" என்று பலமாகக் கூப்பாடு போட்டான்.

"ஜிங்கிட ஜிங்கிட ஜம்" என்று இரண்டு சண்டியர்களும் ஏக காலத்தில் கதறிக் கொண்டு ஒருவர் மேல் ஒருவர் கைக் கம்போடு சீறிப் பாய்ந்தார்கள். அடுத்த கணம் "அரே அல்லாஹ்!" என்று ஒரு கூப்பாடு. என்ன ஆயிற்று?

"அரே அல்லாஹ்" என்று கதறியவர் வேறு யாருமில்லை. உஸ்தாத் மீரான் தான்! அல்லாஹுத்தாலாவின் திருநாமத்தை சொல்லிக்கொண்டே கோதாவுக்குள்ளே ஆற்றொணாத வேகத்தோடு பாய்ந்தார் உஸ்தாத் மீரான்.

இதே சமயத்தில் இந்தச் சிலம்பப் போட்டிகளில் சற்றும் சம்பந்தப் படாதவராய் அப்புலிங்கத்தின் வீட்டுக்குள் டாக்டர் சுரேஷ் நுழைந்து கொண்டிருந்தார்.

அவர் யோசித்தார் :

'தண்ணீரின் சக்தி அற்புதமானது. இரண்டு குழாய்களுக்கு ஊடே துவாரம் பண்ணி அதற்குள் இன்னொரு இணைப்புக் குழாயை வைத்து இரண்டு குழாயையும் சேர்த்து விடுவோம். ஒரு குழாயில் தண்ணீர் விட்டால் இணைப்புக் குழாய் வழியாக அது அடுத்த குழாய்க்கும் போய்ச் சேரும். இரண்டு குழாயிலும் ஒரே அளவு ஆழந்தான் உண்டாகும். அதிகத் தண்ணீர் ஊற்றிய குழாய், அந்த அதிகப்படியான தண்ணீரில் பாதியை அடுத்த குழாய்க்குக் கொடுத்து விட்டு, தானும் அதைப் போல அதே அளவு தண்ணீ ரோடுதான் நிற்கும். இரண்டு இதயங்களுக்குள் பாசம் என்ற இணைப்பு ஏற்பட்டு விட்டால், மனித மனமும் இதே போலத்தான் இயங்குகிறது. ஒருவருக்கு ஏற்படுகிற சுக துக்கம் அடுத்தவருக்கும் பங்கு போட்டுக் கொண்டு பாய்ந்து செல்கிறது. இந்த அதிசயத்தைப் பார்த்து என்னால் வியப்படையாமல் இருக்க முடிகிறதில்லை. என்றாலும், அதிசயப்பட்டுக் கொண்டே பேசாமல் இருப்பதில் அர்த்தமில்லை. ரவீந்திரனுடைய வாழ்க்கை யின் சிக்கல்கள் இப்படியே பின்னிக் கொண்டு போனால் பெருந்தவறாக முடியும். இதற்கு ஒரு வழி காண வேண்டியது மிக மிக அவசியம். இல்லையென்றால் பூங்காக்களிலே உள்ள நீரூற்றுப் போல பல இதயங்களி லிருந்து ஏக காலத்தில் உணர்ச்சிகள் சீறி விழும். அதோடு சந்திரிகாவின் வரலாற்றையும் இப்பொழுதே தெளிவுபடுத்தி விட்டால் என்ன ?'

இவ்வாறு எண்ணியவராக நெற்றியைப் பிசைந்து கொண்டார். ரவீந்திரனுடைய வாழ்க்கையின் எதிர்காலம், கல்யாணி அம்மாளின் துயரம், சந்திரிகாவின் வாழ்க்கை இரகசியம், அவளுடைய வாழ்க்கையை இனி அமைக்க

வேண்டிய திட்டம்—இப்படிச் சுழன்று கொண்டிருந்தது டாக்டரின் மனம்.

"முக்கியமான ஒரு முடிவுக்கு வருவதற்காகவே இப்பொழுது இங்கே வந்திருக்கிறேனம்மா, இப்படி உட்காருங்கள்!" என்று சந்திரிகாவையும் சாவித்திரியம்மாளையும் பார்த்துச் சொல்லிய வண்ணம், நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார், டாக்டர் சுரேஷ்.

## 39. மறைந்த மகள்

சிலம்பம் பார்த்துக்கொண்டிருந்த மக்கள் எல்லாரும் அப்படியே திகைத்துப் போனார்கள். கோதாவுக்குள் பாய்ந்து சென்ற உஸ்தாத் மீரான், மூடி விழிக்கும் நேரத்தில் அத்தனை பெரிய ஒரு திகைப்பான காரியத்தைச் செய்து விட்டார்.

"உன் உயிர், அல்லது என் உயிர்!" என்று இரண்டு சண்டியர்களும் ஒருவரை ஒருவர் உயிரை வாங்குவது என்ற நோக்கத்திலே, கைக் கம்பைப் பயங்கரமாகச் சுழற்றியதைப் பார்த்ததும் உஸ்தாத் மீரான் மின்னலைப் போல் பாய்ந்தார். அப்படியே இரண்டு வாலிபர்களுடைய வலது கையையும் தமது இரண்டு கைகளாலும் லாகவமாகப் பிடித்து இறுக்கிக் கொண்டார். 'இரும்புப் பிடி' என்றும் 'உடும்புப் பிடி'என்றும் சொல்வார்களே, அப்படியிருந்தது உஸ்தாதின் பிடி. சண்டியர்களின் கையிலிருந்து கம்பு கீழே விழுந்தது. மறுகணம் அளவுகடந்த பிரியத்தோடு உஸ்தாத் சொன்னார்: "என் அருமைக் கண்மணிகளா! என்னடா செய்வதற்கு முனைந்து விட்டீர்கள்! அரே அல்லாஹ்! என்னால் இதை எப்படிடா பார்த்துக் கொண்டிருக்க முடியும்! நீங்கள் இரண்டு பேரும் நான் வளர்த்து விட்ட புலிக் குட்டிகளடா! நான் பெற்ற பிள்ளைகளடா நீங்கள்! உங்களுக்குள்ளே இப்படி ஒரு உயிர் விளையாட்டா! என் நெஞ்சு பதறுகிறதடா!"

உஸ்தாதின் குரலில், தன்னை மீறிய அன்பினால் ஒரு நடுக்கம் இருந்தது. போட்டாப் போட்டியிலே நின்ற சண்டியர்கள் இருவருக்கும், இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மனம் நெகிழ்ந்து போய்க் கண்ணீர் வந்து விட்டது! போட்டியின் முடிவை அறிவிப்பதற்கான நீதிபதிகள் கோதாவுக்குள்ளே வந்தார்கள். மஜீதும் நாகரத்தினமும் அவர்களைப் பின் தொடர்ந்து வந்தார்கள். கூட்டத்தில் பரபரப்பு உண்டாயிற்று. உடனே உஸ்தாத் அந்தப் பெரிய ஜனத் திரளை நோக்கி சலாம் செய்தவாறு பேச ஆரம்பித்தார் :

"மகாஜனங்களே! சற்று அமைதியாக இருங்கள். உயிரோடு விளையாடுகிற இந்தப் போட்டியில் எத்தகைய விபரீதம் நேர இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளாமல் நீங்கள் கை தட்டுகிறீர்கள். இளம் கன்று பயம் அறியாது என்பார்கள். அது போல இந்த இரண்டு வாலிபர்களும் இப்பொழுது ஒருவரை ஒருவர் உயிர்ப் பலி வாங்குவதற்காக நிற்கிறார்கள். ஆனால் என் மனம் கிடந்து பதறுகிறது. இதற்காகவா நான் சிலம்ப வித்தை சொல்லிக் கொடுத்தேன். என்னுடைய சிஷ்ய பரம்பரைகளே ஒன்றுக்கொன்று அடித்துக் கொண்டு சாக வேண்டும் என்று நான் இவர்களைத் தயார் பண்ணினேன். வேண்டாம்."

இப்படிச் சொல்லும் போது உஸ்தாத் மீரான் ஜனக் கூட்டம் முழுவதையும் தமது விசாலமான கண்களால் சுற்று முற்றும் பார்த்தார். அந்த ஜனங்களுடைய முகத்தில் உஸ்தாதிடம் அவர்களுக்கிருந்த மெய்யான பக்தி அப்படியே பிரதிபலித்தது. மறுகணம் மீரான் கோதாவிலே வந்து நின்ற மஜீதையும், நாகரத்தினத்தையும் பார்த்துச் சொல்லுவார் :—

"நாகரத்தினம்! மஜீத்! இந்தப் போட்டி உங்களுக்குள் வேண்டாம். உங்கள் இரண்டு பேருடைய சிலம்பப் பள்ளிக்கூடங்களுமே என்னுடைய பள்ளிக்கூடந்தான்! நீங்களும் உங்களுடைய சீடர்களும் — எல்லாரும் என்னுடைய பிள்ளைகள் மாதிரி. பெற்ற தகப்பனுக்குக் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொடுக்காதீர்கள். அல்லாஹ் உங்களைத் தண்டிப்பான். வேண்டாம். இனிமேல் இந்த நிமிஷத்தி

லிருந்து நீங்கள் எல்லாரும் ஒரே பள்ளிக்கூடம். நீங்கள் எல்லாருமே சம ஜோடிகள்!"

அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான சிலம்ப ரசிகர்களும் ஏக காலத்தில் பலமாகக் கரகோஷம் செய்து ஆரவாரித்தார்கள். அந்தக் காட்சியிலே சண்டியர்களின் மனமும்கூட உருக ஆரம்பித்தது.

"மஜீத் இங்கே வா! நாகு இங்கே வா! மஜீத் ஒரு விதத்தில் என்னைக் கோபப்படுத்தினன். அதற்கு மன்னிப்பாக அவனுக்கு என் மகளைத் தந்தேன். நாகு, நீ ஒரு விதத்தில் என்னைக் கோபப்படுத்தினுய். உனக்கு மன்னிப்பாக என்னுடைய சிலம்பப் பள்ளிக்கூடத்தையே இப்பொழுது உனக்குத் தருகிறேன். இனிமேல் உங்களுக்குள் எந்தவிதமான பகையும்வேண்டாம். நீங்கள் அடிபிடியில் இறங்குவதைப் பார்த்துக் கொண்டிருக்க என்னால் முடியவில்லை. வயது காலத்தில் என் மனம் பதறுகிறது. என் அருமைக் குழந்தைகளே, ஒன்று சேருங்கள்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே மஜீதின் கையைப் பிடித்து நாகரத்தினத்தின் கையோடு சேர்த்து வைத்து ஆசீர்வாதம் பண்ணினர் உஸ்தாத் மீரான்.

"மீரானுக்கு ஜே!" என்று கூட்டத்திலிருந்து ஒரு கம்பீரமான குரல் எழுந்தது. அது வேறு யாருமில்லை. பகோரான்தான். மறு விநாடி பகோரானுடைய குரலைத் தொடர்ந்து ஆயிரம் ஆயிரம் குரல்கள் "ஜே! ஜே!" என்று ஆரவாரம் செய்தன.

குழப்பம் ஒரு வழியாக ஓய்ந்தது. எத்தனையோ பெரிய சிக்கலிலே பின்னிக் கொண்டிருந்த ஒரு சண்டை குரு பக்தியினுல் ஆட்கொள்ளப்பட்டு அமைதியிலே முடிந்தது. அன்று இரவு வீட்டுக்குச் செல்லும்போது உஸ்தாத் மீரான் பகோரானிடம் கீழ்க்கண்டவாறு சொன்னர்:

"தம்பீ! இன்றிலிருந்து உன்னுடைய ஜிங்கிட ஜிங்கிட வியவகாரத்தை ஒழித்துக் கட்டிவிட வேண்டும். தெரிந்ததா! உயிருக்கு உலை வைக்கிற உச்சாடணம் அது. உஸ்தாதினுடைய சீடன் ஒருவனுக்கு இந்தக் கேலிக்

கூத்தெல்லாம் வேண்டாம். கையில் திராணி இல்லாதவனுடைய பயங்கொள்ளி வேலை அது. சுத்த வீரனுக்கு அது சரிப்படாது. புரிந்ததா? பாவம் அந்த ஒட் அவுஸின் பையனைக் கொண்டு வந்து உன் வீட்டிலே வைத்து, அந்த வாயில்லாத அப்பிராணிப் பயலை மயக்கம் போட்டு விழச் செய்வதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். இன்றோடு அந்த வேலைகளையெல்லாம் கட்டி ஒதுக்கி வைத்து விடு. பாலக்கரைக்கு ஒரே ஒரு சிலம்பப் பள்ளிக்கூடமே போதும். அதில் மஜீத், நாகரத்தினம், நீ, குப்புசாமி, மஹ்பூல் எல்லாரும் ஒரே சம ஜோடியான சண்டியர்கள். எதிர்காலத்தில் நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு பெரிய உஸ்தாதாக வரவேண்டியவர்கள், தெரிந்ததா? அல்லாஹுத்தாலாவின் திருவருள் உங்களுக்கு என்றென்றும் துணையாக நிற்கும்!"

* * *

சிலம்பக் கூடத்தில் இப்படி எதிர்பாராத வகையில் சம்பவங்கள் ஏகோபித்துச் சென்ற தருணத்திலே, மலைக் கோட்டையில் டாக்டர் சுரேஷ், சந்திரிகாவுக்கும் சாவித்திரி அம்மாளுக்கும் கீழ்க்கண்ட வரலாற்றைச் சொல்லிக் கொண்டிருந்தார்:

"தாமிரவருணி நதி ஓடிப் பாய்ந்து வளம் கொழிக்கச் செய்கிற தெற்குப் பிரதேசத்திலே, அம்பா சமுத்திரம் என்ற ஊரைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கக் கூடும். புகழ் பெற்ற அறிஞர் வ. வே. சு. ஐயரும் அவருடைய அருமை மகளும் தண்ணீரில் அகப்பட்டு உயிர் துறந்தார்களே, அந்த ஆழமான கசமும், கல்யாண தீர்த்தமும், பாபநாசமும் இந்த அம்பா சமுத்திரத்துக்கு அருகிலே தான் இருக்கின்றன. இப்பொழுது ரவீந்திரன் சிகிச்சை பெற்று வருகிற சொக்கிகுடி என்னும் பளிஞர் குடியிருப்பு இந்தப் பாபநாசத்து மலைகளின் மேலே தான் இருக்கிறது. இத்தனையும் எதற்குச் சொல்லுகிறேன் என்றால், தம்முடைய அருமைக் குழந்தையைத் தேடித் தேடிப் பால் வண்ணர் என்ற அந்த உத்தமர் இத்தனை இடங்களிலும் கதறிக் கதறி அழுதார். "அம்மா! கண்மணி!

குழந்தே !'' என்று அவர் கூப்பிட்டு அலைந்தபோது பாபநாசத்துக் காடுகளும், மலைகளும், அருவிகளும், நீர்ச் சுனைகளும்கூட "அம்மா! கண்மணி ! குழந்தே!'' என்று பரிதாபமாக ஓலமிட்டு எதிரொலி செய்தன ! அது ஒரு துக்ககரமான சம்பவம் !

அந்தக் காலத்தில் சவுக்கடிப் பால்வண்ணநாதர் என்றால் திருநெல்வேலி ஜில்லாவே நடுநடுங்கும். அவருடைய கைச் சவுக்குக்குப் பெரிய பெரிய போக்கிரிகளும், திருடர்களும், கொலையாளிகளும் கூட உடல் பதறுவார்கள். நியாயத்தையும், தர்மத்தையும் அத்தனை ஆற்றலோடு தமது கைச் சவுக்கிலே வைத்துக் கையாண்டார் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் பால்வண்ணநாதர்.

இந்த உலகத்தில் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் பாடுபடுபவர்கள் பணம் சேர்ப்பதில்லை. அவர்களுடைய பிற்கால வாழ்க்கை எளிமையாகவும், சில சமயம் வறுமையாகவும் கூட முடிவதுண்டு. இப்படிப்பட்ட தர்ம வாழ்க்கையாகத்தான் இருந்தது, பால்வண்ணநாதரின் பிற்கால வாழ்வும்.

உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெறுவதற்கு முன்னலேயே அவருடைய மனைவி காலமாகி விட்டாள். நெடுநாளாகக் குழந்தை யில்லாமல் இருந்து, நீண்ட காலத்துக்குப் பிறகு ஏற்பட்ட பிரசவத்தில் அந்த அம்மாள் ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு அதிலேயே உயிர் நீத்தாள். பால்வண்ணருக்கு உலகமே சூன்யமாகி விட்டது. அந்தப் பெண் குழந்தையை வளர்த்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டிய பெரும் பொறுப்பு, இதற்குமுன் பார்த்த அந்தக் கஷ்டமான ஸர்க்கிள் உத்தியோகத்தை விடப் பாரமான பொறுப்பாகப் பட்டது. அவதிக்கு முன்பே ஓய்வு வாங்கிக் கொண்டு அம்பாசமுத்திரத்தில் ஒரு சிறு வீடு விலைக்கு வாங்கிக் குடியேறினர்.

பந்துக்களோடு அதிகத் தொடர்பு இல்லாதவர் பால்வண்ணர். இலஞ்சி என்ற அழகான கிராமத்தில் அவருடைய மனைவியின் சகோதரர் ஒருவர் இருந்தார். அவர் ஒருவரைத் தவிர பால்வண்ணருக்கு உற்றார் உறவினர்

என்று சொல்லக்கூடிய தொந்தம் வேறு யாருடனும் கிடையாது.

தனியாக ஒரு குழந்தையை வளர்த்து வரும் தகப்பனுருக்கு எத்தனையோ கஷ்டம் உண்டு. அதிலும் ஒரு பெண் குழந்தையைப் பாதுகாத்து வளர்ப்பது எத்தனையோ பெரிய பொறுப்பு. இதையெல்லாம் உத்தேசித்துப் பால்வண்ணர் ஒரு வயதான கிழவியை சமையலுக்கு அமர்த்தி, அவளுடைய சகாயத்தோடு குழந்தையை வளர்த்து வந்தார். எப்பொழுதாவது இலஞ்சிக்குப் போய் வருவது உண்டு.

இப்படியிருந்தபோதுதான், இலஞ்சியில் பால்வண்ணரின் மைத்துனருடைய மகளுக்கு ஒரு நல்ல வரன் பார்க்கும் பொறுப்பு வந்தது. அப்போது அம்பாசமுத்திரத்தில் ஒரு கௌரவமான உத்தியோகம் பார்த்து வந்த வாலிபன் ஒருவனைப் பால்வண்ணருக்கு மிகவும் பிடித்திருந்தது. தம்முடைய மனைவியின் சகோதரருக்கு மருமகனாக வருவதற்கு வேண்டிய எல்லாத் தகுதியும் அந்த இளைஞரிடம் இருப்பதாகப் பால்வண்ணருக்குப் பட்டது. எனவே மிகச் சிரத்தையுடன் அவரே சம்பந்தம் பேசி அந்தக் கல்யாணத்தை முடிவு செய்தார்.

அப்பொழுது பால்வண்ணரின் பெண் குழந்தைக்கு நாலு வயது. செக்கச் செவேலென்று குழந்தை கிளி மாதிரி இருக்கும். தலையை வாரிப் பின்னி முடித்து, கூந்தலில் ராக்கொடியும் ஜடை வில்லையும் வைத்துப் பின்னலிலே குஞ்சமும் முடிந்திருக்கும். பால்வண்ணரின் நியாயமான சம்பாத்தியம் முழுவதையும் அந்தப் பெண் குழந்தை தன் தலையிலே ஆஸ்தியாகச் சூடிக் கொண்டு வளைய வரும். ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் வேலை பார்த்துப் பழகியதால் அவருக்குத் திருட்டுப் பயம் கிடையாது. மெத்தனமாகவே இருந்து விட்டார். அதனால் வந்தது வினை!

இலஞ்சியில் நடைபெற்ற திருமணத்துக்கு மாப்பிள்ளை அழைப்பின் போது, பால்வண்ணரும் அவருடைய அருமைக் குழந்தையும் அம்பாசமுத்திரத்திலிருந்து உடன்

சென்றார்கள். அவ்வளவுதான். பிறகு அந்த இருவருமே அங்கு திரும்பி வரவே இல்லை.

ஆமாம்; கல்யாண வீட்டில் தாலி கட்டும் சடங்கு முடிந்ததும் சாப்பாடு ஆகி அதன் பிறகு நலங்கு வைத்தார்கள். அப்பொழுதெல்லாம் புதுப் பெண்ணோடு அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது அந்தக் குழந்தை. ஆனால் அன்று இரவு பட்டணப் பிரவேசத்திற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னால், காஸ்லைட்டைச் சுற்றி நின்று குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைத் திடீரென்று காணவில்லை. பட்டணப் பிரவேசச் சந்தடியில் பெண்கள் கூட்டத்தில் எங்காவது இருக்கும் என்று முதலில் நினைத்தார்கள். ஆனால் கொஞ்ச நேரத்துக்கு எல்லாம் குழந்தையைக் காணோம் என்று தெரிந்தது.

பால்வண்ணர் புழுவாகத் துடித்தார். அழுதார். கதறினார். அங்கலாய்த்தார். தலையிலே வைத்திருந்த நகைகளுக்கு ஆசைப்பட்டு யாரோ தூக்கிப் போயிருக்க வேண்டும் என்று பேசினார்கள். இலஞ்சி முழுதும் தேடினார்கள். இரவெல்லாம் அலைந்தார்கள். கல்யாண வீடு ஏதோ நடவாதது நடந்த துன்ப வீடாக மாறியது.

இலஞ்சி ஊரைச் சுற்றியுள்ள கிணறுகள், குளங்கள், காடுகள், ஆறு—எங்கும் சல்லடை போட்டு அரித்தார்கள். "அம்மா! கண்மணி! குழந்தே!" என்று தேடித் தேடிக் கதறினார் பால்வண்ணர்.

மறுநாட் காலை பால்வண்ணரையும் அங்கிருந்து காணோம். குற்றாலம், பாபநாசம், வ. வே. சு. ஐயரையும் அவருடைய அருமை மகளையும் உட்கொண்டு விட்ட அந்த ஆழமான கசம், மலைக் காடு, எங்கெல்லாமோ தன் குழந்தையைக் கூப்பிட்டுக் கொண்டு ஒரு பைத்தியக் காரரைப் போலப் பால்வண்ணநாதர் அலைந்தார். அலைந்து கொண்டே யிருந்தார்! அதன் பிறகு நீண்ட நாட்களாக அவரைக் காணோம். ஆரூட வல்லார்களிடம் போய்க் கேட்டார். சோதிடம் பார்க்கிறவர்கள், குறிகாரர்கள், எதிர்காலத்தைச் சொல்லும் மலைக் குறத்திகள், அகவல் மகளிர்கள், பஞ்சாங்கக்காரர்கள், ரேகை சாஸ்

திரம் பார்க்கிறவர் — இப்படி எங்கெங்கோ போய்த் தேடினார் பால்வண்ணநாதர். மனிதர்கள் எங்காவது கூட்டமாக நின்றால், பண்டாரம் பரதேசிகள் எங்காவது தொகுதியாகச் சேர்ந்து நின்றால், அங்கெல்லாம் துப்பறியும் நிபுணரைப் போலக் கூர்மையான கண்களோடு தேடித் தேடிப் பார்ப்பார். தாம் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருந்த காலத்தில், குற்றம் செய்தவர்களையும், திருட்டுச் செய்து தலைதப்பி வாழும் பயங்கரச் சதிகாரர்களையும், தலைமறைவாக வசிக்கும் மோசக்காரர்களையும் தேடிப் பிடிப்பதற்கு எத்தனை உபாயங்களைக் கையாளுவாரோ, அத்தனையும் கையாண்டு பார்த்தார் அவர். எதிலும் பயன் கிடைக்கவில்லை. மறைந்த மகளைப் பற்றிய எவ்விதத் தகவலும், தடையமும் அவருக்குக் கிட்டவில்லை. கிளிப்போலப் பாதுகாத்து அன்போடு வளர்த்த தமது மகளைப் பறி கொடுத்து விட்டு, அவர் பட்ட பாட்டை இப்படி அப்படி என்று சொல்ல முடியாது. அந்த ஏக்கம் அவருடைய உள்ளத்தையும் உடலையும் உலுப்பி விட்டது. கடைசியில் அவர் தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்று அநேகர் சொன்னார்கள். சிலர் அவர் தேசாந்தரம் சென்று விட்டார் என்று பேசிக் கொண்டார்கள். வேறு யாரோ ஒருவர், பால்வண்ணர் காசியிலே ஒரு மடத்தில் இருப்பதாகச் சொன்னார். சமீப காலம் வரை எனக்கும் அது விஷயமாகச் சொல்லொணாத வேதனையும் ஏக்கமுமாக இருந்தது. உண்மையில் அந்தக் குழந்தை அப்படிக் காணாமற் போனதற்கு நானேதான் காரணம் என்ற எண்ணம், என் உள்ளத்தை வாள் கொண்டு அறுத்து வந்தது. ஒரு நல்ல மனிதரின் வாழ்க்கையை நானே பாழ்படுத்தி விட்டது போலவும், ஒரு பச்சிளம் குழந்தையின் மறைவுக்கு நானே காரணமாக அமைந்தேன் எனவும், என் உள் மனத்தில் அளவு கடந்த துன்ப உணர்ச்சி என்னைச் சுட்டெரித்துக் கொண்டிருந்தது. பால்வண்ணரைப் பற்றிய விவரங்கள் எனக்குத் தெரியாமல் போய், அந்தக் குழந்தையின் வரலாறும் எனக்குக் கிட்டாமல் போயிருந்தால், நானும் சீக்கிரமே எனது தொழிலிலிருந்து ஓய்வுபெற்று நானும்ஒரு தேசாந்திரியாகத்தான் போயிருப்பேன். அதிலிருந்து என்னைக் காப்பாற்றிய பெருமை

ரவீந்திரனுக்கும் இந்தச் சந்திரிகாவுக்கும்தான் உண்டு. உண்மையில் என் வாழ்வின் இத்தகைய கடுமையான வேதனையிலிருந்து என்னைக் காப்பாற்றிய இந்த இரு வருக்கும், என் சக்தியினால் முடிந்த மட்டும் என் கடமை யைப் புரிந்து, என்னுடைய சகாயத்தைப் பூர்த்தி செய்து வைத்தால் ஒழிய எனக்கு நிம்மதி யிராது. அதனால்தான் நான் இத்தனை கஷ்டப்படுகிறேன் அம்மா. நீங்கள் பம்பாயிலிருந்து இங்கு வந்து சேர்ந்ததில், மற்ற யாரையும் விட அதிகச் சந்தோஷப்படுகிறவன் நான்தான்! இது உண்மையான வார்த்தை!''

டாக்டர் சுரேஷ் இப்படிச் சொன்ன போது அவ ருடைய கலங்காத விழிகளும் கூடக் கலங்கி யிருந்தன. அவருடைய குரலில் உணர்ச்சி பெருகி நின்றது.

இந்த வரலாறு முழுவதையும் கேட்டுக் கொண்டே வந்த சந்திரிகாவுக்குக் கண்ணீர் பொல பொல என்று உதிர்ந்து கொண்டிருந்தது. சாவித்திரி அம்மாள் திக்பிரமை பிடித்தவளாக அப்படியே அசைவற்று உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மனசில் இந்தச் சம்பவங்களைக் கேட்டதனால் ஏற்பட்ட உருக்கம் ஒரு பக்கமும், சந்திரிகாவின் வாழ்க்கையைத் தெரிந்து கொண்டதினால் உண்டான நிம்மதி ஒரு பக்கமும் ஒன்றை யொன்று இணைத்துக் கொண்டு நின்றன. அவள் கேட்டாள்:

" டாக்டர்! எனக்கு ஒன்றுமே பேச ஓடவில்லை. நீங்கள் சொன்ன விவரங்களைக் கேட்டதும் சந்திரிகாவின் தந்தை எங்கோ இருக்கிறார் என்ற விவரம் தெரிந்து மனத்தில் நிம்மதி உண்டாகிறது. ஆனால்—''

" சாவித்திரி அம்மாள்! உங்களுடைய மனநிலை எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனாலும் இப்பொழுது உங்களுக்கு இந்த விவரம் மட்டும் போதும். சந்திரிகாவின் தகப்பனார் சௌக்கியமாய் இருக்கிறார். அவரைச் சந்தித்த பிறகுதான் எனக்குமே மன நிம்மதி ஏற்பட்டது. இல்லை யென்றால் சந்திரிகாவைச் சந்தித்தபின்பும் அவரைச் சந்திக் காமலிருந்தால் என் மனம் என்ன பாடு பட்டிருக்குமோ எனக்கு இப்பொழுது சொல்லத் தெரியவில்லை.''

டாக்டர் சுரேஷ் இப்படிச் சொல்லி நிறுத்தியதும், சந்திரிகா விம்மி விம்மி அழுதாள். சாவித்திரி அம்மாளுக்கு ஒரே திகைப்பாகப் போய் விட்டது. எழுந்து நிற்க முயற்சித்தாள். டாக்டர் அவளைத் தடுத்தார்.

"அம்மா! மனத்தின் இயல்பு விசித்திரமானது. சந்திரிகாவின் அழுகையைத் தடுக்காதீர்கள். அந்த உள்ளத்தின் விம்மலை நிறுத்தாதீர்கள். எத்தனையோ பல ஆண்டுகளாக, எத்தனையோ பல பகலும் இரவும் உள்ளத்துக்குள்ளே அடைபட்டுக் கிடந்து திணறிய உணர்ச்சிகள் அவை. மனத்துக்குள்ளே புகைந்து கொண்டிருந்த துக்கம் எல்லாம் இப்பொழுது நெருப்பாக எரிந்து தணியும். இதுதான் உள்ளத்தின் தன்மை. அதற்குப் போக்குக் கொடுங்கள்!"

இவ்வாறு டாக்டர் சொல்லி விட்டுக் கை சமிக்ஞையினால் சந்திரிகாவுக்குக் குடிக்கத் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கும்படி சொன்னார்.

விரைவாக உள்ளே போய் ஒரு டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து, சந்திரிகாவின் எதிரே வைத்துக் கொண்டே சாவித்திரி அம்மாள் கேட்டாள்: "அது சரி டாக்டர்! சந்திரிகா காணாமல் போனதற்கும் உங்களுடைய துயரத்துக்கும என்ன சம்பந்தம? நீங்கள்தான் அதற்குப் பொறுப்பாளி என்று ஏன் வருத்தப்பட வேண்டும்?"

சாவித்திரி அம்மாளின் இந்தக் கேள்விக்கு உடனே பதில் சொல்லவில்லை டாக்டர். தொண்டையை இருமிக் கொண்டு ஒரு புன்முறுவல் செய்தார்.

# 40. வழி பிறந்தது

சென்ற மாதம் வெளி வந்த 'ரீடர்ஸ் டைஜெஸ்ட்' பத்திரிகையில் 'ஸர்ப்ப கந்தி' என்ற அபூர்வ மூலிகையைப் பற்றி ஒரு ரஸமான குறிப்பு வெளியாகி யிருக்கிறது. லியனர்ட் வாலஸ் ராபின்ஸன் என்ற அறிஞர் தாம் சந்தித்த ஒரு மூளை நோயாளியைப் பற்றியும், அவருக்கு ஸர்ப்பகந்தியிலிருந்து தயாரிக்கப்பட்ட ஒரு மருந்தைக் கொடுத்து எப்படிக் குணமாயிற்று என்ற அதிசயத்தையும், வியந்து வியந்து எழுதியிருக்கிறார். இதில் ஒரு பெரிய விசேஷமாக அவர் குறிப்பிடுவது என்னவென்றால், மூளை நோய் குணமான பிறகு, அந்த நோயாளி தான் நோயாக இருந்தபோது எப்படி யெல்லாம் நடந்து கொண்டான், தன்னைச் சுற்றி என்னென்ன நிகழ்ந்தன என்பதையெல்லாம் பூரணமான ஞாபக சக்தியோடு பிசகாமல் எடுத்துச் சொல்வதுதான்! இந்த அதிசயத்தை ஒரேயடியாக வியந்து எழுதியிருக்கிறார் அந்த மேனாட்டு அறிஞர்.

சுரேஷும் இலஞ்சிச் சாமியாரும் ரவீந்திரனுக்குச் சிகிச்சை செய்தபோது இந்த ஆராய்ச்சிக் குறிப்பு வெளியாகி யிருக்கவில்லை. அதனால் என்ன? ஸர்ப்பகந்தி என்ற அந்த அபூர்வ மூலிகை அப்பொழுதும் வளர்ந்து தானே இருந்தது? அதன் சக்தி அப்பொழுதும் வேலை செய்துகொண்டுதானே இருந்தது!

டாக்டர் சுரேஷ் திருச்சி மலைக்கோட்டையில் ஆண்டார் தெருவில் அப்புலிங்கத்தின் வீட்டிலே யிருந்து சாவித்திரி அம்மாளோடும், சந்திரிகாவோடும் பேசிக் கொண்டிருந்தபோது, பொதிகை மலைக்காட்டில் சொக்கி குடியிலே ஸர்ப்பகந்தியின் அதிசய சக்தி கல்யாணி அம்மாளையும் கனகசுந்தரத்தையும் ஆச்சரியத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தது.

கனகசுந்தரமும் கல்யாணி அம்மாளும் கடைசியாக ரவீந்திரனைப் பார்த்தது, மூளைக் கோளாறு உச்ச நிலையிலே விபரீதங்களை விளைத்துக் கொண்டிருந்தபோது அல்லவா?

அதையெல்லாம் எண்ணி எண்ணிக் கல்யாணி அம்மாள் எத்தனை தூரம் கவலைப்பட்டாள்? எத்தனை இரவுகள் அவள் கண்ணீர் வடித்துக் கொண்டே விம்மி விம்மிப் பொழுதைக் கழித்திருக்கிறாள்! எத்தனை முறை உருக்க மாக அந்தக் குத்து விளக்குக்கு முன்னால் நின்று பிரார்த்தனை செய்திருக்கிறாள். "மாங்கல்யத்திலே வைக்கும் மஞ்சளுக்குக் கேடுவரும்படி செய்து விடாதே அம்மா! தாயே!" என்று எத்தனை ஆயிரம் தடவை அவள் குத்துவிளக்கு நாச்சியாரைக் கும்பிட்டு வேண்டி யிருக்கிறாள். தன்னுடைய பிரார்த்தனை ஒன்றும் வீண் போகவில்லை என்று மனத்துக்குள்ளே எண்ணி உச்சிப் பிள்ளையாருக்கும் கடற்கரை யாண்டிக்கும் அகிலாண் டேசுவரிக்கும் காணிக்கை செலுத்துவதற்காக இப் பொழுது மஞ்சளை எடுத்துத் துணியிலே முடிந்து கொண்டாள்.

கனகசுந்தரத்துக்கு நிம்மதியும் மகிழ்ச்சியும் அளவு கடந்து உண்டாகியிருந்தபோதிலும் ஊடே ஊடே ஒரு சந்தேகமும் தோன்றிற்று. இப்பொழுது குணமானது போல் தோன்றுகிற வியாதி மீண்டும் வந்துவிடக் கூடாதே, தமது மாப்பிள்ளை எப்பொழுதும் இந்த மாதிரியே இருக்க வேண்டுமே என்று உள்ளத்துக்குள்ளே கவலைப்பட்டுக் கொண்டார். இந்தக் கவலையின் காரணமாக அடிக்கடி ரவீந்திரனிடம் சென்று "மாப்பிள்ளை, இது யார் தெரிகிறதா?" "மாப்பிள்ளை, அதோ நிற்கிறதே அது என்ன மரம்?" "மாப்பிள்ளை, இதோ என் பக்கத்தில் நிற்பது யார் சொல்லுங்கள்" என்று கேள்வி மயமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். ரவீந்திரன் தன் மாமனார் கேட்கும்ஒவ்வொரு கேள்விக்கும்சிரித்துக்கொண்டே பதில் சொல்லி வந்தான். ஆச்சரியம் என்னவென்றால் முன்னைப் போல முன் கோபம் என்பதோ ஆத்திரமான படபடப் பான வார்த்தை என்பதோ, மருந்துக்குக்கூட இல்லை! சர்வ சாதாரணமாக, அளவற்ற பொறுமையோடு பதில் சொல்லி வந்தான். இலஞ்சிச் சாமியார்தான் குறுக் கிட்டுப் பேசினார்: "மிராசுதார்வாள்! ஏது நீங்கள் கேட்கிற கேள்விகளைப் பார்த்தால் சாதாரண மனித

னுக்கே மூளைக் கோளாறு வந்துவிடும் போலிருக்கிறதே! இந்தக் கட்டை உங்கள் மாப்பிள்ளைக்கு மருந்து கொடுக்கப் போய், கடைசியில் மாப்பிள்ளைக்கு மூளை சரியாகி விட்டது, சாமியாருக்குத்தான் பைத்தியம் பிடித்தது என்ற கதையாக அல்லவா முடிந்துவிடும் போலிக்கிறது!"

இப்படி இலஞ்சிச் சாமியார் சொன்னதும், அவரும் சிரித்தார். கனகசுந்தரமும் சிரித்தார். கல்யாணி அம்மாளும் சிரித்தாள்! அதுமட்டுமில்லை. ரவீந்திரனுமே சிரித்தான். பயங்கரச் சிரிப்பு இல்லை, சாதாரணமான சகஜமான சிரிப்பு. பிறர் பேசுவதில் உள்ள அர்த்தத்தைப் புரிந்து கொண்டு சிரிக்கிற சிரிப்பு. முன்னைப் போல் தானே தனக்குள் சிரித்துக் கொள்ளும் அந்தப் பைத்தியச் சிரிப்பு இல்லை.

மலைக் காட்டுக்குப் போய்ச் சேர்ந்த மறு நாள் மாலை இலஞ்சிச் சாமியார், ரவீந்திரன், கல்யாணி அம்மாள் மூவரும் ஆல மரத்தடியில் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கனகசுந்தரம் கேட்டார்: "சாமிகளே! நான் இப்படிக் கேட்கிறேன் என்று கோபப் படாதீர்கள். நம்முடைய மாப்பிள்ளைக்கு வியாதி நன்ருகக் குணமாகி விட்டது என்பதில் சந்தேகமில்லை. ஆனல் நாம் கேள்வி கேட்காமலே அவராக நம்மிடம் ஒன்றும் பேசக் காணுமே. கேட்கிறதுக்கு மட்டுந்தானே பதில் சொல்லுகிருர்!"

கல்யாணி அம்மாள் மனத்துக்குள் இதே சந்தேகத்தை வைத்துக் கொண்டிருந்த போதிலும், இப்பொழுது தன் தகப்பனர் அதை இத்தனை வெளிப்படையாகக் கேட்டது அவளுக்கு எப்படியோ இருந்தது. சாமியார் ஏதாவது இசைவு கேடாகப் பதில் சொல்லக் கூடாதே என்று பயம் வேறு! ஆனல் சாமியார் இந்தக் கேள்விக்கும் சிரித்தார். சிரித்து விட்டுச் சொன்னர்: "மிராசுதார்வாள்! பெண்ணைப் பெற்றவருடைய உணர்ச்சிகள் எனக்கும் கொஞ்சம் தெரியும். மாப்பிள்ளை என்று எனக்கு ஏற்படவில்லையென்ருலும, நானும் ஒரு பெண்ணுக்குத்

தகப்பனாக இருந்திருக்கிறேன். உங்கள் உணர்ச்சி புரிகிறது !"

இப்படிச் சொல்லும்போது இலஞ்சிச் சாமியாருடைய கண்கள் கலங்கின. அந்தத் துக்கத்தை அடக்கிக்கொண்டு தொண்டையை ஒரு தரம் இருமிச் சரிப்படுத்தியவராய் மேலும் பேசினார் சாமியார் :

"உங்கள் மாப்பிள்ளைக்கு மூளையில் இருந்த நோயெல்லாம் வாசியாகிவிட்டது. ஆனால் ஒரே ஒரு குறை. தானாக ஒரு விஷயத்தை மூளைக்குள்ளே யோசித்து வகைப்படுத்திப் பேசக் கூடிய அளவில் இன்னும் மூளை நரம்புகளுக்குத் தெம்பு ஏற்படவில்லை. அத்தோடு உங்கள் மாப்பிள்ளை ஒரு பெரிய சங்கீத வித்வான் ஆயிற்றே. அந்தச் சங்கீதக் கற்பனைகள் எல்லாம் மூளைக்குள்ளே இப்பொழுது உறங்குகின்றன. அவை விழிப்படைந்து கண் திறந்து பேச வேண்டும். ஏதோ எனக்குத் தெரிந்த பாஷையில் சொல்லுகிறேன். டாக்டர் சுரேஷ் வந்தாரானால், இதைப் பெரிய பெரிய லத்தீன் வார்த்தைகளைப் போட்டுச் சொல்லுவார். வெறும் இங்கிலீஷ் வார்த்தையென்றால் நமக்கெல்லாம் புரிந்து விடுமே !"

"என்ன ?" என்று ஒரே வியப்போடு கேட்டார் கனகசுந்தரம் !

"ஆமாம். இந்தக் கட்டைக்கும் கொஞ்சம் இங்கிலீஷ் தெரியும். ஆனால் இந்தக் காவிக் கோலத்திலே வந்து விட்ட பிறகு, இங்கிலீஷாவது ஒன்றாவது ! எல்லாம் கஞ்சா பாஷையோடு சரி !"

"கஞ்சாவா ?" என்று கேட்டார் கனகசுந்தரம், மேலும் ஆச்சரியத்தோடு.

"ஆமாம். வாழ்க்கையின் துக்கங்களை மறப்பதற்காக அந்தப் பழக்கம் ஆரம்பித்தது. பிறகு அது பற்றிக் கொண்டது. அடிக்கடி சொக்கிகுடிக்கே வந்து நம்முடைய சொக்கப்பனிடமே கஞ்சாக் கொள் முதல் செய்யும் அளவுக்கு இந்தப் பழக்கம் வளர்ந்தது. இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக அது குறைந்து விட்டது.

எல்லாம் சுரேஷை இங்கே சந்தித்த பிறகு ஏற்பட்ட மாற்றம்தான் !''

இப்படிச் சொல்லி விட்டுப் பெருமூச்சு விட்டார் இலஞ்சிச் சாமியார். கல்யாணி அம்மாள் கேட்டாள்: "ஏன் சாமி. அப்படியானல் சுரேஷ் டாக்டரை உங்களுக்கு இதற்கு முன்பு தெரியாதா ?''

சாமியார் பளிச்சென்று பதில் சொன்னர்: "அம்மா! அதெல்லாம் சாவகாசமாகச் சொல்லுகிறேன். இப் பொழுது உங்கள் கணவருக்கு நோய் முழுதும் சரியாகி, அவர் முன்போல் புல்லாங்குழலை எடுத்து வைத்து இந்த மலைப் பிராந்தியத்திலே மரமும் செடிகளும் கொடிகளும் பள்ளத்தாக்கும் விம்மி எதிரொலிக்கும்படியாக இசை பொழியட்டும். அதுதான் நம்முடைய முதலாவது வேலை. இந்தக் கட்டையைப் பற்றிய கதையெல்லாம் இப்பொழுது எதற்கு ?''

இவ்வாறு பேச்சை முடித்து விட்டு எழுந்தார் இலஞ்சிச் சாமியார். கனகசுந்தரமும் எழுந்தார். கல்யாணி அம்மாளும் ரவீந்திரனும் ஒருவரை ஒருவர் இமை கொட்டாமல் ஒரு விநாடி பார்த்தார்கள்.

"குடிசைக்குப் போகலாமா ?'' என்ருள் கல்யாணி, ரவீந்திரனைப் பார்த்து.

"போகலாம். அதற்கு ஏன் என்னை அப்படி ஏற இறக்கப் பார்த்தாய் ? பைத்தியம் முழுதும் தீர்ந்து விட்டதா, அல்லது கொஞ்சம் மிச்சம் இருக்கிறதா என்று பார்க்கிருயா ? நீ அழ மாட்டேன் என்று சொல்லு. நான் எனக்குப் பைத்தியம்பிடித்த விநாடியிலிருந்து என்னென்ன நடந்தது என்பதை யெல்லாம் வரிசையாகச் சொல்லு கிறேன். அத்தனையும் எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது !'' என்ருன் ரவீந்திரன்.

இலஞ்சிச் சாமியார், கனகசுந்தரம் இருவரும் முன் நடந்தார்கள். அவர்களை அடுத்து ரவீந்திரனும் கல்யாணி அம்மாளும் குடிசை நோக்கி நடந்தார்கள்.

அன்றுதான் கல்யாணி அம்மாள் நிம்மதியாக இருந்தாள் இத்தனை நாட்களில் ! இத்தனை நாட்களுக்குப்

பிறகு அன்றுதான் கல்யாணி அம்மாள் முதல் முறையாக நிம்மதியோடு நித்திரை செய்தாள். அன்றுதான் அவள் தன் மாங்கல்யச் சரட்டைத் தொட்டுப் பார்த்துக் கண்களிலே ஒற்றிக் கொண்டு, குல தெய்வங்களை யெல்லாம் எண்ணி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

மறுநாள் விடியற்காலை கல்யாணி அம்மாள் வழக்கம் போல் ஐந்து மணிக்குக் கண் விழித்துப் பார்த்தபோது, இருளும் ஒளியும் கலந்த அந்த விடியற்காலை நேரத்தில் பனிப் படலத்தை ஊடுருவிக் கொண்டு, தூரத்தில் தீ எரிவது தெரிந்தது. பதறிப் போய்ப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு கூர்ந்து பார்த்தாள். தொலைவில் பளிஞர் தலைவனின் குடிசைக்கு எதிரே ஒரு பெரிய குழியில் யாரோ தீ வளர்ப்பது தெரிந்தது. கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்ததில், யாரோ ஒரு அம்மாள் உட்கார்ந்து அந்தத் தீயைக் கிளறுவதும் மரச்சுள்ளிகளை அதில் வைப்பதுமாக ஒரு விநோதமான காட்சி தெரிந்தது. வெளியே எழுந்து வந்தாள். குடிசைத் திண்ணையில் இலஞ்சிச் சாமியார் உட்கார்ந்து உருக்கமான குரலில் பாடிக் கொண்டிருந்தார் :

> வெட்டாத சக்கரம் ; பேசாத மந்திரம் ; வேறொருவர்க்கு
> எட்டாத புஷ்பம் ; இறையாத தீர்த்தம் ; இனிமுடிந்து
> கட்டாத லிங்கம் ; கருதாத நெஞ்சம் ; கருத்தினுள்ளே
> முட்டாத பூஜையன் றோ குரு நாதன் மொழிந்ததுவே !

கல்யாணி அம்மாள் எழுந்து வந்து நிற்பதைப் பார்த்ததும் இலஞ்சிச் சாமியாருக்கு விஷயம் புரிந்து விட்டது.

“ என்னம்மா ! அந்தத் தீயைப் பார்த்து அதிசயப் படுகிறீர்களா ? அது இந்தச் சொக்கி குடியின் அணையாத நெருப்பு அம்மா. பளிஞர்களுடைய தலைவனின் குடிசைக்கு எதிரே இந்தத் தீ அணையாமல் இரவும் பகலும் எரிந்து கொண்டிருக்கும். அது அணைந்து விட்டால் இந்தச் சமூகத்துக்கே கேடு வரும் என்பதாகப் பளிஞருடைய நம்பிக்கை. ஆகையால் இந்த

நெருப்பு அவிந்து விடாதபடி பாதுகாக்கிற பெரும் பொறுப்பு தலைவனின் மனைவிகளுடைய தனிப் பொறுப்பு !" என்று கூறினார் சாமியார்.

கல்யாணி அம்மாளுக்கு ஒரே திகைப்பாகப் போய் விட்டது. தீயைப் பற்றிய செய்தி எத்தனை திகைப்பைக் கொடுத்ததோ அத்தனை திகைப்பை 'மனைவிகள்' என்ற வார்த்தையும் கொடுத்தது.

"மனைவிகள் என்றீர்களே. அப்படியானால் இந்தச் சொக்கப்பனுக்கு எத்தனை மனைவிகள் ?" என்று கேட்டாள் கல்யாணி.

"இரண்டு மனைவிகள் அம்மா. பகலும் இரவும் இவர்கள் மாறி மாறி அந்தத் தீக்குழிக்கு அருகிலே உட்கார்ந்து கொண்டு, நெருப்பு அணையாதவாறு சுள்ளிகளை வைத்துக் கிளறிக் கொண்டே யிருப்பார்கள் !" என்றார் சாமியார்.

"இவர்களுக்குள் சண்டை வராதோ ?" என்று கேட்டாள் கல்யாணி.

"வராது அம்மா ! சண்டை வந்தால் நெருப்பைப் பார்த்துக் கொள்வது யார் ? தலைவனுடைய மனைவிகளைத் தவிர வேறு யாருக்கும் அந்த அதிகாரம் கிடையாதே ! இவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு நெருப்பு அணையும்படி விட்டு விட்டால், இந்தப் பளிஞர் சமூகமே நாசமாகிவிடும் என்றல்லவா நம்புகிறார்கள். ஆகையினால் சமூகத்தின் நன்மைக்காக இவர்கள் ஒற்றுமையோடு வாழ்வார்கள். தவிரவும் இந்த மலை ஜாதி மக்களுக்குள் இது சகஜமான பழக்கம். சொத்து, உடைமை, உரிமை என்ற உணர்ச்சிகளே இவர்களுக்குக் கிடையாது. சமூக உணர்ச்சி ஒன்றுதான் இவர்களுக்கு உண்டு. சொக்கி குடியின் நன்மைக்காக அவர்கள் எதுவும் செய்வார்கள் !"

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே திடீரென்று யானை பிளிறும் ஓசை கேட்டது. கல்யாணி அம்மாள் உடல் பதறி விட்டாள்.

"பதறுகிறீர்கள் அம்மா. இந்தச் சொக்கி குடியின் கொம்பன் யானை வருகிறது. திண்ணையிலே நின்று பாருங்கள் அதை!" என்று சொல்லிக் கொண்டே சாமியார் அந்த ஆசிரமக் குடிசைக்கு வெளியே நின்ற பாதிரி மரத்தை நோக்கி நடந்தார். அங்கே ஒரு பொன் கொன்றை மரமும் நின்றது. அதன் அடியில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்திருந்தார் சாமியார். கல்யாணி அந்த மரத்தையும் அதன் அருகே இருந்த சுனையையும் கூர்ந்து பார்த்தாள்.

"கநி கல் கஆ கனே" என்று யானைக்குப் பின்னு லிருந்து ஒரு பெண் குரல் கேட்டது. வேகமாக நடந்து வந்த யானை அந்த மரத்தை ஒரு தரம் சுற்றி வந்து சிவலிங்கத்துக்கு முன்னால் நின்றது.

"ககொ கட் கடு" என்று மீண்டும் அந்தப் பெண்ணின் குரல் கேட்டது. என்ன ஆச்சரியம்! அந்த யானை தன் தும்பிக்கையை வளைத்துச் சிவலிங்கத்துக்கு மேலே பிடித்தது. அதன் துதிக்கையிலிருந்து தண்ணீர் அபிஷேகமாகக் கொட்டியது.

மறு கணம் அந்தப் பெண்—சொக்கி—அங்கே வந்தாள். அவளுடைய கையிலேயிருந்த ஒரு பூக்குடலை யைச் சிவலிங்கத்துக்கு முன்னால் வைத்துவிட்டு வணங் கினாள். இலஞ்சிச் சாமியார் அங்கே நடந்து சென்று சொக்கிக்கு இரண்டு கையினாலும் ஆசி செய்துவிட்டு, அந்தப் பூக்குடலையை எடுத்து அதிலிருந்த புஷ்பங்களைச் சிவலிங்கத்துக்கு அர்ப்பணம் செய்தார்.

"கந கட" என்றாள் சொக்கி. யானை வலது புறமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தது. நேரே தலைவ னுடைய குடிசையை நோக்கி வேகமாகச் சென்றது யானை. சொக்கி அந்த யானையைப் பின்தொடர்ந்து கம்பீரமாக ஒரு வன மோகினியைப் போல் நடந்து சென்றாள்.

* * *

சொக்கிகுடியில் இந்த நிம்மதியான சூழ்நிலையில் ஒரு வாரம் கழிந்தது. 'ஸர்ப்பகந்தி' என்ற மூலிகையை

ஆராய்ந்து, அதிலிருந்து செய்யக் கூடிய மருந்துவகைகளைப் பரிபாஷையிலே நம்முடைய சித்தர்கள் சொல்லிப் போனதை, தற்கால வைத்திய முறையில் வைத்தியக் கல்லூரிப் பேராசிரியர் திருப்பதிநாதன் ஆராய்ந்திருந்ததை, சுரேஷ் இலஞ்சிச் சாமியாருக்குச் சொன்னார். அது மகத்தான பலனை அளித்தது. இரண்டே வாரத்தில் மூளை தெளிவு அடைந்ததோடு, ரத்த வேகமும் சமனாயிற்று. ஆனால் கனகசுந்தரம் சந்தேகித்தபடி ரவீந்திரனுடைய உள்ளத்தில் சிந்தனை ஊற்று இன்னும் திறக்கவில்லை. ஆற்று மணலின் பரப்புக்கு அடியிலே தண்ணீர் தேங்கி மறைந்து நிற்பதைப் போல, ரவீந்திரன் என்ற அந்தச் சங்கீதக் கலைஞனுடைய மனத்தின் அடித்தளத்தில் கற்பனைகள் எல்லாம் அமுங்கி மறைந்து நின்றன. மணல் பரப்பைக் கிளற வேண்டும். ஊற்றுக்கண் திறக்க வேண்டும்.

"புல்லாங்குழல் ஒன்றிலே துளை அடைபட்டிருந்தால் எப்படி யிருக்கும்? ஸ்வர ஸ்தானங்கள் எல்லாம் சரியாகவே இருக்கின்றன. ஆனால் துவாரங்களில் அடைப்பு இருக்கிறது. அது திறக்க வேண்டும். நிச்சயம் திறந்து விடும். கவலைப்படாதீர்கள். டாக்டர் சுரேஷ் அதற்கும் ஏதோ வழி யோசித்து வைத்திருக்கிறார்!" என்று ஆறுதல் சொல்லிக் கனகசுந்தரத்தை ஊக்கப் படுத்தினார் இலஞ்சிச் சாமியார். கல்யாணி அம்மாளுக்கும் இந்த வார்த்தைகள் தைரியமும் நம்பிக்கையும் தந்தன.

இப்படியிருக்கும் போதுதான் பௌர்ணமி யன்று அந்தச் சம்பவம் நடந்தது.

வழக்கம்போல் சொக்கிகுடியில் நிலவுப் பாறையில் பூஜை நடக்க வேண்டிய நாள் அல்லவா அது. சொக்கி அன்று காலை மலையருவியிலே குளித்துவிட்டு, இலஞ்சிச் சாமியார் புதிதாகப் பிரதிஷ்டை செய்திருக்கும் சிவ லிங்கத்துக்கு அபிஷேக நீரை ஆனையின் துதிக்கையிலே தாங்கும்படி கட்டளை செய்துவிட்டு, பாதிரி மரத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தபோது திடீரென்று

இரண்டு பளிஞர்கள் தலைதெறிக்க ஓடிச் சொக்கப்ப னுடைய குடிசைக்குள்ளே நுழைவதைக் கண்டாள்.

தலைவனுடைய குடிசைக்குள்ளே முன்னறிவிப்பு இல்லாமல் சாதாரணமாக யாரும் இப்படி ஓடுவது கிடையாது. எனவே இந்தக் காட்சி சொக்கிக்குத் திகைப்பைக் கொடுத்தது. பளிஞர்களைப் பின் தொடர்ந்து செல்லலாமா அல்லது பாதிரி மரத்தை நோக்கி நடக்க லாமா என்று சொக்கி ஒரு கணம் தயங்கி நிற்பதற்குள், இலஞ்சிச் சாமியார், இதைக் கவனித்தவர், சிரித்துக் கொண்டே சொக்கியைப் பார்த்து வேகமாக நடந்து வந்தார்.

“என்னம்மா திகைக்கிறாய்! பளிஞர்கள் அப்படி ஓடுகிறார்களே என்று பார்க்கிறாயா?” என்று புன்முறுவ லோடு கேட்டார் சாமியார்.

சொக்கிக்கு அந்தச் கேள்வியோடு கலந்து நின்ற சாமியாரின் சிரிப்பு புரியவில்லை.

“என்ன சாமி! சிரிக்குது?” என்று கேட்டாள் அவள்.

“ஆமாம். மங்கள காரியம் என்றால் சந்தோஷத் தோடுதானே அதை வரவேற்க வேண்டும்? சிரிக்காமல் வேறு என்ன செய்யச் சொல்கிறாய்?”

“அதுக்காகவா இவங்க இப்படி ஓடுறாங்க!” என்று கேட்டாள் சொக்கி.

“ஆமாம்” என்று சொல்லிக் கொண்டே இலஞ்சிச் சாமியார் கிழக்குத் திசையைச் சுட்டிக் காட்டினார்.

அது உத்தராயண புண்ணிய காலம். தை மாதம். வடக்கு நோக்கித் தன் ஒளித் தேரைத் திருப்பிக் கொண்டு நின்ற சூரியனின் செங்கிரண ஒளியிலே சொக்கி கிழக்கே கூர்ந்து பார்த்தாள். பாதிரி மரத்தின் உடம்பிலிருந்து பொன்னும் வெள்ளியும் கலந்து உருக்கி விட்டது போலப் பால் வடிந்து கொண்டிருந்தது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கிற சம்பவம் அது. சொக்கி குடிப் பளிஞர்களின் சமூக

நம்பிக்கையோடு தீவிரமாகக் கலந்து நின்று விட்ட ஒரு மகத்தான மங்கள அறிகுறி அது.

"தை பிறந்தால் வழி பிறக்கும் என்று சொல்லு வார்கள். வழி பிறந்து விட்டதம்மா சொக்கி!" என்று ஒரு சித்தனைப் போல ஆனந்தக் களிப்போடு குதித்தார் இலஞ்சிச் சாமியார்.

## 41. கல்யாணப் பேச்சு !

"இந்த உலகத்தில் நல்லவர்கள் என்று சொல்லக் கூடிய உத்தம மனிதர்கள் இருப்பதனால்தான், கெட்ட வர்கள் என்று சொல்லக்கூடிய கயவர்களும் இருக்கிறார்கள். இயற்கையின் தராசில் இரண்டு தட்டுகளும் எப்பொழுதும் ஏறி இறங்கி நிற்கும் அம்மா. குதிரை என்று ஒன்று இருந்தால் அதற்குப் போட்டியாக, அதன் போலியாக போனிமட்டம் என்ற மிருகம் இருக்கும். மயில் என்று இருந்தால் அதற்குப் போலியாக வான் கோழி என்று ஒன்று இருக்கும். அசைப்பிலே வித்தியாசம் தெரியாது. வாழ்க்கையில் இந்த வித்தியாசங்களைச் சரியாகப் புரிந்து நடந்து கொள்வதுதான் நம்முடைய கல்வியும், அனுபவமும் !"

இவ்வாறு பேச ஆரம்பித்தார் டாக்டர் சுரேஷ். சாவித்திரி அம்மாளுக்கு அவர் ஏன் இப்படி ஒரு தத்துவ ஆராய்ச்சி செய்கிறார் என்று புரியவில்லை. கேட்டாள் :

"ஏன் டாக்டர் ! திடீரென்று இப்படி ஒரு பெரிய ஆராய்ச்சியில் இறங்கி விட்டீர்கள் ? அதற்கு என்ன அவசியம் வந்தது இப்பொழுது ?'

டாக்டர் சுரேஷ் சிரித்தார். சிரித்து விட்டுச் சொல்லுவார் :

"அம்மா ! இந்த வார்த்தை சந்திரிகாவுக்காகச் சொன்னது. ஏனென்றால் இந்த உலகில் நம்முடைய சமூக அமைப்பில் இல்லறம் என்று சொல்கிறோமே அது

மிக மிக அவசியமான ஒரு வாழ்க்கை முறை. ஏதோ அபூர்வமாகச் சில மனிதர்கள் விவாகமே இல்லாமல் வாழ்க்கை நடத்த வேண்டியது நேர்ந்து விடுகிறது. அந்த மாதிரி வாழ்வதின் வெற்றி அவரவர்களுடைய மன வைராக்கியத்தைப் பொறுத்தது. அந்த மாதிரி வாழ்ந்து வெற்றி பெறக் கூடியவர்கள் இந்தப் பூமியில் மிக மிகக் குறைவு. ஒழுக்கம் என்பதும் கட்டுப்பாடு என்பதும் அத்தனை கஷ்டமான காரியங்கள். பொதுவாகப் பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் கன்னியராக வாழ்க்கை நடத்துவதை—அதாவது நடத்த முயற்சிப்பதை—நான் எதிர்க்கிறேன். என்னுடைய வைத்திய அனுபவத்தில் இம்மாதிரிப் பலரை நான் சந்தித்திருக்கிறேன். இவர்களுடைய வாழ்க்கையில் எத்தனை விபரீதங்கள் நேர்ந்தன என்பது எனக்குத் தெரியும். பால்யத்தில் அவர்களுக்கு இது புரியாது. வயது ஆக ஆகத்தான் இல்லறத்தின் சிறப்புப் புரிய ஆரம்பிக்கும். அப்படிப் புரிய ஆரம்பிக்கிற காலத்தில், அவர்களுடைய வயதானது வாழ்க்கை நிலையைத் தாண்டி விடுகிறது. பிறகு கஷ்டப் படுகிறார்கள். இப்படி நான் சொல்வதற்காக என்னை மன்னிக்க வேண்டும். என்னுடைய அனுபவத்தில் நான் கண்டு முடிவு செய்த விஷயத்தைச் சந்திரிகாவுக்குச் சொல்லலாம் என்று நினைத்தேன்! தவறு இல்லையே? என்ன சந்திரிகா?"

டாக்டர் இந்த மாதிரிக் கேட்டு விட்டு ஒரு நிமிஷம் மௌனமாகச் சந்திரிகாவையே பார்த்தார். அவள் கண் கலங்கியது. அந்தக் கலக்கத்தைச் சமாளித்துக் கொண்டு சந்திரிகா பேசினாள்

"டாக்டர்! எங்கள் குடும்பத்தில் உங்களுக்குள்ள உரிமை வேறு யாருக்கும் இல்லை. அதிலும் என் விஷயத்தில், என் வாழ்க்கை வரலாற்றை நீங்கள் எடுத்துச் சொன்ன பிறகு, உங்களுக்கு என் வாழ்வை நிர்ணயிக்க எத்தனை உரிமை இருக்கிறது என்பதை நான் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டேன். தவிரவும், நீங்கள் இப்பொழுது சொன்ன விஷயங்கள் அனைத்தும் கடந்த இரண்டு வாரங்களாக என் உள்ளத்தையும் கிளறிக்

கொண்டுதான் இருக்கின்றன. உண்மையில் நான் வீட்டை விட்டுச் சென்ற பிறகு என்னுடைய மனத்தில் ஒரு பெரிய மாற்றம் உண்டாகி விட்டது டாக்டர். உலகம் என்றால் ஒரு நாட்டிய அரங்கம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இந்த வீட்டின் நான்கு சுவர்களுக் குள்ளும் என்னுடைய நினைவுகள் அடங்கி நின்றன. இப்பொழுதுதான் உலகைப் புரிந்து கொண்டிருக் கிறேன். நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மையான வார்த்தை என்பது கடந்த இரண்டு வாரங்களில் எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆகையால் நீங்கள் தாராளமாகச் சொல்லலாம்!'' என்றாள் சந்திரிகா. சாவித்திரி அம்மா ளுக்குப் பொறுமை எல்லை கடந்து விட்டது.

"என்ன டாக்டர்! நீங்கள் இரண்டு பேரும் இந்த மாதிரி மூடி மறைத்துப் பேசிக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? பெரிய ஞானிகளைப்போல் தத்துவம் பேச ஆரம்பித்து விட்டீர்களே—''

டாக்டர் சுரேஷ் சிரித்தார். அவருக்குச் சாவித்திரி அம்மாளின் மன நிலை புரிந்தது.

"அம்மா! கோபப்படாதீர்கள். கொஞ்சம் பொறுமை யாக இருங்கள். சந்திரிகாவின் மன நிலையைப் புரிந்து கொள்ளாமல் என்னுடைய திட்டங்களைச் சொல்வதில் அர்த்தமில்லை என்று நினைத்துப் பேசினேன். இப்பொழுது புரிந்து கொண்டு விட்டேன். இனி அவளுடைய வாழ்வை நிர்ணயிக்கும் பொறுப்பை, உரிய மனிதர்களிடம் ஒப்படைத்து விடலாம். ஆகையினால் கவலையில்லை. நான் இப்பொழுதே புறப்படுகிறேன். மறுபடி நாளைக் காலையில் உங்களைச் சந்திக்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு டாக்டர் சுரேஷ் எழுந்தார்.

சாவித்திரி அம்மாளுக்கு இன்னும் மனத் திருப்தி ஏற்படவில்லை. தான் பேச நினைத்த, டாக்டர் தன்னோடு பேசுவார் என்று எதிர்பார்த்த, ஒரு முக்கிய விஷயத்தை இன்னும் பேசவில்லை என்ற குறிப்பு அவளுடைய முகத்திலே தெரிந்தது. அதை டாக்டர் சுரேஷ்

கவனித்தும் கவனியாதது போலக் கைகூப்பி நமஸ்கரித்து விட்டுப் புறப்பட்டார். சந்திரிகா கைகூப்பினுள். சாவித்திரி அம்மாளும் வேறு வழியின்றிக் கைகூப்பி நமஸ்காரம் பண்ணி விடை கொடுத்தாள்.

டாக்டர் சுரேஷ் வெளியே வந்ததும் "அப்புலிங்கம்" என்று கூப்பிட்டார். எதிர் பங்களாவிலிருந்து அப்பு லிங்கம் வந்தான். இருவருமாக டாக்டர் சுரேஷின் காரில் ஏறிக் கொண்டு வேகமாகச் சென்ருர்கள்.

* * *

திருச்சி டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலிருந்து தன்னுடைய வேலைநேரம் முடிந்து, லிலி ஓட் அவுஸ் வெளியே வந்து தந்தி ஆபீஸ் கட்டடத்துக்கு அருகாகச் செல்லும் பாதை வழியே தன்னுடைய வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தபோது, தந்தி ஆபீஸ் ஜன்னலுக்கு அருகே அப்புலிங்கம் நிற்பதைக் கண்டாள். ஏற்கனவே உஸ்தாத் மீராஞேடும், தன் தந்தையோடும் அவள் அப்புலிங்கத்தைச் சந்தித்ததுண்டு. நாகரத்தினமும் பகோரானும் செய்த 'ஜிங்கிட ஜிங்கிட ஜம்'மின் விருத்தாந்தம் எல்லாம் அப்புலிங்கத்துக்குப் பூரணமாகத் தெரியும் என்பதும் ஓட்அவுஸுக்குத் தெரியும். சமீபத்தில் சிலம்பப் போட்டியில் ஏற்பட்ட சமாதான முடிவுக்குப் பிறகு, அவள் அப்புலிங்கத்தையும் உஸ்தாதையும் சந்தித்துத் தன்னுடைய நன்றியை தெரிவித்துக் கொள்ள எண்ணியதுண்டு. இப்பொழுது அப்புலிங்கத்தைத் தந்தி ஆபீஸிலே பார்த்ததும் அவளுக்குக் கவலை ஏற்பட்டது. பகோரான் வீட்டுக்குத் தன்னுடைய தம்பி தலைமறைவாகச் செல்லும் கெட்ட பழக்கம் நின்று போனதில் அவளுக்கு ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியைச் சொல்லிக்கொள்ள, இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது என்று முதலில் நினைத்தாள். ஆனலும் அப்புலிங்கம் தந்தி அபீசுக்கு அந்த நேரத்தில் வரவேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது? ஒரு வேளை சிலம்பக் கோஷ்டிகள் மீண்டும் ஏதாவது சண்டையிலே இறங்கி 'எக்கச் சக்கமாக' ஏதும் விபரீதம் நடந்து விட்டதோ என்று மனம் துணுக்குற்ருள் லிலி. அதிக

நேரம் அங்கே நின்று குழம்பாமல், நேரே அப்புலிங்கத்தை நோக்கி நடந்தாள், 'ஹலோ' என்ற அவளுடைய வழக்க மான முகமனோடு!

அப்புலிங்கம் திரும்பிப் பார்த்தான்.

"ஓ! நீங்களா?" என்று வரவேற்றான் அப்பு லிங்கம்.

பதிலுக்குக் காத்திராமல் வேகமான விறுவிறுப் பான, இலக்கணப் பிழைகள் மலிந்த, ஆனால் ஜீவனுள்ள ஓர் ஆங்கிலத்தில் லிலி ஓட் அவுஸ் தன் நன்றியையும் மகிழ்ச்சியையும் பொரிந்து கொட்டினாள். கொட்டிவிட்டுத் தந்தி ஆபீசுக்கு அப்புலிங்கம் வரவேண்டிய தன் காரணம் என்ன என்பதை அறிய விரும்பியவள் போல், ஒரு கணம் தயங்கி நின்றாள். அப்பட்டமாகக் கேள்வி கேட்பதற்கு வேண்டிய துணிவு இல்லை! ஆனால் அப்புலிங்கமோ அதற்குமேல் ஏதும் பேசுபவனாகத் தெரியவில்லை.

லிலி ஓட் அவுஸ் மேலும் ஒரு நிமிஷம் தயங்கி நின்றாள். 'இங்கே எதற்காக வந்தீர்கள்?' என்று கேள்வி கேட்பது ஆசாரக் குறைவு என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அதே சமயம் ஆவலை அடக்க முடிய வில்லை!

"சரி; நாளைக் காலையில் 'கௌன்டர் கிளார்க்'கைப் பார்த்து விஷயத்தைத் தெரிந்து ,கொள்ளலாம்" என்று ஒரு முடிவுக்கு வந்தவளாக லிலி ஓட் அவுஸ் 'பை பை' சொல்லிவிட்டு 'டக் டக்' என்று பூட்ஸை மிதித்து நடக்க ஆரம்பித்தாள்!

* * *

அன்று திருச்சிப் பாலக்கரைப் பள்ளிவாசலில் காஸியார் அல்லாவைச் சிந்தித்துத் தொழுகை செய்யும் போது, விசேஷமாகத் தமது நன்றியை ஆண்டவனுக்குச் செலுத்தினார். சிலம்பச் சண்டைகள் எல்லாம் சமாதான மாக முடிந்ததிலும், உஸ்தாதின் மகளுடைய நிக்காஹைத் தொடர்ந்து எல்லாக் கோஷ்டிகளும் உறவாக ஒன்று கூடியதிலும், அவருக்கு அளவற்ற மகிழ்ச்சி.

'இந்த மகிழ்ச்சி நிலைத்து நிற்கும்படி செய் ஆண்டவனே!' என்று அல்லாஹுத் தாலாவின் திருவருளைச் சிந்தித்தார் காஸியார்.

அதேசமயம் சொக்கி குடியில் புதிதாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவபெருமானின் திருமுன்பு நின்று, கல்யாணி அம்மாள் தன்னுடைய வேண்டுதல்களையும் காணிக்கைகளையும் செலுத்தினாள்.

பொதிகைமலைக் காட்டிலே புள்ளிமானைப் போலத் துள்ளி வரும் வனமோகினியான சொக்கியோ என்றால், இலஞ்சிச் சாமியாரோடு ஒரு பெரிய தர்க்கத்திலே ஈடுபட்டிருந்தாள்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை பாதிரி மரத்திலே பால் வடிய ஆரம்பிக்கும் என்று இலஞ்சிச் சாமியாருக்குத் தெரியும். அந்த மாதிரிப் பால் வடிய ஆரம்பித்தால், அதற்கு அடுத்த பௌர்ணமியன்று சொக்கி குடியின் 'மலையரசுத் திருநாள்' நடைபெற வேண்டும் என்று அந்தப் பளிஞர்களின் நம்பிக்கை.

ஆமாம்; பாதிரி மரத்திலே அறிகுறி கண்ட ஒரு மாதத்துக்குள், சொக்கிகுடியின் தலைவன் தனக்குப் பிறகு யார் தலைவன் என்பதை அங்கீகாரம் செய்து, அவனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டுவது என்று ஒரு பழக்கம் வழி வழியாக, வம்ச பரம்பரையாக அந்த மலைக்காட்டிலே இருந்து வருகிறது. நாகரிகம் முதிர முதிர எத்தனையோ புதிய நடப்புக்களும் பழக்கங்களும் வெளியுலகிலே ஏற்பட்டு வந்தாலும், மலைக் காட்டுக்குள்ளே இந்த மலை ஜாதி மனிதர்களின் பழக்கங்களும் சம்பிரதாயங்களும் எத்தனையோ ஆண்டுகளாக அவர்களுக்கு உரிய சடங்குகளின்படி எப்பொழுதும் நடந்தே வருகின்றன.

"உங்கள் பழக்கங்களில் நான் ஒன்றும் மாறுதல் செய்யத் தயாராயில்லை. நாங்கள்தான் எப்படியெப்படியெல்லாமோ மாறிக்கொண்டு வருகிறோம். உங்களை ஏன் கெடுக்க வேண்டும்!" என்று பேச்சை ஆரம்பித்திருந்தார் இலஞ்சிச் சாமியார்.

"அதை ஏன் அப்படிச் சொல்லுறீங்க சாமி!" என்று சாமியாரிடம் பதிலுக்குக் கேட்டாள் சொக்கி.

இதன் பேரில் ஒரு பெரிய சர்ச்சை தொடங்கிற்று. சொக்கப்பன் தனக்குப் பிறகு அந்தச் சொக்கிகுடிக்குத் தலைவன் கந்தப்பன்தான் என்று மனத்தினுள் தீர்மானித்திருந்தான். தன்னுடைய ஒரே மகள் சொக்கியைக் கந்தப்பனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து, அவனுக்கு மலையரசுப் பட்டமும் சூட்டி விடலாம் என்று சொக்கப்பன் எண்ணம்! பாளையங் கோட்டையிலிருந்து பாதிரிமார்கள் வந்து கந்தப்பனைப் பள்ளிக்கூடப் படிப்புக்கு அழைத்துச் சென்றபோது, முதலில் அந்தச் சொக்கிகுடி மக்கள் யாருக்கும் அது இஷ்டமில்லை. வெளியே போனால் பிள்ளை கெட்டு விடும் என்று பயந்தார்கள். சிலர் அதைச் சொக்கப்பனிடமே வந்துகூடச் சொன்னார்கள். ஆனால் சொக்கப்பன் அந்த விஷயத்தில் பிடிவாதமாக இருந்தான். கந்தப்பனுடைய குணத்தில் அவனுக்கு அத்தனை நம்பிக்கை. எங்கே போனாலும் அவன் கெட்டுப் போக மாட்டான் என்று சொக்கப்பன் எல்லாரிடமும் உறுதியாகச் சொல்லித் தன்னுடைய எண்ணத்தை நிலைநாட்டி விட்டான்.

கந்தப்பனுக்கோ இத்தனை சர்ச்சை நடந்ததும் தெரியும். தன்னுடைய சீலத்தில் தன் மாமனுக்கு எத்தனை நம்பிக்கை என்று பல தடவைகள் எண்ணிப் பார்த்திருக்கிறான் கந்தப்பன். அந்த நம்பிக்கைக்குப் பழுது வராமல் திருச்சிக்கு வந்த பிறகும் நடந்து கொண்டிருக்கிறான்.

"அஞ்சும் மூணும் எட்டு
அத்தை மகளைக் கட்டு!"

என்று ஒரு வசனம்! அஞ்சும் மூன்றும் சேர்த்து எட்டாவது எப்படிக் கிரமம் ஆகுமோ, அப்படியே அத்தை மகளைக் கல்யாணம் செய்து கொள்வதும் கிரமம் என்ற உறுதியான கோட்பாடு உள்ள சமூகம் அது. அந்தச் சமூகத்தின் சட்டதிட்டத்திலே கந்தப்பனுக்கு அத்தனை பிடிப்பு! இது இலஞ்சிச் சாமியாருக்கு நன்றாகத் தெரியும்.

ஆனல் அவர் சொக்கியிடம் சொன்னது மற்ருெரு சட்ட திட்டத்தைப் பற்றித்தான்.

பொதுவாகச் சொக்கி குடியின் அரசனுக, தலேவனுக, வரக்கூடியவனுக்கு இரண்டு மனேவியர்கள் இருக்க வேண்டும் என்று ஒரு வழக்கம் நீண்ட காலமாகக் கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது. கந்தப்பனுடைய முதல் மனேவி சொக்கி என்பது அந்தக் காடு முழுதும் அறிந்த இரகசியம். ஆனல் இரண்டாவது மனேவி? அந்தப் புண்ணியவதி யார்?

பாதிரி மரத்தில் அறிகுறி தோன்றி விட்டது. அடுத்த பௌர்ணமியன்று மலேயரசுத் திருநாள் நடை பெற வேண்டும். அந்தத் திருநாள் அன்றுதான் இளவரசனுடைய திருமணமும் நடைபெறும். அந்தத் திருமணத்தில் கந்தப்பனுடைய வலது கையைப் பிடிப்பாள் சொக்கி! ஆனல் இடது கையைப் பிடிக்கப் போவது யார்? அது பல விதத்திலும் மிக மிக முக்கிய மான விஷயம் ஆயிற்றே!

“சாமி நீங்க என்னதான் சொல்லுங்க! நாங்க வழக்கத்தை விடப்போறது இல்லே. அடுத்த பௌர் ணமிக்கு இடது கையைப் பிடிக்கிறது யாருண்ணு தானுகத் தெரியப் போகுது பாருங்க!” என்று ஒரே உறுதியோடு சொன்னுள் சொக்கி!

இலங்சிச் சாமியார் சொக்கியின் பால் போன்ற முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அதில் கள்ளம் கபடு இல்லே. தன்னுடைய திருமணத்தைப் பற்றித்தான் பேசுகிருள். ஆனுலும் கூச்சமோ பொருளில்லாத வெட்கமோ இல்லே. நம்முடைய பெண்கள் என்ருல் தங்கள் கல்யாணத்தைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லுவதற்குள் உடம்பெல்லாம் எத்தனே வளேப்பு வளேத்து நாணிக் கோணி விடுவார்கள்!

இவ்வாறு மனத்துக்குள்ளே எண்ணி ஆச்சரியப் பட்டார் சாமியார். ஆனுலும் அந்த இடது கையைப் பற்றி அவள் ஏன் அத்தனே புதிர்ப் போடுகிருள்?

"என்ன சொக்கி! என்னிடத்திலே பேசக்கூட வெட்கமா உனக்கு? ஏன் விஷயத்தை என்னிடம் சொல்லப் பயப்படுகிருய்?" என்று கேட்டார் சாமியர்.

"என்னது? பயமா? சாமி, அது எங்க குடியிருப்பிலே உள்ள முயல் குட்டிக்குக்கூடக் கிடையாதாக்கும் சாமி! பயமுண்ணு அது என்ன சாமி? கறுப்பா யிருக்குமா சிவப்பா இருக்குமா சாமி?" என்று இலஞ்சிச் சாமியாரை மடக்கினுள் சொக்கி.

இதன்பேரில் அவர்களுடைய சர்ச்சை இன்னும் பலத்தது!

சொக்கிகுடியின் நெருப்பு அணையக் கூடாது. அதற்காகத்தானே இரண்டு மனைவியர்கள் வேண்டும், தலைவனுக்கு? அதற்காகத்தானே இந்த மாதிரி ஒரு பழக்கம் இந்தக் குடியிருப்பிலே இருந்து வருகிறது?—இதை அகவல் மகளோடு பேசித் தெளிவு படுத்திக் கொண்டதாகச் சொன்னுள் சொக்கி. பகலில் நெருப்பைக் கவனித்துக் கொள்ள ஒரு மனைவியும் இரவில் அந்த நெருப்பைக் கவனித்துக் கொள்ள மற்ெருரு மனைவியும் என்று இரண்டு மனைவியர்களைக் கல்யாணம் செய்து கொள்கிற வழக்கம் சொக்கிகுடியில் இருந்து வருவது சொக்கிக்கும் தெரியும். கந்தப்பனுக்கும் தெரியும். அதே சமயம் கந்தப்பன் தன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் ஏறிட்டுக்கூடப் பார்க்க மாட்டான் என்றும் அபார உறுதியோடும் நம்பிக்கையோடும் சொன்னுள் சொக்கி. அதற்குமேல் அவள் மேலும் மேலும் புதிர் போட்டாளே ஒழிய விவரமாக ஏதும் சொல்ல மறுத்தாள்!

இலஞ்சிச் சாமியார் தாடியைக் கோதிவிட்ட வண்ணம் பலமாக யோசனை செய்தார். கந்தப்பன் ஏக பத்தினி விரதனுக இருந்தால், இந்தச் சமூகத்தின் வழக்கத்துக்கு விரோதமாக அல்லவா மலையரசுத் திருநாள் நடக்க வேண்டியிருக்கும். மற்றப் பளிஞர்கள் அதற்கு எப்படிச் சம்மதிப்பார்கள்? அகவல் மகளோடு ஏதோ பேசித் தெரிந்து கொண்டதாகச் சொக்கி சொன்னுள். அது

என்ன விஷயமாக இருக்கக் கூடும்? இவர்களாக ஏதாவது வழி கண்டுபிடித்து எங்காவது விபரீதத்திலே கொண்டு போய் விட்டு விடக் கூடாதே. கந்தப்பனுடைய கல்யாணத்தில் தான் சில திட்டங்கள் போட்டு வைத்திருக்கிறாரே, அதெல்லாம் நடைபெறாமல் போய்விடக் கூடாதே—இப்படிப் பலவாறு யோசனை செய்தார் இலஞ்சிச் சாமியார். அப்பொழுது தூரத்தில் பளிஞர்களின் கோஷ்டி கானம் கேட்டது.

'இரு தார விவாகம்' என்று சொல்லப்படும் பொருள் குறித்துக் குடிசைத் திண்ணையிலே நடந்து கொண்ருந்த பலமான சர்ச்சையை இதுவரை ஒரே கவலையோடு கேட்டுக் கொண்டிருந்த கல்யாணி அம்மாள் இப்பொழுது இந்தக் கோஷ்டி கானம் தொலைவிலே கேட்டதும், குடிசைக்குள்ளே யிருந்து வெளியே வந்து திண்ணையில் நின்று பார்த்தாள். யாரையும் காணோம். ஆனால் அடர்த்தியான மரங்களுக்கு அப்பாலிருந்து பளிஞர்களின் குரல் கூட்டமாகக் கேட்டது :

முருகனொரு சாமி—அது
முதலான சாமி—எங்க
முன்னோரும் பின்னோரும்
முறை தொழுத சாமி!

கந்தனொரு சாமி—அது
கடவுளராம் சாமி—இன்னும்
சொந்தமான பேருக்கெல்லாம்
சுகம் கொடுக்கும் சாமி!

வேலவராம் சாமி—அது
வேண்டினோர்க்குச் சாமி—எந்தக்
காலமுமே நம்மை யெல்லாம்
காத்துவரும் சாமி!

வெற்றி வேலுச் சாமி—அது
வீரவேலுச் சாமி—நம்மைச்
சுற்றியுள்ள பகைகள் எல்லாம்
தொலைத்துநின்ற சாமி !

வள்ளி யோட சாமி—அது
வரிசை தரும் சாமி—தெய்வ
ஆனையோட சாமி நம்மை
ஆதரிக்கும் சாமி !

குமரனுரு சாமி—அது
குலதெய்வச் சாமி
கும்பிட்டபேர் எல்லாரையும்
கும்பி காக்கும் சாமி !

புள்ளிமயில் சாமி—அது
புஞ்சிரிப்புச் சாமி
வள்ளிதெய்வ யானையோடே
வரம் கொடுக்கும் சாமி !

மேற்கண்ட பாடல் வர வரச் சமீபத்திலே கேட்டது. சற்று நேரத்திற்கெல்லாம் ஆணும் பெண்ணுமாகப் பல பளிஞர்கள் ஒரே கூட்டமாகக் குடிசையை நோக்கிக் குதித்துப் பாடிக் கூத்தாடிக் கொண்டே வந்தார்கள்.

# 42. அவசரத் தந்தி!

"பூமியின் எல்லை யெங்கும் உள்ளவர்களே! என்னை நோக்கிப் பாருங்கள்; அப்பொழுது இரட்சிக்கப் படுவீர்கள்!" என்றார் கர்த்தர். மக்களின் பாபங்களுக்காக அவர் புண்பட்டார். மனித ஜாதியின் அக்கிரமங்களுக்காக அவர் துயருற்றார். அந்தத் திருக்குமாரனுடைய துன்பத்தில் நாம் குணமடைகிறோம்! நமக்குச் சமாதானத்தை உண்டு பண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் நாம் குணமாகிறோம்!"

இவ்வாறு 'விவிலியவேத' வாக்கியங்களைப் பேசிக் கொண்டு சென்றார் பாதிரியார்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. கிறிஸ்துவ ஆலயத்தின் மோனச் சூழ்நிலையில், நூற்றுக்கணக்கான பக்தர்களின் திருக்கூட்டத்தில் லிலி ஓட் அவுஸும் மண்டியிட்டு நின்றாள்.

"ஒரு பாவமும் செய்யாமல், நன்மையே செய்யத்தக்க நீதிமான் பூமியில் இல்லை. நாம் எல்லாரும் ஆடுகளைப் போல வழிதப்பித் திரிந்து அவனவன் தன் தன் வழியிலே போனோம். நமக்குப் பாவமில்லை யென்போமானால், நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களா யிருப்போம்; சத்தியம் நமக்குள் இராது. தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்!"

பாதிரியாருடைய பிரார்த்தனைச் சொற்பொழிவு முடிந்து பக்தர் கூட்டம் கலைந்து சென்றது. ஆனால், ஓட் அவுஸ் மட்டும் அங்கிருந்து நகரவில்லை.

நேற்றிரவு தந்தி ஆபீஸில் அப்புலிங்கத்தைச் சந்தித்த பிறகு லிலிக்கு மனத்தில் ஏதேதோ சிந்தனைகள் ஆறுதலின்றி எழுந்து கொண்டிருந்தன. வீட்டுக்கு வந்து படுக்கையில் படுத்தவள் உறக்கமே இல்லாமல் புரண்டு கொண்டே யிருந்தாள்.

தன்னுடைய வாழ்க்கை இதுவரை பற்றுக்கோடு இல்லாமல் கழிந்து விட்டது. உண்மையில் அவளுடைய சமூகத்தில் திருமணம் செய்து கொள்ளாமல் கன்னியராகவே வாழ்ந்து மறைந்தவர்கள் எத்தனையோ பேரை அவளுக்குத் தெரியும். ஏன்? அவளுடைய தாயாரின் சகோதரி ஒருத்தி—அவளுடைய சிற்றன்னை—சாகும்வரை கன்னியாகவே வாழ்ந்து மறைந்தாள். அது அவளுக்குத் தெரியும். அந்த வாழ்க்கை அவளுக்குப் புதிதில்லை. ஆனால் இப்பொழுது அவள் நினைத்தது அவளுடைய தாயாரைப் பற்றித்தான்.

லிலியின் தாயார் மரணமடைவதற்கு முன்பு லிலியிடம் ஒரு விஷயத்தைச் சொல்லி யிருந்தாள். அதாவது அவளுக்குப் பிறகு மகள் லிலியிடந்தான் குடும்பப் பொறுப்பு சாரப் போகிறது. ஜான் உள்பட ஆண் பிள்ளைகள் எல்லாம் உத்தியோக நிமித்தம் வெளியூர்களுக்குப் போய் விடுவார்கள். தகப்பனாரைக் கவனித்துக் கொள்கிற பொறுப்பும், சின்னத் தம்பியைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வரவேண்டிய கடமையும் லிலிக்குத்தான் என்று அவளுடைய தாயார் அந்த நாளில் நூறு தடவை சொல்லி யிருக்கிறாள். உண்மையில் டெலிபோன் எக்ச்சேஞ்சில் முன்னுக்கு வரவேண்டும் என்ற தீவிர நோக்கத்துடன் இரவு பகல் பாடுபட்டு லிலி உழைப்பதெல்லாம் தன்னுடைய குடும்ப முன்னேற்றத்துக்காகத்தான். ஆனால் அதில் ஒரே ஒரு சிரமம், நாலு பேரைப்போல் தானும் வீடும் குடித்தனமும் என்று இருக்க முடியாது என்பதுதான்.

'டெலிபோனில் வேலை பார்ப்பது என்றால் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாது' என்று ஒரு வரையறை! கல்யாணம் பண்ணிக் கொள்வதா யிருந்தால் உத்தியோகத்தை விட்டுவிட வேண்டும். லிலிக்குத் திருமணம் செய்துகொண்டு நல்ல முறையில் குடித்தனம் பண்ண வேண்டும் என்று விருப்பம் இருந்தபோதிலும், உத்தியோகத்தை விட்டு விட இஷ்டமில்லை. எத்தனையோ வாலிபர்கள் அவளுடைய அழகிலே மோகப்பட்டுக் கல்யாணம் பண்ணிக் கொண்டு உத்தியோகத்தை விட்டு

விடும்படி அவளிடம் வந்து சொன்னதுண்டு. அப்பொழு தெல்லாம் அவள் மன உறுதியோடு 'முடியாது' என்று சொல்லி விடுவாள். நாகரத்தினமும் குப்புசாமியும் முன் ஞெரு சமயம் விஷமத்தனமாக நடந்து கொண்டதுபோல இப்பொழுதும் சிலர் அவளுக்குக் காதல் கடிதங்கள் எழுதுவதுண்டு. அவற்றை யெல்லாம் படித்தும் படிக்கா மலும் கிழித்து எறிந்து விடுவாள் லிலி. குடும்ப பாரமும் கடமை என்ற உணர்ச்சியும் அவளுடைய இதயத்தில், வலுவடைய வலுவடைய, ஏசுநாதர் அவள் உள்ளத்திலே ஓர் அசாதாரணமான உறுதியைக் கொடுத்து வந்தார். அவளோடு பழகிய சம வயதுப் பெண்களுக்கும், அவளுடைய உறவினர்களுக்கும் அவளுடைய கண்ணுக்கு முன்னுலேயே திருமணம் நடக்கும். அப்பொழுதெல்லாம் லிலி ஒரு வயதான அம்மாளைப் போலக் கல்யாணக் காரியங்களைச் சற்றும் மனச் சிதறல் இன்றிக் கவனிப்பாள்.

இப்படி யெல்லாம் இருந்துங்கூட நேற்றிரவு அவளுடைய மனம் அத்தனை கிலேசம் அடைந்ததற்குக் காரணம் சிலம்பக் கூத்தும், நாகரத்தினம் செய்த வம்புத்தனமும், சந்திரிகாவின் வாழ்க்கையில் ஏற்பட்ட குமைச்சல்களைப் பற்றி அவள் கேள்விப்பட்டதை நினைத்துப் பார்த்ததும்தான்.

'ஒரு பெண் திருமணம் செய்து கொள்ளாமல் வாழ நினைத்தால், சமூகம் அந்த நினைப்பைக் கெடுப்பதற்கு எத்தனை உத்சாகத்தோடு முனைந்து கேடு செய்கிறது!'— இவ்வாறு நினைத்தாள் லிலி. இந்த நினைப்போடு இப் பொழுது பாப புண்ணியங்களைப் பற்றிப் பாதிரியார் செய்த சொற்பொழிவும் சேர்ந்து கொண்டு, லிலியின் மனத்தை மேலும் கிளறியது.

'குடும்பப் பொறுப்பு என்னுடையது என்ருளே தாயார். அந்தப் பொறுப்பைச் சரியாக நான் நிறைவேற்ற வேண்டுமே! பாவப் பாதையிலே நான் காலெடுத்து வைத்து விடக் கூடாதே!'

இவ்வாறு ஒரு கவலை லிலியின் மனத்தில் உண்டாயிற்று. ஆலயத்திற்கு வெளியே வந்தாள்.

அந்த ஆலயத்தின் திறந்த வெளியில் தோட்டம் போன்று இருந்த பரந்த நிலத்தில் கல்லறைகள் நின்றன. லிலியின் தாயார் அந்தக் கல்லறைகள் ஒன்றின் கீழேதான் மரண நித்திரை செய்கிருள்.

சஞ்சலமும் துக்கமும் அதிகரித்தவளாக லிலி ஓட் அவுஸ் அந்தக் கல்லறையை நோக்கி நடந்தாள். நடந்து சென்று மண்டியிட்டாள். உருக்கமான முறையில் தன் தாயை நினைத்துக் கண்ணீர் வடித்த வண்ணம் பிரார்த்தனை செய்தாள்.

"யாருடைய வாழ்வில் என்ன மாறுதல் உண்டான போதிலும் என்னை அப்பழுக்கற்ற கன்னியாகவே வைத்தி ரம்மா! உன் விருப்பப்படியே நான் குடும்ப பாரத்தைச் சுமக்கிறேன்!" என்று தியானித்தாள் லிலி. அப்போது எங்கோ கனவு உலகிலிருந்து கேட்பது போல லிலியின் நினைவுச் செவியிலே கீழ்க்கண்டவாறு விவிலிய வேதம் ஒலித்தது:

"வருத்தப்பட்டுப் பாரம் சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்! நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்!"

* * *

அகில உலகச் செய்தி ஸ்தாபனத்தில் ராமநாதன் ஏகச் சுருசுருப்பாகச் செய்திகளை வகைப்படுத்துவதும், டெலி ப்ரின்டரில் வந்து சேர்ந்த தகவல்களைக் கத்தரித்து அந்தந்தக் கிளைகளுக்கு அனுப்புவதுமாக மூச்சுவிட நேர மில்லாமல் ஒரே படபப்பாக வேலை செய்து கொண்டிருந் தான். அப்போது, சற்றும் எதிர்பாராத விதத்தில் வேக மாக ஒரு 'சப்ராஸி' வந்து ஒரு தந்தியைக் கொண்டு வந்து மேஜைமேல் ராமநாதனுக்கு முன்பாக வைத்தான்.

தந்தி உறையைப் பார்த்ததும் ராமநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அது ஆபீஸ் தந்தி யில்லை. 'ராமநாதன்' என்று பெயர் போட்டு விலாச மிட்டிருந்தது. எனவே சொந்தக் காரியமாக வந்த தந்தியாகத்தான் இருக்க வேண்டும்.

பதறிய கைகளோடு அந்தத் தந்தியை எடுத்து உடைத்துப் பார்த்தான் ராமநாதன். திருச்சியிலிருந்து அப்புலிங்கம் கொடுத்திருந்த தந்தி அது.

"மிகவும் முக்கியம். எந்த வேலை எப்படியிருந்தாலும் உடனே இரண்டு வாரம் லீவு போட்டுக்கொண்டு இங்கே வந்து சேரவேண்டும். டாக்டர் சுரேஷும் நானும் ஆவலோடு காத்திருக்கிறோம். அப்பு."

இந்தத் தந்தியைப் படித்ததும் ராமநாதனுக்குப் படபடப்பு இன்னும் அதிகரித்தது. விஷயங்களை ஏற்கனவே ஒருவகையாக ஊகித்திருந்த போதிலும், சாதாரணமாகக் கடிதத்திலே வந்து சேர வேண்டிய ஒரு முக்கிய செய்தியைத்தான் அவன் இந்த நிமிஷம் வரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அதற்கு மாறாக இப்பொழுது இந்த மாதிரி ஒரு தந்தி வந்தது அவனுக்கு ஒரே திகைப்பாகப் போய் விட்டது.

அக்காள் சாவித்திரி அம்மாளிடமிருந்து 'கடிதம் வரும்' என்று எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தான். ஆனால் அவளிடமிருந்து எவ்விதமான தகவலும் இல்லை. அது விஷயம் அவனுக்கு அளவற்ற ஆத்திரத்தைக் கொடுத்திருந்தது. இப்பொழுது இப்படி ஒரு தந்தியும் வரவே, ஆத்திரம் அதிகரித்ததோடு பொறுமையில்லாத நிலைமையில் அக்காளிடம் கடுமையாகக் கோபமே உண்டாயிற்று ராமநாதனுக்கு.

'சடசட என்று வாயாடிப் பேச்சுப் பேசத்தான் லாயக்கு அவள். என்ன விஷயம், முடிவு என்ன, என்றெல்லாம் சட்டென்று தெரிந்து கொள்ள அவளால் முடியாது. வழவழப்பு!'—மனத்துக்குள்ளே அக்காளை இப்படிச் சபித்துக் கொண்டான்.

'பம்பாய் சென்று வந்ததில் ஒரு வாரம் போயிற்று. இப்பொழுது பழையபடியும் இரண்டு வாரம் என்றால், எப்படி லீவு கேட்பது?' என்று ஒரே எரிச்சலோடு நெற்றியைப் பிசைந்து கொண்டிருக்கும் போதே, ராமநாதனின் மேலதிகாரி அவனுடைய அறைக்குள்ளே நுழைந்தார்.

"என்ன ராமநாதன் ! எப்பொழுது புறப்படுகிறீர்கள் திருச்சிக்கு ?" என்று கேட்டார் அவர், புன்முறுவலோடு. ராமநாதனுக்கு இப்பொழுது திகைப்பு இன்னும் அதிகரித்தது.

"டாக்டர் சுரேஷ் திருச்சியில் இருக்கிறார் என்று எனக்கு இன்று காலையிலேதான் தெரியும். உங்களை உடனே திருச்சிக்கு அனுப்பி வைக்கும்படி எனக்கு எழுதியிருக்கிறார் !" என்றார் அவர்.

"உங்களுக்கு சுரேஷைத் தெரியுமா ?" என்று கேட்டான் ராமநாதன்.

"நாங்கள் இரண்டு பேரும் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் ஒன்றாகப் படித்தோம். இன்டர்மீடியேட் தேறிய பிறகு அவர் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தார். அதன் பிறகும்கூட நாங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு நாடகக் கிளப் நடத்தினோம். எங்கள் சங்கத்தில் டாக்டர் சுரேஷ்தான் ஹீரோ ! அடாடா ! எப்படி நடிப்பார் தெரியுமோ? நடிகனாகவே பிறந்து வளர்ந்தவன்கூடத் தோற்று விடுவான் !"

"நீங்கள் அவருக்குச் சிநேகிதர் என்று சுரேஷ் என்னிடம் சொல்லவே இல்லையே. தில்லியில் நீங்கள்தான் மானேஜராக இருக்கிறீர்கள் என்று அவருக்கு ஒரு கடிதத்தில் எழுதியிருந்தேன். உங்களைத் தெரிந்ததாகவே அவர் ஒரு வார்த்தை பதில் எழுதவில்லையே !"

"ராமநாதன் ! சுரேஷ் எப்பொழுதுமே எந்தக் காரியத்தையும் நாடகப் பண்போடு செய்கிறவர். அதுதான் சொன்னேனே, எங்கள் நாடகங்களில் அவர்தான் ஹீரோ என்று ! அந்தப் பழக்கம் வீண் போகுமா !"

இப்படிச் சொல்லி விட்டு அவர் சிரித்தார். ராமநாதனுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. ஆனால் ராமநாதனுடைய பதிலுக்கு அவர் காத்திருப்பதாகத் தோன்றவில்லை. அவரே தொடர்ந்து பேச ஆரம்பித்தார்.

" அவசியமில்லாமல் சுரேஷ் யாருக்கும் தொந்தரவு கொடுக்க மாட்டார். ஆகையினால் நீங்கள் இன்றைக்கே திருச்சிக்குக் கிளம்பிவிட வேண்டியதுதான். என்ன விஷயமோ தெரியவில்லை ! மிக மிக முக்கியமானதாகத்தான் இருக்க வேண்டும் ! சந்தேகமில்லை " என்றார் மேலதிகாரி.

தந்தியைக் கையில் வைத்துக் கொண்டு பலத்த யோசனையில் ஈடுபட்டிருந்த ராமநாதனுக்கு அதற்குமேல் யோசனை செய்ய வேண்டிய அவசியம் ஏதும் இல்லை.

" சௌகரியமான பிரயாணம் உங்களுக்கு வாய்க்குமாக !" என்று ஆங்கிலத்திலே வாழ்த்திவிட்டு அந்த அறையிலிருந்து நகர்ந்தார் அதிகாரி.

* * *

சொக்கிகுடியில் அன்று பளிஞர்கள் ஒரே பெருங் கூட்டமாகச் சேர்ந்து முருகனைப் பாடிய வண்ணம் குடிசையை நோக்கி வந்தார்கள் அல்லவா ? அவர்கள் அனைவரும் இலஞ்சிச் சாமியாரின் ஆசிரமத் திண்ணையிலே உட்கார்ந்திருந்த சொக்கியை நோக்கி நடந்தார்கள். அவளுக்கு முன்பாக வந்து நின்று கொண்டு எல்லாரும் தரையிலே முழங்கால் படும்படி மண்டி யிட்டு, வலது கையை நிலத்திலே பதித்து அந்தச் சமூகத்தின் சம்பிரதாயப்படி தண்டன் சமர்ப்பித்தார்கள். சொக்கி எழுந்து நின்று கொண்டாள். உடனே அந்தப் பளிஞர் கூட்டத்தில் வயது முதிர்ந்தவர்களாகக் காணப்பட்ட ஒரு பளிஞனும், அவனுடைய மனைவியும் கூட்டத்தை விலக்கி விட்டு முன்னணியிலே வந்து நின்று கொண்டு கைகோத்த வண்ணம் பாட ஆரம்பித்தார்கள் :

தும்பிக்கையார் பிள்ளையாரைத்
தொழுதுபாதம் தெண்டனிட்டோம்
ஆனைமுகத்து நாயகரை
அடிபணிந்து தெண்டனிட்டோம் !

தாமரைப் பூ பூத்துநின்ற
　　தையலவள் வாசலிலே
பூமகளும் நிலமகளும்
　　பொருந்தும்மண வாசலிலே

ஆனைமுகனுர் வந்துநின்று
　　அசைந்தாடும் வாசலிலே
ஆறுமுக வேலவர்தான்
　　அவதரித்த வாசலிலே

இவ்வாறு அந்த இருவரும் பாடினுர்கள். வார்த்தைகளிலே மலைநாட்டுக் கொச்சை உச்சரிப்பும் வார்த்தைச் சிதைவும் இருந்தன. ஆனுலும் எத்தனையோ பல ஆண்டுகளாக வழி வழியாக வந்த அந்த நாடோடிப் பாடல் இலஞ்சிச் சாமியாரைக் கவர்ந்தது. இந்த நேரத்தில் அணி அணியாகப் பளிஞர்கள் அனைவரும் வரிசைப் படுத்தி நின்று, சொக்கிக்கு முன்னும் பின்னும் கையைத் தட்டிக் கும்மி யடிப்பது போல் தாளம் போட்டுக்கொண்டு பாட்டைத் தொடர்ந்து பாட ஆரம்பித்தார்கள்.

வேலும் மயிலும் விளையாடும் வாசலிலே
அன்னம் மிதந்து அசைந்தேகும் வாசலிலே

வண்மை வளம்உடையாள் வந்துநிற்கும் வாசலிலே
செல்வம் பெரிதுடையாள் சேவைதரும் வாசலிலே

இப்படி அவர்கள் பாடியதும், அந்தப் பளிஞர்கள் கூட்டத்தில் இருந்த பெண்கள் மட்டும் தனியாகச் சேர்ந்து ஒரு குதி குதித்து முன்னுல் வந்து நின்ருர்கள். மறு கணம் தலையை முன்னும் பின்னுமாக வளைத்து அசைத்துக் கும்மி தட்டிக் கொண்டு பளிஞப் பெண்கள் கீழ்க் கண்ட வாறு பாட ஆரம்பித்தார்கள்:

கலியாணம் கலியாணம் காரிகைக்கே கலியாணம்
அல்லி அரசாணிக்கும் அர்ச்சுனர்க்கும் கலியாணம்
ஆணழகன் அர்ச்சுனர்க்கும் பெண்ணழகி அல்லிக்கும்
ஆசார வாசலிலே அழகுக் கல்யாணம்!

இந்த இடத்தில் ஆண்களும் சேர்ந்து பாட ஆரம்பித்தார்கள் :

**கலியாணம் என்றுசொல்லிக் காடெல்லாம் முழுதறிய**
**உற்ருர் உறமுறையார் ஊரெல்லாம் பாக்குவைத்து**
**சம்பந்தி மார்களுக்குச் சதிருடனே பாக்குவைத்து**
**வாருங்கள் என்று சொல்லி வணங்கி வரவேற்று**
**முன்னூறு காதம் மூடியே பந்தலிட்டார் !**
**ஆயிரம் காதம் அகலமாய்ப் பந்தலிட்டார் !**
**எண்ணூறு காதம்பேர் இடமுள்ள பந்தலிலே**
**வாழை மரம்கட்டி வர்ணக் கொடிகட்டி**
**மாணிக்கப் பந்தலிலே வரிசையுடன் தான்தூக்கி**
**தென்னங் குருத்துவெட்டிச் சோலைக் கிளிகள்கட்டி**
**தாரும் கமுகுகளும் தனித்தனியே தொங்கவிட்டார் !**
**சொக்கட்டான் பந்தலிட்டுச் சோளக் கதிர்கட்டி**
**பாளங்கள் தொங்கவிட்டுப் பந்தல் அலங்கரித்தார் !**

இப்படிப் பாடி முடித்ததும், பெண்கள் மறுபடியும் குதித்துக் குதித்து வட்டமாகக் கும்மியடித்துக் கொண்டே பாடலை முடித்தார்கள் :

**கலியாணம் கலியாணம் காரிகைக்குக் கலியாணம்**
**அல்லிக்குக் கலியாணம் அர்ச்சுனர்க்குக் கலியாணம்**
**அல்லிக்கும் அர்ச்சுனர்க்கும் அழகான கலியாணம் !**

இப்படிப் பாடி முடித்ததும், அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் கையிலே கொண்டு வந்திருந்த பூச்செண்டுகளையும், வாழை கமுகுகளையும் ஒரு மலை போலச் சொக்கிக்கு முன்னல் குவித்து விட்டார்கள். குவித்து விட்டு, ஒரு வார்த்தையும் பேசாமல் மறுபக்கம் திரும்பி ஆடிக் குதித்துக் கொண்டே கைகூப்பிய வண்ணம் அங்கிருந்து சென்று விட்டார்கள்.

பாதிரி மரத்தில் பால் வடியும் செய்தி தலைவனுக்குத் தெரிந்து, அவன் தன் சமூகத்திற்கு அறிவிப்புச் செய்து

விட்டான் என்றதும், பளிஞர்கள் வன மோகினியான கன்னியைத் தேடிப் பிடித்து இந்த விதமாகத் தங்கள் முதல் மரியாதையைக் கன்னிக்குச் செலுத்துவது என்று ஒரு வழக்கம் பளிஞர் குடியிருப்பில் இருந்து வந்தது. இது இலஞ்சிச் சாமியாருக்குத் தெரியும்.

"சொக்கி! சொக்கப்பன் அறிவிப்புச் செய்தாச்சு. நீதான் வலது கைப்பெண் என்பது தீர்மானம் ஆகிவிட்டது. ஆனல் இடது கைப் பெண் யாருன்னு தான் நீ சொல்லமாட்டே?" என்ருர் சாமியார்.

"மாட்டேன் சாமி! இதுவரையிலும் இல்லாத வெட்கம் இந்த வினடியிலே யிருந்து எனக்கு வந்துட்டுது, சாமி!" என்று சொல்லிக் கொண்டே மான் குட்டியைப் போலத் துள்ளி ஓடி விட்டாள் சொக்கி!

* * *

அன்றிரவு சொக்கிகுடியில் இலஞ்சிச் சாமியார் தம்முடைய ஆசிரமத்துக்கு வெளியே ஒரு நார்க்கட்டிலை எடுத்துப் போட்டுப் படுத்துக் கொண்டார். குடிசை முகப்பிலே பாயை விரித்து அதில் உட்கார்ந்தான் ரவீந்திரன். கல்யாணி குடிசைச் சுவரின் மாடக் குழியிலே இருந்த அகல் விளக்கை எதிரே கொண்டு வைத்துத் தூண்டி விட்டு நின்று கொண்டிருந்தாள்.

"கல்யாணி! எனக்கு மூளைக் கோளாறு வந்தது பற்றி நீ கவலைப் படுவது இருக்கிறதே அது சுத்தப் பைத்தியக்காரத்தனம். உண்மையில் அந்த மூளைக் கோளாறு ஏற்பட்டிரா விட்டால் ஏற்கனவே எனக்கு இருந்த இரத்த வேகம் இப்பொழுது சமனுகி யிருக்காது. தெரிந்ததா?" என்ருன் ரவி.

தானுகவே அவன் பேச ஆரம்பிப்பது இதுவரையில் இல்லை, இப்பொழுது இப்படி அவன் பேச ஆரம்பிக்கவே ஆச்சரியமும் மகிழ்ச்சியும் பொங்கியவளாகக் கல்யாணி தன் கணவனின் வார்த்தைகளையே ஆவலோடு கேட்டவாறு நின்ருள்.

"கல்யாணி! டாக்டர் சுரேஷும் இலஞ்சிச் சாமியாரும் சர்ப்பகந்தியிலிருந்து செய்யப்பட்ட ஒரு மருந்தை எனக்குக் கொடுத்திருக்கிறார்கள். இதில் ஒரு பெரிய ஆச்சரியம் என்னவென்றால், எனக்கு மூளைக் கோளாறு ஏற்பட்ட விதமும், அதன் பிறகு நடந்த சம்பவங்களும் எல்லாம் அப்படியே இப்பொழுதும் நினைவு இருக்கின்றன! சந்திரிகா காணாமற் போனது, அவள் எழுதி யிருந்த கடிதத்தை நான் பார்த்தது, உடனே நீ மாடிக்கு வந்து இரைச்சல் போட்டது, நான் பட பட என்று படிகளிலே இறங்கியது, பிறகு நடந்த விபரீதம்—எல்லாமே திரைப்படம் மாதிரி என்னுடைய உள்ளத்தில் இப்பொழுது நினைத்தாலும் அப்படி அப்படியே தெளிவாக ஓடுகின்றன. இத்தனை அதிர்ச்சிக்கும் காரணம் என்ன என்று டாக்டர் சுரேஷ் தமது மூளையைக் குழப்பிக் கொண்டார் அல்லவா? அந்தக் காரணமும் எனக்கு இப்பொழுதுதான் தெரிகிறது. ஒரு பெரிய வியப்பு என்ன தெரியுமோ? டாக்டர் சுரேஷ் கண்டெடுத்துப் படித்த கடிதம் வேறு. நான் என் கையிலே வைத்துப் பார்த்துக் கொண்டிருந்த கடிதம் வேறு. நான் பார்த்த கடிதத்தை டாக்டர் பார்த்ததில்லை. டாக்டர் பார்த்த கடிதத்தை நான் பார்த்ததில்லை. ஆனால் இரண்டு கடிதங்களுமே சந்திரிகாவின் கடிதங்கள்தான் — பார்த்தாயா நான் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போகிறேனே. நீ நின்று கொண்டே இருக்கிறாயே. கால் கடுக்கும் அம்மா. புருஷனுக்கு முன்னால் மனைவி உட்காரக் கூடாது என்பதெல்லாம் அந்தக் காலம். என்னிடம் கேட்டால், மனைவிக்கு முன்னால் புருஷன் உட்காரக் கூடாது என்றுதான் சொல்லுவேன். ஏன் தெரியுமா? இந்தக் காலத்து மனைவிமார்கள் புருஷனை அங்கே இங்கே என்று வேலை கொடுத்துத் துரத்திக் கொண்டே யிருக்கிறார்கள். புருஷர்கள் கொஞ்சம் நிம்மதியாக உட்காருவது அவர்களுக்குப் பிடிப்பதில்லை. முகத்தை ஏன் சுளிக்கிறாய்? உன்னையா அப்படிச் சொன்னேன். இல்லை. காட்டுக்குள்ளே சம்பிரதாய மரியாதையெல்லாம் என்னத்துக்கு என்கிறேன்! சும்மா உட்கார்!"

இவ்வாறு பேச ஆரம்பித்தான் ரவி. அவனுடைய வார்த்தைகளில் வசமாகி நின்றாள் கல்யாணி.

# 43. குழலில் ஒரு துரும்பு!

"சந்திரிகா காணுமல் போனதற்கும் உங்களுடைய துயரத்துக்கும் என்ன சம்பந்தம் டாக்டர்? நீங்கள்தான் அதற்குப் பொறுப்பாளி என்று ஏன் நீங்கள் வருத்தப்பட வேண்டும்?"

இவ்வாறு கேட்டாள் அல்லவா சாவித்திரி அம்மாள் சுரேஷிடம். இந்தக் கேள்வியைத்தான் அப்புலிங்கமும் கேட்டான் டாக்டரைப் பார்த்து!

சாவித்திரி அம்மாளுடைய இந்தக் கேள்விக்குச் சரியானபடி பதில் சொல்லாமல் தப்பித்துக் கொண்டார் சுரேஷ். ஆனால் இப்பொழுது அப்படியில்லை. அப்புவின் கேள்விக்குப் பதில் சொல்வது என்று உறுதியாகத் தீர்மானித்து விட்டார்.

ஆமாம்; சந்திரிகாவின் வாழ்க்கை வரலாற்றை அப்புலிங்கத்திடம் முழுவதும் சொல்லித் தன்னுடைய திட்டங்களுக்கு அப்புவின் பூரண ஒத்துழைப்பையும் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் டாக்டர் சுரேஷ் அவனிடம் அந்தப் பேச்சை ஆரம்பித்தார்.

சவுக்கடி பால்வண்ணநாதர் எனப் புகழ் பெற்ற அந்த ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரைப் பற்றியும், இலஞ்சி என்ற அழகான கிராமத்தில் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரின் மைத்துனருடைய மகளுக்குக் கல்யாணம் நடைபெற்றபோது; அந்தக் கல்யாண வீட்டில் இன்ஸ்பெக்டரின் அருமைக் குமாரி காணுமற்போன சம்பவத்தைப் பற்றியும், டாக்டர் சொல்லி முடித்ததும் அப்பு அந்த ஆணித்தரமான கேள்வியைக் கேட்டான், டாக்டருக்கு ஏன் அது விஷயத்தில் அத்தனை துயரம் என்று!

"அப்பு! உன்னிடம் சொல்வதில் தவறு இல்லை. யோசித்துப் பார்த்தால் அந்த விவரத்தை உன்னிடம் சொல்ல வேண்டியது அவசியம் என்றே தோன்றுகிறது. ஏனென்றால் சந்திரிகாவின் வாழ்க்கையில் எனக்கு

இத்தனை தூரம் அக்கறை ஏற்பட்டுள்ள இரகசியம் அப்பொழுதுதான் உனக்குப் புரியும்."

இவ்வாறு சொன்னார் சுரேஷ். அப்பு கேட்டான்:

"அப்படியானால் டாக்டர், உங்களுக்கும் சந்திரிகாவின் குடும்பத்துக்கும் ஏற்கனவே தொடர்பு உண்டா?"

டாக்டர் புன்முறுவல் செய்தார். அடுத்த வினாடி பதில் சொல்ல ஆரம்பித்தார்.

"அப்பு! அந்தக் காலத்தில் நான் அம்பாசமுத்திரம் ஆஸ்பத்திரியில் டாக்டராக இருந்தேன். அப்பொழுது நான் ஒரு பிரம்மச்சாரி, உன்னைப் போல! அதன் பிறகு தான் கிருகஸ்தனானேன்!"

"அப்படியானால்?"

"பால்வண்ணநாதர் தம்முடைய மைத்துனரின் மகளுக்கு வரன் பார்த்தது வேறு யாரையும் இல்லை. இந்த சுரேஷைத்தான்!"

அப்புலிங்கம் அப்படியே திகைத்துப் போய் நின்றான்.

"டாக்டர் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? இலஞ்சியில் கல்யாணம் நடந்தது என்றீர்களே, அது—"

"ஆமாம். அது எனக்குத்தான். பால்வண்ணநாதரின் மைத்துனருடைய மகளைக் கைப் பிடித்தவன் நான்தான். இலஞ்சியில் என்னுடைய கல்யாணத்தின் போதுதான் சந்திரிகா காணமற் போனாள்! அதன் பிறகு தான் பால்வண்ணநாதருமே காணமற் போனார். வாழ்க்கையில் இந்த ஒரு சம்பவம் என்னுடைய அமைதியையும் மனசாட்சியையும் எத்தனை தூரம் பாதித்திருந்தது என்பதை யாரும் பூரணமாக உணர்ந்து கொள்ளவே முடியாது. உண்மையில் அன்று ஒரு நாள் திருச்சி ஆஸ்பத்திரியில் ரவீந்திரனுடைய இதயக் கதவு திறந்து, அந்த இதய அந்தரங்கத்திலே உள்ள உணர்ச்சிகளையெல்லாம் நான் கண்டு தெளிகிறவரை என் உள்ளத்திலும் நிம்மதி என்பது இல்லாமல்தான் இருந்தது. கடைசியில் ரவீந்திரன் ரயிலில் சந்தித்துத் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்த அந்தச் சிறுமியைப்

பற்றித் தெரிந்து கொண்ட பிறகுதான், நான் ஒருவாறு நிம்மதி பெற்றேன்!''

"அது சரி; ரயிலில் ரவீந்திரன் சந்தித்த சிறுமிதான் இலஞ்சிக் கல்யாணத்தில் காணமற் போன பெண் என்று எப்படி யூகித்தீர்கள்?''

"அது ஒன்றும் கஷ்டமில்லை, அப்பு! அந்தப் பிச்சைக்காரக் கிழவி இலஞ்சி என்ற பெயரைக் கேட்டதும் நடு நடுங்கிய காரணமும், மறுநாள் இலஞ்சிக் கோவிலுக்கு வந்து ரவீந்திரனிடம் பணம் வாங்கிப் போகச் சம்மதித்தவள், திரும்ப அந்தப் பக்கமே வராமல் மறைந்து போனதும் சேர்ந்து என் யோசனையைக் கிளறின. ஒரு வகையாகப் பால்வண்ணரின் மகள்தான் அந்தச் சிறுமி என்று யூகித்து விட்டேன். பிறகு சந்திரிகாவை நான் முதன் முதல் பார்த்ததும், என் யூகம் ஊர்ஜிதம் ஆகிவிட்டது. மிகச் சிறு வயதில் பார்த்த முகத்தின் சாயல் மங்கலாகத்தான் தெரிந்தது என்றாலும், அந்த மூக்கும் விழியும் பால்வண்ணரை அப்படியே நினைவுக்குக் கொண்டு வந்தன. அந்தக் காலத்தில் பால்வண்ணரின் குழந்தைக்குக் காந்திமதி என்று பெயர். காந்தி வீசிய அந்த மதிதான்—அந்தச் சந்திர பிம்பம்தான்—இன்று சந்திரிகாவாக ஒளி வீசுகிறது என்பதை உடனே முடிவு செய்து விட்டேன்! இன்று ரவீந்திரனுடைய வாழ்க்கையில் சந்திரிகா செய்த மகத்தான சாதனைகளை எண்ணும்போது சந்திரனுடைய பெயரே அவளுக்கு அமைந்துவிட்ட பொருத்தத்தை எண்ணி எண்ணி வியக்கிறேன்! ஏனென்றால் சர்ப்பகந்திக்கு 'சோடாசாந்த்' என்றும் 'சந்திரிகா' என்றும் வடநாட்டிலே அவர்கள் பாஷையில் இரண்டு பெயர்கள் உண்டு.''

ஐந்து நிமிஷம் மௌனம் நிலவியது. பிறகு டாக்டர் கீழ்க்கண்டவாறு மெதுவான குரலில் பேசினார்:

"அப்பு! இலஞ்சியில் நடந்த என்னுடைய கல்யாணத்தில் சந்திரிகா காணமற் போனாள். பிறகு அதே இலஞ்சியில் நடைபெற்ற வேறொரு கல்யாணத்துக்கு ரவீந்திரன் வந்தபோது, அந்தக் கலைஞனுடைய சந்திப்புக்கு உள்ளாகி அவனுடைய அன்பிலே அவள்

வளர்ந்தாள். இனி அதே இலஞ்சிக்கு அருகில் பொதிகை மலைக் காட்டில் நடக்கப்போகும் மற்றொரு கல்யாணத்திலே, அவள் பூரணமாக மீட்கப்பட்டு உரிய இடத்திலே சேரப் போகிறாள். இதுதான் வளர்ந்தும் தேய்ந்தும், தேய்ந்தும் வளர்ந்தும் இதய வானிலே தவழ்ந்து வருகிற அந்தச் சந்திரிகாவின் வாழ்க்கை வரலாறு!"

இப்படிச் சொல்லி முடித்தார் டாக்டர் சுரேஷ்.

* * *

சொக்கி குடியில் இலஞ்சிச் சாமியாரின் ஆசிரமத்துக்கு வெளியே பளிஞர்கள் நான்கு பேர்—வாலிபப் பிள்ளைகள்—உல்லாசமாகப் பாடிக் கொண்டு சென்றார்கள். கந்தப்பனுக்குச் சம வயதுப் பிள்ளைகள் அவர்கள். அவனுடைய தோழர்கள்!

புளிய மரத்துக் கிளி
பூவெடுத்துத் தின்னும் கிளி
உன்னை அடுத்த கிளி—கந்தையா
உனக்கேத்த பச்சைக் கிளி!

அரச மரத்துக் கிளி
அத்திப் பழம் கொத்தும் கிளி
பஞ்ச வர்ணக் கிளி—கந்தையா
பாட்டிலே பேசுங் கிளி!

ஆல மரத்துக் கிளி
ஆறு தாண்டி வந்த கிளி
சோலை மரத்துக் கிளி—கந்தையா
சொந்தமாகி வந்த கிளி!

இந்தப் பாடல் ரவீந்திரனுடைய கவனத்தைக் கவர்ந்தது. கல்யாணியிடம் தன்னுடைய மூளைக் கோளாறு

பற்றிப் பேச ஆரம்பித்த ரவீந்திரனுக்கு இந்தப் பாடல் அடியெடுத்துக் கொடுப்பது போல இருந்தது.

"கல்யாணி! அந்தப் பாடலைக் கவனித்தாயா? இரவு இந்த நேரத்திலுங்கூட உறக்கமில்லாமல் பளிஞர்கள் கந்தப்பனையும் சொக்கியையும் எண்ணிப் பரிகாசப் பாடல் பாடிக் கொண்டு செல்லுகிறார்கள். பாதிரி மரத்தில் பால் வடிய ஆரம்பித்ததிலிருந்து இவர்களுக்கு வேறு நினைப்பே இல்லை. இரவும் பகலும் இவர்கள் அடுத்த பௌர்ணமியன்று நடக்கப் போகும் கல்யாணத்தைப் பற்றியே கற்பனை செய்து கொண்டு, அந்த மகிழ்ச்சியில் காட்டிலே உற்சாகமாகச் சுற்றிக் கொண்டு திரிகிறார்கள். தங்களுடைய தலைவனின் மகளுக்கும் தங்கள் நண்பனுக்கும் கல்யாணம் என்பதில் அவர்களுக்கு அத்தனை களிப்பு! வயதான பளிஞர்களையுந்தான் பாரேன்! முருகனைப் பற்றியும் முருகனுடைய இரண்டு தேவியர்களான வள்ளி, தெய்வயானையைப் பற்றியும் இன்று பகலிலே பாடிக் குதித்துக் கொண்டு இங்கே வந்தார்களே கவனித்தாயா?"

இப்படி ரவீந்திரன் சொன்னபோது கல்யாணி அம்மாளுக்குச் சுருக்கென்று உள்ளத்திலே முள் தைத்தது. ரவீந்திரன் இதைக் கவனித்தான்.

"முருகனுக்கு இரண்டு தேவியர்கள் என்று சொன்னதும் நீ முகத்தை ஏன் சுருக்கினாய் கல்யாணி. இந்தப் பளிஞருடைய குடியிருப்பில் இது அநாதிகாலமாக இருந்து வருகிற ஒரு பழக்கம் அம்மா. பளிஞர்களுடைய தலைவனுக்கு இரண்டு மனைவியர்கள் இருப்பதுபோல, இவர்கள் வழிபடும் தெய்வமாகிய முருகனுக்கும் இரண்டு தேவிமார்கள். குறிஞ்சி நிலம் என்று நம்முடைய தமிழ் நூல்களில் வர்ணிக்கப்படுகிற மலைநாட்டுத் தெய்வம் முருகன். குறிஞ்சிக் கடவுள் என்றே முருகனுக்குப் பெயர். அவனுக்கு இரண்டு மனைவிமார்கள். மற்றத் தெய்வங்களுக்குந்தான் எப்படி என்கிறாய்? மருதநிலத்தின் கடவுளான திருமாலுக்கும் இரண்டு மனைவிமார்கள், ருக்மிணி, சத்தியபாமை என்று! பார்த்தாயா, இன்னும் முகத்தைச் சுருக்குகிறாயே—ஐயய்யோ இது என்ன! உன்னுடைய கண் கலங்குகிறதே! கல்யாணி, கல்யாணி!"

கண் கலங்கியது கல்யாணிக்கு. நின்று கொண்டிருந்தால் கலக்கம் அதிகமாகத் தெரியும் என்று நினைத்தாளோ என்னவோ, கல்யாணி குடிசைத் திண்ணையிலே இப்பொழுது உட்கார்ந்து கொண்டாள். இரண்டு துளி கண்ணீர் அவளுடைய விழிகளிலே அரும்பிக் கீழே சிதறுவதற்காகத் தயங்கி நின்றது. ரவீந்திரன் புன் முறுவல் செய்தவாறு பேச்சை மேலே தொடர்ந்தான்.

“ கல்யாணி, ஒரு மனிதனுக்கு எத்தனை மனைவியர்கள் இருக்கலாம் என்பது இன்று நேற்று ஏற்பட்ட பிரச்னையில்லையம்மா ! தெய்வங்களுக்கு மத்தியிலும் இதே பிரச்னைதான். சொக்கி, கந்தப்பன், பளிஞர்களின் உலகம் —இங்கும் இதே பிரச்னைதான். ரவீந்திரன், கல்யாணி, சந்திரிகா— இந்த மூன்று பேருடைய உலகத்திலும் இதே பிரச்னைதான். ஒன்று தெய்வ உலகம். இன்னொன்று நாகரிகம் படராதவன உலகம். மூன்றாவதோ நாகரிகம் என்ற பெயரில் மிக மிக முன்னேறி யிருப்பதாகச் சொல்லும் நகரத்து மக்களுடைய பட்டண வாழ்க்கை உலகம். இந்த மூன்று உலகிலும் எல்லாரையும் குழப்பியடிக்கிற இந்தப் பிரச்னை இப்பொழுது உன்னுடைய கண்களைக் கலங்கச் செய்கிறது. கண்ணீர்த் துளிகள் கீழே விழுவோமா, வேண்டாமா என்று என்னைப் பயமுறுத்துகின்றன. அப்படித்தானே ?”

இவ்வாறு கேட்டு விட்டு ரவீந்திரன் குறும்புத்தனமாகக் கல்யாணியைப் பார்த்தான். அவளுடைய கபடம் இல்லாத முகத்தில் எல்லையற்ற சோகம் பாசி போலப் படர்ந்து நின்றது.

“ கல்யாணி, ஆதியிலிருந்தே நீ என்னுடைய உள்ளத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாத காரணத்தினால்தான் இத்தனை குழப்பங்களும் நேர்ந்தன. உன்னைச் சொல்லுகிறேன். அது தவறு. உண்மையில் நானே என்னுடைய உள்ளத்தைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கவில்லை. நான் மட்டும் என்ன, சந்திரிகாவுமே அப்படித்தான். அவளுமே அவளுடைய உள்ளத்தைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கவில்லை. இந்த மனச் சிக்கலின் காரணமாக ஏதேதோ குழப்பங்கள் நடந்தன.

இப்பொழுது இத்தனை குழப்பங்களின் பயனாக நம்முடைய உள்ளம் தெளிய ஆரம்பித்திருக்கிறது. அந்தத் தெளிவி லிருந்து பேசுகிறேன். என்னுடைய வார்த்தையை நம்பம்மா கல்யாணி!"

இவ்வாறு சொல்லி விட்டு ரவீந்திரன் கல்யாணியைப் பார்த்துக் கேட்டான் :

".கல்யாணி! நீயே சொல். ஒரு பூப் பூத்த இடத்தில் இரண்டு கனிகள் எங்காவது உண்டாகுமா? இதை ஏன் நீ புரிந்து கொள்ளவில்லை? கண்ணன் பல கோபிகையர் களோடு விளையாடினான் என்றால் அது கண்ணனுடைய தெய்வப் பண்புக்கு ஒரு விளக்கம். சாதாரண மனித இதயம் படைத்த மக்களின் உலகிலே உள்ளத்தைத் துண்டு போடுவது என்பது உண்டா? மலை ஜாதி மக்களுடைய சமூக அமைப்புக்குச் சில பழக்க வழக்கங்கள் பொருத்தமாக இருக்கலாம். அதே வழக்கங்களை நாகரிக சமூகத்தோடு பழகி, குடும்பம் என்றும் உரிமை என்றும் கட்டுப்பாடுகளை வளர்த்துக் கொண்ட ஒரு கந்தப்ப னுடைய வாழ்க்கையிலேயே கூட நாம் இன்னும் எதிர் பார்க்க முடியாது. நிச்சயமாகச் சொல்கிறேன். தன்னுடைய அன்பை ஒரே மாதிரி இரண்டு பெண் களுக்குப் பிரித்துக் கொடுப்பது என்பது கந்தப்பனால்கூட முடியாத காரியம் என்றுதான் நான் நினைக்கிறேன். இரண்டு மனிதர்களிடத்தில் ஒருவன் ஒரே மாதிரி எப்படி அன்பு செலுத்த முடியும்? ஏற்றத் தாழ்வு இருந்தே தீரும். இரண்டுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கவே இருக்கும். அப்படியானால் சந்திரிகாவுக்கும் எனக்கும் இருந்த தொடர்பு என்ன? அது ஏன் இத்தனை பெரிய சிக்கல் களுக்குக் காரணமாயிற்று?

"கல்யாணி, மீண்டும் மீண்டும் உன்னிடமே கேள்வி களைப் போடுகிறேன் என்று நினைக்காதே. உன்னைக் கேட்கிற கேள்விகள் எல்லாம் என்னையே பார்த்து நான் கேட்டுக் கொள்ளும் கேள்விகள். என்னுடைய இரத்த வேகமும் என் நரம்புகளின் துடிப்பும் இப்பொழுது சமனாகி இயங்குகின்றன. ஒவ்வொரு நாளும் சாமியாருடைய மருந்து வேலை செய்து வருகிறது. படிப்படியாக என்

மூலையில் ஒரு குளிர்ச்சி பரவிக் கொண்டு வருகிறது. இப்பொழுது அந்தச் சம்பவங்களை யெல்லாம் நினைத்துப் பார்க்கிறேன். எனக்கே திகைப்பாக இருக்கிறது. அன்று ஒரு நாள் ஆஸ்பத்திரியில் டாக்டர் சுரேஷிடம் என் இதயத்தைத் திறந்து பேசினேன். அப்பொழுது எனக்கே என்னைப் பற்றி ஒரு தெளிவு இல்லை. என்னிடமே எனக்கு ஒரு நம்பிக்கை இல்லை. என் உணர்ச்சிகளைப் பற்றியே எனக்கு உறுதி இல்லாமல் இருந்தது. அதிகம் சொல்வானேன்? அன்று சந்திரிகா காணுமற் போனபோது, அவள் எழுதி வைத்துச் சென்ற கடிதத்தைக் கையில் எடுத்துப் பார்த்தேனே நினைவிருக்கிறதா? அப்பொழுது என் மனம் அடைந்த குழப்பமும் வேதனையும்!

"கல்யாணி, அந்தக் கடிதம் சந்திரிகாவின் முதலாவது கடிதம். ஆற்றிலே போய் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வது என்ற தீர்மானத்தில் அவள் அதை எழுதி யிருக்கிருள். அதைப் படித்ததும் என் உள்ளம் துடித்தது. நான் கற்ற கலை, என் குடும்பத்தில் வழி வழியாக வந்த பிதிரார்ஜிதச் சொத்து, அந்த அற்புதமான சங்கீதச் செல்வம்—இத்தனையும் காவேரி நதியோடு போய் விடுவதா! எத்தனை கனவுகள் கண்டேன்! என்னவெல்லாம் கற்பனை செய்தேன்! என் உள்ளத்தில் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்த சங்கீதத்தை யெல்லாம் காவேரியிலே கொண்டு கொட்டி முழுகடிப்பதற்காகவா அத்தனை வாஞ்சையோடு சந்திரிகாவுக்குப் பயிற்சி அளித்தேன். ஐயோ! அந்தக் கடிதத்தைப் படித்ததும் என் இதயம் வெடித்தது. என் உள்ளத்திலிருந்து உதிரம் கொட்டியது. ஆருகக் கண்ணீர் வடிந்தது. ஆனுல் அதை நீ புரிந்து கொள்ளவில்லை. அது உன் குற்றமில்லை. என் குற்றமில்லை. யாருடைய குற்றமும் இல்லை. அது இதயத்தின் குற்றம். நீ ஒரு மனைவியாக நின்றதின் குற்றம். நான் ஒரு கணவனுக அமைந்ததன் குற்றம். இல்லை இல்லை. அதுகூடத் தவறு. அது அன்பின் குற்றம். ஒரு மனைவிக்கும் கணவனுக்கும் இடையே ஓடுகிற பாசத்தின் குற்றம். இன்னும் யோசித்துப் பார்த்தால் அது குற்றமே யில்லை. அதுதான் நியாயம்.

ஆனால் அந்த நியாயத்தை, நியாயம் என்று புரிந்து கொள்வதற்கு வேண்டிய மனநிலை நமக்கு இல்லை. எனக்கு இல்லை. அந்த மனநிலை எனக்கு இல்லை என்பதைப் புரிந்து கொண்டு அநுதாபப் படக் கூடிய பொறுமை அல்லது மனத்திட்பம் உனக்கு இல்லை. அதுமட்டும் இருந்திருந்தால், நீ ஏன் அந்தக் கடிதத்தை வெடுக்கென்று என் கையிலிருந்து பிடுங்கி அதைக் கிழித்துப் போட முனைந்தாய்? நானாவது பொறுமையோடு இருந்திருக்கலாம் அல்லவா? நான் திமிறினேன். நீ விடவில்லை. மாடிப் படிகளில் ஓடினாய். எனக்கு ஆவேசம் வந்தது. அந்தக் கடிதத்தைப் பல வந்தமாக வாங்கிப் படித்துவிட்டு நீ என்ன சொன்னாய்? 'இவள் முழுகி விட்டால் குடியே முழுகி விடுமோ! யாரை இப்படிப் பயமுறுத்துகிறாள்!' என்றாய். ஞாபக மிருக்கிறதா? கல்யாணி, அந்த வார்த்தைகளை என்னால் தாங்க முடியவில்லை. என்னுடைய சங்கீத பரம்பரையை நிலை நாட்ட வேண்டும் என்ற என் உணர்ச்சியை நீ புரிந்து கொள்ளாதது மட்டுமில்லை, அதை ஏளனப் படுத்தினாய் என்று நினைத்தேன். சந்திரிகாவுக்கும் எனக்கும் இடையே இருந்த அந்த எல்லையற்ற பாசத்தை நீ நிந்தித்தாய் என்று எண்ணினேன். கையும் காலும் எனக்குப் பதறின. அப்படியே உன்மேல் பாய்ந்தேன். உணர்ச்சி வேகத்தில் நீ சற்று விலகியதும், என் கால் இடறிற்று. மாடிப் படிகளிலே கால் சருக்கி விழுந்தேன். பிறகு? பிறகு? பிறகு என்ன நடந்தது? ஒரே குழப்பந்தான்! உண்மை யில் அதே இரவில் ஆற்றில் விழுவதில்லை என்று தீர்மானித்த சந்திரிகா, மறுபடியும் வீட்டு வரை வந்து, தன்னுடைய இரண்டாவது கடிதத்தை ஜன்னலோடு உள்ளே போட்டிருக்கிறாள். அதை நீயும் கவனிக்கவில்லை. நானும் கவனிக்கவில்லை. ஒரு வாரம் கழித்து அது டாக்டரின் கையில் அகப்பட்டிருக்கிறது. அந்தக் கடிதத்தை ஸ்டெதஸ்கோப் வைத்துப் பார்த்துக் குழம் பினார் அவர்!''

கல்யாணி அம்மாள் விம்மி விம்மிக் கண்ணீர் வடித் தாள். ரவீந்திரன் எழுந்து சென்று தன்னுடைய மேல் துண்டினால் கல்யாணியின் கண்களைத் துடைத்தான்.

"கல்யாணி, அழாதே! இதெல்லாம் சென்றுபோன விஷயங்கள். இவற்றிற்காக அழக் கூடாது. இந்த விஷயங்கள் சம்பவித்தபோது எத்தனை தரம் அழுதோம் நாம்! அந்த அழுகை போதாதா? இப்பொழுது அவற்றை நினைத்துப் பார்க்கும்போது கூட அழ வேண்டுமா? உண்மையில் இவற்றை இப்பொழுது நினைத்துப் பார்க்கும்போது சிரிக்க அல்லவா வேண்டும்!"

இப்படிச் சொல்லிவிட்டு ரவீந்திரன் மறுபடியும் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தான். அவனுடைய கண்களிலே பழைய குறுகுறுப்பு இருந்தபோதிலும் அந்தக் குறு குறுப்புக்கு ஊடாக ஒரு காரண காரியத் தொடர்பு இழையோடிக் கொண்டிருந்தது. விழி மையத்திலே சூன்யம் விலகி, பிரகாசமான ஒளி ஒன்று ரத்தினக் கல்லின் ஜொலிப்பைப் போல மின்வீச்சு வீசிக் கொண்டிருந்தது.

கல்யாணி அம்மாள் ஒருவார்த்தையும் பேசவில்லை. ஒரே துக்கத்தில் ஆழ்ந்திருந்தவள் சற்று நேரத்திற் கெல்லாம் முந்தானையினல் முகத்தைத் துடைத்துக் கொண்டு ரவீந்திரனைப் பார்த்துச் சொல்லுவாள்:

"எது எப்படி யிருந்தாலும் நான் ஒரு பெண்தானே. என்னுடைய புத்திக்கு எட்டாத விஷயங்களைக் கொண்டு நான் உங்களுடைய மனத்தைப் புண்படுத்தி யிருந்தால் அதைப் போலப் பாவம் வேறென்றும் இல்லை. அப்பா அந்தக் காலத்தில் அடிக்கடி சொல்லுவார்கள், கல்லானு லும் கணவன் புல்லானலும் புருஷன் என்று. ஆனல் என் விஷயத்திலோ நான் எவ்வளவோ பெருமைப்பட வேண்டிய புருஷனைப் பார்த்துத்தான் எனக்கு மாலை யிட்டார்கள். கல்லுக்கும் புல்லுக்கும் என்னை வாழ்க்கைப் படச் சொல்லவில்லை எங்கள் அப்பா! அப்படி யிருந்தும் நான்தான் என்னுடைய அறிவுக் குறைவினல்......"

"இல்லவே இல்லை கல்யாணி. குற்றம் என்று ஒன்று உன்னிடம் சொல்ல வேண்டும் என்ருல், அது நீ ஒரு பெண்ணுகப் பிறந்து, மனைவியாக வாழ்க்கைப்பட்டு, மனைவியாகவே வாழ நினைத்ததுதான்! அதைக் குற்றம் என்று சொல்லலாமா? அப்படிச் சொல்வது தவறு!"

“அதற்குச் சொல்லவில்லை. உங்களுடைய கலைத் திறமையை ஊரும் உலகமும் எல்லாம் கொண்டாடிற்று. அந்தப் பெருமையெல்லாம் எனக்கு அப்பொழுது தெரியாமல் போய் விட்டது. இப்பொழுது இத்தனை நாளும் அந்தப் பெருமை இல்லாமல் இருப்பதால், நீங்கள் எப்பொழுதாவது மறுபடியும் புல்லாங்குழல் வாசித்துக் கேட்பேனா என்று இருக்கிறது! உண்மையாகவே உங்களுடைய சங்கீதத்தைக் கேட்க வேண்டும், கேட்க வேண்டும் என்று என் மனது துடிக்கிறது.”

கல்யாணி மீண்டும் அழுது விட்டாள்.

ரவீந்திரன் சொன்னான்: “கல்யாணி! சங்கீதம் என்பது புல்லாங்குழலுக்குள்ளேயா இருக்கிறது. இல்லை. வாசிப்பவனுடைய உள்ளத்துக்குள்ளே இருக்கிறது அது. அந்த உள்ளம் சரிப்பட்டு விட்டால் புல்லாங்குழலும் பேச ஆரம்பித்துவிடும். அது சரியில்லாதவரையில் புல்லாங்குழல், புல்லாங்குழலில்லை. வெறும் மூங்கிற் குழல்தான். அடுப்பு ஊதத்தான் பயன்படும்! இல்லை. அன்று உண்டியற் கடைச் செட்டியார் சொன்னாரே அது போல அடுப்பு ஊதக் கூடப் பயன்படாது. ஒரு பக்கம் அடைத்திருக்கிறது!”

இப்படிச் சொல்லிவிட்டு ரவீந்திரன் சிரித்தான். சிரித்துக் கொண்டே சொல்லுவான்:

“கல்யாணி! என்னுடைய மனம் என்ற குழலில் துவாரங்கள் எல்லாம் இப்பொழுது அடைப்பு நீங்கிச் சரியாகி விட்டன. ஆனால் உதட்டிலே பொருத்திக் காற்று ஊதுகிறோமே, அந்தப் பெரிய துவாரத்திலேதான் ஏதோ ஒரு சிறு துரும்பு சிக்கி நிற்கிறது. அந்தத் துரும்பை எடுத்து விட்டால் இந்த உள்ளம் என்ற குழலிலிருந்து இசை வெள்ளம் மீண்டும் ஊற்றெடுத்து ஓடும். சந்தேகம் இல்லை. ஆனால் அந்தத் துரும்பை எப்படி எடுப்பது? டாக்டர் சுரேஷ்தான் அதற்கும் ஒரு மருந்து கண்டு பிடிக்க வேண்டும்—”

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே வெளியே ஒரு பலமான கூக்குரல் கேட்டது.

# 44. கனவு பலித்ததடி !

"தன்னம்பிக்கை எவனுக்கு இல்லேயோ, அவனுக்குப் பிறரிடத்திலும் நம்பிக்கை இராது. தன் திறமையில் தனக்கு நம்பிக்கை யிருப்பவனுக்குப் பிறரிடத்திலும் நம்பிக்கை இருக்கும். இதுதான் நுட்பமான மனத் தத்துவம், கல்யாணி! இது வரை இரத்த வேகத்திஞல் என்னுடைய நிலேமை அப்படி யிருந்தது. இது வரை வீண் சந்தேகங்களினுல் உன்னுடைய நிலேமையும் அப்படியேதான் இருந்தது. இப்பொழுது நம் இருவருக்குமே தன்னம்பிக்கை ஏற்பட்டு விட்டது. எனவே ஒருவரை ஒருவர் நம்பவும் இனிமேல் நம்மால் முடியும்."

இப்படி ரவீந்திரன் சொன்னபோது, வெளியே கேட்ட கூக்குரல் இன்னும் சமீபத்திலே கேட்டது.

ரவீந்திரன் எழுந்து கொண்டே சொல்லுவான் :

"கல்யாணி! வெளியே கூக்குரல் கேட்கிறது. அகவல் மகளுக்கு ஆவேசம் வந்து ஆடுகிருள் என்று நினேக்கிறேன். நீ உள்ளே, சமையல் அறைக்குள்ளே போய் உட்கார்ந்து கொள். நான் அகவல் மகளே உள்ளே வராமல் பார்த்துக் கொள்கிறேன். இல்லே யென்ருல் உன்னேப் பார்த்ததும் அவள் இன்னும் உற்சாகம் அதிகரித்து விடிய விடியக் குறி சொல்லிக் கொண்டே யிருந்து விடுவாள் !"

இவ்வாறு சொல்லி ரவீந்திரன் கல்யாணியை உள் அறைக்கு அனுப்பி விட்டுக் குடிசையின் கதவைத் திறந்தும் திறவாமலும் நிறுத்தி வந்து உட்கார்ந்தான்.

வெளியே குடிசையின் திண்ணேயில் இலஞ்சிச் சாமியார் உட்கார்ந்திருந்ததைப் பார்த்ததும் அகவல் மகள் தன்னுடைய குறியின் "சுருதி"யை இறக்கிக்கொண்டாற்போலத் தோன்றிற்று. ஆவேசம் அடங்கிக் கொஞ்சம் நிதானத்தோடு அவள் பாட ஆரம்பித்தாள். முன்னர் ஒருநாள் குறி சொல்லுவதாக ஆவேசம் வந்து பாடிஞள் அல்லவா, அதே பாட்டின் வரிகளேயே பாடிஞள்; ஆஞல்

இப்படி நடக்கும் அப்படி நடக்கும் என்று ஒரு காலத்தில் சொன்னதை, இப்படி நடந்தது அப்படி நடந்தது என்று, தான் குறி சொன்னபடி சம்பவங்கள் நடந்ததாகச் சொல்லிக் கொண்டாள் :—

ஊரான ஊர்விட்டு ஒருத்தன் இங்கே வந்தானும்
பேரான சீமைவிட்டு ஒருத்தன் இங்கே வந்தானும்
கட்டான ஆண்பிள்ளையும் கண்மணியாம் பெண்பிள்ளையும்
திட்டான வார்த்தையிலே திசைமாறி நின்றிட்டார்
ஆனாலும் இந்தமலை அருமையான மலையல்லோ
போனாலும் வந்தாலும் புண்ணியந்தான் சேருமல்லோ !
ஆகையினாலே—
சொக்கி குடிதனிலே சோதனைகள் நடவாமல்
பக்கம் இருந்திட்டான் பாங்கான முருகனுமே !

இந்தப் பாட்டை அவள் பாடிக் கொண்டிருக்கும் போதே இலஞ்சிச் சாமியார் அவளைத் தனியே ஆலமரத்துக்குப் பக்கம் அழைத்துக் கொண்டு சென்று விட்டார் என்று தெரிந்தது. ஏனென்றால், ரவீந்திரன் செவிகளில் அந்தப் பாடல் நலிந்து கேட்க ஆரம்பித்தது. படிப்படியாக ஓசை தேய்ந்து கொஞ்ச நேரத்திற்கு எல்லாம் பாட்டு தூரத்திலே சென்று நலிந்து விட்டது.

கல்யாணி அம்மாளுக்கு மனம் கலகலப்பாக இருந்தது. ஆனாலும் படுக்கையிலே படுத்தால் உறக்கம் வரவில்லை.

'மனத்தினுடைய காரியந்தான் எத்தனை விசித்திரமாக இருக்கிறது. பூரணமாக சோகம் ஏற்பட்டாலும் உறக்கம் வரவில்லை. சந்தோஷப்படும்படி ஒரு சம்பவம் நடந்தாலும் உறக்கம் வருகிறதில்லை! என்ன வேடிக்கை!' —இவ்வாறு நினைத்தாள் கல்யாணி.

நீண்ட நாளைக்கு முன்னால் கல்யாணி ஒரு கனவு கண்டாள் அல்லவா? "புள்ளி மானோ, புலியோ" என்று சந்தேகித்தாள் அல்லவா? அந்தக் கனவின் பொருள் இப்பொழுது பூரணமாகத் தெரியவில்லை யென்றாலும் ஏதேதோ யூகித்துப் பார்த்தாள். 'தான் சந்திரிகாவை

ஒரு புலி யென்று தப்பாக நினைத்ததும் பிறகு அது புலி யில்லை புள்ளி மான் தான் என்று தெளிவடைந்ததுந்தான் அந்தக் கனவின் அர்த்தமாக இருக்கக் கூடுமோ?' என்று எண்ணினாள். ஆனாலும் சரியாகத் தெரியவில்லை. 'கனவு களுக்கெல்லாம் இத்தனை தூரம் பொருள் இருக்குமா? இராது' என்று ஒரு நினைப்பு உடனே எழுந்தது. ' அப்படி யானால் இப்பொழுது இந்தக் குறிகாரி ஏதேதோ சொன்னாளே? அது மட்டும் எப்படிச் சரியாக இருக்க முடியும்? ஏற்கனவே இப்படி ஒரு குறி சொன்னாளா இவள்? பின் எதற்கு இந்தப் பாட்டை இங்கே குடிசை வாசலுக்கு வந்து பாடிவிட்டுப் போகிறாள்? ஒருவேளை இந்தக் கிழவிதான் சந்திரிகாவைத் தூக்கிப் போன கிழவி யாக இருக்குமோ? வரலாறு முழுதும் தெரிந்தவளாக இருக்குமோ?'—இப்படி ஒரு எண்ணம்! அடுத்த வினாடி 'சே! அப்படி இராது! எங்கேயோ பிச்சையெடுத்த கிழவி பயந்து போய் வேறு எங்கேயாவது ஓடி மறைந்திருப்பாள்! அவளுக்கெல்லாம் இத்தனை முக்கியம் கொடுத்து யோசிக்க வேண்டுமா?'—இந்த மாதிரி ஒரு எண்ணம். இப்படியாக இரவு முழுதும் கல்யாணி அம்மாள் தன்னுடைய தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டாள்!

அதே இரவில் சந்திரிகாவும் திருச்சியிலே உறக்க மின்றிப் படுத்துக் கொண்டிருந்தாள். அன்று மாலையிலே தான் டாக்டர் சுரேஷ் வந்து அவர்களிடம் ஒரு முக்கியமான அறிவிப்பைச் சொல்லிப் போனார்.

"நாளைக் காலையில் ராமநாதன் இங்கே வருகிறார். நாளை மறுநாள் நாம் அனைவரும் சொக்கிகுடிக்குப் புறப் படுகிறோம். அனைவரும் என்றால், சந்திரிகா, சாவித்திரி அம்மாள், அப்புலிங்கம், அவனுடைய தகப்பனார், தாயார், உஸ்தாத் மீரான், நாகரத்தினம், அவனுடைய குடும்பத் தார், பகோான், மஜீத், இவர்களோடு ஒரு வேளை ஓட் அவுஸ் குடும்பத்தாரும்! நமக்கென்றே ரயில்வேக்காரனிடம் சொல்லி ஒரு 'சொக்கிகுடி ஸ்பெஷலே' விடச் சொல்ல லாம் போலிருக்கிறது! என்ன, சந்திரிகா, சாவித்திரி அம்மாள்! உங்கள் இருவரையுந்தான் கேட்கிறேன்!"

இவ்வாறு சொன்னபோது, சாவித்திரி வாயெல்லாம் பல்லாகச் சிரித்தாள்.

அது சந்திரிகாவுக்கு அப்படியே கண்முன் வந்து கொண்டிருந்தது.

அன்றொரு இரவில் பம்பாயிலே அவள் ஒரு கனவு கண்டாள் அல்லவா? சந்திரனிலே தான் தவழ்ந்தது போலவும், யாரோ தன்னைத் தொடுவதற்கு வந்தது போலவும் இருந்ததே! பிறகு பம்பாயிலிருந்து ரயில் வண்டியில் வரும் போது தான் ஏதோ ஒரு கயிற்றில் நடனம் ஆடுவது போலவும், தன்னுடைய நடனத்துக்கு ரவீந்திரன் புல்லாங்குழல் வாசிப்பது போலவும், பிறகு யாரோ வேறொரு கை அந்தப் புல்லாங்குழலைப் பிடிக்க வருவது போலவும் எல்லாம் கனவிலே தெரிந்ததே! அதெல்லாம் உண்மையாக நடக்கப் போகிறதா?

சந்திரிகா யோசித்தாள் :

'டாக்டர் சுரேஷ் எந்த ஒரு விஷயத்தையும் தீர யோசித்து ஆழ்ந்து ஆராய்ந்து தான் முடிவு செய்கிறார். சந்தேகமில்லை. ஆகையினால் தன் வாழ்க்கையை அவர் எப்படி வகுத்தாலும் அது சரியாகத்தான் இருக்கும். எந்தக் கயிற்று நடனமாடினாலும், கைப்பிடிக்கு உதவுகிற குடை அவர்தான்! தவிரவும் தன்னுடைய குடும்பத்துக்கும் அவருக்கும் உள்ள தொடர்பு இப்பொழுது நன்றாகத் தெரிந்து போய் விட்டது. ஆகையினால் தன் கல்யாணத்தை முடிவு செய்ய அவருக்கு அதிகாரமே இருக்கிறது. ஆனாலும் இவர் ஏன் விஷயங்களை மூடு மந்திரமாக வைக்கிறார்?'

இப்படிப் பல யோசனைகளிலே புரண்டு கொண்டிருந்தாள் சந்திரிகா.

* * *

இரவு நீங்கி சூரியோதயம் ஆனபோது பொதிகை மலை பொன்மயமாகக் காட்சி தந்தது. தங்கத்திலே மரகதக் கற்களையும், சிவப்பு, நீலம், கோமேதகம், வைடூரியம், ஆகிய ரத்தினக் கற்களையும் வைத்துப் பதித்தது போல அந்தப்

பொன்மலையின் மேனியிலே வர்ண விசித்திரமான மலர்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன. பர்வத குமாரிக்கு முத்து மாலைகள் அணிவித்தது போல, தூரத்திலிருந்து பார்த்தால் பொட்டுப் பொட்டான அருவிகள் மாலை மாலையாக மின்னிக் கொண்டு தொங்கின! உதய சூரியனுக்குப் பூபாளம் பாடுகிற காலைப் பறவைகளின் ஒலியும், நீரோடைகளின் சலசலப்பும், வனத்துக்குள்ளே கேட்கிற ஒரு 'ஙொய்' என்ற ஓசையும் அந்த வனாந்திரக் காற்றிலே விம்மின.

இந்த ரம்யமான வேளையில்தான் மலைப் பாதையிலே பண்டாரங்களின் கூட்டம், சாரிசாரியாக எறும்புக் கூட்டத்தைப் போலச் சென்று கொண்டிருந்தது.

"என்ன சட்டிப் பரதேசி! திரும்பிக்கூடப் பார்க்காமல் நடக்குதே! அடாடா கட்டையா நடக்குது! கமன ஓடியில்லே அப்படி நடக்குது!" என்று சொல்லிக் கொண்டே சட்டிப் பரதேசியின் நடைக்குத் தானும் ஈடுகட்ட முயன்றது பழநிப் பண்டாரம். பின்னால் வந்த தென் காசிச் சாமி இந்த நடை வேகப் போட்டியிலே தானும் கலந்து கொள்ள எண்ணிப் பேச்சிலே கலந்து கொள்ள வந்தது:

"பழநிப் பண்டாரம், என்ன சொல்லுது அந்தக் கட்டை! கமன ஓடி நடக்குது என்று சொல்லுது! தப்பு! தப்பு! கமன ஓடி நடப்பிக்குது என்று சொல்லட்டும் சாமி! எந்தப் பிழை செய்தாலும் இலக்கணப் பிழை செய்யக் கூடாது சாமி! அதிலும் நம்முடைய சட்டிப் பரதேசி இலக்கண இலக்கியம் படிச்ச பரதேசியாக்கும்! ஜாக்கிரதை!"

இப்படிப் பேசியதும், முன்னால் வேகமாக நடந்து சென்று கொண்டிருந்த சட்டிப் பரதேசிக்கு உச்சி குளிர்ந்து விட்டது. நடையின் வேகத்தைத் தளர்த்தியது!

"என்ன சொல்லிற்று தென்காசி! இலக்கண இலக்கியமா! இந்தக் கட்டையினுடைய படிப்பெல்லாம் ஒரு படிப்பா சாமி! இலஞ்சிச் சாமிக்கு உறை போடக் காணாதே இந்தக் கட்டை! அடாடா! அதோட படிப்பு

யாருக்கு வரும்? அதிலேயும் அது இங்கிலீசிலே பேச ஆரம்பிச்சிட்டுதான்னு ஒரு வார்த்தை புரியுமா இந்தச் சடலங்களுக்கு! பேச்சுன்னு அதுதான் பேச்சு! அடாடா! முருகா! ஷண்முகா! ஞான பண்டிதா!"

இவ்வாறு சொல்லிற்று சட்டி. உடனே தென்காசி அதைத் தொடர்ந்தது.

"இலஞ்சிக் கட்டைதானே! அது உறைச்ச கட்டை சாமி! உறைச்ச கட்டை!"

பழநிப் பண்டாரம் கையைச் சுடக்குப் போட்டுக் கொண்டே சொல்லிற்று: "உறைச்ச கட்டையா! ஹூம் உறைச்ச சந்தனக் கட்டை சாமி! சந்தனக் கட்டை! இந்தக் கட்டை யெல்லாம் என்ன கட்டை! வெறுங் கட்டை! விறகுக் கட்டை! இன்றோ நாளையோ எரியக் கூடிய கட்டை!"

"என்ன சொல்லுது தென்காசி! இன்னொரு தரம் அப்படிச் சொல்லட்டும் தெரியும் சேதி! கட்டைகள் எல்லாம் எத்தனை மங்களமான ஒரு காரியத்துக்காகச் சொக்கிகுடிக்குப் போகுது! அதை மறந்துட்டு என்ன வார்த்தை சொல்லுது அந்தக் கட்டை! சடலம் எல்லாம் இப்போ நேரே உக்கிராணப் பிறையிலே உள்ள சமையல் அடுப்புக்குப் போகிற மாதிரியாகப் பேசுதே! கமன ஓடி அதிகமாகப் போச்சு போலிருக்கு! அப்படித்தானு?" என்று ஒரு அதட்டல் போட்டது சட்டிப் பரதேசி. தென்காசிச் சாமி இப்பொழுது என்ன பதில் பேசுவது என்று தயங்கியது. தயங்கிக் கொண்டே கீழே பார்த்தது, இன்னொரு கோஷ்டி அதே மலைப் பாதையில் நடந்து வந்து கொண்டிருந்தது தெரிந்தது. அதுவும் ஒரு பண்டாரக் கோஷ்டிதான். ஆனல் வெறும் கோஷ்டி இல்லை. ஒவ்வொன்றும் ஒரு அன்னக் காவடியைத் தோளின்மேல் தூக்கிச் சுமந்து கொண்டு வந்தது!

"என்ன சட்டிச் சாமி! இந்த மாதிரிக் கோபப் படலாமா! கீழே திரும்பிப் பார்க்கட்டும்! எத்தனை விறகுக் கட்டைகள் தலைக்கு ஒரு உலக்கைக் கட்டையைத் தூக்கிக் கொண்டு வருகிறது—சமையல் அடுப்புக்கு!"

“ஓ! அந்தக் கட்டைகளைச் சொல்லுதா சாமி! பலே முருகையாண்ணன்! அப்போ சரி சாமி! சரி! கொஞ்சம் இப்படி உட்கார்ந்து மூலிகையைக் கசக்கட்டும்! இருக்கிற மூலிகையைக் கசக்கட்டும்! இருக்கிற சஞ்சீவி முழுதும் இங்கேயே காலியாகி விடட்டும்! சொக்கிகுடி எல்லையிலே போய்விட்டால் பழைய சரக்கே கூடாது! அப்படியே புதுச் சரக்காகத்தான் இந்தக் கட்டைகளுக்கு வேண்டும்! என்ன பழநிப் பண்டாரம்! என்ன சொல்லுது?”

பண்டாரங்கள் அப்படியே பாறையிலே உட்கார்ந்து கஞ்சாப் பிடிக்க ஆரம்பித்தார்கள். பின்னால் வந்த கூட்டமும் காவடிகளைக் கீழே இறக்கி வைத்து விட்டுக் கோஷ்டியிலே சேர்ந்து கொண்டது!

“ஏஞ்சாமி! இலஞ்சிப் பண்டாரம் இப்போ கமன ஓடியை விட்டுட்டுதாமே! மெய்தானா அது?” என்று கேட்டது புதிதாக வந்து சேர்ந்த இன்னொரு பண்டாரம்.

“யாரு? இட்டிலிப் பண்டாரமா கேக்குது?” என்று நிமிர்ந்து பார்த்தது சட்டி. கண் ‘ஜிவு ஜிவு’ என்று கனகாம்பரப் பூவைப்போல் இருந்தது!

“ஆமா! இட்டிலிதான் கேக்குது! ரொம்பப் பசியாக் கேக்குது சாமி!” என்றது மற்றொரு வேற்றுக் குரல். அதற்குப் பட்டிப் பரதேசி என்று பெயர்! அதன் வலது கையிலே ஒரு சங்கிலி. அந்தச் சங்கிலியின் பிடி ஒரு வாலறுந்த நாயின் கழுத்தை வளைத்துக் கொண்டு கிடந்தது! அந்த நாயும் அதைப் பிடித்திருந்த சங்கிலியுந் தான் இப்பொழுது பட்டிப் பரதேசியின் பந்த பாசங்கள்! மற்றப்படி உலக பாசம் என்று ஒன்றும் கிடையாது!

“இது யாரு பதில் சொல்லுகிறது! அடடே! பட்டியா! என்ன சமுசாரப் பரதேசி! சௌக்கியமா இருக்குதா?” என்று பட்டியை விசாரித்தது சட்டி! இதற்குள் கோஷ்டி பெரிதாகப் போய் விட்டது. இத்தனை கூட்டத்தில் தன்னுடைய கேள்விக்குப் பதில் கிடைக்காமல் போய்விடுமோ என்று பயந்த இட்டிலி, “இலஞ்சிச் சாமியைப் பற்றிக் கேட்டுது இந்தக் கட்டை!” என்று மேலும் தனது கேள்வியை அழுத்தியது.

" இலஞ்சிச் சாமி இப்போ இருக்கிற நிலைமைக்கு அதைப்பத்தி இந்த அன்னக் காவடிகள் எல்லாம் பேசுகிறதே தப்பு! தெரிஞ்சுதா! பூர்வாசிரமத்திலே அந்தக் கட்டை யாரு தெரியுமா! தெரியுமா! தெரியுமாங்கிறேன்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே கஞ்சா தீர்ந்துபோன குழலைப் பாறையிலே ஓங்கி ஒரு தட்டுத் தட்டியது சட்டிப் பரதேசி. பட்டிக்கு உடம்பெல்லாம் ஆடியது. அந்த ஆட்டத்தில் இட்டிலியை அப்படியே கடிக்காமல் விழுங்கி விடுவது போல ஒரு பார்வை பார்த்தது பட்டிப் பரதேசி.

பட்டியின் வாய்க்குப் பயந்து போய் அப்படியே இருந்த இடத்திலேயே பம்மி விட்டது இட்டிலி! தூரத்தில் பயந்து போய் உட்கார்ந்திருந்த வாழைப்பழச்சாமி இட்டிலியையும் பட்டியையும் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டது.

* * *

மலைக் காட்டில் அங்கங்கே பாறைகளில் தங்கியும் படுத்துறங்கியும், துஷ்டர்களைப் பற்றியோ, விலங்குகளைப் பற்றியோ எவ்வித பயமும் இல்லாமல் இந்தப் பண்டாரக் கோஷ்டிகள் எல்லாம் சொக்கிகுடிக்குப் போய்ச் சேர மூன்று நாள் ஆயிற்று. நான்காம் நாள் மாலையில் பரதேசிக் கோஷ்டி சொக்கிகுடியின் எல்லைக்கு அருகே வரும்போது அங்கங்கே மரங்கள் வெட்டப் பட்டுப் பாறைப் பிரதேசங்கள் எல்லாம் திட்டுத் திட்டாகக் காட்சி தந்தன. பாறைச் சரிவுகளில் எல்லாம் பெரிய பெரிய உக்கிராண அடுப்புக்கள் போடப்பட்டு, மலை மலையாக விறகுக் கட்டைகள் குவிக்கப்பட்டுக் கிடந்தன. பூஞ் செடிகளிலெல்லாம் மருந்துக்குக் கூட ஒரு பூவைக் காணோம். எல்லாவற்றையும் பறித்துக் கொண்டு போயிருந்தார்கள். மூங்கிற் கழைகள் நின்ற இடம் எல்லாம் இப்பொழுது கட்டாந் தரையாக இருந்தது! பாக்கு மரங்களில் நாகரிக உலகத்தின் தீவட்டிகளான 'பெட்ரோமாக்ஸ்' விளக்குகள் தொங்கிக் கொண் டிருந்தன! குடியிருப்பை நெருங்க நெருங்க மரத்துக்கு மரம் தோரணம் கட்டப்பட்டிருந்தது! நெட்டிலிங்கக்

குழைகளும், மா இலைகளும், ஓலைக் குறுத்துக்களும் எப்படி யெப்படி யெல்லாமோ சேர்த்துப் பின்னப்பட்டுப் பனை நாரிலே தொங்கிக் கொண்டிருந்தன! அங்கங்கே சிலம்பம் ஆடுவதற்குப் போடப்பட்டிருந்த கயிற்று வளைவு களும் ஆடம்பரமாகக் காட்சி தந்தன. மலைப் பாதையின் இரண்டு புறத்திலும் அதிர் வேட்டுக்களுக்காகக் கூந்தற் பனைகளைச் சீவி விட்டிருந்தார்கள். நடந்து செல்லச் செல்லப் பளிஞர்களின் பாட்டும் கூத்துமாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

பண்டாரங்கள் இந்த அதிசயங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டே நடந்தார்கள். சொக்கிகுடிக்குள்ளே நுழையும் போது யானைகளின் பிளிறல் ஓசை கேட்டு அந்த "ஆனைப்பட்ட" சட்டிப் பரதேசியுங்கூட நடு நடுங்கிப் போய் ஓசை வந்த திசையைப் பார்த்தார். குட்டி யானைகளும் பெரிய யானைகளுமாக ஒரு வன வளைவுக் குள்ளே நின்று கொண்டிருந்தன.

யானைக் கூட்டங்களுக்கு அருகிலே மான்கள் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன. சொக்கி என்ற மந்திரக் கன்னியின் இந்திர ஜாலத்திலே கட்டுப்பட்டு அந்த வனத்தின் விலங்குகள் எல்லாம் வாய் மூடி மௌனமாக நின்று கொண்டிருந்தன!

கல்யாணத்துக்காகப் புறப்பட்டு வரும் பரதேசி களின் கோஷ்டிக்கு இதையெல்லாம் பார்த்ததும் ஒரே ஆனந்தம். இனிமேல் ஒரு வாரத்துக்கு முருகா னந்தமான சாப்பாடு. வேண்டிய மட்டும் மந்திர மூலிகை! ஏனென்று கேட்பாரில்லாமல் அந்த வனாந்திரத்திலே எங்கே வேண்டுமானாலும் தனிக் காட்டு ராஜாவாகச் சுற்றலாம். என்றாலும் இலஞ்சிச் சாமியாரை நினைத்தால் மட்டும் ஒரு சிறு நடுக்கம். எத்தனை தான் தங்களுடைய கோஷ்டியிலே சேர்ந்தவராக இருந்திருந்தாலும், என்றைக் குமே அவருடைய போக்கு அவர்களிடமிருந்து சற்று விலகியே தான் இருக்கும். 'கமனஓடி' ஒன்று தான் இவர்களோடு சரிநிகர் சமானமாக ஐக்கியப் படுத்தி வந்தது. இப்பொழுது அந்தப் பழக்கமும் அவரிடம் இல்லை என்று கேள்விப்பட்டதிலிருந்து பண்டாரங்

களுக்குக் கொஞ்சம் பதற்றமாகத்தான் இருந்தது. ஆனாலும் கல்யாணச் சந்தடியில் எதற்குத்தான் கட்டுப் பாடு உண்டு? அதிலும் சொக்கப்பன் இந்தச் சந்தர்ப் பத்தில் எத்தனை உற்சாகமாக இருப்பான்! கேட்பதற்கு முன்னால் 'ஸஸ்யாதிகள்' வந்து குவிந்து விடுமே! என்ன கவலை!

இப்படி எண்ணியதும் அன்னக் காவடிகள் குதி போட்டுக் கொண்டு நடந்தார்கள்.

சூரியன் மேற்குக் குன்றிலே விழுந்து வான மெல்லாம் சிவந்தது. இருள் கவிந்து வருவதற்கு முன்பு நிலவு உதயமாகிவிட்டது. "பாலும் தெளிதேனும் பாகும்" கலந்து வானத்திலே தெளித்த மாதிரி, நிலவின் ஒளி யானது வானம் எங்கும் இன்பமாகப் பரந்தது. மரங்கள் எல்லாம் வெள்ளி மரங்களாக விளங்கின. பாறைகள் எல்லாம் வெள்ளிப் பாறைகளாக நின்றன. நீரோடை களில் எல்லாம் வெள்ளி உருகி ஓடிக் கொண்டிருந்தது. யானைகளும், மான்களுங்கூட வெள்ளி முலாம் பூசிக் கொண்டு நின்றன. பண்டாரங்களின் தாடி யெல்லாம் வெள்ளிக் கம்பிகளாக மின்னிக் கொண்டிருந்தது. அவர்கள் கையிலே இருந்த பிச்சை ஓடும் கூட வெள்ளி ஓடாக மின்னியது! இந்த வெள்ளி மயமான சரீரங்கள் எல்லாம் வெள்ளியிலே செய்து நிறுத்தியது போலத் தோன்றிய மாபெரும் ஆலமரத்தை நோக்கி நடந்தார்கள்.

ஆலமரத்தின அடியிலே ஒரு பெருங் கூட்டம் உட்கார்ந்து கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்துக்கு நடுநாயகமாக வீற்றிருந்தார் இலஞ்சிச் சாமியார். அவ ருக்கு அருகிலே சொக்கியும் அவளுடைய சேடிப் பெண் களும் உட்கார்ந்திருந்தார்கள். மற்றொருபுறம் அப்பு லிங்கம், அவனுடைய தகப்பனார், ரவீந்திரன், நாக ரத்தினம், உஸ்தாத் மீரான், பகோரான் என்று ஒரு பெருங் கோஷ்டி வளைவாக உட்கார்ந்து கொண்டிருந்தது. கந்தப்பன் திரணையிலே உட்கார்ந்து பல்லில்லாத பெரிய வர்களுக்கு வெற்றிலை இடித்துக் கொண்டிருந்தான்.

" நண்பர்களே !" என்று பேச ஆரம்பித்தார் இலஞ்சிச் சாமியார்.

" நண்பர்களே ! சந்திரிகாவும் கல்யாணி அம்மாளும் குத்துவிளக்கு ஏற்றிக் கொண்டிருக்கிறார்கள். சாவித்திரி அம்மாள் கோலம் போடுகிறார்கள். இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர்களும் இங்கே வந்துவிடுவார்கள். அது வரை ஒரு சிறிய கோஷ்டிப் பாடல் நடைபெறும். அதன் பிறகு நம்முடைய வனநாயகி ஸ்ரீமதி சொக்கி அவர்கள் 'கந்தப்பனின் இடது கை' என்ற பொருள் பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவார்கள் !"

இவ்வாறு பொதுக் கூட்டங்களிலே தலைவர் நிகழ்த்துகிற முன்னுரையைப் போலப் பேசி நிறுத்தினார் இலஞ்சிச் சாமியார். எல்லாரும் அவருடைய வார்த்தையை ஆமோதிப்பது போலக் கை தட்டினார்கள்.

## 45. மங்களம்

சொக்கி ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவாள் என்று இலஞ்சிச் சாமியார் அறிவிப்புச் செய்து விட்டார். ஆனால் சொக்கி சாமியாரைப் பார்த்துப் பலமாக சிரித்தாள்.

" என்ன சாமி! என்னைப் போயிப் பிரசங்கம் பண்ணச் சொல்லுதீங்க சாமி ! ஒங்களுக்குத்தான் எல்லாம் தெரியுமே ! நீங்களே சொல்லிப் போடுங்க சாமி !" என்றாள் சொக்கி. இலஞ்சிச் சாமியார் இதை எதிர்பார்த்தவர் போல, வெகு சுலபமாகச் சிரித்தார்.

" ஏஞ்சாமி ! இவங்க எல்லாரும் வர்றதுக்கு முந்தி இப்பந்தானே ஒங்ககிட்டே எல்லா விவரமும் சொல்லி முடிச்சேன். இப்பம் இவுங்க முன்னாலே எப்படிச் சாமி சொல்லச் சொல்லுதீங்க. நான் மாட்டேஞ்சாமி !"

இப்படிச் சொல்லி அந்தக் கூட்டத்துக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டு விட்டு, மின்னலைப் போல அங்கிருந்து பளிச்சிட்டு மறைந்தாள் சொக்கி.

சிரித்துக் கொண்டே சாமியார் பேச ஆரம்பித்தார் :

" அதோ ! கல்யாணியும் சாவித்திரியும் வந்து விட்டார்கள். இனி நான் பேச ஆரம்பிக்கலாம். கவன மாகக் கேட்கிறீர்களா !

" நண்பர்களே, இந்தப் பொதிகை மலைக் குடியிருப் பைப் பற்றியும் பளிஞர்களின் பழக்க வழக்கங்களைப் பற்றியும் தர்ஸ்டன் போன்ற மேனாட்டு அறிஞர்கள் பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார்கள். பல மேனாட்டு அறிஞர்கள் இந்த மலைக் குடியிருப்பை வந்து பார்த்துப் படங்கள் எல்லாம் எடுத்துப் போயிருக்கிறார்கள். ஆனால் யாரும் இவர்களுடைய விநோதமான பழக்க வழக்கங்களின் காரணங்களை ஆராயவில்லை. ஆனால் எல்லாரையும் மிக மிகப் பெரிய அதிசயத்தில் ஆழ்த்தியது இந்தப் பளிஞர் தலைவனுடைய இரு தார விவாகந்தான். நான் இந்தக் குடி யிருப்புக்கு வந்ததும் இந்தப் பழக்கத்தின் கார ணத்தை ஆராய்ந்தேன். அகவல் மகளோடு பேசிப் பார்த்தேன். கந்தப்பனும் சொக்கியும் தனித்தனியாக என்னிடம் வந்து இதையே ஆலோசித்தார்கள். கடைசியில் சம்பிரதாயத்துக்கு மாறுபடாத ஒரு முறையில் கந்தப்பனுடைய இஷ்டத்தின்படியே ஏகபத்தினி விர தத்தை அவன் அனுஷ்டிப்பதில் பிசகில்லை என்று முடிவு செய்து விட்டோம்."

இப்படிச் சாமியார் சொன்னதும் டாக்டர் சுரேஷ் பலமாகக் கை தட்டினார். உடனே அங்கிருந்த மற்ற எல்லாரும் கரகோஷம்செய்தார்கள். சாமியார் தம்முடைய பேச்சை மேலும் தொடர்ந்தார் :

" இந்தப் பளிஞர் குடியிருப்பில் எத்தனையோ பல ஆண்டுகளாக அணைந்துவிடாமல் பாதுகாக்கப்பட்டு வருகிற நெருப்புக்குக் காவலாகப் பளிஞர் தலைவனின் இரண்டு மனைவியர்களும் அமர்த்தப்படுகிறார்கள். மற்றப் படி இந்தப் பழக்கத்துக்கு வேறு எவ்வித ஆதாரமும் அவசியமும் இல்லை. எவ்வளவு புனிதமான நெருப்பாக இருந்தாலும் அதைக் காத்து வருவதற்காக மனிதர்களை நியமிப்பது என்பது அர்த்தமில்லாத செயல். இதை உத்தேசித்துச் சொக்கி ஒரு புதிய தீர்மானத்துக்கு

வந்திருக்கிருள். அதாவது தான் வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கும்போது தன்னுடைய கொம்பன் யானையிடம் இந்தப் பொறுப்பை ஒப்படைக்கலாம் என்று கருதுகிருள். ' கதீ கயை கதூ கண் கடு ' என்று அவள் ஒரு உத்தரவு போட்டுவிட்டால், கொம்பன் யானை அந்தப் பக்கம் இந்தப் பக்கம் அசையாமல் தீயைத் தூண்டிக் கொண்டே யிருக்கும். காஞ பாஷையில் அத்தனை தூரம் கட்டுப் பட்ட யானை அது. எனவே கந்தப்பனுக்கு இரண்டாவது மனைவி என்று ஒரு அபாக்கியவதி ஏற்பட்டு, அவள் நெருப்பைக் கிளறிக் கொண்டிருப்பதோடு தனது உள்ளத் தின் நெருப்பையும் கிளறிக் கொண்டே இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆகையால் சகோதர சகோதரிகளே! கந்தப்பனுடைய வலது கையைச் சொக்கி பிடிக்கிருள் என்ருல், அவனுடைய இடது கையைப் பிடிப்பது இந்தச் சொக்கிகுடியின் கொம்பன் யானை என்பதை இப்பொழுது தெரிவித்துக் கொள்கிறேன்!''

இவ்வாறு சாமியார் சொல்லி நிறுத்தியதும் கூட்டத்தில் கை தட்டல் வானமே இடிந்து விடும்படியாக முழங்கியது. கல்யாணி அம்மாளும் தன் துயரங்களை யெல்லாம் இரண்டு கைகளாலும் தட்டி விடுபவளைப் போலப் பலமாகக் கை தட்டினுள்!

* * *

பௌர்ணமிக்கு முந்திய இரவு. சொக்கிகுடியிலே மரங்களும் செடிகளும் எல்லாம் பூக்களும் கனிகளுமாகத் தொங்குவதற்குப் பதிலாக, ஒரே மின்சாரக் குமிழ்களாகப் பூத்துக் காய்த்துக் கனிந்து தொங்கிக் கொண்டிருந்தன! எங்கோ ஒரு மூலையில் ஒரு மின்சார ' டைனமோ ' வேலை செய்து கொண்டிருந்தது. காடெல்லாம் நகரமாகக் காட்சி தந்தது. சந்திரனும் நட்சத்திரக் கூட்டங்களும் வானத்தி லிருந்து இறங்கி வந்து அந்தச் சொக்கிகுடியிலே கூடாரம் அடித்து நிற்பது போல இருந்தது அந்த ஒளி மயமான காட்சி.

மறுநாட்காலை சொக்கிகுடியின் மந்திரக்கன்னி, தலைவி, அல்லியரசாணி சொக்கிக்குத் திருமணம்.

கந்தப்பனைச் சுற்றி அவனுடைய நண்பர்கள் பரிகாசப் பாடல்கள் பாட ஆரம்பித்தார்கள் :—

கொய்யா மரத்து மேலே
கொம்புப் பழம் உறங்கும்
கொம்புப் பழம் விழுந்தாக்
குயிலா நினைவு வரும்.
கண்ணுளஞ் சோலையிலே
கனிஞ்ச பழம் உறங்கும்
கனிஞ்ச பழம் விழுந்தா
கண்ணு நினைவு வரும்.
மாமரத்து உச்சியிலே
மாங்காப் பழம் உறங்கும்
மாங்காப் பழம் விழுந்தா
மயிலா நினைவு வரும்!

இவ்வாறு ஆடவர் கோஷ்டி கந்தப்பனை வேடிக்கை பண்ணிக் கொண்டிருந்தது. மற்றொருபுறம் சொக்கியைச் சுற்றி அவளுடைய சேடிப் பெண்கள் பரிகாசம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

கருமலையிலே கல்லுருட்டி
கன்னிமார் எல்லாம் கூடிக்கிட்டு
மூணு முழத்தில் அடுப்புக்கட்டி
முத்துக் குடங்கொண்டு பால்காய்ச்ச
காய்ச்சின பாலும் கசக்குதென்பா
கட்டித் தயிரும் புளிக்குதென்பா
வேப்பம் பட்டை இனிக்குதென்பா
வெள்ளரிப் பிஞ்சும் கசக்குதென்பா!

இப்படியாகப் பாட்டிலும் கூத்திலும் இரவுப் பொழுது கழிந்தது. அதிகாலையில் கிழக்கே வானம் வெளுத்துச் செவ்வெயில் பின்னிப் பிணைந்து மலையிலே உருள ஆரம்பிக்கும்போது, பளிஞர்கள் கொம்பொலி உதய சூரியனை

வரவேற்றது. கொம்பொலியைத் தொடர்ந்து, தாரையும், தம்பட்டமும் ஒலித்தன. இடக்கு, பம்பை, சச்சரி, உருமி முதலிய தாள வாத்தியங்கள் இவற்றைத் தொடர்ந்தன. சொக்கிகுழல் என்று புனிதமாக அழைக்கப்படும் புல்லாங் குழல் போன்ற வாத்தியம், மற்ற வாத்தியங்களுக்கு மத்தியிலே ஒரு ராஜ வாத்தியமாக எழுந்தது. சங்கம் ஒலித்தது. கொட்டு முழங்கிற்று. மலைக் காட்டிலே கேட்கிற 'தோலொத்து' என்ற வாத்தியம் ஆதார சுருதியை ஒலிக்க, மற்ற வாத்தியங்கள் எல்லாம் உல்லாச மான தெம்மாங்கு இசையைப் பொழிய ஆரம்பித்தன.

சொக்கிகுடியின் அணையாத நெருப்புக்கு முன்னால் டாக்டர் சுரேஷும் உஸ்தாத் மீரானும் நின்று கொண் டார்கள். அருகிலே நாகரத்தினம், அப்புலிங்கம், ராம நாதன் ஆகிய கோஷ்டி நின்று கொண்டது. இவர்களை யடுத்து முதியோர் கோஷ்டி. இவர்களைச் சுற்றிப் பளிஞர்கள் மொய்த்து நின்றார்கள். கல்யாணி அம்மாள், சாவித்திரி யம்மாள் உள்ளிட்ட பெண்கள் எல்லாரும் கோஷ்டியாக இன்னொரு வரிசையிலே நின்றார்கள்.

வாத்தியங்கள் எல்லாம் மங்கள கீதத்தை முழக்கின. சொக்கியும் கந்தப்பனும் உல்லாச உபசாரத்தோடு அங்கே அழைத்து வரப்பட்டார்கள். இலஞ்சிச் சாமியார் கொம்பன் யானையை நடத்திக் கொண்டே அக்கினி குண்டத் துக்கு அருகிலே வந்து உட்கார்ந்தார். சொக்கப்ப னுடைய முகத்தில் கரை காணாத மகிழ்ச்சி அலைவீசிக் கொண்டிருந்தது. அந்த அலை வீச்சு அங்கே கூடியிருந்த அத்தனை பளிஞர்களின் முகங்களிலும் அப்படியே பிரதி பலித்தது!

"மங்கள வாத்தியம்!" என்று சொல்லிக் கொண்டே இலஞ்சிச் சாமியார் இரண்டு கைகளையும் தூக்கிச் சமிக்ஞை செய்தார். தாரை, தம்பட்டம், சொக்கி குழல், கொம்பு, இடக்கை, உருமி, பம்பை, சச்சரி, கிலுகிலுப்பை, கொட்டு எல்லா வாத்தியங்களும் ஏககாலத்தில் முழக்கி அடித்தன. கந்தப்பனுடைய வலது கையைப் பிடித்தாள் சொக்கி. அடுத்த கணம் மற்றொரு கையினால் அந்த நெருப்புக் குழியிலே ஒரு சுள்ளியைச் செருகினாள். அதே

சமயம் கந்தப்பனுடைய இடது பக்கம் நின்று கொண்டிருந்த யானையைப் பார்த்து, "கக, கம், கபை, கவை" என்றுள் சொக்கி. கொம்பன் யானை அழகாகத் துதிக்கையைத் தூக்கி வளைத்து அந்த ஓம குண்டத்திலே ஒரு பெரிய கட்டையை எடுத்துச் செருகிற்று. மறு விநாடி ஒரு பெரிய கலயத்திலே நெய்யை எடுத்துத் தீக் குழியிலே கொட்டினுள் சொக்கி.

'குபீர்' என்று சுடர்விட்டது ஓம குண்டம். "குபீர்' என்று எழுந்தது வாத்தியங்களின் மங்கள ஒலி. "குபீர்" என்று ஓங்கி ஒலித்தது பெண்களின் குரவை!

சொக்கிகுடியிலே உள்ள பளிஞர்களின் சமூக நெருப்பு நிரந்தரமாக எரிந்து கொண்டிருப்பதாகக் 'குபீர்' என்று புதிய பிரகாசத்தோடு சுடர் விட்டது!

*　　　　*　　　　*

அன்று பகல் முழுதும் பளிஞர்களின் விதம் விதமான ஆட்டங்களும், பாட்டுக்களும், கூத்துக்களுமாக அந்த வனந்திரமே ஒரு மாயாபுரியாக மாறியது! இந்தக் கூத்துக்களோடு வனத்தின் தேவதைகளுக்குப் பூஜை போடும் சம்பிரதாயத்தை யொட்டி, மணமக்கள் காட்டின் மூலைகளிலும் வளைவுகளிலும் உள்ள புனித மரங்களுக்கெல்லாம் சென்று வனபூஜை நடத்தினுர்கள். ஊர்வலம் போன்ற அந்த வனவலத்தின் போது, உஸ்தாத் மீரானுடைய சீடர்களும் நாகரத்தினம் கோஷ்டியாரும் சிலம்பக் கம்புகளோடு சுற்றி நின்று பளிஞர் உலகத்தைக் கிடுகிடுக்கச் செய்து விட்டார்கள்!

மாலைப்பொழுது கழிந்து இரவு வந்ததும், அங்கங்கே அதிர் வேட்டுக்களும், வாணங்களுமாகக் காடெல்லாம் சீறின! மத்தாப்புக்களின் வர்ண ஒளி, மரங்களுக்கும் மலர்களுக்கும் நீரோடைகளுக்கும் கணத்துக்குக் கணம் விதம், விதமாக ஒளி முலாம் பூசியது! விருந்தும் கூத்துமாக ஒரே ஆர்ப்பாட்டமாக இருந்த இந்தச் சமயத்திலேதான் டாக்டர் சுரேஷ் வேகமாக வந்து அப்புலிங்கத்தின் காதோடு "நம்முடைய ஸர்ப்ரைஸ் ஐடைம் ரெடி!" என்று

அறிவித்தார்! அவ்வளவுதான். பத்து நிமிஷத்துக்குள் அந்தக் கூட்டத்தில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று. அப்புலிங்கம் கந்தப்பனிடம் காதோடு காதாக ஏதோ பேசினன். கந்தப்பன் சொக்கப்பனிடம் சென்று ஏதோ இரகசியம் சொன்னன். சொக்கப்பன் தன்னுடைய முக்கிய மான உப தலைவர்களிடம் ஏதோ கட்டளை இட்டான். விறு விறு என்று கூட்டம் ஒன்று சேர்ந்தது. காட்டிலே நிரம்பி யிருந்த அத்தனை மனிதர்களும் அணிவகுத்தாற் போல ஆலமரத்தடியை நோக்கி விரைந்து சென்றார்கள்.

ஆலாரத்தடியிலே ஒரு பெரிய மேடை போட்டிருந் தார்கள். அதில் நாகரிகப் படுதாக்கள் தொங்கிக் கொண்டிருந்தன.

டாக்டர் சுரேஷின் ஆணைப்படி மணமகனும் மண மகளும் மேடைக்கு எதிரே உட்கார்ந்தார்கள். அவர்களை யடுத்து ஆண்களும் பெண்களும் வரிசை வரிசையாக அணி யணியாக உட்கார்ந்து கொண்டார்கள். திரைக்குப் பின்னல் இருந்து இசை எழுந்தது.

தம்புராவின் "கிரீம் கிலீம்" என்ற இன்னெலி. 'தர தாங் தர தாங்' என்று இணைத் தந்திகள் இயம்ப, 'டிங் டிங்' என்று வீணை பேச ஆரம்பித்தது. புல்லாங் குழல் சுநாதமான இனிமையோடு 'ஸ, ப, ஸா' என்றது. "கும் கும்" என்று மிருதங்கம் ஆயத்தம் ஆகிற்று. அவ்வளவுதான். சலங்கை 'கல கல' என்பதற்குள் திரை எழுந்தது.

"தாம் தித்தாம் தை தித்தாம்" என்ற சொல்லுக் கட்டை அடுத்து 'விறு விறு' என்று வாத்தியங்கள் அற்புதமான வேகத்தோடு ஒரு வர்ணத்தை வாசிக்க ஆரம்பித்தன. 'கலீர் கலீர்' என்று சலங்கை கொஞ்ச, சந்திரிகா மேடைமீது வந்து நின்று கை கூப்பி விட்டு, வாத்திய இசையிலே தவழ்ந்து வந்த வர்ணத் தைத் தன் மேனியிலே வாங்கி ஓட விட்டாள்!

வீணையின் ஒலியையும், மிருதங்கத்தின் நாதத்தையும் பின்னி அணைத்துக் கொண்டு புல்லாங்குழல் ராஜ நடை நடந்தது. ரவீந்திரனுடைய பழைய மாணவர் ஒருவர்

குரு பரம்பரையைப் பக்தி சிரத்தையோடு புல்லாங் குழலிலே பின் தொடர்ந்து கொண்டிருந்தார். அப்பொழுது கூட்டத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ரவீந்திரனை அமைதியோடு தன் வலதுகையிலே தாங்கிப் பிடித்த வண்ணம் கூட்டத்துக்குள்ளே பிரவேசித்தாள் கல்யாணி. டாக்டர் சுரேஷ் எழுந்து அவர்களை வரவேற்று, ரவீந்திரனைக் கந்தப்பனுக்கு அருகிலே அமர்த்தினர்.

குருநாதனுடைய வரவிலே ஒரு கணம் மெய் சிலிர்த்த சந்திரிகா, ரவீந்திரனைப் பணிவோடு கை கூப்பி வணங்கிய வளாக நடனத்தைத் தொடர்ந்தாள்.

என்ன ஆச்சரியம்! அது ரவிசந்திரிகா ராகம்! முன்னொரு காலத்தில் ரவீந்திரன் தானே தனது கற்பனையில் கவனம் செய்து கற்பித்த வர்ணம் அது!

வீணையானது மேனியின் நரம்புகளையே சுண்டுவது போல உயிரைத் தொட்டு நின்று பேசிற்று. ரவீந்திரனுடைய சந்நிதியிலே அவனுடைய கவனத்தையே அவனுக்குக் காணிக்கை செலுத்துகிற பாவனையில், புல்லாங்குழல் நூதன வேகத்தோடு இயம்ப ஆரம்பித்தது. மிருதங்கம் உற்சாகமாகத் தாள அடைவு கொடுத்தது. "கலீர் கலீர்" என்று துள்ளியது சலங்கை.

அது ரவிசந்திரிகா ராகம். அந்த ராகம் படிப் படியாக விறுவிறுப்பு ஏறிப் படரப் படர, ரவீந்திரனுடைய கண்களில் ஒரு குறுகுறுப்பு உண்டாயிற்று. ஒலி வடிவமான ராகம் அவனுடைய மேனியை ஊடுருவி அவன் உள்ளத்திலே மின்சாரத்தைப் பாய்ச்சியது. ரவீந்திரனுடைய கையும் காலும் ஆட ஆரம்பித்தன.

"தாம் தித்தாம், தைத் தித்தீம், தாங்கிட தாங்கிட தளாங்கிட தளாங்கிட தீம் தை" என்றது சொல்லுக் கட்டு. அதைத் தொடர்ந்து மேல் ஸ்தாயியிலே புல்லாங் குழலின் சஞ்சாரம் ரவிசந்திரிகா ராகத்தின் அந்தராத்மாவையே எட்டிப் பிடித்தது. அவ்வளவுதான். 'சபாஷ்!' என்று ஒரு சத்தம் கேட்டது. கூட்டத்திலே உட்கார்ந்து கொண்டிருந்த ரவீந்திரன் "சரேல்" என்று ஒரு தாவுத்

தாவி மேடையிலே ஏறினன். பார்க்கிறவர்கள் கண்களை இமைத்து மூடுவதற்குள், புல்லாங்குழல் வித்துவானுடைய கையிலே இருந்து அந்தக் குழலை ஒரு பற்றுப் பற்றிப் பிடுங்கினன் ரவி. அடுத்த கணம் தன்னுடைய அதரங்களிலே பொருத்தினன்.

ஆகா! ரவிசந்திரிகா ராகமா அது! சொக்கிகுடியின் மங்கள விழாவுக்காக அந்த வன தேவதைகள் எல்லாம் வந்து நின்று கேட்க வேண்டும் என்று ஒலித்த ஒரு தெய்விக நாதமா அது! ஜன்ம ஜன்மாந்திர வாசனையென்றும், விட்ட குறை தொட்ட குறையென்றும் சொல்கிருர்களே, அப்படிப்பட்ட அமானுஷ்யமான கற்பனையோடு ஒலித்தது புல்லாங்குழல். வீணையும், மத்தளமும் அந்த இசையிலே கிறங்கி அதைப் பின் தொடர்ந்தன.

பாதச் சிலம்புகளிலே ஒரு மந்திர சக்தி பின்னியது. பார்த்தவர்கள் எல்லாம் மெய்ம் மறந்து தெய்வ லோகத்திலே சஞ்சரித்தார்கள். கேட்டவர்கள் எல்லாம் மெய்ம் மறந்து விண்ணுலகத்திலே மேலே மேலே இசைக் காற்றிலே பறந்து கொண்டிருந்தார்கள்!

ரவிசந்திரிகா ராகம் எத்தனை நேரம் எத்தனை கற்பனைகளோடு எத்தனை துள்ளல்களோடு மேடையிலே சுற்றிச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்ததோ! யாராலும் சொல்ல முடியாது. டாக்டர் சுரேஷ் மேடைக்கு வந்து ரவீந்திரனுடைய உடம்பைப் பிடித்து நட்டமாக நிறுத்திக் கண்களைத் துடைத்து விட்டார். அதுவரை தன்னையும் இந்த அகில உலகத்தையும் மறந்து ஒரு பேரானந்த லயத்திலே இருந்த அந்த அதிசயக் கலைஞன், ஒலிச் சிறகுகளை மடித்துப் பூமியிலே வந்து கால் பாவினன்! சலங்கையும் வாத்தியங்களும் அப்படியே கிறங்கிப் போய் நின்றன! சபையோர்களும் அப்பொழுதுதான் இந்தப் பூமியிலே வந்து குதித்துக் கை தட்டினர்கள்!

கை தட்டி நின்ற அந்தச் சபையின் மக்களையெல்லாம் ஆனந்த நிலையிலே கண்களை ஓட விட்டுப் பார்த்தான் ரவீந்திரன். அந்தக் கண்களிலேதான் எத்தனை தீட்

சண்யம்! சபையினர்கள் வியப்பிலிருந்து மீளுவதற்குள்ளே "கல்யாணி!" என்று அழைத்தான் ரவீந்திரன்.

"கல்யாணி! சந்திரிகாவின் நெற்றியிலே உன் கையால் குங்குமம் இடம்மா!" என்று சொல்லிவிட்டு ரவீந்திரன் சபையோர்களைப் பார்த்துச் சொல்லுவான் :

"விஷ நோயும் பைத்தியமும் பிடித்த மனிதன் நான். இந்த அபாக்கியசாலியின் விஷ நோயையும் பைத்தியத்தையும் தீர்த்த ஔஷதங்கள் இரண்டு. இரண்டுமே இரண்டு விதமான ஸர்ப்பகந்திகள், ஒன்றுக்குப் பெயரே ஸர்ப்பகந்தி—சந்திரிகா! மற்றொன்றுக்குப் பெயர் கந்தப்பன். உண்மையில் இன்று நான் உயிரோடு இருப்பதற்குக் காரணம் கந்தப்பன் என்று சொன்னால் அது புகழ்ச்சியில்லை. என்னைத் தீண்ட வந்த நல்ல பாம்பிடமிருந்து என்னைக் காப்பாற்றினான் கந்தப்பன். என்னைப் பிடித்த நோயிலிருந்து என்னைக் காப்பாற்றியது சர்ப்பகந்தியும், சர்ப்பகந்தியின் வடநாட்டுப்பெயர்களில் ஒன்றான சந்திரிகாவும். இந்த நன்றிக்கு என்னுடைய கைம்மாறு என்னஎன்று யோசிக்க வேண்டிய அவசியத்தையே எனக்கு வைக்கவில்லை டாக்டர் சுரேஷ். இலஞ்சிச் சாமியாரும் அவரும் ஏற்கனவே எல்லா விவரமும் பேசி முடித்து விட்டார்கள். எந்த ராமநாதன் எங்கள் வீட்டு மாடியிலே குதித்ததன் பயனாக, என்னுடைய வாழ்வுப் புதிர் தெளிய ஆரம்பித்ததோ, அதே ராமநாதனுக்கு என்னுடைய நன்றியின் சின்னமாக என் இசைப் பரம்பரையையே காணிக்கையாக ஒப்படைக்கிறேன். அந்தக் காணிக்கையைச் சட்டபூர்வமாக அங்கீகாரம் செய்வதற்கு இதோ இங்கே சந்திரிகாவின் தந்தையே நிற்கிறார்."

டாக்டர் சுரேஷ் கையில் பூமாலையோடு இலஞ்சிச் சாமியாரை அழைத்து வந்தார். ராமநாதனைப் பார்த்து ரவீந்திரன் சொல்லுவான் :

"ராமநாதா! பெரிய பெரிய விபத்துக்களிலிருந்து சந்திரிகாவை நீதான் காப்பாற்றினாய். உன்னைவிட அவளுடைய அன்புக்கு அருகதை வேறு யாருமில்லை. பால் வண்ணநாதர் என்று பெயர் தரித்திருந்த நமது இலஞ்சிச்

சாமிகளின் ஆசீர்வாதத்தோடு அவளை ஏற்றுக் கொள்!'' என்றான் ரவீந்திரன்.

கூட்டத்திலே எங்கோ ஒதுங்கிக் கொண்டு கிடந்த பண்டாரங்கள் அனைவரும் இப்போது குரல் கொடுத்தார்கள்—“வாழ்க வாழ்க!'' என்று!

இலஞ்சிச் சாமியார் டாக்டர் சுரேஷின் கையிலிருந்த பூமாலையை ராமநாதன் கையிலே கொடுத்தார். அதை அவன் சந்திரிகாவின் கழுத்திலே அணிவித்தான். இருவரும் இலஞ்சிச் சாமியாருடைய பாதத்திலே நமஸ்கரிக்க வந்தார்கள். “அப்பா!'' என்று கூப்பிட்ட சந்திரிகாவுக்குக் குரல் அடைத்தது. கண்ணீர் தாரை தாரையாகப் பொங்கிச் சாமியாருடைய பாதங்களை நனைத்தது. அந்தக் காட்சி சபையிலிருந்த அத்தனை பேருடைய உள்ளத்தையும் உருக்கி விட்டது!

அப்புலிங்கம் வேகமாக நடந்து வந்து ரவீந்திரனுடைய கையிலே ஒரு புல்லாங் குழலைக் கொடுத்தான்.

“பொருள்களை யெல்லாம் உரியவர்களிடம் சேர்ப்பிக்கிற முகூர்த்தம் இது. எனவே இதை, உங்களுடைய பழைய புல்லாங்குழலை, உரிய இடத்தில் சேர்ப்பிக்கிறேன். ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள். அடகு என்பதை மறந்துவிட வேண்டும். உங்களைப் போன்ற ஒரு கலைஞரின் நட்புக்கு இது என் காணிக்கை!''

பதில் சொல்ல முடியவில்லை ரவீந்திரனுக்கு. அன்பின் வசமாகி நின்றவன் கந்தப்பனைப் பார்த்துச் சொல்வான் :

“வாழ்க்கையில் என்னுடைய கடன்களை எல்லாம் அடைக்கிற புண்ணிய நாள் இது! என்னுடைய உயிரையே உனக்குக் கடன் பட்டிருக்கிறேன் நான். என்றாலும் அதற்கு உரியவள் கல்யாணி. இன்னொருவரிடம் அதை ஒப்படைக்க அவள் சம்மதிக்கமாட்டாள்! ஆனால் என்னுடைய இந்தப் புல்லாங் குழல் இருக்கிறதே, இது உண்மையிலேயே என்னுடைய உயிர். இந்தா, இதை வாங்கிக் கொள். என்னுடைய கற்பனைகளை யெல்

லாம் இந்த வனந்திரத்திலே நிரப்பி வைத்தால் உங்களுடைய சமூகத்தின் நெருப்பைப் போல் அதுவும் அவியாமல் நிற்கும். நகரங்களில் வைக்கிற செல்வத்தைக் காப்பாற்றுவது கஷ்டம். எனவே, என்னுடைய சீடக் கொடி இந்த மரங்களிலும் செடிகளிலும் படரட்டும். உங்களுடைய சொக்கி குழலுக்குத் துணையாக இந்த வாத்தியத்தை உங்கள் சமூகத்திலே பிரதிஷ்டை செய்கிறேன். இன்றிலிருந்து நீ என்னுடைய மாணவன்! கல்யாணி, மணப் பெண்கள் இருவருக்கும் குங்குமம் இட்டு ஆரத்தி சுற்றம்மா!"

ரவீந்திரன் இவ்வாறு சொல்லி விட்டு மேடையிலிருந்து இறங்கினான். டாக்டர் சுரேஷ் எழுந்தார்.

"அன்பர்களே! கடைசியாக ஒரு வார்த்தை. மங்களம்!" என்று சொல்லிவிட்டு வாத்திய கோஷ்டியின் பக்கம் திரும்பித் தலை வணங்கினார் சுரேஷ்.

நாதானந்தமான சுகத்தோடு வாத்தியங்களிலே இன்னிசை தவழ்ந்தது.

*     *     *

சொக்கி குடியின் குழலிலே ரவிசந்திரிகா ராகம் தென்றற் காற்றிலே தவழ்ந்தது. மரங்களிலும் செடி கொடிகளிலும் கிளை வீசிப் படர்ந்தது. மலையிலும் குன்றுகளிலும் எதிரொலி செய்து விம்மியது. அருவிகளிலும், சுனைகளிலும் ஓடைகளிலும் நீராடியது. பளிஞர் சமூகத்திலே என்றென்றும் ஆறாமல் அவியாமல் சுடர் விடுகின்ற அந்த ஓம குண்டத்தின் நிரந்தரக் கனலைப் போல, காலப் பாதையிலே ஏற்றி வைத்த ஒலி-விளக்காகப் பிரகாசித்தது, தெய்விகமான ரவிசந்திரிகா ராகம்!

நாத விந்துகலாதி நமோ நம!

தீப மங்கள ஜோதி நமோ நம!

மீதும் நமக்கு அனுதாபம் உண்டாகும்படி செய்து விடுகிறது, ஆசிரியரின் எழுத்துவன்மை! ஒவ்வொருவர் வாயிலாகவும் வாழ்க்கையில் கற்க வேண்டிய பல உண்மைகளையும் அனுபவ அறிவுரைகளையும் புகட்டுகின்ருர், ஆசிரியர்.

நாவலில் இடையிடையே வரும் நாடோடிப் பாடல்கள் அந்தந்த வட்டாரங்களில் இன்றும் வழங்கி வருபவை. உயிரோட்டமுள்ள இனிய தமிழில் எழுதப்பட்டுள்ள இக் கதையை குடும்பத்திலுள்ள அனைவரும்—சிறுவர் முதல் பெரியவர் வரை படித்து ரசிக்கலாம். இந் நாவலில் இந்து சமயம், முஸ்லீம் சமயம், கிறிஸ்துவ சமயம் முதலிய எல்லாச் சமயத்தினர்க்கும் உரிய கொள்கைகள் அழகாக இடம் பெறுகின்றன.

'கல்கி' வாரப் பத்திரிகையில் வெளி வந்தபோது ஆயிரக் கணக்கான வாசகர்கள் ஆர்வத்தோடு படித்து மகிழ்ந்த இந்த நாவல் அனுமதியோடு இப்பொழுது முழு நூலாக வெளி வருகிறது.

—பாரி நிலையம்

Jacket printed at Shanti Press, Madras-1